    

ஸ்ரீ

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

(நம்பெருமாளருளிச்செய்ததனியன்.)

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్।
యతీన్ద్రప్రవణం వన్దే రమ్యజామాతరం మునిమ్॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்-
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.

(எம்பெருமானாரருளிச்செய்தது.)

లక్ష్మీనాథసమారమ్భాం నాథయామునమధ్యమామ్।
అస్మదాచార్యపర్యన్తాం వన్దే గురుపరమ్పరామ్॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்-
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

(கூரத்தாழ்வானருளிச்செய்தது.)

యోనిత్యమచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మ వ్యామోహతస్తదితరాణి తృణాయ మేనే।
అస్మద్గురోర్భగవతోఽస్య దయైకసిన్ధోః రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாயமேநே-
அஸ்மத்குரோர்ப்பகவதோஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌசரணம்ப்ரபத்யே.

(ஆளவந்தாரருளிச்செய்தது.)

మాతా పితా యువతయస్తనయా విభూతిః సర్వం యదేవ నియమేన మదన్వయానామ్।
ఆద్యస్య నః కులపతేర్వకుళాభిరామం శ్రీమత్తదఙ్ఘ్రియుగళం ప్రణమామి మూర్ధ్నా॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம்-
ஆத்யஸ்யநஃகுலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா.

(பராசரபட்டரருளிச்செய்தது.)

భూతం సరశ్చ మహదాహ్వయభట్టనాథ శ్రీభక్తిసారకులశేఖరయోగివాహాన్।
భక్తాఙ్ఘ్రిరేణుపరకాలయతీన్ద్రమిశ్రాన్ శ్రీమత్పరాఙ్కుశమునిం ప్రణతోఽస్మి నిత్యమ్॥

பூதம்ஸரஸ்யமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந்-
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மிநித்யம்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# பெரியதிருமொழியின் தனியன்களுக்கு

(பிள்ளைலோகார்யஜீயரருளிச்செய்த வ்யாக்யானம்.)

அவதாரிகை.—(కలయామి కలిధ్వంసమ్ - கலயாமி கலித்வம்ஸம்) திருமொழிமுதலான திவ்யப்ரபந்தோபகாரத்துக்குத் திருமங்கையாழ்வாரைத் திருவடித்தொழும்படி சொல்லுகிறது.

தனியன்கள்.

(திருக்கோளூர்நம்பிஅருளிச்செய்தது.)

మూలమ్.—కలయామి కలిధ్వంసం కవింలోకదివాకరమ్।
యస్యగోభిఃప్రకాశాభి రావిద్యంనిహతంతమః॥

மூலம்.—கலயாமி கலித்வம்ஸம் கவிம்லோகதிவாகரம்-
யஸ்யகோபி:ப்ரகாசாபி ராவித்யம்நிஹதம்தம:.

பதவுரை.—(కలి) கலி-கலிதோஷத்தை, (ధ్వంసం) த்வம்ஸம்-நசிப்பிக்குமவராய், (లోక)லோக-நாட்டாருடைய,(దివాకరమ్)திவாகரம் - அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்குமவராய், (యస్య) யஸ்ய - யாதொருத்தருடைய, (ప్రకాశాభిః) ப்ரகாசாபி: - விளங்காநின்றுள்ள, (గోభిః) கோபி: - உக்திகளினாலே, (ఆవిద్యమ్) ஆவித்யம்-அஜ்ஞாநப்ரயுக்தமான, (తమః) தம: - அந்தகாரமானது, (నిహతమ్) நிஹதம்-போக்கப்பட்டது, அப்படிப்பட்ட, (కవిమ్) கவிம் - பரகாலகவியை, (కలయామి) கலயாமி - ஸேவிக்கிறோம் என்கிறார்.

வ்யாக்யானம்.—(కలయామి కలిధ్వంసమ్ - கலயாமி கலித்வம்ஸம்) (கலிகன்றி)என்று நிரூபகத்தையுடையரானபரகாலகவியை, கலயாமி-(க)ப்ரணமாமிஎன்கிறது. (లోకదివాకరమ్-லோகதிவாகரம்)ஆதித்யன், (உ) பாஹ்யாந்தகாரத்தைப் போக்கும்; இவர், நாட்டார்க்கு (ங) பாஹ்யா ப்யந்தராந்தகாரங்க ளிரண்டையும் போக்குவர். (యస్యగోభిః-யஸ்யகோபி:) யாதொருத்தருடைய, "(ச)యద్గోసహస్రమ్" "யத்கோஸஹஸ்ரம்" என்கிற மறையாயிரங்களினாலே; அவைதான் (ప్రకాశాభిః-ப்ரகாசாபி:) என்று - * நடைவிளங்கு தமிழ்மாலையாய் * நெஞ்சுக்கிருள்கடிதீபமா யிருக்கும்; இப்படி ப்ரகாசகங்களான ஸ்ரீஸூக்திகளினாலே, * அறிவிலாமனிசருடைய (ரு) ஆவித்யதமஸ்ஸு (சு) நிஹதமாய்த்து என்பது யாதொன்று, அத்தாலே அவரை (கலயாமி) என்கிறது. ... ... ... ... ... *

(க) ப்ரணமாமி - ஸேவிக்கிறேன். (உ) பாஹ்யாந்தகாரம் - வெளியிருள். (ங) பாஹ்யாப்யந்தராந்தகாரங்கள்-புறத்திலும் அகத்திலுமுள்ளஇருள். (ச) யத்கோஸஹஸ்ரம் - யத்-யாதொரு ஆழ்வாருடைய, கோஸஹஸ்ரம் - ஆயிரம் ஸ்ரீஸூக்திகள். (ரு) ஆவித்யதமஸ்ஸு- (அவித்யையினால்) அஜ்ஞாநத்தாலுண்டாகும் அந்தகாரம். (சு) நிஹதம் - அடிக்கப்பட்டது.

அ.—(வாழிபரகாலன்) எம்பெருமானுக்குத் திருமதிள்போலே அரணாயிருப்பதான ஆறுப்ரபந்தங்கள் செய்தருளின ஆழ்வாருடைய திருநாமங்கள் பலவற்றையுஞ் சொல்லி அவரை வாழ்த்துகிறது-இதில். "𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑍇 𑌗𑌁𑌰𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑍍𑌯𑌾𑌃" "(௧) ப்ரத்யக்ஷே குரவஸ்ஸ்துத்யா:" என்னக்கடவதிறே. ஆழ்வார்கள் (௨) அர்ச்சாவதாரமாய் § எப்போதும் எல்லார்க்கும் ப்ரத்யக்ஷராயிறே யிருப்பது.

(எம்பெருமானாருளிச்செய்தது.)

மூ.—வாழிபரகாலன்; வாழிகலிகன்றி;
வாழிகுறையலூர் வாழ்வேந்தன்;- வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன்
தூயோன்சுடர்மானவேல்.

ப-ரை.—பரகாலன் - சத்ருக்களுக்கு ம்ருத்யுவானவர், வாழி - வாழ்ந்தருள வேணும்; கலி - கலியினால் வரும்தோஷத்தை, கன்றி - போக்குமவர், வாழி—; குறையலூர்-திருக்குறையலூரிலுள்ளார், வாழ்-வாழும்படி அவதரித்தருளின, வேந்தன்-ராஜாவானவர், வாழி—; மாயோனை-ஆச்சர்ய குணசேஷ்டிதங்களையுடைய ஸர்வேச்வரன்பக்கல், வாள்வலியால் - தன்வாளின்வலியைக் காட்டி, மந்திரம் - பெரியதிருமந்த்ரத்தை, கொள் - உபதேசிக்கப்பெற்றவராய், மங்கையர்-திருமங்கையிலுள்ளார்க்கு, கோன்-நிர்வாஹகராய், தூயோன்-உள்ளும் புறம்புமொக்க சுத்தியையுடையரான ஆழ்வாருடைய, சுடர்-ஒளியையுடைத்தாய், மானம் - பெரியதான, வேல் - வேலானது, வாழி- போற்றியென்று மங்களாசாஸநம் பண்ணுகிறார். ... ... ... ... ... *

வ்யா.—(வாழிபரகாலன்) (௩) பகவத் த்விட்டுக்களான ப்ரதிகூலர்க்குக் காலனானவர் வாழி. (வாழிகலிகன்றி) (௪) கலிதோஷ நிவாரகர் வாழி. (குறையலூர் வாழ்வேந்தன் - வாழி) திருக்குறையலூரை அவதாரஸ்தலமாக வுடையராய், அதுவாழும்படிக்கு அத்தைநோக்குகிற ராஜாவென்னுதல்; அங்கேவாழுகிறவரென்னுதல். (மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர் கோன், தூயோன் சுடர்மானவேல்-வாழியரோ) என்று - ஆழ்வாரையும், அவர்திருக்கையில் வேலையும் ஒருக்காலே (௫) ஆசாஸித்தபடி. (மாயோனை) * அரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் மாயோனையிறே வாள்வலியால் மந்திரங் கொண்டது. * தென்னரங்கன்றன்னை வழிபறித்த வாளனிறே. * (௬) கைப்பொருள்கள் முன்னமேகைக்கொண்டவரிடத்திலேயிறே மந்திரப்பொருளைக்

(௧) ப்ரத்யக்ஷேகுரவஸ்ஸ்துத்யா: - குரவ: - ஆசார்யர்கள், ப்ரத்யக்ஷே - முன்னிலையிலே, ஸ்துத்யா: - துதிக்கத்தக்கவர்கள். (௨) அர்ச்சாவதாரம்-அவதாரங்களுக்குப் பிற்பட்டாரும்காணலாம்படி எழுந்தருளியிருக்கு மிருப்பு. (௩) பகவத்த்விட்டுக்கள் - பகவானிடத்தில் த்வேஷம்பண்ணு மவர்கள். (௪) கலிதோஷ நிவாரகர் - கலியினால்வரும் தோஷத்தைப்போக்குமவர். (௫) ஆசாஸிக்கை - வாழ்த்துகை. (௬) கைப்பொருள் - கையில் வளைமுதலியன.

கொண்டது. (க) * மந்திரத்தைப்பற்றியிறே மந்திரங்கொண்டது. (மங்கையர்கோன்)திருமங்கைமன்னனிறே.(தூயோன்)"தூய்மை" என்னும் பாஹ்யாப்யந்தரசுத்தியையுடையவர். "அங்கமலத்தடவயல்சூழாலிநாட னருள்மாரியரட்டமுக்கி யடையார்சீயம்,கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கைவேந்தன் கொற்றவேல் பரகாலன் கலியன்" என்று தாமேதந்திருநாமங்களைக் கூறினாரிறே. (சுடர்மானவேல்) தேஜோரூபமான, மானவேல்-பெரியவேல். திருமங்கைமன்ன னெடுக்கும்படியான வேல், * வாழியரோ. இத்தால்.- ஆழ்வாரோபாதி ஆயுதமும்ஆசாஸ்யமென்றபடி."நின்கையில்வேல் போற்றி" என்னக்கடவதிறே. இதுதான் * கொற்றவேலாகையாலே வெற்றிவேலா யிருக்கும்; அத்தாலே - இதின் விஜயத்தை வேண்டுகிறது ... ... ... ... ... ... *

(கூரத்தாழ்வானருளிச்செய்தது.)

அ.—(நெஞ்சுக்கிருள் கடிதீபம்)இதில்,ஆழ்வார்திவ்யப்ரபந்த வைபவம் சொல்லுகிறது.

மூ.—நெஞ்சுக்கிருள்கடிதீபம்; அடங்கா நெடும் பிறவி
நஞ்சுக்கு நல்லவமுதம்; தமிழ்நன்னூல்துறைகள் அஞ்சுக்
கிலக்கியம் ; ஆரணசாரம் ; பரசமயப்
பஞ்சுக்கனலின்பொறி-பரகாலன் பனுவல்களே,

ப-ை.—பரகாலன்-ப்ரதிபக்ஷத்துக்குக் காலனை ஆழ்வாரருளிச்செய்த, பனுவல்கள்-பாட்டுக்களானவை; நெஞ்சுக்கு-மநஸ்ஸினுண்டான, இருள்-அஜ்ஞாநத்தை, கடி - போக்கவல்ல, தீபம் - விளக்காயும்; அடங்கா - ஒன்றாலும் அடங்காதே, நெடு - நெடுகிப்போருகிற, பிறவி - பிறப்பாகிற, நஞ்சுக்கு-விஷத்தைமாற்றுகைக்கு, நல்ல—, அமுதம் - அம்ர்தமாயும்; நல்-விலக்ஷணமான தமிழ்நூல் துறைகள் - த்ராவிடசாஸ்த்ர மார்க்கமான, அஞ்சுக்கு - எழுத்து சொல் பொருள்யாப்பு அலங்காரம் என்கிறபஞ்சலக்ஷணங்களுக்கும்,இலக்கியம் - லக்ஷ்யமாயும் ; ஆரணம்-வேதத்தின், சாரம் — ஸாரமாயும், பரசமயம்-இதரமதங்களாகிற, பஞ்சுக்கு—,அனலின்பொறி-நெருப்புப்பொறியாயும் இருக்குமென்கிறார். ... ... ... ... ... ... ... ... *

வ்யா.—(நெஞ்சுக்கிருள்கடிதீபம் என்று) நெஞ்சுக்கிருளாவது - (உ) மநோமாலிந்யமான அஜ்ஞாநம். * மனனகமலமிறே. * ஞானக்கலையாகையாலே அத்தை நிராகரிக்கும் * ஞானச்சுடர் விளக்காயிருக்கும்.(அடங்காநெடும் பிறவிநஞ்சுக்கு நல்லவமுதம்) ப்ரதிக்ரியை யொன்றாலுமடங்காதே நெடுகிப் போருகிற ஜந்மமாகிற நஞ்சுக்கு, நல்லவமுதம் - அந்தவிஷத்தை மாற்றுகைக்கு நிர்விஷமான அம்ர்தம். ஸம்ஸாரவிஷத்துக்கு அம்ர்தமாயிறே * திருமால் திருநாமமிருப்பது. திருமங்கையாழ்வார் திவ்யப்ரபந்தம்,

(க)மந்திரத்தை-வேதங்களால் சொல்லப்படும் ஸர்வேச்வரனை. (உ)மநோமாலிந்யம் - நெஞ்சழுக்கு.

ஸம்ஸாரநிவர்த்தகமான திருமந்த்ரார்த்தத்தை ப்ரதிபாதிக்குமதா யிறே யிருப்பது. (தமிழ்நன்னூல் துறைகளஞ்சுக்கிலக்கியம்) த்ராவிடசாஸ்த்ரம், எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் என்கிற விலக்ஷணமான பஞ்சலக்ஷணத்தோடே கூடியிறே யிருப்பது. அன்றிக்கே, தமிழுக்கு எழுத்து முதலான அஞ்சுலக்ஷணத்தையும் அறுதி யிடுவதான, நன்னூலென்று-ஒரு சாஸ்த்ரமுண்டு, அத்தைச் சொல்லிற்றுதல்; ஏவம்விதமான த்ராவிடசாஸ்த்ர மார்க்க பஞ்சகத்துக்கு.(இலக்கியம்) "இலக்கணவிலக்கியம்" என்றிறே அவர்கள் சொல்லுவது ; அதுக்கு லக்ஷ்யமாய் படிமாவாயிருக்கும்.இத்தைப்பார்த்து லக்ஷணம்கட்டலாயிருக்கை. கேவலம் தமிழுக்கு லக்ஷணமாயிருக்கை யன்றிக்கே, ஆரணசாரமுமாயிருக்கும் ;-வேதஸாரமுமா யிருக்குமென்றபடி. திருமந்த்ரார்த்தமிறே இதில்ப்ரதிபாதிப்பது.

"நாராயணாவென்னும் நாமம்" என்று உபக்ரமித்து, "பேசுமின் திருநாம மெட்டெழுத்தும்" என்றும், "நின்திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றது முன்னடியார்க் கடிமை" என்றும், "இமையோர் தலைவருடைய திருநாமம்நங்கள் வினைகள் தவிர வுரைமின் நமோநாராயணம்" என்றும், "நரநாரணனாயுலகத்தறநூல் சிங்காமைவிரித்தவன்" என்றும், "காட்டினாய் - என்னை- காட்டினாய்" என்றும், "மந்திரத்தை மந்திரத்தால் மறவாது" என்றும், "பேராளன் பேரோதும்" என்றும், "நாராயணா ! ஓ ! மணிவண்ணா!" என்றும் திருமந்த்ரார்த்த விசாரமேயிறே முடியநடந்து போருகிறது. ஆகையால், (ஆரணசாரம்) என்கிறது. ஸகலவேத ஸங்க்ரஹதயாதத்ஸாரமாயிறே திருமந்த்ரந்தா னிருப்பது. (பரசமயப்பஞ்சுக் கனலின்பொறி) பரஸமயமாகிற தூலராசிக்கு காலாநலகணமாயிருக்கை. * வெள்ளியார் *பிண்டியார் * போதியாரென்றிவ ரோதுகின்ற கள்ள நூல்களை * செம்மைப்பனுவல் நூலாலேயிறே இவர்கழித்துத் தள்ளுவது. * பரசமயக்குறும்பறுத்தவரிறே. இதெல்லாமாவதெதுதானென்ன (பரகாலன் பனுவல்களே) *மருவலர்த முடல்துணிய வாள்வீசும் பரகாலன் பனுவல்களே இவற்றைச் செய்துமுடிக்கும். அவரும் வேண்டா, அவர் ஸ்ரீஸூக்திகளே யமையும் இந்தக்கார்யங்களைச் செய்கைக்கென்கை. இவரதிகரித்த கார்யத்துக்குக் கையும்வாயுமொத்திருக்கிறபடி யிதுவாய்த்து. ... ... ... ... *

அ.—இனி, இவ்வாழ்வாரைப்போலே பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸித்து வைதிகமார்க்கத்தை நடத்தியும், உகந்தருளின நிலங்களை உத்தரித்தும், தத்ப்ரதிபாதகமான இவர் ஸ்ரீஸூக்தியை வர்த்திப்பித்தும் போருமவரிறே உடையவர்; அத்தைப்பற்ற,

இவ்வாழ்வார்திவ்யஸூக்தியான திருமொழியாயிரமும் என்ஹ்ருதயத்திலேநிலைநிற்கும்படி உபகரித்தருளவேணுமென்று எம்பெருமானாரை அர்த்திக்கிறது-இதில்.

(எம்பாரருளிச்செய்தது.)

மூ.—எங்கள்கதியே! இராமாநுசமுனியே!
சங்கைகெடுத்தாண்ட தவராசா! - பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும்
தங்குமனம்நீயெனக்குத்தா.

ப-ரை.—எங்கள்-அறவையான வெங்களுக்கு, கதியே-அடைக்கலமாயிருக்குமவரே; இராமாநுசன்-ராமானுசன் என்னும் திருநாமத்தை யுடையராய், முனியே-ஆத்மாவின் ரக்ஷணத்தில் மநநம் பண்ணுமவரே, சங்கை-வேதசாஸ்த்ரங்களில் ஸம்சயங்களை, கெடுத்து-போக்கி ஆண்ட-எல்லாரையும் அடிமை கொண்டவராய், தவம்-தபஸ்ஸில் மிக்கோரானயதிகளுக்கு, ராசா-ராஜாவாயிருக்கு மவரே!, பொங்கு-மிகுந்த,புகழ்-யசஸ்ஸையுடைய, மங்கையர்-திருமங்கையிலுள்ளார்க்கு, கோன் - ராஜாவான ஆழ்வார், ஈந்த-அருளிச்செய்த, மறை-வேதரூபமான, ஆயிரமும் - ஆயிரம்பாட்டாயிருக்கிற பெரியதிருமொழி ப்ரபந்தத்தையும், அனைத்தும்-மற்றுமுள்ள ப்ரபந்தங்களையும், தங்கும்-தரிக்கும்படியான, மனம்-மநஸ்ஸை, எனக்கு-அடியேனுக்கு, நீ-தேவரீர், தா-தந்தருளவேணுமென்று எம்பெருமானாரை அர்த்திக்கிறார். ... ... ... *

வ்யா.—(எங்கள்கதியே) அகதிகளான வெங்களுக்கு கதியாயிருக்கிறவரே. (இராமாநுசமுனியே) * சதுரக்ஷரியாய், மோக்ஷஹேதுவான திருநாமத்தை யுடையருமாய், ஆத்மரக்ஷணத்திலே மநநம்பண்ணுமவரே. (சங்கைகெடுத்தாண்ட) "[illegible]" "த்வதந்யஸ்ஸம்சயஸ்யாஸ்யச் சேத்தாநஹ்யுபபத்யதே" என்றும், "தத்துவநூல் கூழற்றது" என்னும்படி வேதாந்தசாஸ்த்ரத்தை நிஸ்ஸம்சயமாகப் பண்ணி மநஸ்ஸில் ஸம்சயங்களைப் போக்கி, எல்லாரையும் அடிமையாக ஆண்ட. (தவராசா) யதிராஜா என்றபடி. அன்றிக்கே, தவம் என்று - சரணாகதி தர்மமாய், அத்தை வர்த்திப்பிக்கிறராஜா என்றுமாம். * தவநெறியிறே. (பொங்குபுகழித்யாதி) அதிஸம்ர்த்தமான யசஸ்ஸையுடைய திருமங்கைக்குநிர்வாஹகரான ஆழ்வாருடைய, வேதரூபமாய் ஆயிரம்பாட்டாயிருக்கிற பெரியதிருமொழி ப்ரபந்தமெல்லாவற்றையும். அன்றிக்கே, (ஆயிரமனைத்தும்) என்று-ஆயிரத்தையும், மற்றும் அவர் அனைத்து ப்ரபந்தத்தையும் என்றுமாம். (தங்கும் மனம் நீயெனக்குத்தா) "கண்ணநின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம்" என்கிற திவ்யஸூக்தியை தரிக்கும்படியான மநஸ்ஸைத் தந்தருளவேணும். "குறையற் பிரானடிக்கீழ் விள்ளாத வன்பனிராமாநுசன்" என்றும் "நீலன்றனக்குலகிலினியான்" என்றும், "கலிமிக்க செந்நெற்கழனிக் குறையல்

கலைப்பெருமா னொலிமிக்க பாடலையுண்டுதன்னுள்ளந் தடித்து" என்றும், எம்பெருமானாரைச் சொல்லக்கடவதிறே; அத்தாலே அவரை அபேக்ஷிக்கிறது. ... ... ... ... ...*

அ.—(மாலைத்தனியே) இதில், ப்ரபந்தாந்வய ப்ரதிபந்தகங்களை ப்ரபந்த கர்த்தாவே சேதிக்கவேணு மென்கிறது.

மூ.—மாலைத்தனியே வழிபறிக்கவேண்டுமென்று
கோலிப்பதிவிருந்த கொற்றவனே ! - வேலை
அணைத்தருளுங்கையா லடியேன்வினையைத்
துணித்தருளவேண்டும் துணிந்து.

ப-ரை.—மாலை - ஸர்வேச்வரனை, தனிவழியே - தனிவழியிலே, பறிக்க வேண்டுமென்று - கொள்ளைகொள்ள வேணுமென்று, கோலி-முயன்று, திருவரசினடியிலே, பதிவுஇருந்த - பதுங்கிக்கொண்டிருந்த, கொற்றவனே - ராஜாவான திருமங்கை மன்னவனே !, வேலை – வேல் என்னும் ஆயுதத்தை, அணைத்தருளும் - அணைக்கும்படியான, கையால்-திருக்கையாலே, அடியேன் - சேஷபூதனான வென்னுடைய, வினையை - பாபங்களை, துணிந்து—, துணித்தருள வேண்டும் - வெட்டிக் களைந்தருளவேணுமென்கிறார். ... ... ... *

வ்யா.—(மாலைத்தனியே வழிபறிக்க வேண்டுமென்றுகோலி) ஸர்வாதிகனைத் தனிவழியிலே வழிபறிக்க வேணுமென்று உத்யோகித்து. ததநுகுணமாகத் திருவரசினடியிலே (பதிவிருந்த) மேலே கொடிவைத்துப் பார்ப்பித்த. (கொற்றவனே) ராஜாவே. பறிகொடுக்குமவன் * தெய்வத்துக்கரசு, பறிக்குமவர் ஆலிநாட்டரசு, பறிக்குமிடம் மரங்களுக்கரசிடம்; இப்படியாய்த்து பறிக்கப் பதிவிருந்தபடி. (வேலையணைத்தருளுங் கையால்)*வெட்டிப்பறுக்க வெடுத்தணைத்த வேலாலே. (அடியேன் வினையை) "அடியேன் நான்" என்று அவனுக்கு அடிமையான வுமக்கு அடியேனான அடியேன் வினையை. உமக்கடியோமாகைக்கும் வினைக்கும் என்ன சேர்த்தியுண்டு; "என்பெய்வினையைக் கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னு மொள்வாளுருவி வெட்டிக்களைந்த விராமாநுசன்" என்கிறபடியே. (அடியேன்வினையை-துணிந்து-துணித்தருளவேண்டும்) வழிபறிக்கத் துணிந்தாப்போலே * வினையைத்துணிக்கத் துணியவேணும். என்வினையைப் போக்கவேணும் என்று நீர் துணிந்தாலாய்த்துப் போவது. "பண்டைவல்வினை பாற்றியருளினான்" என்னும்படி பண்ணவேணும். ... ... ... *

பிள்ளைலோகார்ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# திருக்குறுந்தாண்டகத்துக்கு

## பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்தவ்யாக்யாநம்.

---

அ.—முதற்பாட்டு. (நிதியினை இத்யாதி) கிழிச்சீரையோடே தநத்தைக்காட்டிக் கொடுப்பாரைப் போலே, தன் ஸ்வரூப ரூப குண விபூதிகளைத் திருமந்த்ரமுகத்தாலே காட்டிக் கொடுக்கக் கண்டு தம்முடைய பூர்வவ்ருத்தத்தையும், பெற்றபேற்றின்கனத்தையும் அநுஸந்தித்துத் தலைசீய்க்கிறார். பெரிய திருமொழியில் - திருப்பிரிதிதொடங்கி * ஒருநற்சுற்றமளவும், உகந்தருளினதேசங்களை யநுபவித்தார்; * ஒருநற்சுற்றத்துக்கு மேல் * மாற்றமுளவளவுஞ்செல்ல அவதாரங்களின் குண சேஷ்டிதங்களை யநுபவித்து ஸம்ஸார பரமபதவிபாக மின்றிக்கே இவர் ஹ்ருஷ்டரா யிருக்கிறபடியை ஸர்வேச்வரன் கண்டு ஸம்ஸாரத்தி லிருக்கிறபடியை யறிவித்தால் த்வரித் திருந்தாராகில் கொடுபோகிறோம், இல்லையாகில் க்ரமத்திலே கொடுபோகிறோமென்று ஸம்ஸாரத்தி லிருக்கிறவிருப்பை யறிவிக்க, (ஆற்றங்கரை வாழ் மரம்போல்) என்றும், (காற்றத் திடைப்பட்ட கலவர்மனம்போல்) என்றும், (பாம்போடொருகூரையிலே பயின்றாற்போல்) என்றும், (இருபாடெரிகொள்ளியினுள்ளெறும்பேபோல்) என்றும், (வெள்ளத் திடைப்பட்ட நரியினம்போல்) என்றும், (இடைய னெறிந்த மரமே யொத்திராமே) என்றும் கூப்பிட்டு, அதில் பெருவிடாயர் உடம்பிலும் முகத்திலும் நீரை இரட்டிக் கொள்ளுமாப்போலே பேசி அநுபவித்து, இது தான் இனிதாய் இவை யெல்லாம் உகந்தருளின நிலங்களை அநுபவிக்கையால் வந்தது, உகந்தருளின நிலங்களிலே மண்டினவர்கள் பாக்யாதிக ரென்று தலைக்கட்டுகிறார்.

மூ.—நிதியினைப்பவளத்தூணைநெறிமையால்நினையவல்லார்
கதியினைக்கஞ்சன்மாளக்கண்டுமுன்னண்டமாளும்
மதியினைமாலைவாழ்த்திவணங்கியென்மனத்துவந்த
விதியினைக்கண்டுகொண்டதொண்டனேன்விடுகிலேனே. (க)

---

நிதியினைப்ரவேசே; (தலைசீய்க்கிறார்) முதல்திருமொழியிலே என்று கண்டுகொள்வது. அன்றிக்கே, முதல்வாக்யம் ஸங்க்ரஹமாய் திருப்பிரிதிதொடங்கி விஸ்தாரமாகவுமாய்க் கூப்பிட்டு, இதிலே - திருக்குறுந்தாண்டகத்திலே விடாயாறுகிறாரென்றபடி.

| பதம். | உரை. |
|---|---|
| நிதியினை | நினைத்தபடி விநியோகங் கொள்ளலாம்படியானபொருளையொத்தவனாய், |
| பவளம் | பவளம்போலே ஸ்ப்ர்ஹணீயனாய், |
| தூணை | தூண்போலே ஸர்வாதாரனாயிருப்பவனாய், |
| நெறிமையால் | க்ரமப்ராப்தியாலே, |
| நினையவல்லார் | ஸ்மரிக்க வல்லவர்களுக்கு, |
| கதியினை | பரமகதி யானவனாய், |
| கஞ்சன் | கம்ஸனுடையஆயுஸ்ஸை, |
| முன் | அவன் நினைவுதலைக்கட்டுவதற்கு முன்னே, |
| மாளக்கண்டு | முடியும்படி பார்த்து, |

| பதம். | உரை. |
|---|---|
| அண்டமாளும் | அவன்காலத்தில் பட்டநலிவுதீரரக்ஷிக்குமவனாய், |
| மதியினை | ஆச்ரிதரை நினைக்குமவனாய், |
| மாலை | ஆச்ரிதவ்யாமுக்தனாய், |
| வாழ்த்தி | வாயாரப்புகழ்ந்து, |
| வணங்கி | வணங்கும்படிக்கீடாக, |
| என்மனத்துவந்த | என்மநஸ்ஸிலேவந்துபுகுந்தவனாய், |
| விதியினை | ஸுக்ருதவிபாகனானவனை, |
| கண்டுகொண்ட | கண்ணாரக் கண்டநுபவிக்கப்பெற்ற, |
| தொண்டனேன் | தாஸபூதனான நான், |
| விடுகிலேன் | இனி ஒருக்காலும்விடமாட்டேனென்கிறார். (௧) |

வ்யா.—(நிதியினை) எய்ப்பினில்வைப்பாய் இந்நிதியுடையவனுக்கு மிடிபட வேண்டா திருக்கையும், உடையவன் காலிலே எல்லாரும் வந்து விழுகையும், உண்டென்ன உயிர் நிற்கையும், ஆபத்துக்கு உதவுகையும்,உடையவன்பெருமதிப்பனாகையும்,விற்றும் ஒற்றிவைத்தும் ஜீவிக்கலா யிருக்கையும், இப்படிசெய்ததென்று ஏசாதிருக்கையும், ஏவமாதிகுணங்களைப் பற்ற (நிதியினை) என்கிறார். * வைத்தமாநிதியிறே. ( 𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌂-𑌨𑌿𑌹𑌿𑌤𑌮𑍍 ) (குஹாயாம்-நிஹிதம்) என்று பேசப் படுகிறவஸ்து. (நிதியினை)நாட்டிற்காண்கிற நிதிபோலல்ல, எல்லாவற்றுக்கும் மேலான நிதியாயிற்று இந்நிதி; இந்நிதி, புதைத்துவைத்தாளவேண்டா, நெஞ்சிலே வைத்தாளலாம்.

முதற்பாட்டு.—விற்றும் ஒற்றிவைத்தும் ஜீவிக்கையாவது-உபதேசாதிகளைப்பண்ணி * போதயந்தஃபரஸ்பராதிகளாலே தரிக்கை. இந்நிதி வைக்குமிடமேதென்ன; அருளிச்செய்கிறார் (𑌗𑍁𑌹𑌾𑌯𑌾𑌂-𑌨𑌿𑌹𑌿𑌤𑌮𑍍-குஹாயாம் நிஹிதம் என்று.)குஹை-ஹ்ருதயகமலம். ஸாம்யமருளிச்செய்து ஆதிக்யமருளிச்செய்கிறார் (நாட்டிலித்யாதி)

ஓரிடத்திலே புதைத்துவைத்து தேசாந்தரத்திலே நிற்கச் செய்தே விநியோகங் கொள்ளவேண்டினால் உதவாது - அந்நிதி; இந்நிதி, நினைத்தவிடத்தே விநியோகங் கொள்ளலாம், பறித்துக் கொள்வாரில்லை, பறிக்கத்தாளுண்ணாது; அந்நிதி யுடையவனை அவஸரம்பார்த்துக்கொன்று பறித்துக்கொண்டுபோவார்கள்; இந் நிதி யுடையவனுக்கு அப்படிப்பட்ட ப்ரமாதஸம்பாவனைகளில்லை.

(பவளத்தூணை) ஸர்வத்துக்கும் தான் தாரகனாயிருக்குமத்தைப் பற்ற (தூண்) என்கிறார். (பவளம்)என்றத்தால்-ஸ்ப்ருஹணீயதை சொல்லுகிறது. தூணாவது - தான் அநேகத்தை தரித்துத் தன் கீழே யொதுங்குவார்க்கு நிழல்கொடுத்து நிற்பதொன்றிறே; அப்படியே தான் எல்லார்க்கும்தாரகனாய்த்தன்னையடைந்தார்க்கு நிழல் கொடுக்கையாலே (தூண்) என்கிறார்.

(நெறிமையால் நினையவல்லார் கதியினை) "நினைதொறுஞ் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்கிறபடியே அடைவுபட நினைக்க மாட்டார்களே இவர்கள், ஆகையால் (நெறிமையால் நினையவல்லார்) என்கிறார். நினைக்கவல்லார்க்கு நெற்றிக்காக்கும். (கதியினை)நினைப்பார்க்கு-பரமகதியாம்-ப்ராப்யனுமென்றபடி;"பரவித் தொழுந் தொண்டர்தமக்குக் கதியே" என்னக் கடவதிறே. நிதியினையென்று - ப்ராப்யஞ் சொல்லிற்று; (கதியினை) என்று-ப்ராபகம் சொல்லிற்று; (நினையவல்லார்) என்கையாலே - அதிகாரிவிசேஷஞ் சொல்லிற்று.

இப்படி உபாயோபேயங்கள் தானேயாயிருக்கிறவன் ஆர்க்கு எங்கே உதவக்கண்டோமென்னில் (கஞ்சன் மாளக்கண்டு) (தந்தைகாலிற் பெருவிலங்கு தாளவிழ) என்றும்,(தந்தைகாலில் விலங்கறவந்துதோன்றிய) என்றும்,(ஒருத்திமகனாய்ப்பிறந்து)இத்யாதிப்படியே-தன்னைப் பிள்ளையாகப் பெற்றவர்கள்கால்கட்டறுத்து அவர்களை வாழ்வித்தானென்கிறார். (கஞ்சன் மாளக்கண்டு) கம்ஸனுடைய ஆயுஸ்ஸு மாளும்படி பார்த்து. (முன்)அவன் நினைவை அவனுக்கு முன்னே செய்து முடிக்கை. (அண்டமாளும்) ஜகத்துஸநாதமாய்த்து. (அண்டமாளும்) (రామోరాజ్యముపాసిత్వా) (ராமோராஜ்யமுபாஸித்வா) என்னுமாப்போலே நாட்டை ஈரக்கையாலே தடவி கம்ஸன் காலத்திற்பட்ட நோவுதீர ரக்ஷித்து.(மதியினை) கம்ஸனைக் கொன்று நாட்டுக்குக் களைபிடுங்கின பின்பும், ஆச்சியும்ஐயரும் என்செய்தார்களென்று (ఋణం ప్రవృద్ధమివ) (ருணம் ப்ரவ்ருத்தமிவ) என்றுபடுகிறபடி.

---

நினைக்கப்போகாமைக்கு ஹேது வேதென்ன; அருளிச்செய்கிறார் (நினைக்கவல்லார்க் கித்யாதி.) நெற்றிக்காக்கும் - அவனுடைய ஸ்வரூபாதிகள் நினைக்கவொண்ணாதபடி தகையுமென்றபடி. கதி - ப்ராபகமாகவுமாம். கம்ஸன்போன பின்பு ஸநாதமாய்த் தென்றபடி.

(மதியினை) நம்மதி கேட்டை நினைத்து அஞ்சவேண்டா (மாஶுச:) (அஹம்ஸ்மராமி) என்று தான் அவ்விழவுநிரநினைக்கும்.

(மாலே) * மாலாய்ப்பிறந்த நம்பியிறே. ஆசாலேச முடையார் பக்கல் முக்த்தனு யிருக்கு மவனே. (வாழ்த்தி வணங்கி) வாய் படைத்தப்ரயோஜநம்பெறவாழ்த்தி அவன்திருவடிகளிலே வணங்கி. (என்மனத்துவந்த விதியினை) "மனம்புகுந்தாய் புகுந்ததற் பின் வணங்கும்" என்கிறபடியேஆசாலேசமுமின்றிக்கே யிருக்கக் கிடக்கைப் பாயிலே வெள்ளங் கோத்தாப்போலே. (என்மனத்துவந்த) ஈழம் களுக் காண்பா ரில்லையிறே, எல்லாவவஸ்தையிலும்வருவானவனிறே. அதுக்கடி (விதியினை) அவன்ஸ்வாதந்த்ர்யத்தாலும் என்கருமத்தாலும் தவிர்க்கவொண்ணாத க்ர்பை. (விதிவாய்க் கின்று காப்பாரார்) (விதிசூழ்ந்ததால்) இவ்வளவான பேற்றுக்கடியான தம்முடைய ஸுக்ர்தத்தைச் சொல்லுகிறார்.

(கண்டுகொண்ட தொண்டனேன் விடுகிலேனே) சுவடறிவிக்குந் தனையுமிறே வருத்தமுள்ளது, பின்னை அத்தலை யித்தலையாயித்தனை. (கண்டுகொண்ட) (நான் கண்டுகொண்டேன்) என்று அரசடியிலே காட்டிக்கொடுத்த காட்சி; (ஏது செய்தால் மறக்கேன்) என்று மறந்து விடவொண்ணாத படியிறே மனஸ்ஸில் புகுந்து காட்டிக் கொடுத்தது. (கண்டுகொண்ட) கேட்டது கண்டாற்போலே யிருக்கிறது காணும். ஸ்வரூபஜ்ஞானம் பிறந்தவ ராகையாலே- "பண்டேயுண்டாய்" இழந்தது கண்டாற்போலே யிருக்கிறது. அவன் மால், நான் தொண்டன், இனிவிட உபாயமுண்டோ? அவனுக்கு என்பக்கல் ஸ்நேஹமில்லை என்னவொண்ணாது, நான் அதிலீடுபட்டிலேனென்னவொண்ணாது, ஆனபின்பு எத்தைச் சொல்லிவிடுவது. ... ... ... ... (க)

மூ.—காற்றினைப்புனலைத்தீயைக்கடிமதிளிலங்கைசெற்ற
ஏற்றினையிமயமேயவெழின்மணித்திரளையின்ப
ஆற்றினையமுதந்தன்னையவுணருயிரையுண்ட
கூற்றினைக்குணங்கொண்டுள்ளம்கூறுநீகூறுமாறே. (உ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காற்றினைப் புனலைத் தீயை | பஞ்சபூதாரப்தமான ஜகச்சரீரனை ய், | கடி | அரஞ்சுப்போரும்படியான, |
| | | மதிள் | மதிளையுடைத்தான, |

மதியினை - மாதாபிதாக்களுக்காதல்; ஆச்ரிதர்க்காதல். வருகை அஸம்பாவிதமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஈழங்களுவித்யாதி.) கண்டத்தையொழியக் காணாதவற்றை ஸ்வப்நங்காணுமென்றபடி. அரசு - திருவரசு. ... ... ... (க)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இலங்கை செற்ற | லங்கைக்குத்தலைவனானராவணனை அவன் பரிகரங்களோடே முடித்து வெற்றி கொள்ளுகையாலே, | அவுணன் | ஹிரண்யாக்ஷனுடைய, |
| ஏற்றினை | ரிஷபம்போலே செருக்கி யிருப்பவனாய், | ஆர்உயிர் உண்ட | அரியப்ராணனைமுடித்துப் போடுகையாலே, |
| இமயம் ஏய | பொன்போலேஸ்பர்ஹணீயனாய், | கூற்றினை | ஆச்ரித விரோதிகளுக்கு யமனையொத்தவனான ஸர்வேச்வரனை, |
| எழில் | தேஜஸ்ஸுமிக்கிருந்துள்ள, | உள்ளம் | மநஸ்ஸே, |
| மணித்திரளை | மணித்திரள்போலே போக்யபூதனாய், | குணம்கொண்டு | அவன் திருக்கல்யாணகுணங்களை மநநம்பண்ணி, |
| இன்பவற்றினை | ஆநந்த ப்ரவாஹத்தை யொத்தவனாய், | கூறு | அநுஸந்திக்கப் பார் என்ன; அப்படிஅநுஸந்தித்தமநஸ்ஸைப்பார்த்து, |
| அமுதந்தன்னை | போனவுயிரை மீட்கவற்றான அமிர்தம்போலேபோக்யபூதனாய், | நீகூறுமாறே | நீ கூறும்படியே! என்று வித்தராகிறார். (௨) |

வ்யா.—இரண்டாம்பாட்டு. (காற்றினை இத்யாதி) (ஸ்ரோதேவதாः) என்கிறபடியே பூதங்களைந்துக்கும் உபலக்ஷணமாய், காரணமே அவஸ்தாந்தராபந்நமான கார்யம் என்னுமத்தாலே ஜகச்சரீரியானவனை என்கை.

(கடிமதிளிலங்கை செற்றவேற்றினை) கடி - அரண். அரணாகப் போரும்படியான மதிள். (லங்காராவணபாலிதாம்) என்கிறபடியே மதிளின்றியிலே யிருந்தாலும் ப்ரவேசிக்க வொண்ணாத வூர்; அதுக்குமேலே ராவணனும் பரிகரமும் பல்கிப் படிந்து கிடக்கிற லங்கையை. (பாழாளாகப் படைபொருதான்) என்கிறபடியே-லங்கை யடைய ஆள் பாழாம்படி செற்று அத்தால் வந்த மேனாணிப்பாலே செருக்கியிருக்கிறவனை.

(இமயமேய வெழில்மணித் திரளை) இமயம் - பொன், ஏய்கை - ஒக்கை. ஆஸ்ரித விரோதியான ராவணனைக் கொன்றபடியாலேசெருக்கி பொன்போலேபுகர்த்து நல்லமணித்திரள்போலே போக்யனானவனை.

---

இரண்டாம்பாட்டு.—(காற்றினை) காரணமான பூதங்களை கார்யாவஸ்த்தமான ஜகத்தாகையாலே (ஜகச்சரீரியென்கிறது·)

(இமயம்) இத்யாதிக்கு - அவதாரத்துக்குப் பிற்பட்டார்க்கும் அநுபவிக்கலாம்படி ஹிமவானிலே பொருந்தியிருக்கிறபடி என்று நிர்ஹித்தார்கள். * ஏலநாறு தண்தடம் பொழிலிடம்பெற விருந்த நல்லிமயமிறே.

(இன்பவாற்றினை) * மதுரவாறிறே. (𑌆𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃) (ஆநந்தம் ப்ரஹ்மண:) என்கிற ஆநந்த ப்ரவாஹம். ஆறு என்கையாலே-விடாய்த்தார்க்குப் புக்குமுழுகலாயிருக்கையும், வேண்டினவிடத்தே திறந்து பாய்ச்சி விளைவித்துக் கொள்ளலாயிருக்கையும்; இவ்வாறு விளைவிப்பது *பேரமர் காதல் கடல் புரையவிளையவிறே. (அமுதந்தன்னை) போனவுயிரை மீட்கவற்றாய் போக்யமுமா யிருக்கை. (இன்பவாற்றினை அமுதந்தன்னை) விளைவிப்பானுந் தானாய் விளைந்தால் புஜிக்கும் போகமுந் தானாயிருக்கையிறே. * 𑌅𑌮𑍃𑌤𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑍃𑌪𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 - அம்ர்தம் த்ர்ஷ்ட்வா த்ர்ப்யந்தி யிறே. கண்கொண்டு புஜிக்கலாம் அம்ர்தமிறே.

இப்படி ப்ராப்யப்ராபகங்க ளிரண்டுந் தானேயானால் இவ்வம்ர்தபானம் பண்ணுவார்க்கு வரும் விரோதி போக்குவார் ஆரென்னில்? (அவுணனுருயிரை யுண்ட கூற்றினை) ப்ரஹ்லாதன் விரோதியான ஹிரண்யன் பட்டது படுமென்கிறார். (கூற்றினை) (𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑍍) (ம்ரத்யும்ர்த்யும்) என்கிற மந்த்ர லிங்கத்தை நினைக்கிறார். (குணங்கொண் டுள்ளம்) நெஞ்சிலே குணங்களைக் கொண்டு, உள்ளம்கூறு; (நீ கூறுமாறே) உள்ளமானது எப்போதோ வென்றிருக்க, நீ கூறும்படியே! என்கிறார். (உ)

அ.—மூன்றாம்பாட்டு. (பாயிரும்) சொன்ன வணக்கத்தைச் சொல்லுகிறார்.

மூ.—பாயிரும்பரவைதன்னுட்பருவரைதிரித்துவானோர்க்
காயிருந்தமுதங்கொண்டவப்பனையெம்பிரானை
வேயிருஞ்சோலைசூழ்ந்துவிரிகதிரிரியநின்ற
மாயிருஞ்சோலைமேயமைந்தனைவணங்கினேனே. (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பா | அதிவிசாலமாய், | பருவரை | பெரிதான மந்தரபர்வதமானது, |
| இரும் | ஆழத்தை யுடைத்தான, | திரித்து | சுழலும்படியாகக் கடைந்து, |
| ப்ரவைதன்னுள் | திருப்பாற்கடலிலே, | | தனக்காகவன்றிக்கே, |

உள்ளம்-அண்ணிமை. விளி-ஸம்போதனை. (கூறு) என்று விதிக்க, அது கூறினவாறே (நீ கூறுமாறே!) என்று கொண்டாடுகிறார்.

மூன்றாம்பாட்டு.—(பாயிரும்) வணக்கம் முதல்பாட்டிலே சொன்னது.

| பதம். | உரை. |
|---|---|
| வானோர்க்காய் | தேவதைகளுக் காகவே, |
| இருந்து | பொருந்திநின்று, |
| அமுதம் கொண்ட | அம்ர்தத்தைக்கொடுத்த, |
| அப்பனை | உபகாரகனாய், |
| எம்பிரானை | எனக்கு ஸ்வாமியானவனாய், |
| இரும் | உயர்ந்திருந்துள்ள, |
| வேய்சோலை சூழ்ந்து | மூங்கில் குழாங்களாலே சூழப்பட்டு, |
| விரிகதிர் | விஸ்த்ர்தகிரணனான ஸூர்யன், |
| இருயநின்ற | திருமலை யாழ்வார் மேலேதன்சாயை படாமே தூரத்திலே ஸஞ்சரிக்கிற, |
| மாயிருஞ் சோலை மேய | திருமா லிருஞ் சோலைமலையிலே நித்யவாஸம் பண்ணுகிற, |
| மைந்தனை | மிடுக்கனானவனை, |
| வணங்கினேன் | வணங்கப் பெற்றேனென்கிறார். (௩) |

வ்யா.—(பாயிருமித்யாதி) பா என்று - பரப்பு; இருமை-பெருமை. இவை யிரண்டாலுமாக-ஆழத்தையும் அகலத்தையுஞ்சொன்னபடி. (பருவரைதிரித்து) கடலைக் கண்செறி யிட்டாப்போலே பெரிய மந்தர பர்வதத்தைநட்டு அம்ர்தங் கிளரு மளவும் தானே திரியும்படியாக வைத்த நொய்ப்பம்.

(வானோர்க்காயிருந் தமுதங்கொண்ட வப்பனை)தனக்கா யிருப்பார் அதமரிறே; நிலா தென்றல் சந்தனம் தண்ணீர்போலே தன்னை பரார்த்தமாக்கிவைக்கு மவனிறே. (பொதுநின்ற பொன்னங்கழல்) என்றும், (సర్వలోకశరణ్యాయ) (ஸர்வலோகசரண்யாய) என்றுஞ் சொல்லுகிறபடியே எல்லார்க்குந் தன்னைப் பொது வாக்கியிறே வைப்பது. ஆசையில்லாதார் இழந்துவிடு மித்தனை. (அப்பனை) உபகாரகனை. ப்ரயோஜநாந்தர பரரான அந்தர ஜாதிகளுக்காகத் தன்னையழியமாறி அநேகம்வடிவுகொண்டுஉபகரிக்குமவனை. (எம்பிரானை) தம்முடைய அம்ர்தம்.

(வேயிருமித்யாதி)மூங்கில் குழாங்களாலே சூழ்ந்துவிஸ்த்ர்த கிரணனான ஆதித்யன் திருமலையாழ்வார்மேலே தன்சாயை படாமே அகல ஸஞ்சரிக்கிற. (மாயிருஞ் சோலைமேய) திருமாலிருஞ்சோலை என்கிற திருநாமத்தை யுடைய திருமலையிலே பொருந்தி யிருக்கிற.

---

திரியும்படி-சுழலும்படி. நொய்ப்பம்-ஸாமர்த்த்யம். ப்ரயோஜநாந்தரபரர்க்கும் தன்னை ஆக்கிவைக்கக்கூடுமோவென்ன அருளிச்செய்கிறார் (பொதுநின்றவித்யாதி.) அந்தரஜாதி-சாடு.

(மைந்தனை வணங்கினேனே) தம்மை யடிமைகொண்ட பருவம். இவரை யடிமைகொள்வதாகத் திருமலையிலே எழுந்தருளி நின்றபின்பு வடிவு இளகிப் பதித்தபடி. (அப்பனை) என்று கீழே யொரு முதுமைசொல்லி, இப்போது (மைந்தனை) என்கிறாரிறே... ... ... ... ... (ரு)

மூ.—கேட்கயானுற்றதுண்டுகேழலாயுலகங்கொண்ட
பூக்கெழுவண்ணனாரைப்போதரக்கனவிற்கண்டு
வாக்கினாற்கருமந்தன்னான்மனத்தினாற்சிரத்தைதன்னால்
வேட்கைமீதூரவாங்கிவிழுங்கினேற்கினியவாறே. (ச)

| பதம். | உரை. |
|---|---|
| யான் | தாஸபூதனான அடியேன், |
| கேட்கஉற்றதுண்டு | ஒருவிஷயம் கேளாநின்றேன்; |
| உலகம் கொண்ட | பூமிப் பிராட்டியை எடுத்துக்கொண்டேறின, |
| பூக்கெழு | புஷ்பம்போலே ம்ருதுஸ்வபாவமான, |
| வண்ணனார் | வடிவையுடையரானவர், |
| கேழலாய் | வராஹரூபியாய், |
| கனவில்போதரக்கண்டு | என்னெஞ்சில் தோற்றநன்றாக அநுபவித்து, |
| வாக்கினால் கருமந்தன்னால் மனத்தினால் | மநோவாக்காயங்களாலும், |

| பதம். | உரை. |
|---|---|
| சிரத்தைதன்னால் | ச்ரத்தையாலும், |
| வேட்கை | ஆசையானது, |
| மீதூர | அதிசயிக்க, |
| வாங்கி விழுங்கினேற்கு | அத்தாலே விஷயாந்தரங்களை ஆசைகொண்டவளவும் அநுபவிக்கப்பெற்றவெனக்கு |
| இனியவாறே | பகவத் விஷயம் இனிதாயிருந்தபடியென்றான் என்று கேட்கஅதுக்கு மறுமாற்றம் சொல்லாதே கிடந்தானென்கிறான்.(ச) |

வ்யா.—நாலாம்பாட்டு. (கேட்கவித்யாதி) அடியேன் தேவரீரை ஒன்று கேட்கலுற்றேன், அத்தை யருளிச் செய்யவேணும். அதென்னன்பு தென்ன? (கேழலா யுலகங்கொண்ட-வித்யாதி) புஷ்பஹாஸஸுகுமாரமான வடிவை * மாநமிலாப் பன்றியாகி * நிலங் கோட்டிடைக்கொண்டது, இந்தக்கழஞ்சு மண்ணுமழிந்தால் பின்பு ஸ்ர்ஷ்டிக்கை அரிதாய்ச் செய்தருளிற்றோ, இத்தை எனக்கு அருளிச்செய்யவேணும். ப்ரளயங்கொண்ட பூமி, தன்னை எடுக்கவிறே இவன் இதுக்கு உத்தரஞ் சொல்லுவது.

---

அப்பனை, மைந்தனை என்றது - (அரும்பினை, அலரை) என்னுமாப்போலே. ... ... ... ... (ரு)

(போதரக்கனவிற்கண்டு) மிகவும் நெஞ்சிலே கண்டு. இந்த்ரியங்களால் வ்யவச்சேதமின்றிக்கே அவ்யவதாநேநவிசதமாகக் கண்டு.

(வாக்கிஞலித்யாதி) மநோவாக் காயங்களாலும் ச்ரத்தையாலும் மிக்க அபிநிவேசத்தை யுடையேனாய் விழுங்கினேனுக்கு இனிதாயிருந்தது. விழுங்குகை-அநுபவிக்கை. எவ்விஷயங்கள் அநுபவித்து ரஸித்துப்போந்தவெனக்கு எவ்விஷயம் ரஸிக்கிறது. (விழுங்கினேற் கினியவாறே) எனக்கினிதான வழி என்றான்!. எவ்வழியாலே முடிக்கப் போந்த விஷயம் எவ்வழியாலே இனிதாயிற்று. இது இனிதான வழியை யருளிச்செய்ய வேணும். இதுக்கு அவன் என்ன உத்தரஞ்சொல்லுவது, ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்ததுஉடைமை மங்காமைக்கன்றோ,அவ்வோபாதி மங்கவொண்ணாதென்று ஸம்ஸார ப்ரளயத்தில்நின்றும் இவனை எடுத்தாளித்தனையிறே. ... ... ... (ச)

மூ.—இரும்பனன்றுண்டநீர்போலெம்பெருமானுக்கென்றன்
அரும்பெறலன்புபுக்கிட்டடிமைபூண்டுய்ந்துபோனேன்
வரும்புயல்வண்ணனாரைமருவியென்மனத்துவைத்துக்
கரும்பினின்சாறுபோலப்பருகினேற்கினியவாறே. (ரு)

| பதம். | உரை. |
|---|---|
| இரும்பு அன்று உண்ட நீர்போல் | நெருப்பில்பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்பானது அக் காய்ச்ச லடங்கும்படி குடித்தஜலம் போலே, |
| எம்பெருமானுக்கு | வகுத்த சேஷியான ஸர்வேச்வரன் விஷயத்திலே, |
| என்றன் | என்னால், |
| பெறல்அரும் | பெறுதற்கரிய, |
| அன்புபுக்குஇட்டு | அன்பைஅவன்விஷயத்திலேவைத்து, |
| அடிமைபூண்டு | * வழுவிலா வடிமையிலே அந்வயித்து, |
| உய்ந்துபோனேன் | உஜ்ஜீவித்தேன்; அன்றியும், |
| வரும் | ஆச்ரிதரிருந்தவிடத்தே தேடிவருகிற, |
| புயல்வண்ணனாரை மருவி | மழைக்காலத்து மேகம்போன்ற திருநிறத்தையுடையவனைகிட்டி, |

நாலாம்பாட்டு.—(கேட்க) போதர - மிகவும். கனவு - மாநஸாநுபவம். சிரத்தை - ச்ரத்தை. உகட்டிப்போந்த விஷயம் - எல்லாப்ரகாரத்தாலும் இதரவிஷயங்களை யநுபவித்து அருவருத்துப்போந்த பகவத்விஷயமென்றபடி. (இனியவாறு - கேட்க யானுற்றதுண்டு) என்றந்வயம். ... ... ... (ச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என்மநத்து | என்மநஸ்ஸிலே, | இன்சாறு போல | இனியரஸம்போலே, |
| வைத்து | அவன் புறம்பு போகாமே பொருந்த வைத்து, | பருகினேற்கு | அநுபவிக்கப்பெற்றவெனக்கு, |
| கரும்பின் | கரும்பினுடைய, | இனியவாறே | இனிதாயிருந்தபடியென்றான்! என்று ஈடுபடுகிறார். (ரு) |

வ்யா.—அஞ்சாம்பாட்டு. (இரும்புஅனன்றுண்டநீர்போலித்யாதி) இரும்பானது அக்நியாலே மிகவும் தப்தமாய் அக்காய்ச்சலடங்க பாநம்பண்ணப்பட்ட ஜலம்போலே. (எம்பெருமானுக்கு) வருத்தசேஷிக்கு. (என்றனரும்பெறலன்பு) * அரும்பெற லடிகளைப் பற்றிலும்கிடையாத வன்பு, எனக்கு பகவத்விஷயத்திலே அன்பு பிறக்கையாவது - இந்தளத்தே தாமரை பூக்கையிறே. அஹங்கார மஹாவஹ்நியிறே. இந்தளம்-கும்மட்டி. (புக்கிட்டு) அன்பை அவன்பக்கலிலே யாக்கி.

(அடிமைபூண்டு)(அஹம் ஸர்வம் கரிஷ்யாமி)(அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்கிறபடியே வழுவிலா வடிமையிலே அந்வயித்து. (அடிமைபூண்டு) (தொண்டுபூண்டு) என்னுமாப்போலே இவ் வாத்மாவுக்கு ஆபரணமிறே - பகவத்தாஸ்யம்; ஆகையாலே (பூண்டு)என்கிறார். (உய்ந்துபோனேன்) முன்பு * அஸந்நேவவிறே.

(வரும் புயல்வண்ணனுனை) இருந்தவிடத்தேயிருந்து விடாய் கெடுக்கும் மேகமன்று, கடலை மணலோடே கழுத்தே கட்டளையாகப்பருகித் தவழ்ந்துவருகிற மேகம்போலே இருக்க வரும். (மருவி)(மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்மற்றவைபோல்.) (புயல்வண்ணனுனை மருவி) என்னை மறந்துகிட்டி.

---

அஞ்சாம்பாட்டு.— (இரும்பு) அனன்று - அனலுகை; காய்கை. தம்முடைய விடாயாறும்படி (பருகினேன்) என்கிறார். அப்படி பக்திபிறக்கை அரிதாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (எனக்கித்யாதி.) இவன் இந்தளமோவென்ன; அருளிச்செய்கிறார் (அஹங்காரமித்யாதி.) மேகத்தைக்கண்ட பயிர்போலே மருவியென்னுதல்; அவன் வர விமுகனாய்த் திரிந்த என்னை மறந்துமருவியென்னுதல். ஸஞ்சாரமற்றுஇவர் மநஸ்ஸிலே புகுந்தபின்பு அவனுக்குப் புறம்பு போக்கற்றபடி. இவர்மநஸ்ஸிறே அவனுக்கு உத்தேச்யம். அன்றியே, மநஸ்ஸுக்கு வேறுஸஞ்சாரமின்றிக்கே ஒன்றாய்.

(என்மனத்துவைத்து) ஸஞ்சாரம் அற்றபடி. உத்தேஶ்யம் கைபுகுந்தால்உண்டோ ஸஞ்சாரம். (கரும்பின் இன்சாறுபோலப் பருகினேற்கு) விழுங்குகைபோய்ப் பருகலாம்படி யாயிற்று. ஆழ்வாருடனே கலக்கக்கலக்கப் பருகலாம்படி யொருநீரானான். (இனியவாறே) இதுவுமொரு இனிமை யிருந்தபடியென்!. (ரு)

மூ.—மூவரின்முதல்வனாயவொருவனையுலகங்கொண்ட
கோவினைக்குடந்தைமேயகுருமணித்திரளையின்பப்
பாவினைப்பச்சைத்தேனைப்பைம்பொன்னையமரர்சென்னிப்
பூவினைப்புகழுந்தொண்டரென்சொல்லிப்புகழ்வர்தாமே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மூவரில் | ப்ராஹ்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய இம்மூவருக்கும், | இன்பப்பாவினை | தம்முடையபாட்டுக்களைப்போலே செவிக்குரஸாவஹனாய், |
| முதல்வனாய | காரணபூதனான, | | |
| ஒருவனை | அத்விதீயநாயகனாய் இந்த்ரனுக்காக மஹாபலியஜ்ஞவாடத்திலேசென்று, | பச்சைத்தேனை | மிக்க மாதுர்யத்தையுடைய தேன்போலே நாவுக்கு இனியனாய், |
| உலகம் கொண்ட | மூன்று லோகங்களையும் நீரேற்றுவாங்கிக்கொண்ட, | பைம்பொன்னை | பசியபொன்போலே ஸ்ப்ர்ஹணீயனாய், |
| கோவினை | நிர்வாஹகனாய், ஆச்ரிதஸம்ரக்ஷணார்த்தமாக, | அமரர்சென்னிப் பூவினை | நித்ய ஸூரிகளுக்கு சிரோபூஷணமான ஸர்வேச்வரனை, |
| குடந்தை மேய | திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுமவனாய், | புகழுந்தொண்டர்தாம் | புகழுகிற தாஸபூதர்கள், |
| குருமணித் திரளை | ச்ரேஷ்டமான நீலரத்நத்தின் ஸமூஹத்தை யொத்த வடிவழகையுடையனாய், | என்சொல்லிப் புகழ்வர் | எத்தைச்சொல்லிப் புகழுவார்கள்; இப்படிப் பட்டவனென்று பாசுரமிட்டுப் புகழப்போகாதென்றபடி. () |

---

மநஸ்ஸு ஸஞ்சாரமின்றிக்கேயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (உத்தேச்யமித்யாதி.) ... ... (ரு)

வ்யா.—ஆரும்பாட்டு. (மூவரித்யாதி)இந்த்ரனைக் கூட்டுதல், தன்னைக்கூட்டுதல். (𑌸 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌂 𑌯𑌾𑌤𑌿 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌏𑌕 𑌏𑌵 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃)(ஸஸம்ஜ்ஞாம் யாதிபகவாந் ஏகஏவஜநார்த்தந:) என்னும்படியேமூவருக்கும் காரணமாகையாலே(முதல்வன்)என்கிறார். (முதல்வனையவொருவனை) (மூவுருவுங் கண்டபோ தொன்றாஞ்சோதி) என்கிறபடியே மூவரையும் தனித்தனியே கண்டால் இவனே காரணபூதன், இவனே காரணபூதனென்னலாய்,மூவரையுஞ் சேரக்கண்டால் இருவர் கார்யகோடி நிவிஷ்டராய், இவனே இருவருக்கும் காரண மென்னும்படி பரஞ்ஜ்யோதிஶ் ஶப்தவாச்ய னிவனேயாயிருக்கையாலே (ஆஞ்சோதி - ஒன்று) என்கிறார். (உலகங்கொண்டகோவினை) மூவருக்கும் ப்ரதாநனானால் அவர்கள் காரியஞ் செய்துகொடுக்கவேணுமே, அவர்களிலே யொருவனுக்குக் காரியஞ்செய்தபடி.

(உலகங்கொண்ட) இந்த்ரனுடைய ராஜ்யத்தை மஹாபலி பறித்துக்கொள்ள அவன் பக்கலிலே தானேசென்று அபேக்ஷித்து (மூவடி) என்று இந்த்ரன்காரியஞ்செய்ய முதலடியிட்டபடி. முன்பேஒருவனுக்குக்கையோட்டைத்தீர்த்து விட்டான். * முடையடர்த்த சிரமேந்தி மூவுலகும் பலிதிரிவோன், இடர்கெடுத்த திருவாளனிறே. அவன்தமப்பனுக்குத் தானே வேதப்ரதாநம் பண்ணினான். இப்படி செய்கைக்கு ஹேதுவென்னென்னில் (கோவினை) நிர்வாஹகனாகையாலே.

(குடந்தைமேய) இன்னும் ஸம்ஸாரிகள் இடர்பட்டாருண்டாகிலும் கைகழியப் போகவொண்ணாதென்று திருக்குடந்தையிலே படுக்கை பொருந்திப் பள்ளிகொண்டவனை. (குருமணித்திரளை) ச்ரேஷ்டமான நீலரத்நஸமூஹம்போலே புகர்த்துக் குளிர்ந்த வடிவழகை யுடையவனை.

(இன்பப்பாவினை) செவிக்குத் தம்முடையகவிபோலே இத்தித்திருக்கிறபடி. பாவென்பது - இயல். பாட்டு. * இன்கவிபாடும் பரமகவிகளான முதலாழ்வார்கள்கவிபோலே இனியனாயுள்ளவனை யென்னவுமாம்.(பச்சைத்தேனை) செவிக்கே யன்றிக்கே நாக்குக்குமிருக்கிறபடி. (பைம்பொன்னை) உடம்புக்கு அணையலாம்படி ஸ்பர்ஹணீயமாயிருக்கை. (அமரர்சென்னிப்பூவினை) * அயர்வறுமமரர்களுக்கு சிரோபூஷணமானவனை. "அரும்பினை யலரை" "பாதபற்புத்தலைசேர்த்து" என்னவேண்டாவே அவர்களுக்கு.

---

ஆரும்பாட்டு.—(மூவரித்யாதி) ருத்ராதிகளுக்குச் செய்தானோவென்ன; அருளிச்செய்கிறார் (முன்பே யொருவனுக்கித்யாதி.) அவன்பூவோ வென்ன; அருளிச் செய்கிறார் (அரும்பினையலரையென்று.) ... ... ... ... (௩)

(புகழுந்தொண்டர்)இவ்விஷயத்தைப்புகழ்ந்தார்களாகக்கொண்டோம், இதுக்குப் பாசுர மெங்கே தேடிச்சொன்னார்கள், கிண்ணகத்திலே புக்குமுழுகுவானைப்போலே குமிழி நீருண்டு போமித்தனைபோக்கி, (என்சொல்லிப் புகழ்வர்தாமே) (அரும்பொருளாதல் - அறிந்தன) என்று அறிய வொண்ணாதென்று புகழுமதொழியப் பாசுரமிட்டுப் புகழப்போகாது. (சு)

அ.—ஏழாம்பாட்டு. (இம்மையை யித்யாதி) ஸர்வேச்வரனுடைய ஆஸ்ரித பாரதந்த்ர்யத்தை அநுஸந்திக்கவல்லார்க்கு ஸஞ்சாரபூமி என் உத்தமாங்கமென்கிறார்.

மூ.—இம்மையைமறுமைதன்னையெமக்குவீடாகிநின்ற
மெய்ம்மையைவிரிந்தசோலைவியன்திருவரங்கமேய
செம்மையைக்கருமைதன்னைத்திருமலையொருமையானைத்
தன்மையைநினைவாரென்றன்தலைமிசைமன்னுவாரே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| இம்மையை | இஹலோகத்தில் ஸ்வ விஷய ஜ்ஞாந ஸுகத்தையும், |
| மறுமைதன்னை | பரமபதாநுபவ ஸுகத்தைத்தையும் தருமவனாய், |
| எமக்குவீடாகிநின்றமெய்ம்மையை | நமக்கு மோக்ஷஸுகமாகிற ப்ராப்யத்துக்கு உபாய பூதனாய், |
| விரிந்த | விஸ்த்ர்தமான, |
| சோலை | சோலைகளாலே சூழப்பட்டு, |
| வியன் | ஆச்சரியப் படத்தக்கதா யிருந்துள்ள, |
| திருவரங்கம் | திருவரங்கமென்கிற திருப்பதியிலே, |
| மேய | நித்யவாஸம்பண்ணுமவனாய், |
| செம்மையைக்கருமைதன்னை | க்ர்தயுகம் முதலான யுகத்திலுள்ளார்க்குத்தக்க வடிவுகளை கொள்ளுமவனாய், |
| திருமலை | திருவேங்கட மலையிலே நின்றருளி, |
| ஒருமையான் | மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் ஒக்கமுகங் கொடுக்குமவனுடைய, |
| தன்மையை | ஆச்ரிதபாரதந்த்ர்யத்தை, |
| நினைவார் | நினைக்கவல்லவர்கள், |
| என்றன்தலைமிசை மன்னுவார் | என்தலையிலே யிருக்கத் தக்கவர்களென்கிறார். (எ) |

வ்யா.—(இம்மையை) இஹலோகத்தில் ஸ்வவிஷயஞ்ஜாந ஸுகத்தைத் தருமவனை. (மறுமைதன்னை) ஶரீரஸமநந்தரம் ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யத்தைத் தருமவனை.

ஸம்ஸாரத்தில் துஃகநிவர்த்தியே, ஸுகமென்றுப்ரமமேயிறே, (எமக்குவீடாகிநின்ற மெய்ம்மையை) நமக்கு மோக்ஷஸுகமா யுள்ளவனை. கீழ்ச்சொன்னப்ராப்யத்துக்கு அவ்யவஹிதமான உபாயமானவனை. (விரிந்தசோலை யித்யாதி) அவ்வுபாயம் ஸுலபமான விடத்தைப் பேசுகிறார். பரந்த சோலையை யுடைத்தாய் விஸ்மயநீயமா யிருந்துள்ள கோயிலிலே நித்யவாஸம் பண்ணுமவனை. (செம்மையைக் கருமைதன்னை) யுகந்தோறும் அவ்வவ யுகங்களிலுள்ளார்க்குத் தக்கவடிவுகளைக் கொண்டு அவர்களை ரக்ஷிக்குமவனை. (முன்னை வண்ணம்) இத்யாதிப்படியே செம்மையும் கருமையும் - மற்ற விரண்டுக்கு முபலக்ஷணம்.

(திருமலை யொருமையானை) (கண்ணுவனென்றும்மண்ணோர் விண்ணோர்க்கு) என்கிறபடியே திருமலையிலே நின்று நித்யஸூரிகளுக்கும் நித்ய ஸம்ஸாரிகளுக்கும் ஒக்க முகங்கொடுக்கு மவனை. (தன்மையை நினைவார்) இந்த ஆஸ்ரித பாரதந்த்ர்யத்தை நினைக்க வல்லார். (என்றன் தலைமிசை மன்னுவாரே) அவன்திருவடிகளும் இவர்கள்திருவடிகளும் ஒக்கவன்று மன்னுவது, இவர்கள்திருவடிகளே என்தலையில் மன்னுவது. (தண்சேறை யெம்பெருமான் றாள்தொழுவார் காண்மின் என் தலைமேலார்) என்கிறார். (எ)

அ.—எட்டாம்பாட்டு. (வானிடைப்புயலை) இவ்விஷயம் ஸந்நிஹிதமா யிருக்க தேஹத்தைப் பூண்கட்டிக் கொள்வதே! ஸம்ஸாரிக ளென்கிறார்.

மூ.—வானிடைப்புயலைமாலைவரையிடைப்பிரசமீன்ற
தேனிடைக்கரும்பின்சாற்றைத்திருவினைமருவிவாழார்
மானிடப்பிறவியந்தோமதிக்கிலர்கொள்கதந்தம்
ஊனிடைக்குரம்பைவாழ்க்கைக்குறுதியேவேண்டினாரே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| வானிடை | ஆகாசத்திலே வர்த்திக்கிற, | | வை யுடையனாய், |
| புயலை | மழைக்காலத்துமேகம் போன்ற வடி | மாலை | ஆச்ரிதவ்யா முக்தனாய், |

ஏழாம்பாட்டு. — (இம்மையை) இம்மைக்கு ஸம்ஸாரதுஃகநிவர்த்தியமையாதோ, அவன் விஷயஜ்ஞாந மாக வேணுமோ வென்ன ; அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரத்திலித்யாதி.) வீடாகிநின்ற - வீட்டுக்கு நிர்வாஹகனென்கையாலே அத்தைத் தருகைக்கும் அவனே உபாயமென்றபடி. ஒருமையான் - ஒருபடிப்பட்டவனென்றாய் அங்குள்ளாரோடு இங்குள்ளாரோடு வாசியற முகங்கொடுக்கையிலே ஏகரூபனாயிருக்கிறவனென்றபடி. ... (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வரையிடை | பர்வதத்திலே, | மதிக்கிலர் | பெறுதற்கரிய ஜந்மமென்று நினைக்கவில்லை, |
| பிரசமீன்ற | தேனீக்களாலே சேர்க்கப்பட்ட, | கொள்க | இது நிஶ்சயம்; |
| தேனிடை | தேனை விளைநீராக வளர்ந்த, | அந்தோ | ஐயோ, |
| கரும்பின் சாற்றை | கரும்பின் சாறுபோலே போக்யபூதனாய், | தந்தம் | தங்கள் தங்களுடைய, |
| திருவினை | ஸர்வ ச்ரேஷ்டனானவனை, | ஊனிடைக்குரம்பை வாழ்க்கைக்கு | மாம்ஸமான சரீரத்திலே வாழுகைக்கு, |
| மருவிவாழார் | ஆச்ரயித்து வாழமாட்டார்கள்; | உறுதியே வேண்டினார் | உறுதியையே தேடாநிற்பர்கள்; இனிபிறக்கவே முயலுவர்களென்றபடி. () |
| மானிடப் பிறவி | மநுஷ்யஜந்மத்தை, | | |

வ்யா.—(வானித்யாதி) ஆகாஶமத்யே நீர் கொண்டெழுந்துவந்து தோற்றுகிற மேகம்போன்ற வடிவழகை யுடையவனை. (வானிடைப்புயல்) என்கையாலே-நிராலம்பனாயிருக்கிறவென்னை நிர்ஹேதுகமாக வந்து விஷயீகரித்தவனை யென்கிறார். (மாலை) அதுக்கடியான வ்யாமோஹம். (வரையிடை யித்யாதி) மலையிலே தேனீக்களாலே உத்பாதிக்கப்பட்ட தேனை நீராகவளர்ந்த கரும்பின் சாறுபோலே போக்யனானவனை. (திருவினை) உத்க்ர்ஷ்டமாய் நிரவதிகமான ரஸவஸ்துவுக்குப் பெரிதுபோலே உத்க்ர்ஷ்ட வஸ்துவுக்கும், உத்க்ர்ஷ்ட வஸ்துவிறே. (திருவுக்குந் திருவாகிய) (ஸ ஶ்ரீ: ஶ்ரிய:) (ஸஶ்ரீஶ்ஶ்ரியஃ) என்னும்படியே. (ருதிவினைமருவிவாழார்) வாழுகைக்குநேர்த்தி அவன்மேல்விழ விலக்காதொழிகை. உங்களுக்கு நான் வேணுமென்ன, எங்களுக்கு நீவேண்டாவென்னுமவர்கள்.

(மானிடப்பிறவி) புருஷார்த்தோபயோகியான ஶரீரத்தை உதாஸீநிப்பதே!

---

எட்டாம்பாட்டு.—(வானிடை) நிராலம்பநமான ஆகாசத்தை மேகம் பற்றினாப்போலே அகதியானவென்னையும் விஷயீகரித்தானென்றபடி. பிரசம் - தேன். ரஸவஸ்து-பிராட்டி. கீழ்வாக்யவிவரணம் (உத்க்ர்ஷ்டவஸ்துவித்யாதி.) மானிடப்பிறவி-சாஸ்த்ராதிகாரமானதேஹமென்னுதல்; தோஷயுக்தமானதேஹமென்னுதல்; அஸ்திரமானதேஹமென்னுதல்.

அன்றிக்கே, இச்சரீரத்தில் தோஷத்தை யுணராதொழிவதே! என்னவுமாம். இத்தை தேவசரீரமாக நினைத்திருப்பார்க ளென்னவுமாம். (அந்தோ) ஐயோ! என்று இவர்களிழவுக்குவெறுக்கிறார். (சொள்க) நிஸ்சிதம்.

(தந்தமித்யாதி) த்ர்டமின்றியே அப்போது போயிற்று இப்போது போயிற்று என்றும், மின்னிலும் நிலையற்றிருக்கிற இச்சரீரத்துக்குப் பூண்கட்டவே தேடுவர்கள். ... ... (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. (உள்ளமித்யாதி) என் ஹ்ர்தயமானது ஜநநமரணங்களை நினைத்து உருகாநின்றது, எனக்கு தேவரீரை யொழியத் துணையில்லையென்கிறார்.

மூ.—உள்ளமோவொன்றினில்லாதோசையிலெரிநின்றுண்ணும்
கொள்ளிமேலெறும்புபோலக்குழையுமாலென்றனுள்ளம்
தெள்ளியீர்தேவர்க்கெல்லாந்தேவராயுலகங்கொண்ட
ஒள்ளியீருமையல்லாலெழுமையுந்துணையிலோமே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உள்ளம் | என்மநஸ்ஸானது, | தேவர்க்கெல்லாம் தேவராய் | தேவாதி தேவனாயிருந்துவைத்து, |
| ஒன்றில்நில்லாது | ஒருவிஷயத்தில்பொருந்தியிருக்கிறதில்லை; | உலகம்கொண்ட | மூன்று லோகத்தையும் மஹாபலிபக்கலிலே நீரேற்று வாங்கி, |
| என்றனுள்ளம் | என்மநஸ்ஸானது, | ஒள்ளியீர் | இந்த்ரனுக்குக் கொடுக்கையால் வந்த தேஜஸ்ஸையுடையவரே, |
| ஓசையில் | சப்தத்தை யுடைத்தான, | எழுமையும் | எல்லா வவஸ்தைகளிலும், |
| எரி | அக்நியானது, | உம்மையல்லால் | தேவரீரையொழிய, |
| நின்று | ஒருபடிப்பட நின்று, | துணையிலோம் | வேறு துணையில்லாதவர்களாயிராநின்றோமென்கிறார். (கூ) |
| உண்ணும் | க்ரஸிக்கிற, | | |
| கொள்ளிமேல் | கொள்ளியிலகப்பட்ட, | | |
| எறும்புபோல | எறும்புபோலே, | | |
| குழையும் | ஜந்மத்தைநினைத்து, சிதிலமாகாநின்றது; இப்படியிருப்பதனாலே, | | |
| தெள்ளியீர் | தெளிந்த ஸ்வபாவத்தையுடையீராய், | | |

---

மதிக்கிலர்-இம்மூன்றுகாரத்தையும் நினைக்கிறிலர், இது நிச்சயம். இப்படி மூன்றர்த்தமாகவன்றிக்கேகீழிரண்டர்த்தத்தாலும் பலிதத்தை யருளிச்செய்கிறார் (இத்தைதேவசரீரமித்யாதி.) (அ)

வ்யா.—(உள்ளமோ வொன்றில்நில்லாதித்யாதி) ஹ்ருதயமானது ஓரிடத்தே தரியாதே ஓசையையுடைத்தான எரிநின்று உண்ணுநின்ற கொள்ளியினுள்ளெறும்புபோலே * உருவார் பிறவியை நினைத்து * இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்பேபோல வுருகி சிதிலமாகாநின்றது. ஒருதலை மரணம், ஒருதலைஜந்மமிறே.(குழையுமால்) இவன் சைதந்யத்துக்கு ப்ரயோஜநம் இது பொல்லாது என்றறிகை,அவன்சைதந்யத்துக்கு ப்ரயோஜநம்அப்படிசெய்கை. அதாவது - ரக்ஷிக்கையிறே.

(தெள்ளியீர்) இத்தலையில் கலக்கத்துக்கு எதிர்த்தட்டான தெளிவுடையாரைப் பற்றுகிறார். (தெள்ளியீரித்யாதி) மஹாபலி ஔதார்யத்துக்கும் குறைவு வாராமே தன்னை ஆச்ரயித்த இந்த்ரனுடைய கார்யத்துக்கும்குறைவுவாராமேகார்யம்பார்த்ததெளிவு. தேவர்க்கெல்லாந் தேவராயிருந்துவைத்து * அலம்புரிந்த நெடுந்தடக்கையைத் தாழ ஏற்று பூமியை யளந்துகொண்ட. (ஒள்ளியீர்) இந்த்ரன் ப்ரயோஜநாந்தரபரனாகிலும் நம்கை பார்த்திருந்தானென்னுமதத்தாலே வடிவில் பிறந்த புதுக்கணிப்பு. அவன் இவன் கைபார்த்து இருக்கையிறே இவன் காலவிளம்பமாகக் காரியம் செய்தது. (உம்மையல்லா லித்யாதி) எங்களுக்கு நாங்களும் தஞ்சமல்ல,பிறரும் தஞ்சமல்ல, உம்மையேதஞ்சமாக வுடையோம்; கோல்துணையா யிருப்பார் சிலரன்றே. அவஸ்த்தாந்தரத்தை ப்ராபித்தாலும்*அரங்கத்துறையு மின்துணைவனையேதுணையாகப் போமவரிறே. ... ... ... ... (௯)

அ.—பத்தாம்பாட்டு.(சித்தமுமித்யாதி) ஸம்ஸாரத்தையஞ்சி உன்திருவடிகளைப் பற்றினவளவேயோ, திருவடிகளிலே பரமபக்தியுமுண்டாயிற்றென்கிறார்.

மூ.—சித்தமுஞ்செவ்வைநில்லாதென்செய்கேன்தீவினையேன்
பத்திமைக்கன்புடையேனாவதேபணியாயெந்தாய்
முத்தொளிமரதகமேமுழங்கொளிமுகில்வண்ணாவென்
அத்தநின்னடிமையல்லால்யாதுமொன்றறிகிலேனே. (௩0)

---

ஒன்பதாம்பாட்டு.—(உள்ளமோ) சேதநனுக்கு இருபாடெரிகிறதேதென்ன; அருளிச்செய்கிறார் (ஒருதலையித்யாதி.) அப்படி செய்கை-அகாரப்படியே செய்கை. (ஒள்ளியீர்) ஒண்மை - அழகு; இந்த்ரன்கை பார்த்திருந்தா னென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (அவனிவனித்யாதி.) காலவிளம்பம் - சாடு. இவருக்கு அவனையொழியத் துணையில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார் (கோல்துணையாயித்யாதி.) ... ... (௯)

| பதம். | உரை. |
|---|---|
| தீவினையேன் | மஹா பாபியானவென்னுடைய, |
| சித்தம் | மநஸ்ஸானது, |
| செவ்வைநில்லாது | தரித்துநிற்க மாட்டுகிறதில்லை; |
| என்செய்கேன் | நானென்னசெய்யப்புகுகிறேன்; |
| எந்தாய் | எனக்கு உபகாரகனானவனே, |
| பத்திமைக்கு | உன் விஷயமான |
| அன்புடையேனாவதே பணியாய் | பக்தியிலே விச்வாஸமுண்டாம்படி செய்ய வேணும்; |
| முத்து | முத்துப்போலே குளிர்த்தியையும், |

| பதம். | உரை. |
|---|---|
| ஒளி | ஒளியையுமுடைத்தான, |
| மரதகமே | மரதகம்போலேச்லாக்யமானநிறத்தையுடையனாய், |
| முழங்கு | மின்னி முழங்காநிற்பதாய், |
| ஒளி | ப்ரகாசத்தை யுடைத்தான, |
| முகில்வண்ணா | மேகத்தின் நிறத்தையுடையனாய், |
| என் அத்த | எனக்குஸ்வாமியான |
| நின்னடிமையல்லால் | தேவரீர் திருவடிகளில் கைங்கர்யமொழிய, |
| யாதொன்றும் | வேறொன்றையும், |
| அறிகிலேன் | அறியாதவனாயிராநின்றேன். (௧௦) |

---

வ்யா.—(சித்தமுஞ் செவ்வைநில்லாது) நீஞ்சப்புக்கு வாய்கரையிலே தெப்பமிழப்பாரைப்போலேஅநுஸந்திக்கப் புக்கால் தரித்துநிற்க மாட்டுகிறதில்லை நெஞ்சு. (என்செய்கேன்தீவினையேன்) பக்திபாரவச்யத்தாலேஅநுபவிக்கப் போகாதபடிபாபத்தைப்பண்ணினேன்.என்செய்கேனென்று-செயல்மாட்சி;உத்தேச்யவிரோதி பாபமாமத்தைப்பற்ற (தீவினையேன்) என்கிறார். (பத்திமைக்கன்புடையேனாவதே பணியாயெந்தாய்) (என்ற னளவன்றால் யானுடைய வன்பு) என்னும்படியே நூற்பிடித்த பக்தியை அளவாக்கவேணும். (எந்தாய்) பக்தியை யுண்டாக்கின நீயே அளவுபடுத்தவேணும்.

(முத்தொளி மரதகமே) பக்திஜநகமான வடிவு முத்தினுடைய குளிர்த்தியையும்மரகதத்தினுடையச்யாமத்தையும் உடைத்தாயிருக்கை. (முழங்கொளி முகில்வண்ணா) மின்னிமுழங்கி வில்விட்டு ஸஞ்சரிப்ப தொருமேகம்போன்ற நிறத்தை யுடையவனே.

---

பத்தாம்பாட்டு.—(சித்தமும்) அன்புடையே னாவதே பணி - (அளவன்றால்) என்று-அளவிறந்த பக்தியை மாற்றி நூல்பிடித்த செவ்வே அநுபவிக்கும்படி பக்தியை, அளவாக்க - மட்டமாக்க வேணுமென்றபடி. ... ... ... ... (௧௦)

(என் அத்த) அழகுக்குத் தோற்று என்னாயனென்கிறார். நீர், சித்தமுஞ்செவ்வையில்லாதென்பது, தீவினையேனென்பதாய்க்கிடந்து என்றியபடுகிறீர், இத்தைவிட்டு வேறொன்றோடேபோது போக்கினாலோவென்ன (நின்னடிமையித்யாதி) உன்திருவடிகளில்கைங்கர்யமொழிய வேறொன் றறியேன். (மறந்தே னுன்னை முன்னம்) என்றது போக்கி, (ஏது செய்தால் மறக்கேன்) என்னும்படி பண்ணிவைத்தபின்பு வேறொன்றை யறிய விரகுண்டோ. ... (க0)

மூ.—தொண்டெல்லாம்பரவிநின்னைத்தொழுதடிபணியுமாறு
கண்டுதான்கவலைதீர்ப்பானாவதேபணியாயெந்தாய்
அண்டமாயெண்டிசைக்குமாதியாய்நீதியான
பண்டமாம்பரமசோதிநின்னையேபரவுவேனே. (கக)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொண்டெல்லாம்பரவி | செய்யுமடிமைகளையெல்லாம்அடைவுகெடப்பேசி, | அண்டமாய் | அண்டாந்தர்வர்த்திகளுக்கும் நிர்வாஹகனாய், |
| நின்னைத் தொழுது | தேவரீரை ஸேவித்து, | எண்டிசைக்கும் | எட்டுதிக்கிலுமுள்ள தேவதைகளுக்கும், |
| அடிபணியுமாறு கண்டு | திருவடிகளை வணங்கும் ப்ரகாரத்தை மநோரதித்து, | ஆதியாய் | காரணபூதனாய், |
| தான் கவலைதீர்ப்பானாவதே! | ஒருவன் தன்மநோதுக்கத்தைத் தீர்த்துக்கொள்ளப்போமோ, | நீதியானபண்டமாம் | முறைதப்பாததநமென்று சொல்லத்தக்க, |
| எந்தாய் பணியாய் | எனக்கு ஸ்வாமியான நீயே, அருளிச் செய்யவேணும்; | பரமசோதி | பரஞ்ஜ்யோதிஸ்ஸப்தவாச்யனை, |
| | | நின்னையே | தேவரீரையே, |
| | | பரவுவேன் | அடைவுகெட ஸ்தோத்ரம்பண்ணுவேனென்கிறார். |

வ்யா.—பதினோராம்பாட்டு. (தொண்டெல்லா மித்யாதி) செய்யுமடிமையெல்லாம் அடைவு கெட்டுப்பேசி. (అహంసర్వంకరిష్యామి) (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்னும்படியே. (நின்னைத்தொழுது) உன்னைக்கண்டுவைத்து அடைவுபடத்தொழப்போமோ. (அடிபணியுமாறுகண்டு) தப்பாமே மநோரதித்து. (தான்கவலைதீர்ப்பானாவதே) தன்னாலே மநோதுக்கத்தைத்தீர்த்துக்கொள்ளலாமே. என்னாலே மனக்கவலை போக்கி அடிமைசெய்யப் போமோ. மனக்கவலை தீர்ப்பார் அவரிறே. (பணியாயெந்தாய்) நிர்வாஹகனான நீயே அருளிச்செய்யாய்.

பதினோராம்பாட்டு.—(தொண்டெல்லாம்) அடிபணியுமாறு கண்டு - திருவடிகளிலே வணங்குகிற ப்ராகாரத்தை மநோரதித்து. கொள்ளலாமே - கொள்ளப்போமோ. ... ... (கக)

(அண்டமாயித்யாதி) அண்டாந் தர்வர்த்திகளுக்கும் நிர்வாஹகனாய், எட்டுதிக்கிலுள்ள தேவதைகளுக்கும் காரணமாய் முறை தப்பாதபடி. (பண்டமாம்) தநமாம். பண்டமென்பது-தநம். இவ்வாத்மாவுக்கு தநமானவனே. (பரமசோதி) பரஞ்ஜ்யோதிஸ்ஸப்த வாச்யனானவனே. (நின்னையேபரவுவேனே) உன்னையே யடைவு கெட ஸ்தோத்ரம் பண்ணுமத்தனே. ... (கக)

அ.—பன்னிரண்டாம்பாட்டு. (ஆவியை யித்யாதி) உபய விபூதியையு மழிக்கப்புக் கேனென்கிறார்.

மூ.—ஆவியையரங்கமாலையழுக்குடம்பெச்சில்வாயால்
தூய்மையில்தொண்டனேனான்சொல்லினேன்தொல்லைநாமம்
பாவியேன்பிழைத்தவாறென்றஞ்சினேற்கஞ்சலென்று
காவிபோல்வண்ணர்வந்தென்கண்ணுள்ளேதோன்றினாரே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆவியை | சேதநாசேதநங்களில் அந்தராத்மாவாய்நிற்பவனும், | தூய்மையில் | அபரிசுத்தனாய், |
| அரங்கம் | கோயிலிலே எழுந்தருளியிருக்கிற, | தொண்டனேன் நான் | கண்ட விஷயங்களிலே தொண்டுபட்டுத்திரிந்த நான், |
| மாலை | ஆச்ரிதவ்யாமுக்தனான ஸர்வேச்வரனை | பிழைத்தவாறென்று | இத்தைப் பிறரையும் சொல்லும்படி செய்த ப்ரகாரமென்னென்று, |
| அழுக்குடம்பு | அபரிசுத்தமானசரீரத்தையுடையனாய், ஸர்வேச்வரனையொழிந்தவர்களை ஸ்தோத்ரம்பண்ணுகையாலே, | அஞ்சினேற்கு | பயப்பட்ட வெனக்கு, |
| | | அஞ்சலென்று | அஞ்சாதேகொள்ளென்று, |
| எச்சில்வாயால் | அபரிசுத்தமாய்க் கிடக்கிறநாவாலே, | காவிபோல்வண்ணர் | கருநெய்தல்நிறத்தையொத்த வடிவையுடைய ஸர்வேச்வரன், |
| பாவியேன் | மஹாபாபியானநான், | | |
| தொல்லை நாமம் | அநாதிஸித்தமான பெரியதிருமந்த்ரத்தை, | வந்து | நானிருக்குமிடம் தேடிவந்து, |
| சொல்லினேன் | சொன்னதுமன்றிக்கே, | என்கண்ணுள்ளே தோன்றினார் | என் கண்ணுக்குள்ளே ப்ரகாசித்தார். (கஉ) |

பன்னிரண்டாம்பாட்டு.—(ஆவியை) (உபயவிபூதி) ஆவியை என்கையாலே - அவ்விபூதி தோற்றுகிறது.

வ்யா.—(ஆவியை) * உலகங்கட்கெல்லா மோருயிரானவனை. (அரங்கமாலை) கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று தாரகமாகை யன்றிக்கே, கண்ணாலேகாண வ்யாமோஹந்தான்ஒருவடிவென்ன லாம்படி யிருக்கை. (அழுக்குடம் பெச்சில்வாயால்) எத்தனைபேர் காலிலே விழுந்தது, எத்தனைபேரை ஸ்தோத்ரம் பண்ணிற்று. (தூய்மையில்-நான்) தப்பச் செய்தோ மென்கிற அநுதாபமு மில்லாத நான். (தொண்டனேன் நான்) கண்டதெல்லாவற்றிலும் தொண்டுபட்டுத் திரிந்தநான். (சொல்லினேன் தொல்லைநாமம்) நித்யஸூரிகள் இனிஎன்கொண்டு ஜீவிக்கக்கடவர்கள், சொல்லி யற்றது, இதுக்கு முன்பு அழிந்தறியாததொன்று, * நமோ நாராயணாயவென்று பல்லாண்டுபாடி ஜீவிக்கக்கடவர்கள், இனி என் கொண்டு ஜீவிக்கக்கடவர்கள்.

(பாவியேன் பிழைத்தவாறென் றஞ்சினேற்கு) தொல்லைநாமத்தை நான் சொல்லி விடுகையன்றிக்கே,(நானுஞ் சொன்னேன் நமருமுரைமின்)என்று இப்படி அழிப்பாருண்டோ. ஸாத்விகனாயிருப்பா னொருவன், ரஜஸ்ஸூ தலையெடுத்து மத்ய ராத்ரத்திலே க்ரஹத்திலே நெருப்பைவைத்து ஸத்வம் தலை யெடுத்தவாறே அநுதபிக்குமாப்போலே,பாவியேன் நான் தப்பினேனென்றுஅஞ்சினேனுக்கு. (அஞ்சலென்று) உன்கார்யம் உனக்கே பரமோவென்று. (மாஶுச:) (மாஶுச:) என்று அஞ்சாதேயென்று, (காவி போல் வண்ணர்வந்து) வடிவழகைக் காட்டி மருந்தை யிட்டுப் பொருந்தவிட்டார். (காவி) கருங்குவளை. இவ்வடிவை நம் கண்ணாலே நோக்கி யழிக்க வொண்ணாதென்று கண்ணைச் செம்பளித்தேன். (கண்ணுள்ளே தோன்றினாரே) கண்ணுக்குள்ளேதோன்றினார். இவர்கண் செம்பளித்துப் பார்க்கிறதெப்போதோ வென்று பார்த்திருந்தான்போலேகாணும் அவனும். ... ... (௧௨)

மூ.—இரும்பனன்றுண்டநீரும்போதருங்கொள்கவென்றன்
அரும்பிணிபாவமெல்லாமகன்றனவென்னைவிட்டுச்
சுரும்பமர்சோலைசூழ்ந்தவரங்கமாகோயில்கொண்ட
கரும்பினைக்கண்டுகொண்டென்கண்ணிணைகளிக்குமாறே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இரும்பு | பழுக்கக் காய்ச்சப்பட்டஇரும்பானது | கொள்க | இத்தை உறுதியாக நினையுங்கோள்; எத்தாலேயென்றால் |
| அனன்றுண்டநீரும் | குளிருமளவும் குடித்தஜலமும், | என்றன் | என்னுற் செய்யப்பட்ட, |
| போதரும் | வெளியிலேவந்துவிடும்; | | |

தொல்லைநாமம் என்கையாலே-நித்யஸூரிகளநுபாவ்யம் தோற்றுகிறது.பிழை-தப்பு. கண்செம்பளிக்கை-ஸ்வயத்நமறுகை.(௧௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| அரும் | அநுபவித்தே யற வேண்டும்படி யான, | கோயில் | திருப்பதியை, |
| பிணிபாவ மெல்லாம் | பலவகைப்பட்ட பாபங்களெல்லாம், | கொண்ட | தனக்கு இருப்பிடமாகக்கொண்டு நித்யவாஸம் பண்ணுமவனாய், |
| என்னைவிட்டகன்றன | என்னைவிட்டுப்போயின; | கரும்பினை | கரும்புபோலே ரஸாவஹனானவனை, |
| சுரும்புஅமர் | வண்டுகள் பொருந்திவர்த்திக்கிற, | கண்டுகொண்டு | இடைவிடாமல்ஸேவித்து, |
| சோலைசூழ்ந்த | சோலைகளாலேசூழப்பட்ட, | என்கண் | என்னுடைய இரண்டுகண்களும்; |
| அரங்கம் | ஸ்ரீரங்கம்என்றுசொல்லப்படுகிற, | களிக்குமாறே | களிக்கும்படி என்றுஎன்றுவித்தராகிறார். (௧௩) |
| மா | ச்லாக்யமான, | | |

வ்யா.—பதின்மூன்றாம்பாட்டு.(இரும்புஅனன்றுண்டநீரும்போதரும்கொள்க) அக்நியாலே ஸந்தப்தமான அயஸ்ஸாலே பீதமான ஜலமும் போரும். எத்தாலே யென்னில் (என்றனரும்பிணி பாவமெல்லா மகன்றன வென்னைவிட்டு) இரும்புண்ட நீர்போதரச் சொல்ல வேணுமோ, நான் பண்ணின துஷ்கர்மங்களும் தத்பலமான துக்கங்களுமன்றோ வென்னை விட்டுப்போயிற்று. ஆத்மாவுக்கு நிரூபகதர்மமானஜ்ஞாநாநந்தங்களோபாதி இதுவும் ஸஹஜமென்னும்படி போந்த விவையுமன்றோ என்னை விட்டது. எம்பெருமானை யகலுகையால்வந்த வ்யஸநமும் அகலுகைக்குஹேதுக்களும் போயிற்றென்னவுமாம். அவை போயிற்றாகில் நீர் பின்பு செய்த தென்னென்னில் (சுரும்பமரித்யாதி) வண்டுகள் பொருந்தியிருந்துள்ள சோலையாலே சூழப்பட்ட அரங்கமாகிற பெரிய கோயிலைத் தனக்குக் கோயிலாகக் கொண்ட.

பதின்மூன்றாம்பாட்டு.—(இரும்பு) அனன்று - காய்ந்து. அனலுகை - காய்கை. ஜலமும் போரும் - தம்முடையபாபத்தைப் போக்கின அகடிதகடநாஸாமர்த்யத்தாலே இரும்புண்ட ஜலமும் புறப்படுமென்று, கொள்க - உங்கள் மநஸ்ஸிலே கொள்ளுங்கோளென்றபடி. பாபம்போனபோதே இரும்புண்டஜலம் வரும் என்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (ஆத்மாவுக்கித்யாதி.) (அரும்பிணி) என்கையாலே - ஸஹஜமென்னும்படி ஸ்வாபாவிகமாய்த் தோற்றுமென்றபடி.

(கரும்பினைக்கண்டுகொண்டு) இது கண்ணாலே தின்னுங்கரும்பு. (என்கண்ணிணைகளிக்குமாறே) எவ்விஷயங்களைக் கண்டுகளித்த கண்கள் எவ்விஷயங்களைக்கண்டு களிக்கிறது. ப்ரீதி தத்வம் களைக் கண்டறியாத கண்கள்கிடீர் இன்றுகளிக்கிறது. (௧௩)

மூ.—காவியைவென்றகண்ணார்கலவியேகருதிநாளும்
பாவியேனாகவெண்ணியதனுள்ளேபழுத்தொழிந்தேன்
தூவிசேரன்னமன்னுஞ்சூழ்புனற்குடந்தையானைப்
பாவியேன்பாவியாதுபாவியேனாயினேனே. (௧௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காவியை | கருநெய்தல் மலரை | அன்னம் | ஹம்ஸபக்ஷிகள், |
| வென்ற | க் காற்கடை யிட்டுக்கொண்ட, | மன்னும் | ஆணும் பெண்ணும் பிரியாதே வர்த்திக்குமதாய், |
| கண்ணார் | கண்களை யுடையரானஸ்த்ரீகளுடைய, | சூழ்புனல் | சுற்றிலும் ஜலஸம்ருத்தியை யுடைத்தான, |
| கலவியே | ஸம்ச்லேஷத்தையே, | குடந்தையானை | திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற ஆராவமுதனை, |
| கருதி | நினைத்துக்கொண்டு, | பாவியேன் | பாபத்தைப் பண்ணினநான், |
| நாளும் | அநாதிகாலமாக ஒரு ஸுக்ர்தமும் செய்யாதே, | பாவியாது | நினையாமல், |
| பாவியேனாக எண்ணி | மஹா பாபியாகும்படி மநோரதித்து, | பாவியேனாயினேன் | பாபிகளில் தலைவனாய் விட்டேனென்கிறார். (௧௪) |
| அதனுள்ளே | அந்தப்பாபப் படுகுழியிலேயே, | | |
| பழுத்தொழிந்தேன் | நன்றாகமுழுகிப்போந்தேன்; | | |
| தூவிசேர் | அழகியசிறகையுடைத்தான, | | |

வ்யா.—பதினாலாம்பாட்டு. (காவியையித்யாதி) கருங்குவளையை வென்ற கண்ணார் கலவியே கருதி. எப்போதும், "அவர்தருங்கலவியே கருதி யோடினேன்" என்னும்படியே அவர்கள் கலவியே கருதி. (நினைந்திருந்தே சிரமந்தீர்ந்தேன்) என்னும்படியே அதுக்கு எதிர்த்தட்டாக இத்தையே நினைத்து.

(நாளும் பாவியேனாகவெண்ணி) அநாதிகாலம் ஒருஸுக்ர்த லேசமும் பண்ணாத மஹா பாபியாக மநோரதித்து.

---

என்கண்-விஷயங்களைக்கண்டகண்ணென்னுதல்; ஸந்தோஷம் வ்யுத்பத்திபண்ணாத கண்ணென்னுதல். ... (௧௩)

பதினாலாம்பாட்டு.—(காவியை) கருங்குவளை - கருநெய்தல். (நாளும்) என்று - கீழும் மேலும் கூட்டுவது.

(அதனுள்ளே பழுத்தொழிந்தேன்) சக்ரவர்த்திவெண்கொற்றக்குடைநிழலிலே பழுத்தாப்போலவும், ஆழ்வார் * உனது பாலேபோற் சீரிற் பழுத்தொழிந்தாப்போலவும்.

(தூவிசேரன்னமன்னும்) சிறகையுடைய அன்னம் பிரியாதேவர்த்திக்கிற தேசம். ஹம்ஸ பரமஹம்ஸர்பிரியாதே வர்த்திக்கிற தேசம்.

(பாவியேன்) வகுத்த விஷயம் அஸந்நிஹிதமா யிழந்தேனே. (வாளாவிருந்தொழிந்தேன் கீழ்நாள்களெல்லாம்) என்றும், (பழுதே பலபகலும் போயின வென்றஞ்சியழுதேன்) என்றும்சொல்லுமாப்போலவும் இழந்தநாளைக்கு அநேகங்கொண்டாடுகிறார்.

(பாவியாது) நினையாது. (பாவியேனாயினேனே) பாவிகளெண்ணுக்குச் சிறுவிரலானேன். முன்பு பண்ணின பாபமிதுவானால் இதுக்குமேலும் பலிப்பது இங்ஙனேயிறே. தீயதும் நல்லதும் கார்யகாரணபாவத்தாலேயிறேவருவது. ... ...(௧௪)

அ.—பதினஞ்சாம்பாட்டு. (முன்பொலா வித்யாதி) முன்புத்தை யிழவெல்லாந்தீர நீராட்டுகிறார்.

மூ.—முன்பொலாவிராவணன்றன்முதுமதிளிலங்கைவேவித்து
அன்பினாலநுமன்வந்தாங்கடியிணைபணியநின்றார்க்கு
என்பெலாமுருகியுக்கிட்டென்னுடைநெஞ்சமென்னும்
அன்பினால்ஞானநீர்கொண்டாட்டுவனடியனேனே. (கரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன் | பிராட்டி அசோகவநிகையிலேயிருந்த காலத்திலே, | முதுமதிள் | ஒருவராலும் புகவரிதாய் வலியமதிளையுடைத்தான, |
| பொலா | ஐயரையும் அம்மையையும் பிரித்த கொடியனான, | இலங்கை | லங்கையை, |
| இராவணன்றன் | ராவணனுடைய தாய், | வேவித்து | திருவடிவாசில் நெருப்பாலே நீறாகும்படிசுடுவித்து, |

ஹம்ஸம் - * குடிச்சீர்மையிலன்னம்; - பெரியாழ்வார் போல்வார்; பரமஹம்ஸர்—நாதயாமுநர்போல்வார். சிறுவிரல் - முந்துறஎண்ணப்படுமவன். நினையாவிட்டால் பாபபலமாகவேணுமோ, வேறொன்றாகாதோவென்ன; அருளிச்செய்கிறார் (முன்பு பண்ணினவித்யாதி.) இதுவானால்-நினையாமை பலமானால். பாபியாகையாலே நினைக்கவில்லை-நினையாமையாலே பாபியானேனென்றபடி. இப்படி ஒன்றேகார்யமும் காரணமுமாகக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (தீயதுமித்யாதி.) (௧௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| அநுமன் | சிறியதிருவடி, | என்பெலாமுருகிஉக்கிட்டு | எலும்பெல்லாம் உருகி உக்குப்போய், |
| அன்பினால் வந்து | பிராட்டியைக் கண்டப்ரீதியாலேவந்து, | என்னுடை | என்னுடைய, |
| ஆங்கு | கிஷ்கிந்தா நகரத்திலே, | நெஞ்சமென்னும் | மநஸ்ஸென்றுசொல்லப்படுகிற, |
| அடியிணை | திருவடிகளை, | அன்பினால் | ப்ரேமத்தாலே, |
| பணியநின்றார்க்கு | ஸேவிக்கும்படி யெழுந்தருளி யிருக்கிறசக்ரவர்த்தித் திமகனுக்கு, | ஞானநீர் கொண்டு | ஜ்ஞாநமாகிற நீர்த்தத்தாலே, |
| | | அடியனேன் | தாஸபூதனானநான், |
| | | ஆட்டுவன் | திருமஞ்சநம் செய்வேனென்கிறார். |

வ்யா.—(முன்பொலாவித்யாதி) அதுவுமொருகாலமே! என்றுவயிறுபிடிக்கிறார். ஸ்ரீராமாயணத்தில் பேசின பரப்பை யெல்லாம் ஒரு வார்த்தையாலே சொல்லுகிறார். ஏகத்ரவ்யத்தை பிந்நமாக்கினாப்போலே தாயையும்தமப்பனையும் பிரித்தபையல். (முதுமதிள்) வலியமதிள். (இலங்கைவேவித்து) திருவடி வாலில் நெருப்பாலேசுடுவித்து. நெருப்புங்காற்றுங்கூடினாப்போலேயிறே வாயுபுத்ரன் வாலில் நெருப்பு. (அன்பினாலநுமன்வந்து) காலாலன்றுபோலே. அநஶநம்தீக்ஷித்தும், கடல்கடந்தும், யுத்தம்பண்ணியும், இளைத்திருக்கச்செய்தேயும்பிராட்டியைத்திருவடித்தொழுது, (த்ருஷ்டாஸீதா) (த்ர்ஷ்டாஸீதா) என்று பெரிய ப்ரீதியோடேயிறே வந்தது. (ஆங்கடியிணை பணியநின்றார்க்கு) பிராட்டி வ்ர்த்தாந்தங்கேட்டு ஸ்தப்த்தராய் நின்றவர்க்கு.

(என்பெலாமுருகியுக்கிட்டு) அந்நிலையை நினைத்து சிதிலரானபடி. (என்னுடை நெஞ்சமென்னு மன்பினாலித்யாதி) என் நெஞ்சிலே யுண்டான அன்பன்று, நெஞ்சென்றுபேராய் பகவத்ப்ரேமமே வடிவாயிருக்கிற அன்பாலே ஜ்ஞாநமாகிற திருமஞ்சநத்தாலே நீராட்டுவன். அன்புடனே கூடின நீர். அந்நீருக்கு ஸம்ஸ்காரமிறேஅன்பு.(அடியனேனே) அங்குத்தைக்குயோக்யராவது அடியாரானாப்போலேகாணும். ... ... ... (௧௫)

அ.—பதினாறாம்பாட்டு. (மாயமானித்யாதி) கீழிற் பாட்டிலே திருமஞ்சநம்பண்ணி இப்பாட்டிலே திருமாலைசாத்துகிறார்.

---

பதினஞ்சாம்பாட்டு.—(முன்பொலா)வாலிலே கொளுத்தினால் இலங்கைவேகவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (நெருப்பும் காற்றுமித்யாதி.) என்பு - எலும்பு. சேஷசேஷி முறையிலே அடிமைசெய்கை. ... ... ... ... (௧௫)

மூ.—மாயமான்மாயச்செற்றுமருதிறநடந்துவையம்
தாயமாபரவைபொங்கத்தடவரைதிரித்துவானோர்க்
கீயுமாலெம்பிரானார்க்கென்னுடைச்சொற்களென்னும்
தூயமாமாலைகொண்டுசூட்டுவன்தொண்டனேனே. (௧௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மாயம் | வஞ்சனையை யுடைத்தான, | திரித்து | சுழலும்படி பண்ணி அம்ருதத்தை யெடுத்து, |
| மான் | மாரீசனாகிறமான், | | |
| மாயச்செற்று | மரிக்கும்படி பண்ணினவனும், | வானோர்க்கு ஈயும் | தேவர்களுக்குக்கொடுத்தவனும், |
| மருதுஇற | யமளார்ஜுநங்கள் என்னும் மருதமரங்கள் முறிந்துவிழும்படி, | | அத்தாலே, |
| | | மால் | ஆச்ரித வ்யாமுக்தனுமாய், |
| நடந்து | உரலோடே தளர்நடையிட்டவனும், | எம்பிரானுர்க்கு | எனக்குஉபகாரகனானவனுக்கு, |
| வையம் | மூன்று லோகங்களையும், | தொண்டனேன் | தாஸபூதனான நான், |
| தாய் | அநாயாஸேநவளந்தவனும், | என்னுடைச்சொற்களென்னும் | அடியேனுடைய சொல்லாகிற, |
| அம்மாபரவை | அந்த விசாலமான க்ஷீராப்தியானது, | தூய | பரிசுத்தமாய், |
| பொங்க | பொங்கிமேலெழும்படியாக, | மா | ச்லாக்யமான, |
| தடவரை | பெரியமந்தர பர்வதத்தை, | மாலைகொண்டுசூட்டுவன் | மாலையாலே அலங்கரிப்பேன். (௧௬) |

வ்யா.—(மாயமான்) (பொலா விராவணன்) என்றதுக்கடியான ஜந்து விசேஷமிறே. (மாயச்செற்று) முன்புபோலே தொற்றம்பாக விடாதே பிணத்தையும் மாய்த்து. (மருதிற நடந்து) * அடல்சேரிணை மருதிற்று வீழ நடைகற்றவனிறே. தளர்நடையிடுகிற போதே*ஒன்றார்தளர அடியிட்டபடி. (வையந்தாய்) முன்புத்தையது வளர்ந்தபின்பு பண்ணின வ்யாபாரம்; நடுவு தவிழுகிற போதை வ்யாபாரம், இது பிறந்தவன்றே பண்ணின வ்யாபாரமிறே. பூமியை அநாயாஸேந அளந்துகொண்டு. (அம்மாபரவை பொங்க) அப் பெரியகடல் தயிர்த்தாழி பட்டது பட. (தடவரை திரித்து) கடலைக் கண்செறி யிட்டாப்போலே யானமலையைப் பிள்ளைகள் சிறு துரும்பைத் திரிக்குமாப்போலேதிரித்து.

---

பதினாறாம்பாட்டு.—(மாயமான்) பிணமும் காணாதபடி நசிப்பித்து ... ... ... ... ... ... (௧௬)

(வானோர்க்கீயுமால்) உடம்பு நோவக் கடல் கடைந்துகொடுத்தது ப்ரயோஜநாந்தர பரர்க்கு, பிச்சேறினவர்களெண்ணி யன்றிறே செய்வது. (எம்பிரானார்க்கு)எனக்கு உபகாரகரானவர்க்கு. (என்னுடையித்யாதி) தேவஜாதிகள் சொல்போலன்றிக்கே ப்ரயோஜந நிரபேக்ஷமான சொற்களாகிற செவ்வியழியாத மாலையைக்கொண்டு.(சூட்டுவன்தொண்டனேனே)இத்தாலல்லதுசெல்லாதசபலன்,அநஸூயைபிராட்டிக்குச்சூட்டினப்போலே. (௧௬)

மூ.—பேசினார்பிறவிநீத்தார்பேருளான்பெருமைபேசி
ஏசினாருய்ந்துபோனாரென்பதிவ்வுலகின்வண்ணம்
பேசினேனேசமாட்டேன்பேதையேன்பிறவிநீத்தற்கு
ஆசையோபெரிதுகொள்கவலைகடல்வண்ணர்பாலே. (௧௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பேருளான் | திருப்பேர்நகரிலெழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரனுடைய, | பேசினேன் | அவன் குணங்களை வாய்விட்டுப் புகழ்ந்தேன்; |
| பெருமை | பெருமையை, | ஏசமாட்டேன் | ஏசுகைக்கு ஸமர்த்தனல்லேன்; |
| பேசினார் | வாய்விட்டுப் புகழ்ந்தவர்கள், | பிறவிநீத்தற்கு | இந்த ஸம்ஸாரத்தைவிட்டு நீங்குகைக்கு, |
| பிறவிநீத்தார் | ஸம்ஸாரத்தைக் கடந்தார்கள்; | அலைகடல்வண்ணர்பால் | அலையெறியாநின்றுள்ள கடல்போன்ற திருநிறத்தையுடையவன் விஷயத்தில், |
| பேசியேசினார் | அவன்பெருமையைப்பேசியேசின சிசுபாலாதிகள், | ஆசை | அடியேனுக்குண்டான ஆதரம், |
| உய்ந்துபோனார், | உஜ்ஜீவித்துப் போனார்கள், | ஓ! பெரிது | மிகவும் அதிசயித்திராநின்றது; |
| என்பது | என்றுசொல்லுவது, | கொள்க | இது உண்மை.(௧௭) |
| இவ்வுலகின்வண்ணம் | இவ்வுலகத்திற்கு ஸ்வபாவம்; | | |
| பேதையேன் | அறிவுகேடனான நான், | | |

வ்யா.—பதினேழாம்பாட்டு. (பேசினாரித்யாதி) திருப்பேர்நகரான்பெருமை பேசினார் ஸம்ஸாரத்தைக்கடந்தார்கள்.

(பேருளான் பெருமைபேசி யேசினா ருய்ந்துபோனார்) இவன் பெருமையை யேசின சிசுபாலாதிகளும்உய்ந்துபோனார்கள்.(என்பதிவ்வுலகின் வண்ணம்) என்பது சாஸ்த்ர மர்யாதை. ஏசுவார்க்கும் அவன்குணங்களைச்சொல்லி யேசவேணுமே.

பதினேழாம்பாட்டு.—(பேசினார்) ஏசினார் உஜ்ஜீவிக்கக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஏசுவாரித்யாதி.)

ஆளவந்தார், நாட்டை யழிக்கைக்காக சிசுபாலனைக் கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றி யெறிந்தா னத்தனை, ருசி முன்னாகப் பெறுவதிறேபெறுவதென்று அருளிச்செய்தார்.

(பேசினேன்) உண்ணப்புக்குமயிர்ப்பட்டு அழுகிதாக உண்டேனென்னுமாப்போலே. (ஏசமாட்டேன்) ஏசிப்பெறும் மோக்ஷம் வேண்டா. (பேதையேன்) அறிவுகேடன். (பிறவிநீத்தற்கு ஆசையோபெரிதுகொள்க) ஸம்ஸாரத்தைவிட ஆசை கரைபுரண் டிரா நின்றது. ஆனால்குறையென்னென்ன (அலைகடல்வண்ணர்பாலே) அது அவன்கையதாயிற்றே. நாம் செய்வதென், க்ரமப்ராப்தி பார்த்திருக்க வொண்ணாத வடிவு படைத்தவர். ... ... (௧௭)

அ.—பதினெட்டாம்பாட்டு. (இளைப்பினையித்யாதி) ஸ்வயத்நத்தால் காண்பார்க்குக் காணப்போகாதென்கிறது.

மூ.—இளைப்பினையியக்கநீக்கியிருந்து முன்னிமையைக்கூட்டி
அளப்பிலைம்புலனடக்கியன்பவர்கண்ணேவைத்து
துளக்கமில்சிந்தைசெய்துதோன்றலுஞ்சுடர்விட்டாங்கே
விளக்கினைவிதியிற்காண்பார்மெய்ம்மையேகாண்கிற்பாரோ.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இளைப்பினை | க்லேசங்களுடைய | அன்புவைத்து | பக்தியைப் பண்ணி, |
| இயக்கம்நீக்கி | ஸஞ்சாரத்தைத் தவிர்த்து, | சுடர்விட்டுத் தோன்றலும் | அதனால்சுடர்விட்டுத் தோன்றாநின்ற ஜ்ஞாநத்தாலே, |
| இருந்து | ஓராஸநத்திலே யிருந்து, | விளக்கினை | ஜ்யோதி ஸ்வரூபனாக ப்ரதிபாதிக்கப் படுமவனை, |
| முன் இமையை | மேலிமையை, | விதியில்காண்பார் | சாஸ்த்ரங்களில்விதித்தபடியே உபாஸித்துக் காணுமவர்கள்; |
| கூட்டி | கீழிமையோடே சேர்த்து, | மெய்ம்மை | நிலைநின்ற தர்மமான அவனை, |
| அளப்பில் ஐம்புலனடக்கி | அளவிறந்த இந்த்ரியங்களைப்ரத்யக்விஷயமாக்கி, | காண்கிற்பாரோ | காணுவார்களா? காணமாட்டார்களென்றபடி. (௧௮) |
| அவர்கண் | அந்த ஸர்வேச்வரன் விஷயத்திலே, | | |
| துளக்கமில் | அவிச்சிந்நமான, | | |
| சிந்தைசெய்து | ஸ்ம்ர்திரூபமான, | | |

---

அது உஜ்ஜீவ்யமென்னுமதுக்கு ஸம்வாதமாக ஓரைதிஹ்யமருளிச்செய்கிறார் (ஆளவந்தாரித்யாதி.) பேசினேன் - நன்றாகப் பேசினேனென்று வ்யங்க்யம். ஆசையுண்டானாலும் அவன்கை பார்த்திருக்கவேணும்.

வ்யா.—(இளைப்பினையியக்கம்நீக்கி) (अविद्यास्मितारागद्वेषाभिनिवेशाः क्लेशाः) (அவித்யாஸ்மிதாராகத்வேஷாபிநிவேஶா:க்லேஶா:) என்றுஞ் சொல்லுகிற க்லேசங்களுடையஸஞ்சாரத்தைத்தவிர்த்து.

(இருந்து)காற்றைப்பிடித்துஇருத்துமாப்போலேயிறே.(नासाग्रदृष्टम्)(நாத்யுச்சர்தம்) இத்யாதியால்சொல்லுகிறபடியே ஓராஸநத்தே யிருந்து. (முன்னிமையைக்கூட்டி) (संप्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन्) (ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரஸ்வ0 திஶஶ்சாநவலோகயந்) என்னும்படியே உள்ளே பார்க்கில் அநுபூத விஷயங்கள் தோற்றும் புறம்பே பார்க்கில் விஷயங்கள் தானு யிருக்குமென்று நடுவேநிற்கை.

(அளப்பிலைம்புலனடக்கி) அளவிறந்த இந்த்ரியங்களை ப்ரத்யக்காக்கி. (அன்பவர்கண்ணேவைத்து துளக்கமில் சிந்தை செய்து) அவிச்சிந்ந ஸ்ம்ருதி ரூபமான பக்தியைப்பண்ணி. (சுடர்விட்டுத் தோன்றலும்) இப்படி சுடர்விட்டுத் தோன்றுகிற ஜ்ஞாநத்தாலே. (விளக்கினை)*வேதவிளக்கினை. வேதங்களாலேஜ்யோதிருபனாக ப்ரதி பாதிக்கப்பட்ட விளக்கை. (விதியிற் காண்பார்) ஶாஸ்த்ரங்களில் விதித்தபடியே உபாஸித்து அவனைக் காண்பார். (மெய்ம்மையே காண்கிற்பாரோ) என்றுமுளனுயிருக்கிற ஸர்வேஶ்வரனைக் காணவல்லரோ - காணமாட்டாரென்றபடி. அதவா, இப்படி யோக சாஸ்த்ரத்தில் சொல்லுகிறபடியே உபாஸித்துக் காண்பார்க்குக் காணலாமென்றுமாம். ... ... ... ...(கஅ)

மூ.—பிண்டியார்மண்டையேந்திப்பிறர்மனைதிரிதந்துண்ணும்
முண்டியான்சாபந்தீர்த்தவொருவனூருலகமேத்தும்
கண்டியூரரங்கம்மெய்யங்கச்சிபேர்மல்லையென்று
மண்டினாருய்யலல்லான்மற்றையார்க்குய்யலாமே. (கக)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பிண்டிஆர் | உளுத்த பொடிகள் உதிருகிற, | பிறர்மனை | ப்ரஹ்மேந்த் ராதிகளுடைய லோகங்களிலே, |
| மண்டை | தலையோட்டை, | | |
| ஏந்தி | கையிலே யேந்திக் கொண்டு, | திரிதந்துஉண்ணும் | திரிந்துஇரந்து உண்ட, |

பதினெட்டாம்பாட்டு.—(இளைப்பினை) அவித்யை - அஹமபிமாநமாதல்; மரணத்ராஸமாதல். மநஸ்ஸோடே யிருக்கவேண்டு கையாலே (காற்றைப்பிடித்தென்றது.) நாத்யுச்சர்தம் - உயர்வும் தாழ்வுமின்றி ஸமமாக. அநுக்ரஹமான பரமாத்ம விஷயத்தைக் கண்டால் த்யாநம் கூடாது, ஈடுபடுத்தும். (காண்கிற்பாரே) பிரிவிலையாதல்; தேற்றமாதல். அங்கப்ரபத்தி யில்லாவிட்டால் காணமாட்டாரென்றபடி. ... ... ... ... ... (கஅ)

| பதம். | உரை. |
|---|---|
| முண்டியான் | மொட்டையாண்டியான ருத்ரனுடைய, |
| சாபம்தீர்த்த | சாபத்தைப் போக்கின, |
| ஒருவன் | அத்விதீயனுடைய, |
| ஊர் | திருப்பதிகளாவன, |
| கண்டியூர் | திருக்கண்டியூரும், |
| அரங்கம் | பெரியகோயிலும், |
| மெய்யம் | திருமெய்யமும், |
| கச்சி | திருவெஃகாவும், |
| பேர் | திருப்பேரும், |
| மல்லைஎன்று | திருக்கடல் மல்லையுமாகிய திருப்பதிகளில், |
| மண்டினார் | நெஞ்சுமண்டினார், |
| உய்யலல்லால் | உஜ்ஜீவிப்பார்களேயல்லது, |
| மற்றையார்க்கு | மற்றவர்களுக்கு, |
| உய்யலாமே | உஜ்ஜீவிக்கவிரகுண்டோ. (௧௯) |

வ்யா.—பத்தொன்பதாம்பாட்டு. (பிண்டியார்மண்டையேந்தியித்யாதி) உளுத்து அளம் பற்றின சுவர்போலேபொடியுதிருகிற தலையோட்டைக் கையிலேயேந்தி. (பிறர்மனை திரிதந்துண்ணும்) "முடையடர்த்தசிரமேந்திமூவுலகும் பலிதிரிவோன்" என்கிறபடியே நெடுங்காலம் கையோட்டைக்கொண்டு திரிந்து இரந்துண்டான். (முண்டியான்) தாபஸ வேஷத்தையுடைய ருத்ரன். (சாபந்தீர்த்தவொருவன்) ப்ரஹ்மசாபத்தாலே மண்டையேந்தித் திரிந்தவன் சாபம் அவனை விட்டுப் போம்படி பண்ணின அத்விதீயன்.

(ஊரித்யாதி) அவனூரான உலகமேத்துந் திருக்கண்டியூர், கோயில், திருமெய்யம், திருக்கச்சி, திருப்பேர், திருக்கடல்மல்லையென்றும். (மண்டினா ருய்யலல்லால்) அவனுகந்தருளின வித்திருப்பதிகளிலே நெஞ்சு மண்டினவர்கள் உய்யலல்லது. (மற்றையார்க்குய்யலாமே) அல்லாதார்க்கு உஜ்ஜீவிக்க விரகுண்டோ. ...(௧௯)

மூ.—வானவர்தங்கள்கோனுமலர்மிசையயனுநாளும்
தேமலர்தூவியேத்துஞ்சேவடிச்செங்கண்மாலை
மானவேற்கலியன்சொன்னவண்டமிழ்மாலைநாலைந்
தூனமதின்றிவல்லாரொளிவிசும்பாள்வர்தாமே. (உ0)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

| பதம். | உரை. |
|---|---|
| வானவர் தங்கள் கோனும் | இந்த்ரனும், |
| மலர்மிசை அயனும் | தாமரை மலரிலிருக்கிற ப்ரஹ்மாவும், |
| நாளும் | நாள்தோறும், |
| தேமலர்தூவியேத்தும் | பரிமளிதமான புஷ்பங்களைப்பணிமாறி ஸ்தோத்ரம் பண்ணப்படுமவனாய், |
| சேவடி | சிவந்த திருவடிகளையுடைய, |
| செங்கண் | புண்டரீகாக்ஷனாய், |
| மாலை | ஆச்ரித வ்யாமுக்தனவனை, |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மானம் | ஐயத்தால் வந்த பெருமையையுடைத்தான, | ஊனமதின்றிவல்லார் | அநந்ய ப்ரயோஜநமாகக் கற்கவல்லவர்கள், |
| வேல் | வேலையுடைய, | | |
| கலியன் | திருமங்கையாழ்வார், | ஒளிவிசும்பு | தேஜிஷ்டமான பரமபதத்தை, |
| சொன்ன | அருளிச்செய்த, | | |
| வண் | பரமோதாரமான, | | |
| தமிழ்நாலைந்து | தமிழ் மாலையான இருபதுபாட்டுக்களையும், | தாமேஆள்வர் | தம்மதாகவே ஆளப் பெறுவர்கள்.(௨0) |

வ்யா.—இருபதாம்பாட்டு. நிகமம். (வானவரித்யாதி) இந்த்ரனும் ப்ரஹ்மாவும் எப்போதும் செவ்வியையுந் தேனையு முடைத்தான புஷ்பங்களைப் பணிமாறி யேத்தும் அழகிய திருவடித்தாமரைகளையுடைய புண்டரீகாக்ஷனை.

(மானவேலீத்யாதி) பெருந்தன்மையையுடையவேலையுடைய ஆழ்வார் அருளிச்செய்த பரமோதாரமான தமிழ்மாலை, நாலைந்து-இருபதையும் அநந்ய ப்ரயோஜநராய்க் கற்கவல்லவர்கள் * தெளிவிசும்பான பரமபதத்தை ஆளப்பெறுவர்கள். ... (௨0)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளேசரணம்.

---

இருபதாம்பாட்டு.—(வானவர்) மானவேல் - பெரியஸ்வபாவத்தை யுடையவேல். ... ... ... (௨0)

அடிவரவு.—நிதியினை காற்றினை பாயிரும் கேட்கயான் இரும்பனனறுண்ட மூவரில் இம்மையை வானிடை உள்ளமோ சித்தமும் தொண்டெல்லாம் ஆவியை இரும்பு காவியைவென்ற முன்பொலா மாயமான் பேசினூர் இளப்பினை பிண்டியார் வானவர்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

## திருக்குறுந்தாண்டகம்

ப்ரதிபதஅரும்பதவ்யாக்யாநங்கள்

ஸம்பூர்ணம்.



    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# திருநெடுந்தாண்டகத்துக்கு

பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்தவ்யாக்யாநாவதாரிகை.

——:o:——

ஆழ்வார்திருமங்கையாழ்வாராகிறார், (வென்றியேவேண்டி வீழ்பொருட் கிரங்கிவேற்கணார் கலவியேகருதி) என்று - ஸர்வேச்வரன்விபூதியடைய இவர்துடைக்குக்கீழே கிடக்கிறதோவென்று சங்கிக்கவேண்டும்படி அதிசயிதாஹங் காரராய், அதுக்கடியான தேஹாத்மாபிமாநத்தை யுடையராய், அத்தாலே ( சாந்தேந்து மென்முலையார்தடந்தோள் புணரின்பவெள்ளத்தாழ்ந்தேன்) என்கிறபடியே ஆத்மவிஷயமாதல், ஈச்வர விஷயமாதல், ஜ்ஞாநம் பிறக்கைக்கு யோக்யதை யில்லாதபடி விஷயப்ரவணராய்ப் போந்தாரொருவர்; ஸர்வேச்வரன் இப்படி இவர்க்குண்டானவிஷயாதி ப்ரஸக்தியைக்கண்டு இவரை இதில்நின்றும் மீட்கும்விரகு தேடிப்பார்த்து விஷயப்ரவணரான விவரை சாஸ்த்ரத்தைக்காட்டி மீட்க வொண்ணாது, நம்மழகைக் காட்டி மீட்கவேணுமென்று பார்த்து, இவர்க்கு விஷயங்களிலுண்டான ரஸிகத்வத்தையே பற்றாசாகக்கொண்டுதன்னழகைக்காட்டிக்கொடுக்கக்கண்டு,(வேம்பின்புழுவேம்பன்றியுண்ணாது, அடியேன் நான்பின்னுமுன்சேவடியன்றி நயவேன்) என்று - தமக்கு ஈச்வர விஷயத்திலுண்டான போக்யதை தத்விஷய வைலக்ஷண்ய ப்ரயுக்தமோ என்னும்படி இவ்விஷயத்திலே யவகாஹித்தார்.

---

மின்னுருப்ரவேசே; வக்த்ர்வைலக்ஷண்ய மருளிச்செய்வாராக ஆழ்வாருடைய பூர்வாவஸ்த்தையை யருளிச்செய்கிறார் (ஆழ்வாரித்யாதி.) ஆழ்வாராகிறார் - ஆழ்வார்களில் திருமங்கை யாழ்வாராகிறார் இப்படிப்பட்டவரென்றபடி. தம்முடைய ஸத்தாப்ரயுக்தம்.

இவர், தன்பக்கலில் ஆழங்கால்படக் கண்ட ஈச்வரன், "இவர்க்கு நம்பக்கலுண்டான ப்ரேமம் விஷயஸாமாந்யத்திற்போலன்றியே ஸம்பந்தஜ்ஞாநபூர்வகமாகவேணும்" என்று கிழிச்சீரையோடே தநத்தைக்கொடுப்பாரைப்போலே ஸர்வார்த்த ப்ரகாசகமான திருமந்த்ரத்தையும், ஸௌசீல்யாதி குணாதிக்யத்தையும் திருமந்த்ரார்த்தத்துக்கெல்லைநிலமான திருப்பதிகளையுங் காட்டிக்கொடுக்கக்கண்டு, * வாடினேன் வாடி தொடங்கி, * ஒருநற் சுற்றமளவும் உகந்தருளின விடமே ஆச்ரயணீயமும் ஸாதநமும் போக்யமுமென்று அநுபவித்தார்.

இப்படியே இவர்திருப்பதிகளிலே மண்டியநுபவிக்கிறபடியைக் கண்டு இவ்வநுபவம் அவிச்சிந்நமாம்படி ஒருதேச விசேஷத்தே கொடுபோகவேணும், அதுக்காக ஸம்ஸாரத்தினுடைய தண்மையை அறிவிப்போமென்றுபார்த்து அத்தை அறிவிப்பிக்க, பீத பீதராய் * மாற்றமுளவிலே, (இருபாடெரிகொள்ளியினுள் ளெறும்பே போல்) என்றும், (ஆற்றங்கரைவாழ் மரம்போல்) என்றும், (பாம்போ டொரு கூரையிலே பயின்றாற்போல்) என்றும்-இப்படி தம்முடைய பயத்துக்கு அநேகத்தை த்ர்ஷ்டாந்தமாகச் சொல்லிக் கூப்பிட்டார்; இப்படி இவர் கூப்பிடச் செய்தேயும் ப்ரஜை கூப்பிடாநிற்கச்செய்தேயும் ஆமமற்றுப்பசிக்குந் தனையும் சோறிடாத் தாயைப்போலே, தன்னை அநுபவிக்கைக் கீடான விடாய் பிறக்கைக்கீடாக ஈச்வரன் முகங்காட்டாதொழிய, ஒருக்ஷணமும் தரிக்கமாட்டாத படியாலே, பெருவிடாய்ப் பட்டார்; நீரிலே விழுந்து நீரைக்குடிப்பது, நீரையேறிட்டுக்கொள்ளுவதாமாப்போலே, இவரும் அவனை வாயாலே பேசியும், தலையாலே வணங்கியும், நெஞ்சாலே நினைத்தும் தரிப்போமென்று பார்த்து அதிலே உபக்ரமித்தார் - திருக்குறுந் தாண்டகத்திலே; பெருவிடாய் குடித்தத்தண்ணீர் ஆராதேவிடாயைப் பிறப்பிக்குமாப்போலே அநுபழுய அபிநிவேசத்துக்கு உத்தம்பகமாய், திருவெழு கூற்றிருக்கையிலே (நின்னடியிணை பணிவன் வருமிடரகலமாற்றோ வினையே) என்று ஆர்த்தராய் சரணம் புக்கார்.

அநந்தரம் அபேக்ஷிதம் பெறாமையாலே கண்ணுஞ் சுழலையிட்டு, பெருமாள் முந்துறக்கடலைச் சரணம் புக்கு அவன் முகங்காட்டாவிட்டவாறே, (चापमानय सौमित्रे) (சாபமாநய ஸௌமித்ரே) என்றுகொண்டுவாதக்கானை என்னுமாப்போலேவழியல்லாவழியே

இதுசரமப்ரபந்தமாகையாலே வந்த வைலக்ஷண்யம் தோற்றுகைக்காக, இதுக்கு முன்புள்ள ஐந்து ப்ரபந்தத்துக்கும் தாத்பர்யமருளிச்செய்கிறார் (இவர்தன்பக்கலித்யாதி.) விஷய ஸாமாந்யத்திலென்றது - ரூபாரஸங்களில் ஆசைபோலே அநித்யமன்றியே என்றபடி. உத்தம்பகம் - கிளப்புகை.

மடலூர்ந்து இரண்டு தலையையு மழித்தாகிலும் முகங்காட்டு வித்துக் கொள்ளுமேவாமென்று மடலெடுக்கையிலே உபக்ரமித்தார்; அதில் சிறிய திருமடலிலே-அவனைச்வர்யத்தையும்,(தேவுந் தன்னையும்) என்று தானான தன்மையாக வபிமாநித்திருக்கும் அவதாரங்களிலு முண்டானநீர்மையையு மழிக்கிறே னென்றார்;

அதுக்கு முகங்காட்டிற்றிலன், அதுதான் பரதசையென்னும் படி நீர்மைக் கெல்லை நிலமான கோயில்களுண்டிறேயென்றிருந்தா னென்றுகொண்டு அவனுக்கும் தமக்கும் வைப்பான கோயில்களி ல்நின்றநீர்மையையும் அழிக்கிறே னென்றார் - பெரிய திருமடலி லே. இனிமுகங்காடா தொழியில் ஜகத்துஅநீச்வரமாமென்றுபார்த்து, ப்ரஹ்லாதாதிகளுக்கு முகங்காட்டுமாப்போலே இவருக்கு முகங்காட்டி, தானும் இவரும்ஜகத்துமுண்டாம்படி பண்ணினான்.

சுகாதிகளும்,முதலாழ்வார்களும், பரத்வத்திலே யூன்றியிருப்பர்கள்; ஸநகாதிகளும் திருமழிசைப்பிரானும் அந்தராத்மதையிலேஊன்றி யிருப்பர்கள்; வால்மீகாதிகளும், குலசேகரப் பெருமாளும், ராமாவதாரத்திலே யூன்றி யிருப்பர்கள்; பராசரபாராசர்யாதிகளும்,நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும்,ஆண்டாளும், க்ர்ஷ்ணவதாரத்திலே யூன்றியிருப்பர்கள்; நாரதாதிகளும், ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வாரும், திருப்பாணாழ்வாரும், கோயிலிலே யூன்றி யிருப்பர்கள்; ஸ்ரீசௌநகபகவானும், இவரும் அர்ச்சாவதாரத்திலே யூன்றி யிருப்பர்கள்.

அல்லாத ஆழ்வார்களைப்போலேயும் ஸ்ரீஜநகராஜன்திருமகளைப்போலேயுமன்றிக்கே ஸம்ச்லேஷா’ஸஹமான ஸௌகுமார்யத்தையுடையரா யிருப்பர். அதாவது-விச்லேஷித்தபோது, (உம்மடியா ரெல்லாரோடு மொக்கவெண்ணி யிருந்தீரடியேனை) என்று

---

ஐச்வர்யம் - பரத்வம், நீர்மை- க்ர்ஷ்ணவதாரம். நீர்மை ஜகத்திலுண்டாம்படி பண்ணுகை. திருநெடுந்தாண்டகத்திலே, தாம் பற்றின விஷயத்துக்கும் மற்றுமுள்ளார்பற்றின விஷயத்துக்கும் வாசிகாட்டாநின்றுகொண்டு ப்ரதிபாத்யவைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் (சுகாதிகளு மித்யாதி.) கோயிலும் அர்ச்சாவதாரமா யிருக்க அத்தையும் பரத்வாதிகளோடே கூட்டினது ஸ்வயம்வ்யக்தமாகையாலும், எல்லாவற்றுக்கும் வேர்ப்பற்றாகையாலும், அவற்றோடே கூட்டிற்று.

கீழேவக்த்ர்வைலக்ஷண்யம் சொல்லுகிறவிடத்தில் - ஸ்வயத்நலப்தஜ்ஞாநாதிகரான ரிஷிகளில் வ்யாவ்ர்த்தி சொல்லிற்று; இங்கே - ஆழ்வார்களைப்பற்ற இவர்க்குண்டான ஸௌகுமார்யாதிக்யத்தை யருளிச்செய்கிறார் (அல்லாதவாழ்வார்களையித்யாதி.)

மலையாளர் ஊட்டுப்போலே அநுபவிக்கவும் வல்லர்களாய்ப் பிரிந்தாலும் சிலநாள் தரிக்கவும் வல்லர்களான ஆழ்வார்களோடும், பத்து மாஸம் பிரிந்திருந்த ஸ்ரீஜநகராஜன் திருமகளோடும் க்ஷண கால விச்லேஷாஸஹனை வென்னைக் கூட நினைக்கலாமோ வென்னும்படி யிருக்கையும், ஸம்ச்லேஷ தசையில் (ஆழியொடும்பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை யின்றொன்றறியேன்) என்று-ஸம்ச்லேஷரஸாநுபவத்தாலே கண்ணுஞ் சுழலையிட்டு முன்னடி தோற்றாதே அஸாதாரணலக்ஷணத்தைக்காணச்செய்தேயும் அறுதியிடமாட்டா திருக்கையும்; ஆக எம்பெருமான் இவர்க்கு நிர்ஹேதுகமாக சிதசிதீச்வரதத்வத்ரயத்தையுங்காட்டிக் கொடுக்கக்கண்டு அநுபவித்து, (அதனிற் பெரியவென்னவா) என்று - தம்முடைய அபிநிவேசத்துக்கு இரைபோராமையாலே அலமர்ந்துகூப்பிட்டு, பின்பு, தாம் * அவாவற்று வீடுபெற்றுத்ர்ப்தரானபடியைப்பேசித் தலைக்கட்டுகிறார் - இப்ப்ரபந்தத்தால்.

அ.—இதில் முதற்பாட்டால் - தேஹாத்மாபிமாந நிவர்த்தி தொடக்கமாக திருவடிகளோட்டை ஸம்பந்தபர்யந்தமாக ஸாக்ஷாத்கரிப்பித்த உபகார பரம்பரைகளைப் பேசுகிறார்.

மூ.—மின்னுருவாய்முன்னுருவில்வேதநான்காய்
விளக்கொளியாய்முளைத்தெழுந்ததிங்கள்தானாய்
பின்னுருவாய்முன்னுருவில்பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாயிறப்பதற்கேயெண்ணாதெண்ணும்
பொன்னுருவாய்மணியுருவில்பூதமைந்தாய்
புனலுருவாயனலுருவில்திகழுஞ்சோதி
தன்னுருவாயென்னுருவில்நின்றவெந்தை
தளிர்புரையுந்திருவடியென்றலைமேலவே. (௧)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முன்உருவில் | கண்ணாற் காணத்தக்கபதார்த்தங்களில், | | படுமவனாய், |
| மின்னுருவாய் | மின்னினுடைய ஸ்வபாவத்தை ப்ரகாசிப்பிப்பவனாய், | விளக்கொளியாய் | விளக்கொளி இருளை நீக்குமாப்போலே அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி,தன் ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பிப்பவனாய், |
| வேதம்நான்காய் | நான்கு வேதங்களாலும்ப்ரதிபாதிக்கப் | | |

மலையாளரூட்டு - உண்டாலும் ஒருக்காலேபத்தெட்டு நாளைக்கு உண்ணவுமாய், பட்டினி யிருந்தாலும் பத்தெட்டுநாள் இருக்கவும்வல்லராகை. நிகமபூர்வகமாக இப்ப்ரபந்த தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஆக எம்பெருமானித்யாதி.)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முளைத்து | மலையில்தோன்றி, | பூதமைந்தாய் | பஞ்சபூதங்களுமாய், |
| எழுந்த | ஆகாசத்திலே கிளம்பின, | புனலுருவாய் | யாவரும்முகந்து பருகும்படியான ஜலம் போலே ஸர்வஸுலபனாய், |
| திங்கள்தானாய் | சந்த்ரனைப்போலே ஆஹ்லாத கரனுமாய், | | |
| பின்னுருவாய் | பின்னான தத்வமாய், | அனலுருவில் திகழும் | அக்நிபோலே ஒருவர்க்கும் கிட்டவொண்ணாத வடிவையுடையனாய், |
| முன்னுருவில் | முன்சொன்ன மின்னும் விளக்கும்சந்த்ரனுமாகிறவஸ்துக்களைப்போலே, | சோதிதன்னுருவாய் | ஜ்யோதிஸ்ஸுள்ள பதார்த்தங்களுக்கெல்லாம் ஜ்யோதிஸ்ஸைக்கொடுக்குமவனாய், |
| பிணிமூப்பில்லாப்பிறப்பிலியாய் | அஜ்ஞாந சக்திகளும் ஷட்பாவவிகாரங்களும்பிறப்புமில்லாத ஆத்மவஸ்துவாய், | | |
| இறப்பதற்கேயெண்ணாது | மரணத்தையெண்ணாதே, | என் உருவில்நின்ற | என்சரீரத்திலேநின்றவனாய், |
| எண்ணும் | எப்போதும் மநநம் பண்ணுகைக்கு யோக்யமான, | எந்தை | எனக்குஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய, |
| பொன்னுருவாய் | பொன்னினுடைய ஸ்வபாவத்தை யுடையனாய், | தளிர்புரையும் | தளிரையொத்த, |
| | | திருவடி | திருவடிகள், |
| மணியுருவில் | மணியின்ஸ்வபாவத்தை யுடைத்தான வடிவில், | என்தலைமேலவே | என்தலையிலே யிராநின்றனவேஎன்று ஈடுபடுகிறார். (க) |

வ்யா.—(முன்னுருவில் - மின்னுருவாய்) ப்ரத்யக்ஷ பரித்ர்ஷ்டமான பதார்த்தங்களில் மின்னினுடைய ஸ்வபாவத்தை ப்ரகாசிப்பித்தான். அதாவது - ப்ரத்யக்ஷ பரித்ர்ஷ்டமான ப்ரக்ர்திப்ராக்ர்தங்களின்அஸ்த்தைர்யத்தை ப்ரகாசிப்பித்தானென்கை. இப்ரக்ர்திக்கு சேதநனோட்டை ஸம்பந்தத்துக்கு ஹேதுபேத முண்டான போது, இதுக்கு ஸ்வபாவபேத முண்டாகக் கடவது.

முதற்பாட்டு.—அவன்ப்ரகாசிப்பித்தாலும்திரோதாயகமான ப்ரக்ர்தி ஸ்வரூபாதிகளைப்ரகாசிப்பிக்கக் கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (இப்ப்ரக்ர்திக்கித்யாதி.) ஹேதுபேதம் - கர்மத்தாலே பந்திக்கையும், க்ர்பையாலே பந்திக்கையும். இவர்களுக்கு *மயர்வறமதிநல மருளுகையும், மற்றுள்ளார்க்கு ஜாயமானகடாக்ஷம் பண்ணுகையும்.

அதாவது - கர்மத்தாலேபந்தித்தபோது ஆத்ம பரமாத்மாக்களுடையஸ்வரூபத்துக்கு திரோதாயகமா யிருக்கையும், தன் பக்கல் அஸ்த்தைர்யத்தையும் அயோக்யதையையும் மறைத்து, ஸ்தைர்யத்தையும்போக்யபுத்தியையும்பிறப்பிக்கக்கடவது மாயிருக்கும்; பகவத் ப்ரஸாதத்தாலே பந்தித்தபோது ஸ்வவிஷயத்திலும்ஸ்வகீயங்களிலும் கிடக்கிறஅஸ்த்தைர்யதையையும் அபோக்யதையையும்ப்ரகாசிப்பிக்கக்கடவதுமாய், ஆத்மபரமாத்மஸ்வரூபத்தை ப்ரகாசிப்பிக்கக் கடவதுமா யிருக்கும்; இப்போது பகவத் ப்ரஸாதமடியாகையால்ப்ரக்ர்திப்ராக்ர்தங்களில் அஸ்தைர்யம் ப்ரகாசித்துத்யாஜ்யதா ப்ரதிபத்தியுண்டாய்த் தென்கை. (విచిత్రా దేహసమ్పత్తి రీశ్వరాయ నివేదితుమ్, పూర్వమేవకృతా) (விசித்ராதேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும் । பூர்வமேவக்ர்தா) என்றும், (శరీరమాద్యం ఖలుధర్మసాధనమ్) (ஶரீரமாத்யஂகலுதர்மஸாதநம்) என்றும்-புருஷார்த்த ஸாதநமென்றும் தர்மத்துக்கு ப்ரதாநோபகரணமான ப்ரக்ர்த்யாதிகளை த்யாஜ்ய மென்னக் கடவதோ வென்னில்;. போஜநார்த்தமாக வங்கீகரித்த கலமும் போஜநாநந்தரம் அஸ்ப்ர்ச்யமாமாப்போலேயும், அவப்ர்தஸ்நாநாநந்தரம் யூபாதிகள் அஸ்ப்ர்ச்ய மாமாப்போலேயும், இதுவும் கார்யாநந்தரம்த்யாஜ்யமாகக் கடவது. (மின்னுருவாய்) என்ற ஸாமாநாதிகரண்யம் உபகார்யோபகாரபாவஸம்பந்த நிபந்தநம். இப்படி இவை அஸ்த்திரமானால் அநந்தரம் ஸ்த்திரமான ஆத்மவஸ்துவே ஜ்ஞாதவ்யமாகக் கடவது.

(அஹம்) என்று - ப்ரத்யக்ஷிக்கிற வாத்மவஸ்துவை தேஹமென் பார், இந்த்ரியமென்பார், மநஸ்ஸென்பார், ப்ராணனென்பார், புத்தியென்பார், இப்படி பண்ணுகிற விப்ரதிபத்தி சமித்து யதாஜ்ஞாநம் பிறக்கைக்கு சாஸ்த்ராபேக்ஷை யுண்டாகையாலே சாஸ்த்ரப்ரதாநம் பண்ணினானென்கிறார் மேல் (வேதம் நான்காய்) ஆத்மாவினுடைய யாதாத்ம்ய ப்ரதிபாதநபரமான வேதங்கள் நாலுமாய். வெறும் ஆத்மபரமேயோ வேதங்களென்னில்; அல்லாததத்வத்வயமும்இவனுக்குத்யாஜ்யமின்னது, உபாதேயமின்னதென்கைக்காக ப்ரதிபாதிக்கப்படுகிற தித்தனையொழிய ஆத்மபரமேயாகக் கடவது. ஆனால் த்யாஜ்யோபாதேயங்களைச் சொல்லவமையாதோ, ஆத்மஸ்வரூபஞ் சொல்லுகிற தென்னென்னில்;

---

கார்யாநந்தரம் - ஜ்ஞாநம் பிறந்தபின்பு. யாதாத்ம்யம்-ஜ்ஞாநாநந்த மாத்ரமன்றிக்கே சேஷத்வபாரதந்த்ர்ய பர்யந்தமாக ப்ரதிபாதிக்கை. வேதம் தத்வத்ரயத்தையும் ப்ரதிபாதியா நிற்க ஆத்மபரமென்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அல்லாததத்வத்வயமுமித்யாதி.) த்யாஜ்யோபாதேயம்-அசித்தும், ஈச்வரனும்.

த்யாஜ்யோபாதேயங்களுக்கு நிர்ணயகப்ரமாணம் ஸ்வரூபமாகை யாலேஸ்வரூபாநுரூபமானத்யாஜ்யமின்னது, ஸ்வரூபாநுரூபமான உபாதேய மின்னதென்று அறியும்போது, ஸ்வரூபத்தை யறிய வேணுமிறே; ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநமில்லாதபோது சரீரமாத்ரம் த்யாஜ்யமாய் புத்ரபச்வந்நாதிமாத்ர முத்தேச்யமாதல், சரீர வ்யதிரிக்தம் ஆத்மாவானபோது புத்ரபச்வந்நாதிகள் த்யாஜ்யமாய் ஸ்வர்க்கம் உத்தேச்யமாதல் செய்யுமிறே. சாஸ்த்ராபேக்ஷை சேதநனுக்கே யாகையாலே சேதநபரமாகக்கடவது. ஈச்வரன் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனாகையாலும் அசித்தத்வம் ஜடமாகையாலும் சாஸ்த்ராபேக்ஷையில்லை; இனி சாஸ்த்ரவச்யனுமாய் ஜ்ஞாதாவுமானசேதநனைப்பற்றி சாஸ்த்ரம்உதிக்கக்கடவது. இவ்விடத்தில் ஸ்வார்த்தப்ரகாச கத்வத்தைப்பற்ற (வேதம்) என்கிறது. (மறையாய நால்வேதம்) என்கிறபடியே தன்னை அதிலங்கித்தார்க்கு ஸ்வார்த்த திரோதாயகமாயும் தன்பக்கலிலே புபுத்ஸுக்களுக்கு ஸ்வார்த்த ப்ரகாசகமாயுமிருக்கும். (பத்துடையடியவர்க்கெளியவன்; பிறர்களுக் கரியவித்தகன்;) என்கிறப்ரமேயஸ்வபாவம்ப்ரமாணத்துக்கு முண்டாயிருக்குமென்கை. இங்கு (வேதம் நான்கு) என்கிற ஸாமாநாதிகரண்யம், (వేదైశ్చసర్వైరహమేవవేద్యః) (வேதைஶ்சஸர்வை ரஹமேவவேத்ய:) என்று ப்ரதிபாத்யப்ரதிபாதக பாவஸம்பந்த நிபந்தநமன்று, (మానప్రదీపమివకారుణికోదదాతి) (மாநம்ப்ரதீபமிவ காருணிகோததாதி) என்கிறபடியேப்ரதாத்ர்ப்ரதேயபாவஸம்பந்த நிபந்தநம்.

---

நிர்ணயகப்ரமாணம்-நிச்சயத்துக்குஹேதுவான விஷயம்; இதுக்கு அதுகுணமாகவே நிச்சயிக்கவேணுமென்றபடி. அப்படியானால் ஸ்வரூபமமையாதோ, யாதாத்ம்யஜ்ஞாநம் வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வரூபயாதாத்ம்யேத்யாதி.) ஜ்ஞாத்ர்த்வாயத்தமான கர்த்ர்த்வத்தாலே இஹலோகத்தில் போகமாதல்; இது அல்பமாகையாலே ஸ்வர்க்கலோகத்தில் போகமாதல் அபேக்ஷிக்குமென்றபடி. வேதம் ப்ரதிபாதிக்கிற மாத்ரமன்றியே வேதத்தை யுண்டாக்கிற்றும் இவனுக்காக வென்கிறார் (சாஸ்த்ராபேக்ஷேத்யாதி.) ச்ருதி, மறை, என்னுமல் (வேதம்) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இவ்விடத்திலித்யாதி.) (ப்ரகாசம்) ப்ரகாச முண்டோவென்ன அருளிச்செய்கிறார் (மறையாயவித்யாதி.) (బోద్ధుమిచ్ఛుఃబుభుత్సుః) (போத்தும் இச்சு:-புபுத்ஸு:) அறியவேணுமென்கிற இச்சையை யுடையவனென்றபடி.

அநந்தரம் இந்தசாஸ்த்ரஜந்யமான ஜ்ஞாநத்தையும் எனக்கு உண்டாக்கினு னென்கிறூர் (விளக்கொளியாய்) விளக்கொளியின் ஸ்வபாவத்தையுடைத்தாகையாலே, விளக்கொளியென்று-சாஸ்த்ர ஜந்யஜ்ஞாநத்தைச்சொல்லுகிறது. அதாகிறது-தீபமாகிறது-அந்தகாரத்தைப்போக்கி பதார்த்தங்களை ப்ரகாசிப்பிக்குமாப்போலே அஜ்ஞாநத்தைப்போக்கி ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பிக்கக் கடவதாயிருக்கை. (అన్ధంతమఇవాజ్ఞానం దీపవచ్చేన్ద్రియోద్భవమ్) (அந்தம்தம இவாஜ்ஞாநம் தீபவச்சேந்த்ரியோத்பவம்) என்று ச்ராவணஜ்ஞாநத்தை தீபமாகச் சொல்லக்கடவதிறே. (హర్తుంతమస్సదసతీచవివేక్తుమీశోమానం ప్రదీపమివకారుణికోదదాతి) (ஹர்த்தும்தமஸ்ஸதஸதீசவிவேக்து மீசோமாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி) என்னக்கடவதிறே. இத்தால்-(శ్రోతవ్యః) (ச்ரோதவ்யः) என்று சொல்லுகிற ச்ரவணத்தைச் சொல்லிற்ருய்த்து. (முளைத்தெழுந்த திங்கள்தாஞய்) என்று - (మన్తవ్యః నిదిధ్యాసితవ్యః, ద్రష్టవ్యః) (மந்தவ்யः, நிதித்யாஸிதவ்யः, த்ரஷ்டவ்யः) என்கிற மநநநிதித்யாஸந தர்சநங்களைச் சொல்லுகிறது.

(முளைத்து) பர்வதாக்ரத்திலே தோன்றின சந்த்ரனைப்போலே தீபதிர்ஷ்டாந்தத்தால் சொன்ன ச்ராவணஜ்ஞாநத்திற் காட்டில் ப்ரகாசரூபமான மநநதசையைச் சொன்னபடி. (எழுந்து) பர்வதாக்ரத்தைவிட்டு ஆகாசத்தேயெழுந்தசந்த்ரனைப்போலேமநநாவஸ்தையிற் காட்டில் அதிப்ரகாசமான அநவரத பாவனையைச் சொன்னபடி. (திங்கள்தாஞய்) ஸாக்ஷாத்காரத்தைச்சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்; - தாஞன திங்களென்று - ஆகந்துகமான களங்கமின்றியே யிருக்கின்ற சந்த்ரனைச் சொல்லுகையாலே ப்ரக்ருதிஸம்ஸர்க்கம்நேராக அற்று, நிஷ்க்ருஷ்டமான ஆத்மவஸ்துவைச் சொன்னபடி. நிஷ்க்ருஷ்ட ஸ்வரூபத்தைக் கண்டாலிறே ஸாக்ஷாத்காரம் ஸித்தித்ததாவது.

---

(விளக்கொளியாய், திங்கள்தாஞய்) என்கிறவித்தால்-ச்ரவண மநநங்களாலே ப்ரமாத்மாவைக் காணுமாப்போலே இவற்ருலே இங்கு ஜீவாத்மாவைக் காணும்படி சொல்லுகிறது. சந்த்ரனுடைய களங்கம் பூமியினுடைய சாயைப்ரதிபலிக்கையாலே (ஆகந்துகமான களங்கமென்கிறது.) சந்த்ரப்ரபாஸ்தாநத்திலே ஆத்மாவுக்குப்ரபாரூபமான தர்மபூதஜ்ஞாநம், இப்போது ச்ரவண மநநாதிகளைச்சொல்லுகிறது. (விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள்தாஞய்) ச்ரவணமநநநிதித்யாஸநஸாக்ஷாத்காரவிசிஷ்டாத்மாவாய், இது விதேயமன்று, (மின்னுருவாய்) என்று மேலே விதேயமாகையாலே ஸாக்ஷாத்கார விசிஷ்டம் ஆத்மா என்று - ஸாக்ஷாத்காரத்தைத் தந்தவனென்றபடி. ச்ரவண விசிஷ்டாத்மா என்று கண்டுகொள்வது. நிஷ்க்ருஷ்டஸ்வரூபத்தைக் காணவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறூர் (நிஷ்க்ருஷ்டஸ்வரூபேத்யாதி.) ஸாக்ஷாத்காரம் - பரமாத்மஸாக்ஷாத்காரம்.

சந்த்ரத்ர்ஷ்டாந்தத்தாலே - ஆத்மாவினுடைய ஸ்வயம்ப்ரகாசத்வமும், (ஆஹ்லாதே) (சதிஆஹ்லாதே) என்கிறபடியே - ஆஹ்லாதரூபத்வம் தோற்றுகைக்காகவும், பகவத்ப்ரஸாத லப்தமாகையாலே அநாயாஸஸித்தியால்வந்த அம்லாநதை தோற்றுகைக்காகவும் சந்த்ரனை த்ர்ஷ்டாந்திக்கிறார். (யதா ஸூர்யஸ்ததா ஜ்ஞாநம்) (யதாஸூர்யஸ்ததாஜ்ஞாநம்) என்று - ஸூர்யனை த்ர்ஷ்டாந்தித்தது ஸாதகனுக்கு ஸ்வயத்நத்தால்வந்த க்லிஷ்டதைதோற்றுகைக்காக.

(பின்னுருவாய்) பின்னான தத்வமாய். (பஞ்சவிம்சோயம் புருஷ:, பஞ்சவிம்ச ஆத்மா பவதி) (பஞ்சவிம்சோயம்புருஷ:, பஞ்சவிம்ஸ ஆத்மாபவதி) என்கிறபடியே இருபத்தஞ்சாம் தத்வமான ஆத்மஸாக்ஷாத்கரணுகையாலே சதுர்விம்சதிதத்வாத்மிகையான ப்ரக்ர்திக் கவ்வருகாய்ப் பிரிந்துதோற்றுகிறபடி. (தேஹேந்த்ரியமந:ப்ராண ...) (தேஹேந்த்ரியமந:ப்ராண தீப்யோந்யோநந்யஸாதந: । நித்யோவ்யாபீப்ரதிக்ஷேத்ர மாத்மாபிந்நஸ்ஸ்வதஸ்ஸுகீ) என்னக்கடவதிறே. அநந்தரம் இப்படிப்பட்டவாத்மவஸ்து வ்யாப்யகதமான தோஷங்களால்ஸ்பர்சிக்கப்படானென்கிறார் (முன்னுருவிற்பிணிமூப்பில்லாப் பிறப்பிலியாய்) முன்னுருவாகிறது - கீழே முன்னுருவென்று கொண்டுசொன்ன ப்ரத்யக்ஷபரித்ர்ஷ்டமான ப்ரக்ர்திப்ராக்ர்தங்களே. அதிலுண்டான பிணிமூப்புப்பிறவிகளோடு ஸ்பர்சமில்லாத ஆத்மவஸ்து. பிணி-துக்கம். இத்தால்-அஜ்ஞாநாதிகளை உபலக்ஷிக்கிறது. மூப்புப்பிறப்பென்கையாலே-ஷட்பாவவிகாரங்களை உபலக்ஷிக்கிறது. (நிர்வாணமய ...) (நிர்வாணமய ஏவாயமாத்மா ஜ்ஞாநமயோமல:) என்று ஆத்மஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்து, (துக்காஜ்ஞாநமலா தர்மா: ப்ரக்ருதேஸ்தே ந சாத்மந:) (துக்காஜ்ஞாநமலா தர்மா: ப்ரக்ர்தேஸ்தேநசாத்மந:) என்று துக்காதிகள்ப்ரக்ர்தி தர்மமாய் ஆத்மாவோடு ஸம்பந்தமில்லை யென்னக்கடவதிறே. ஸ்வதஸ்ஸுகியாயிருக்கிற ஆத்மாவுக்கு துக்காஜ்ஞாநங்கள்கூடாதவோபாதி ஜடமானப்ரக்ர்திக்கும் துக்காஜ்ஞாநங்கள் கூடாதேயாகிலும் ஊமத்தங்காயினுடைய ஸம்ஸர்க்கத்தாலே ப்ரமம் வருகிறாப்போலே ப்ரக்ர்தி ஸம்ஸர்க்கத்தாலே ஆத்மாவுக்கு துக்காதிகள் வருகையாலே துக்காதிகள் ப்ரக்ர்திதர்மமேயாகக்கடவது.

---

ஸூர்யனைத்ர்ஷ்டாந்தமாகச் சொல்லுகிறதென்னென்ன; அருளிச்செய்கிறார் (யதாஸூர்மித்யாதி.)

ஆத்மாவை (பின்னுருவாய்) என்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (பஞ்சவிம்சோயமித்யாதி.) முந்துற ஆத்மஸ்வரூபத்தைச்சொல்லி, பின்பு ப்ரக்ர்திதர்மம் அதுக்கில்லை என்ற விடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (நிர்வாணமயேத்யாதி.)

(இறப்பதற்கே யெண்ணாது) இறக்கையாகிறது - மரிக்கை. மரணத்தையெண்ணாதே. கீழ் - ஷட்பாவவிகாரங்களில் தேஹாநுபந்தியானமரணத்தைச்சொல்லிற்று; இங்கு-ஸ்வரூபாநுபந்தியான மரணத்தைச் சொல்லுகிறது. அதாகிறது - கைவல்யம். ஸ்வதஸ் ஸுகியான ஆத்மாவினுடைய அநுபவஸ்வரூபமாய் தனியே ஒரு புருஷார்த்தமாய் புநராவர்த்தியில்லாத கைவல்யத்தை மரணமென்னக்கடவதோ வென்னில்; மரணமாகிறது - ஆத்மவியோகமாக லோகத்திலே ப்ரத்யக்ஷியா நின்றதிறே; இதுவும் அப்படியே ஸாக்ஷாத் ஆத்மபூதனான பரமாத்ம வியோகத்தாலே மரணமாகக் கடவது. ப்ரத்யக்ஷமாக ம்ர்தமான சரீரம் நஷ்டமாகிறாப்போலே இது நசியாமையாலே இத்தை மரணமென்னலாமோ வென்னில்; ஸ்வரூபாநுரூபமான போகமில்லாமையாலே பாஹ்ர்தயத்தாலே மரணமாகக்கடவது. (మృతో దరిద్రః పురుషః) (ம்ர்தோதரித்ரஃபுருஷஃ) என்று போக்த்ராவானவன் தரித்ரனை ம்ர்தனென்னுமாப்போலே இந்தகைவல்யம் * அந்நாதனுக்கு மரணமாய்த்தோற்றுகையாலே மரணமென்கிறது. (எண்ணாது) இத்தைத்தருகைக்கு எண்ணாதே போந்தான். (జరామరణమోక్షాయ మామాశ్రిత్య యతన్తియే) (ஜராமரணமோக்ஷாயமாமாச்ரித்யயதந்தியே) என்று இத்தைபுருஷார்த்தமாகக்கொடுக்கக்கடவ வவன் இப்போது என்னை இப்படுகுழியிலே விழாதபடி இத்தை எனக்கு எண்ணாதேபோந்தான். அவனுடைய எண்ணங்கொண்டே தமக்கு ஜீவநமாகையாலே (எண்ணாது) என்கிறார்.

இவ்வாபந்நிவர்த்தியைப் பண்ணினதுக்கு மேலே தன்னுடைய ஸ்வரூப ரூபகுணங்களை ப்ரகாசிப்பித்தானென்கிறார் மேல் (எண்ணும் பொன்னுருவாய்) என்று - திவ்யாத்ம ஸ்வரூபத்தை ப்ரகாசிப்பித்தானென்கிறார். (எண்ணும்) போக்யதாதிசயத்தாலே (నేతినేతి) (நேதிநேதி) என்கிறபடியே (அது,அது) என்னு மித்தனைபோக்கி இதம் என்றுபரிச்சேதிக்கவொண்ணாதிருக்கை.

---

ஜடமானப்ரக்ர்திக்கு துக்காதிகள் கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வதஸ்ஸுகீத்யாதி.)

பரஹ்ர்தயம் - நித்யமுக்தர் ஹ்ர்தயம். (எண்ணாது) என்கைக்கு, அவன்றான் கொடுக்க நினைக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஜராமரணேத்யாதி.) தராது என்னாதே, (எண்ணாது) என்பா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவனுடைய வித்யாதி.) (எண்ணும்) என்கிறவர்த்தமாநத்தைப்பற்றவருளிச்செய்கிறார் (போக்யதாதிசயேத்யாதி.) (நேதிநேதி இதிச்ருதிந) - இப்படியன்று இப்படியன்று ச்ருதிதானே பரிச்சேதிக்க மாட்டிற்றில்லை யென்றபடி.

(ఏకైకగుణావధిప్సయా సదా స్థితాః) (ஏகைககுணவதிப்ஸயா ஸதா ஸ்திதா:) என்று ஓரோகுணந்தானே அபரிச்சிந்நமாயிருக்கை தத்ச மாய்அஸங்க்யாதமான குணங்களுக்கு ஆச்ரயமான ஸ்வரூபத்தை பரிச்சேதிக்க வொண்ணாதென்னுமிடஞ் சொல்லவேணுமோ. (பொன்னுருவாய்) பொன்னினுடைய ஸ்வபாவத்தை யுடைத்தாகையாலே - ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. அதாகிறது - ஸ்ப்ருஹணீயமா யிருக்கையும், உண்டு என்ன வுயிர் நிற்கையும், இத்தைக்கொண்டு ஸர்வாபேக்ஷிதங்களையும் ஸாதித்துக்கொள்ளலா யிருக்கையும், இத்தையுடையவன்காலிலே லோகமடங்க விழும்படியாயிருக்கையும்.

(மணியுருவிற் பூதமைந்தாய்) உபாதாநபூதமான பூதங்களைந்தாய். மணியுருவில் - மணியின்ஸ்வபாவத்தை யுடைத்தான வடிவில் தேஜோமயமா யிருக்கையும், மாணிக்கச்செப்பிலே பொன்போலே தனக்காச்ரயமான ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாச்ரயமான குணங்களுக்கும் தான் சுத்தஸத்வமயமாகையாலே ப்ரகாசமாயிருக்கையும், தான் ஸ்வரூபகுணங்களில்காட்டிலும் போக்யமாயிருக்கையும். இதுக்குஉபாதாநபூதமான பூதபஞ்சகமாகிறது-பஞ்சோபநிஷத்து. ஒருதேசவிசேஷமாக பஞ்சோபநிஷண்மயமா யிறே யிருப்பது. (పరమేష్ఠిపుమాన్విశ్వో నివృత్తస్సర్వ ఏవసః) (பரமேஷ்டீபுமாந்விச்வோநிவர்த்தஸ்ஸர்வஏவஸ:.) (மணியுருவிற்பூதமைந்தாய்) என்று-திரோதாயகமாயிருந்துள்ள சரீரத்துக்கு உபாதாநபூதமானபூதங்களை வ்யாவர்த்திக்கிறது. அதவா, மணியுருவிலும் வர்த்திக்கக்கடவனாய் ப்ராக்ருதமான பூதங்களிலும் வர்த்திக்கக்கடவனாயிருக்கை. இத்தால் - அஸாதாரணமான விக்ரஹத்தோபாதி இவையும் விதேயமென்கை. பத்தனோடு பந்தகத்தோடு வாசியற இரண்டும் விதேயமாகவேணுமிறே விமோசகனுக்கு. (ప్రధానపురుషేశ్వరః) (ப்ரதாநபுருஷேச்வர:) என்னக்கடவதிறே.

இப்படி விலக்ஷணனா யிருக்குமவன் துர்லபனாயிருக்குமோவென்னில் (புனலுருவாய்) வஸிஷ்ட சண்டாளவிபாகமற ஒருதுறையிலேவிநியோகங்கொள்ளலாயிருக்கும் ஜலம்போலே ஸர்வஸுலபனா யிருக்குமென்கை.

---

(பூதமைந்தாய்) என்று - பஞ்சோபநிஷத்தாதல்; பஞ்சபூதமாதல். (పరమేష్ఠిపుమాన్విశ్వో నివృత్తస్సర్వ ఏవహి) (பரமேஷ்டீபுமாந் விச்வோநிவர்த்தஸ்ஸர்வஏவஹி) என்கிறது - அஞ்சு உபநிஷத்து. பஞ்ச பூதங்களும் விதேயமாகவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பத்தனோடித்யாதி.)

இப்படி ஸர்வஸுலபனானால் என் வருகிறதோவென்று வயிறு பிடிக்கவேண்டாதபடி ஆச்ரிதஸுலபனானவோபாதி ப்ரதிகூலர்க்கு அக்நிபோலே அநபிபவநீயனா யிருக்குமென்கிறார் மேல் (அனலுருவில் திகழும்) (𑌅𑌭𑌿𑌤𑌪𑍍𑌤𑌪𑌾𑌵𑌕𑍋𑌪𑌮𑌮𑍍) (அபிதப்பாவகோபமம்) என்று-நினையாதபோது அந்தரங்கர்க்கும் அநபிபவநீயனா யிருக்குமவன், உகவாதார்க்கு அநபிபவநீயனா யிருக்குமென்னு மிடஞ் சொல்லவேண்டாவிறே.

(சோதிதன்னுருவாய்) கீழே ஸ்ப்ர்ஹணீயதையாலே, * பொன்னுருவாய் என்று-ஸ்வரூபம் ஸ்வயம்ப்ரகாசமா யிருக்குமென்கிறது. நாட்டில் ஜ்யோதிஃபதார்த்தங்களுக்குஜ்யோதிஸ்ஸுண்டாகிறது தன்னோட்டை ஸம்பந்தத்தாலேயாம்படியிருக்கை.(𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿) (தஸ்யபாஸாஸர்வமிதம்விபாதி) என்னக்கடவதிறே. (என்னுருவில் நின்ற) என்னுடைய ஆத்மாவிலே நிற்கிலும் தனக்கு அவத்யாவஹமாயிருக்க எனக்கு த்யாஜ்யமான வடிவிலே வந்து நின்றானென்கை. (நின்ற) இவர் மடலெடுக்கையாலே தன்னுடைய ஸத்தாஹாநிபிறக்கும்படியான கலக்கம்சமித்து தரித்து நின்றபடி.

(எந்தை) ஸத்தையோபாதிசேஷித்வமும் உதறிப்படுத்தபடி. (தளிர்புரையுந் திருவடி என் தலைமேலவே) (என்தலைமேலவே- தளிர்புரையுந் திருவடி) இவர் தலையிலே ஸ்பர்சித்தபின்பு தளிர் புரையுந் திருவடியாயிற்று; அல்லாதபோது திருவடிகள் சருகானாப்போலே யிருக்கை. நெடுநாள் விஷயப்ராவண்யத்தாலே தம்முடைய ஸ்வரூபம் வாடினாப்போலே தம்மோட்டை ஸம்பந்தமில்லாமையாலே திருவடிகள் வாடிக்கிடந்தபடி. (என்தலைமேலவே) * அமரர்சென்னிப்பூவான திருவடிகள்கிடீர் எனக்குசிரோபூஷணமாய்த்து. ஆருடைய காலிருந்த தலையிலே ஆருடையதிருவடிகளிருக்கிறது; இவர்தலையிலே திருவடிகளை வைத்தத்துக்குப் பின்பு அவன் ஸத்தையும் சேஷித்வமும் விக்ரஹமும் பெற்றானாயிருக்கிறபடி.

---

நினையாதபோது - பரதாழ்வானுக்கு கார்யம் செய்ய நினையாதபோது. (பொன்னுரு) என்றதே, இங்கு சோதியாவதேதென்ன; அருளிச்செய்கிறார் (கீழேஸ்ப்ர்ஹணீயதை யித்யாதி.) அங்குவிரும்பப்படும்படி; இங்கு - ஸ்வரூபஸ்வபாவம் சொல்லிற்றென்றபடி. (தளிர்புரையும் திருவடி) என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (அமரரித்யாதி.) அன்றிக்கே, திரு என்று - பிராட்டியாய், அத்தால் திருமார்பை உபலக்ஷித்து * அமரர் சென்னிப்பூவென்கிற தென்னவுமாம்.(நின்றவெந்தை திருவடி)என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (இவர்தலையிலித்யாதி.)

ஆக, ப்ரக்ர்தி ப்ராக்ர்தங்களில் அஸ்த்தைர்யத்தைப்ரகாசிப்பித்த அவ்வளவு போராதோ, ஸ்வஸ்வரூபத்தை ப்ரகாசிப்பித்த வவ்வள போராதோ; கைவல்யத்திற் போகாதபடி நோக்கினவவ்வளவு போராதோ; அதுக்குமேலே தன்னுடைய ஸ்வரூபத்தையும் ஸ்வரூபப்ரகாசகமான விக்ரஹத்தையும் காட்டித் தந்தது போராதோ; அதுக்குமேலே எனக்கு த்யாஜ்யமான சரீரத்திலே புகுந்து நிற்பதே! அதுக்குமேலே தன்னுடைய திருவடிகளை யென்தலையோடே பொருந்தவைப்பதே! என்று தமக்கு அவன் பண்ணின உபகாரபரம்பரைகளைக்கண்டு விஸ்மிதராகிறார்.

ஆக இப்பாட்டால்-தத்வத்ரயங்களினுடைய நிஷ்க்ர்ஷ்டமான ஸ்வரூபமும், அவைமூன்றும் புருஷார்த்தமென்னுமிடமும் அவற்றில் ஒன்றே ஸ்வரூபப்ராப்தமான முக்யபுருஷார்த்தம், அல்லாதவை நிஹீந புருஷார்த்தமென்னுமிடமும், அந்தமுக்யபுருஷார்த்தபூதனான ஈச்வரனுடைய ஸ்வரூபரூபகுணங்களினுடைய வைலக்ஷண்யமும், அவற்றை ஈச்வரன் ஆச்ரிதர்க்குக் காட்டும்போது தன்பேறாகக் காட்டும்படியையுஞ் சொல்லுகிறது ... (க)

அ.—இரண்டாம்பாட்டு. (பாருருவி) முதற்பாட்டில் - தேஹாத்மாபிமாநராஹித்யம் தொடக்கமாகப்ராப்தி பர்யந்தமாக ஈச்வரன் தமக்குப் பண்ணின வுபகார பரம்பரைகளையருளிச்செய்தார்; இதில் - தமக்குத்ரிமூர்த்திஸாம்யப்ரமத்தையறுத்துத் தந்தபடியை அருளிச்செய்கிறார். (எண்ணும் பொன்னுருவாய்) என்று ஸ்வரூபவைலக்ஷண்யத்தைச் சொன்னபோதே இதுவும் அதிலே அர்த்ததஃஉக்தமன்றோவென்னில்; ஸிம்ஹாவலோகந்யாயத்தாலே கீழ்ச்சொன்ன உபகாரங்களை மறித்துப்பார்த்து அல்லாதவுபகாரங்களையுண்டாக்கிலும் இந்தத்ரிமூர்த்திஸாம்யக்கூழ்ப்பையறுத்துத்தந்தவுபகாரத்தை உண்டாக்கப்போமோ வென்று,அவற்றினுடைய ஆதிக்யத்தாலே திரியட்டுஞ் சொல்லுகிறார்; விஷயாந்தரப்ராவண்யத்தில்நின்றும் மீட்ட வுபகாரம்போலேயோ, கைவல்யமாகிற ஆபத்தில்நின்றும்மீட்ட உபகாரம்போலேயோ-இந்தவுபகாரமென்கிறார்.

---

மூன்றும்புருஷார்த்தமென்றது - ஸாமாந்யேந தேஹாத்மாபிமாநிக்கும், கேவலனுக்கும், பகவத்பரனுக்கும் மூவர்க்கும் மூன்றுதத்வமும் அபுருஷார்த்தமா யிருக்குமென்றபடி. ஆத்மாவையும் நிஹீநமென்கிறது - கைவல்யத்துக்குறுப்பாகையாலே.. (க)

இரண்டாம்பாட்டு.—(பாருருவி) கூழ்ப்பு-ஸம்சயம். ஆதிக்யமேதென்ன; அருளிச்செய்கிறார்(விஷயாந்தரேத்யாதி.)

இருவர் சேஷமாய் ஒருவன் சேஷியாய், இருவர் உத்பாதகராய் ஒருவன் உத்பாதகனாய், இருவர் சரீரமாய் ஒருவன் சரீரியாயிருக்கிறபடியை எனக்குக்காட்டித் தந்தானென்கிறார்.

மூ.—பாருருவிநீரெரிகால்விசும்புமாகிப்
பல்வேறுசமயமுமாய்ப்பரந்துநின்ற
ஏருருவில்மூவருமேயென்னநின்ற
இமையவர்தந்திருவுருவேறெண்ணும்போது
ஓருருவம்பொன்னுருவமொன்றுசெந்தீ
யொன்றுமாகடலுருவமொத்துநின்ற
மூவுருவுங்கண்டபோதொன்றாஞ்சோதி
முகிலுருவமெம்மடிகளுருவந்தானே. (உ)

| பதம். | உரை. |
|---|---|
| ஏருருவில் | அழகியசரீரங்களையுடைய, |
| மூவருமே என்ன நின்ற | மூவருமே ப்ரதானர் என்னும்படி யிருக்கிற, |
| இமையவர் தம்திரு வுரு | ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரர்களுடைய ரூபங்களை, |
| வேறெண்ணும்போது | வேறாகப் பிரித்துப் பார்க்கும்போது, |
| ஓருருவம் | ப்ரஹ்மாவின்வடிவு, |
| பொன்னுருவம் | பொன்னின் ஸ்வபாவம்; |
| ஒன்று | ருத்ரனுடையவடிவு, |
| செந்தீ | சிவந்த அக்நியின் வடிவு; |
| ஒன்று | ச்ரிய꞉ பதியான நாராயணனுடைய வடிவு, |
| மாகடலுருவம் | பெரிய கடல்போலே ச்ரமஹரமான வடிவு; |
| ஒத்துநின்ற | சேர்ந்துநிற்கிற, |
| மூவுருவும் | மூன்றுவடிவுகளையும், |
| கண்டபோது | ப்ரமாணத்தாலேபார்க்கும்போது; |

| பதம். | உரை. |
|---|---|
| பாருருவி நீரெரிகால் விசும்புமாகி | கடினையானபூமிமுதலான பஞ்சபூதங்களையும் ஸ்ர்ஷ்டித்தும், |
| பல்வேறு சமயமுமாய் | பலவாய் வேறுபட்டஸமத்தையுடைத்தாயிருக்கும் ஜகத்தைஸ்ர்ஷ்டித்தும், |
| பரந்து நின்ற | அந்தராத்மதயாவ்யாபித்து நிற்குமவனாய், |
| | தத்வஸ்திதியைஆராய்ந்துபார்க்குமிடத்து, |
| ஆம்சோதி ஒன்று | பரஞ்ஜ்யோதிச்சப்தவாச்யனாய் ஒருவனாய்விளங்குகிற, |
| முகிலுருவம் | காளமேகநிபச்யாமமானவடிவு, |
| எம்மடிகளுரும் | ஸர்வஸ்வாமியானஸர்வேச்வரன்வடிவுயாம் ... (உ) |

(ஏருருவில் - ஆம்சோதியொன்றே) என்றத்தைப்பற்றதிரும்பவும் ஓரவதாரிகையருளிச்செய்கிறார் (இருவர்சேஷமாயித்யாதி.) த்ரிமூர்த்திஸாம்யத்தை அறுத்தது எவ்வாகாரத்தாலே யென்ன; அருளிச்செய்கிறார் (இருவரொன்று.)

வ்யா.—(பாருருவி) கடினையானபூமி. ஆரியச்சிதை வாகையாலே, உர்வியை (உருவி) என்கிறது. (பார்) என்று - பூமியைச்சொல்லுகிறதன்று, காடிந்ய பரம் உருவி என்று - பூமியைச்சொல்லுகையாலே. இத்தால் - பூதாந்தரங்களிற் காட்டில் வ்யாவர்த்தகமான காடிந்யத்தை யுடைத்தான பூமி என்கை. "உருவில்" என்று பாடமானபோது - அண்டகாரணமான பதார்த்தங்களில் பார், நீர், எரி, கால், விசும்புமாகி பஞ்சபூதங்களையும் ஸ்ருஷ்டித்து. அல்லாத அக்ஷராவ்யக்த மஹதஹங்காரங்களென்கிற விவை அண்டத்துக்குக் காரணமன்றோ வென்னில்; அவற்றிற் காட்டில் ஸ்தூலமாயிருக்கையாலும், அண்டத்துக்கு ஸாக்ஷாத் காரணமாயிருக்கையாலும், நித்ய ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. ருஷியும், (஭ூதேப்யோண்டம்) (பூதேப்யோண்டம்) என்றாரிறே. பார்முதலாகச் சொல்லுகிறது - வ்யயக்ரமத்தைப் பற்ற. (ஆகி) என்கிறது- உண்டாக்கியென்று காட்டுமோ வென்னில்; - வேதாந்திகளாகையாலே, (஬ஹுஸ்யாம்) (பஹுஸ்யாம்) என்கிற ச்ருதிச்சாயையாலேயருளிச் செய்கிறார். (ஆகாஶாத்வாயு:, வாயோரக்நி:, அக்நேராப:, அத்ப்ய: ப்ருதிவீ) (ஆகாசாத்வாயு:, வாயோரக்நி:, அக்நேராப:, அத்ப்யப்ப்ருதிவீ) என்று ஒன்றுக்கொன்று உத்பாதகமாகச் சொல்லச்செய்தே இவற்றுக்கெல்லாம் ஈச்வரனை உத்பாதகனென்னப்போமோ வென்னில்; (தேஜ ஐக்ஷத, ஆப ஐக்ஷந்த) (தேஜஐக்ஷத, ஆபஐக்ஷத) என்கிற ஈக்ஷணக்ரியை அசேதநத்துக்குக் கூடாமையாலே ததவஸ்தனான ஸர்வேச்வரனே இவற்றுக்கு உத்பாதகனென்னுமிடம் தோற்றிற்றிறே. த்ரிமூர்த்தி ஸாம்யப்ரம நிவர்த்தநமாகில் இப்பாட்டுக்கு வாக்யார்த்தம் ப்ராக்ர்தஸ்ருஷ்டியைச் சொல்லுவானென்னென்னில்; அண்டகாரணமான பூதங்களை ஸ்ருஷ்டித்தவனுக்கு அண்டத்திலே உத்பந்நரான ப்ரஹ்மாதிகளோடு ஸாம்யஸம்பாவனையு மில்லையென்கைக்காக.

(பல்வேறுசமயமுமாய்) கீழ் - ஸமஷ்டிஸ்ருஷ்டியைச் சொல்லிற்று; இத்தால் - வ்யஷ்டிஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது.

---

ஆரியச்சிதைவு - ஸம்ஸ்க்ருதத்தினுடைய அபப்ரம்ஶம்;-சிதிலமான சொல்லென்றபடி. உருவில் என்றது - பதார்த்த பரம். (ஆகாஶாத்வாயு:) (ஆகாசாத்வாயு:) என்று-ஸ்ருஷ்டிக்ர மத்திலே சொல்லவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (பார்முதலாக வித்யாதி.)

தேவாதி பேதமின்றிக்கே யிருக்கை-ஸமஷ்டி; தேவாதிபேதமுண்டாகை - வ்யஷ்டி. (ஸங்க்யாதம் அஷ்டப்ரக்ருதய: ஷோடஶவிகாரா:) (ஸங்க்யாத அஷ்டப்ரக்ர்தய: ஷோடசவிகாரா:) என்கிற ஸங்க்யையைக் குறுகவிடுகை; மூவருமேப்ரதாநரென்கை.

பத்தசேதநர் பூதங்களிலே ஸமஷ்டிரூபேணுங்வயித்துப் போருகையாலேஸமஷ்டிஸ்ர்ஷ்டியென்கிறது. பத்தாத்மஸமஷ்டிபூதனுன ப்ரஹ்மாவின்பக்கல்நின்றும் பத்தசேதநாபிந்நராய்ப் பிறக்கையாலே வ்யஷ்டிஸ்ர்ஷ்டி யென்கிறது. பலவாய் வேறுபட்டஸமயத்தை யுடைத்தாயிருக்கும் ஜகத்தை ஸ்ர்ஷ்டித்து. ஸமஷ்டிஸ்ர்ஷ்டிபோலே ஸங்க்யாதமாயிருக்கையன்றியே அஸங்க்யாதரான ஆத்மாக்களை ஸ்ர்ஷ்டிக்கையாலே வ்யஷ்டிஸ்ர்ஷ்டியை (பல்) என்கிறது. வேறுபட்டிருக்கையாவது - ஒன்றோடொன்று தீண்டவும் துடைக்கவு மொண்ணுதபடி தேஹாதிபேதத்தாலே அந்யோந்யம் அத்யந்த பிந்நமாயிருக்கை. சமயமாகிறது - வ்யவஸ்தை. வ்யவஸ்திதஸ்வபாவமாயிருக்கை. தேவதைகள் ஆராத்யராயும் அம்ர்தபுக்குக்களாயு மிருக்கையும், மநுஷ்யர் ஆராதகராயும் அந்நாசிகளாயிருக்கையும், திர்யக்ஸ்தாவரங்கள் ஆராதநோபகரணங்களாயும் ஆராதகருக்கு உஜ்ஜீவநமாயும், அல்லாதவை, அவனபிமாநத்திலேகிடந்து உஜ்ஜீவிக்கையும் வ்யவஸ்திதமா யிருக்கை. (దాస్యసుఖైకసఙ్గినాంభవనేష్వస్త్వపికీటజన్మమే) (தாஸ்யஸுகைகஸங்கிநாம் பவநேஷ்வஸ்த்வபிகீடஜந்மமே) என்னக்கடவதிறே.

(பரந்துநின்ற) பரக்கையாவது - ஸ்ர்ஷ்டமான ஸகலபதார்த்தங்களையும் அநுப்ரவேசத்தாலே ஆத்மதயா வ்யாபித்துநிற்கை. அநுப்ரவேசமாவது - ஸ்தூலாகாரத்துக்கு அநுகூலமாகத் தன்னையமைக்கை; ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்டனுன தன்னை ஸ்தூலசிதசித்விசிஷ்டனுகையிறே. (ஏருருவில்) அழகிய சரீரங்களில். (பரந்துநின்ற) என்று-ஆத்மதயாவ்யாப்தனுனவீச்வரனுக்கு. (జగత్సర్వంశరీరంతే) (ஜகத்ஸர்வம்சரீரம்தே) என்று ஜகத்தடைய சரீரமாயிருக்கையாலே (உரு) என்று-ஜகத்தைச்சொல்லுகிறது. த்யாஜ்யரான ஸம்ஸாரிகளை (ஏருரு) என்பானென்னென்னில்; முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரந்தான் பயஸ்த்தாநமுமாயிருக்கும், உத்தேச்யமுமா யிருக்கும்; கர்மநிபந்தநமாகப் பார்த்தால் பயஸ்தாநமுமா யிருக்கும்; (జగత్సర్వంశరీరంతే) (ஜகத்ஸர்வம்சரீரம்தே) என்கிறபடியே பகவச்சரீரத்வாகாரத்தாலேபார்த்தால் உத்தேச்யமா யிருக்கும். (மூவருமேயென்னநின்ற)பஹுநாயக ஜகத்து என்கிறத்தைத் தவிர்த்துக் குறுகவிட்டு வைத்தார்களிறே - சிலவேதாந்திகள். ஆராத்யராய்த் தோற்றுகிறவர்க ளுடைய நிஷேதிக்கவேண்டாதே நமக்கு நிஷேத்யர் இவராம்படி பண்ணித் தந்தாரென்கை. பூர்வகாண்டத்திலே (త్రింశచ్చదేవానవచాసపర్యాః త్రీణిశతాత్రీసహస్రాణ్యగ్నిమ్) (த்ரிம்சச்சதேவாநவசா ஸபர்யன்த்ரீணிசதாத்ரீஸஹஸ்ராண்யக்நிம்)

என்று - மூவாயிரத்து முந்நூற்று முப்பத்தொன்பது தேவதைகளை ஆச்ரயணீயராகச் சொல்லக் கடவதிறே. வேதாந்திகள், ஜகத்காரண வஸ்துவே ஆச்ரயணீயம் என்றிறே சொல்லுவது; அதில் ஸ்ர்ஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக்கடவார் மூவராகையாலே இவர்கள்மூவருமே ஆச்ரயணீயரென்பார்கள். (என்னநின்ற) என்கையாலே - ஆபாதப்ரதீதியிலே ஸாம்யம்தோற்றுகையாலே ஆச்ரயணீயராய்த் தோற்றுமித்தனையொழிய நிருபித்தால் ஸாம்ய ஸம்பாவனையு மில்லையென்கை. ([illegible]) (ப்ரஹ்மவிஷ்ணுசிவாத்மிகாம் ஸஸம்ஜ்ஞாம் யாதிபகவாநேகः) என்று-ஆபாத ப்ரதீதியிலே ஸாம்யம் தோற்றுகையும், ([illegible]) (ஜநார்த்தநः) என்று-விஷ்ணுசப்தத்தோடு பர்யாயமான ஜநார்த்தநசப்தத்தைச் சொல்லுகையாலே பரிஹ்ருதமாகக் கடவதிறே.

(இமையவர்) இதுவுமொரு ப்ரமஹேது. அநிமிஷத்வாகாரம் ஒத்திருக்கையாலும், தேவசப்தத்தாலே சொல்லுகையாலும், ஸாம்யப்ரமத்துக்கு ஏகாந்தமாயிருக்கை. அநிமிஷத்வம் தேவவர்க்கத்துக்கெல்லாம் பொதுவாயிருக்கையாலும், ([illegible]) (ஸாக்ஷாத்தேவஃ புராணோஸௌ) என்று-நிருபாதிகதேவத்வம் ஒருவ்யக்தியிலேகிடக்கையாலும், ஸாம்ய ஸம்பாவனை யில்லை. (தந்திருவுருவேறெண்ணும்போது) அவ்வவருடைய ஸ்வபாவங்களைப் பிரித்து அநுஸந்திக்கும்போது ப்ரமயோக்யதை யுண்டென்கை. தமக்கு நிஷேத்யராயிருக்கிறவர்களைப்பற்றி, (திருவுரு) என்று -ச்லாகித்துச் சொல்லுவானென்னென்னில்; அவர்களுடையஸ்வரூபத்தோபாதி அவர்கள் சரீரம் ஈச்வரசரீரமாகையாலே தத்வாரா பேசுகிறார். (வேறெண்ணும்போது) கூட அநுஸந்திக்கும்போதிறே - இருவர்சேஷமாய் ஒருவன் சேஷியாயிருப்பது. (அரியய னரனென்னு மிவரை ஒன்ற நும்மனத்துவைத்து) என்னக்கடவதிறே. (ஒருருவ மித்யாதி) ப்ரமஹேதுவான அஸாதாரணஸ்வபாவங்களைச் சொல்லுகிறது.

---

மேலெழ ஸாம்யமாய் விசார்யமாணே விஷ்ணுவொருவனுமே யாயிருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் ([illegible]- ப்ர்ஹ்ம விஷ்ணு சிவாத்மிகாமித்யாதி.) ஜநார்த்தநசப்தம் ருடியாக விஷ்ணுவாசகமாகையாலே பர்யாய மென்கிறது.

ஸ்வபாவம். ஸ்ர்ஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம். வேறெண்ணும்போது- வேறுதனித்தனியே அவ்வவவ்யாபாரத்தையிட்டு, எண்ணும்போது-ப்ரமயோக்யமாய்கூடசரீரசரீரிபாவத்தாலே ஐக்யமாக அநுஸந்திக்கும்போது என்றபடி. ஐக்யமாக விசாரித்தால் ப்ரமமன்றிக்கே அவனேயாகத்தோற்றுமோவென்ன; அருளிச்செய்கிறார். (அரியய னித்யாதி.) ஒன்ற- ஐக்யமாக.

(ஓருருவம் பொன்னுருவம்) ப்ரஹ்மாவினுடைய ஸ்வபாவம் பொன்னின்ஸ்வபாவம். பொன்னாவது- ஸர்வாபரணங்களும் பண்ணுகைக்கு யோக்யமாயிறே யிருப்பது; அப்படியே சதுர்த்தச புவநத்தையும் ஸ்ருஷ்டிக்கைக்கு யோக்யமென்று தோற்றியிருக்கும்; பத்தாத்ம ஸமஷ்டி பூதனாகையாலே. ஸ்வசரீரத்தினின்றுமிறே - ஸகலபதார்த்தங்களும் உத்பந்நமாவது. (ஒன்று செந்தீ) ஒருதத்வத்தினுடைய ஸ்வபாவம்காலாக்நியினுடைய ஸ்வபாவம். அக்நிக்கு ஸ்வபாவம் ஸர்வத்தையும் தஹிக்கையிறே; அப்படியே ருத்ரனுடைய ஸ்வபாவத்தைப்பார்த்தால் ஜகத்தை உபஸம்ஹரிக்கைக் கீடாயிருக்கும். (ஒன்று மாகடலுருவம்) கண்டார்க்கு ச்ரமஹரமாயிருக்கையும், த்ருஷ்டஸத்வங்களோடு அத்ருஷ்டஸத்வங்களோடு ரத்நாதிகளோடு வாசியற ஸகலபதார்த்தங்களையும் தன்னுள்ளேயிட்டுவைத்து ரக்ஷிக்கும் ஸ்வபாவமிறே - கடலின் ஸ்வபாவம்; அப்படியேசர்வரஸ்வரூபத்தையும்பார்த்தால் ஆச்ரயித்தார்க்கு ச்ரமஹரமாயிருக்கையும்,ஆச்ரயித்தாரைத் தன்னபிமாநத்திலே யிட்டுவைத்து ரக்ஷிக்கைக்கு யோக்யனென்று தோற்றியிருக்கையும். மூன்றுமுண்டானவிடத்தே யிறே-ஜகத்காரணத்வமுள்ளது; மூவர்பக்கலிலே மூன்றுஸ்வபாவமும் கிடக்கையாலே மூவரையும் ஜகத்காரணதயாப்ரமிக்கலாயிருக்கை.

(ஒத்துநின்ற) சேர்ந்துநின்ற. அதாகிறது-அவ்வவஸ்வபாவங்கள் அவ்வவருடைய ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களோடே சேர்ந்திருக்கை. அநந்தரம் ப்ரமநிவ்ருத்திசொல்லுகிறது (மூவுருவுங்கண்டபோது) மூன்றுதத்வத்தையும் ப்ரமாணத்தாலே கண்டபோது. (ஒன்றாம்சோதி) அவற்றில்வைத்துக்கொண்டு ஒன்றேயாம் சோதி. உத்பாதகமாயும், சரீரியாயும், சேஷியாயு மிருக்கும் தேஜஸ்ஸு ஒன்றே; அல்லாதவையிரண்டும் உத்பாத்யமாயும், சரீரமாயும், சேஷமாயுமிருக்கும். எங்கேகண்டோமென்னில்; (ఏకోహవై నారాయణఆసీత్) (ஏகோ ஹவை நாராயண ஆஸீத்) என்று-ஜகத்காரணவஸ்துவைச்சொல்லி,(నబ్రహ్మా నేశానః నేమేద్యావాపృథివీ) (நப்ரஹ்மாநேசாந: நேமேத்யாவாப்ருதிவீ) என்று அசேதநமான ப்ருதிவ்யாதிகளோபாதி ப்ரஹ்மருத்ராதிகளையும் ஸம்ஹாரத்திலே கர்மீபவித்துச் சொல்லுகையாலும், (సబ్రహ్మా సశివః) (ஸப்ரஹ்மா ஸசிவ:) இத்யாதிகளாலே இவர்களுடைய க்ஷேத்ரஜ்ஞத்வசேஷத்வத்தைச்சொல்லு

---

மூவுருவும் என்று – மூவருடையவடிவும் தோற்றுகையாலே ஸ்வபாவாநுகுணமாகவடிவுங் கொண்டானென்றபடி. கர்மீபவிக்கை - விஷயமாகை. க்ஷேத்ரஜ்ஞனான இந்த்ரனோடே ஸஹபடிக்கையாலே இவர்களுக்கும் க்ஷேத்ரஜ்ஞத்வம்ஸித்தம்.

கையாலும்,(ஏஷஸர்வபூதாந்தராத்மா)(ஏஷஸர்வபூதாந்தராத்மா(என்று-ஸர்வசப்தத்தாலேக்ரோடீக்ர்தமான வ்யாப்யபதார்த்தங்களிலே அந்யதமராகையாலும், கார்யத்வமும், க்ஷேத்ரஜ்ஞத்வமும்,சரீரத்வமும்,ஸம்ப்ரதிபந்நமென்கை.(ஆம்சோதி)என்கையாலே-நிர்வாஹ்யஜ்யோதிஸ்ஸுக்களான ஆத்மாக்களைவ்யாவர்த்திக்கிறது.சேதநரும்ஸ்வயம்ப்ரகாசமாயிறேயிருப்பது.ஆகையாலிறே,(நாராயணபரோஜ்யோதிஃ) (நாராயணபரோஜ்யோதிஃ) என்றும்,(ஜ்யோதிஷாம்ஜ்யோதிஃ)(ஜ்யோதிஷாஂஜ்யோதிஃ) என்றும் சொல்லவேண்டிற்று. (மூவுருவும் கண்டபோதொன்றாஞ்சோதி)என்கிறது-ஏகத்ரவ்யவாதிகளுக்குச் சேருமாப்போலேயிருக்கும், இதுஇவர்க்கு தர்சநமல்லாமையாலேபக்ஷமல்ல. இன்னமும், (மின்னுருவாய்) என்றும், (பின்னுருவாய்) என்றும், (பொன்னுருவாய்) என்றும்-தத்வத்ரயங்களை அலகலகாகப் பிரித்துச் சொல்லுகையாலும், இப்பாட்டிலே, (ஏருரு) என்று – சரீராத்மபாவத்தைச் சொல்லுகையாலும், (இந்திரர்க்கும் பிரமர்க்கும்முதல்வன்றன்னை) என்று மேலேசொல்லுகையாலும் ப்ரகரண விரோதமுமுண்டு.

(எம்மடிகளுருவம் - முகிலுருவம்) என்ஸ்வாமிகளுடைய வடிவு காளமேகநிபச்யாமமாயிருக்கும். அங்கு - ரக்ஷகனென்கைக்காக, (ஒன்று மாகடலுருவம்) என்று - கடலின்ஸ்வபாவத்தைச் சொல்லிற்று; இங்கு - வடிவைச் சொல்லுகிறது. இவ்வடிவிறே ஸர்வாதிகத்வத்துக்கு அடையாளமாயிருப்பது. (தானே) (மணியுருவிற்பூதமைந்தாய்) என்ற வடிவுதான் .காளமேக நிபச்யாமமாய்க்கிடீர் இருப்பது. அங்கு - (மணியுரு) என்றுசொல்லிற்று-முன்தானேயிலேமுடிந்தாளலாம்படிபவ்யமாயிருக்கையாலும், ப்ரகாசகமா யிருக்கையாலும், மஹார்க்கமா யிருக்கையாலும், போக்யமா யிருக்கையாலும்.

ஏருருவில் மூவருமே யென்னநின்ற விமையவர்தந் திருவுருவேறெண்ணும்போது – ஒருருவம்பொன்னுருவம்; ஒன்று செந்தீ; ஒன்றுமாகடலுருவம்; ஒத்துநின்ற, மூவுருவுங்கண்டபோது - பாருருவி நீரெரிகால்விசும்புமாகிப் பலவேறுசமயமுமாய்ப் பரந்துநின்ற - ஒன்றாஞ்சோதி முகிலுருவம் எம்மடிக ளுருவந்தானே) என்றந்வயம். ... ... ... ... (உ)

---

ஒன்று ஆம்சோதி என்று பிரித்துச் சொல்லாமல், (ஒன்றாஞ்சோதி) என்று மூன்றும் ஒன்றாய் விடுமென்று ஒன்றாகச் சொன்னாலோ வென்ன; அருளிச்செய்கிறார் (மூவுருவுங்கண்டபோதித்யாதி.) கீழ் கடலுருவமென்றதே யென்ன; அருளிச்செய்கிறார் (ரக்ஷகனித்யாதி.) வடிவுதான் சொல்ல வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸர்வாதிகத்வத்துக்கித்யாதி.)அதுதானும் (மணியுரு) என்றதே என்ன; அருளிச்செய்கிறார் (மணியுருவிலித்யாதி.) ... ... ... ... ... (உ)

அ.—மூன்றாம்பாட்டு. (திருவடிவில்) முதற்பாட்டிலே-விஷயாந்தர ப்ராவண்ய நிவ்ருத்திதொடக்கமாக ஸ்வரூபப்ராப்தமான சேஷசேஷித்வபர்யந்தமாக ஈச்வரன் தன்பேறாக ஸாக்ஷாத்கரிப்பித்த உபகாரத்தைக்கண்டு விஸ்மிதரானார்; தாம் அபேக்ஷிக்க அவன் கார்யம் செய்யுமதிறே ப்ராப்தமா யிருப்பது, தாம் விமுகராயிருக்க அவன்றானே மேல்விழுந்து கார்யஞ் செய்கையாலே விஸ்மயமா யிருக்குமிறே; இரண்டாம்பாட்டில் - அந்யசேஷத்வத்தை யறுத்துத் தந்தானென்றார்; த்ரிமூர்த்திஸாம்ய ப்ரமத்தாலே ப்ரமித்தது அந்யசேஷத்வமிறே: இப்பாட்டில் - (மணியுருவில் பூதமைந்தாய்) என்றும், (முகிலுருவம்) என்றும் - ஸ்வரூபத்துக்கும் ஸ்வரூபாச்ரயமானகுணங்களுக்கும்ப்ரகாசகமாய் நிரதிசய போக்யமாய் காளமேக நிபச்யாமமா யிருக்கிற வடிவை ஆசாலேசமுடையார்க்கு ருச்யநுகுணமாக அழியமாறி உபகரிக்கும்படியையும், தமக்கு ஸ்வாபாவிகமான வடிவுதன்னையே நிர்ஹேதுகக்ருபையாலே காட்டித் தந்தபடியையும் கண்டு, நான் கண்டாப்போலே யார்காணவல்லாரென்கிறார். பதிவ்ரதையானால் பர்த்ர் ஸம்ச்லேஷத்திலே இழியுமாப்போலே, சேஷத்வஸித்தியுண்டாய் அநந்யார்ஹதையுண்டானால் பின்னை அநுபவத்திலே இழியுமித்தனையிறே. ஸ்வரூபத்தைக் காற்கடைக்கொண்டு பற்றவேண்டும்படி யிருக்கும் குணங்கள், உபாயத்தையுங் காற்கடைக் கொண்டு பற்றவேண்டும்படியிறே வடிவின்போக்யதை யிருப்பது. இத்தால்-வடிவை யநுபவிக்கிறார்.

மூ.—திருவடிவில்கருநெடுமால்சேயனென்றுந்
  த்ரேதைக்கண்வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும்
பெருவடிவில்கடலமுதங்கொண்டகாலம்
  பெருமானைக்கருநீலவண்ணன்றன்னை
ஒருவடிவத்தோருருவென்றுணரலாகா
  வூழிதோறூழிநின்றேத்தலல்லால்
கருவடிவிற்செங்கண்ணவண்ணன்றன்னைக்
  கட்டுரையேயாரொருவர்காண்கிற்பாரே. (௩)

---

மூன்றாம்பாட்டு. (திருவடிவில்) அவன் தன்பேறாகச்செய்யாநிற்க விஸ்மயப் படவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (தாம் அபேக்ஷிக்கவித்யாதி.) த்ரிமூர்த்தி ஸாம்யநிவ்ருத்தியன்றோ, அந்யசேஷத்வநிவ்ருத்தி எங்கே சொல்லிற்றென்ன; அருளிச்செய்கிறார் (த்ரிமூர்த்தீத்யாதி.) சேஷத்வஜ்ஞாநமுடையவர் அத்தலைக்கு அதிசயத்தை சிந்தியாமல் அநுபவத்திலே யிழிவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (பதிவ்ரதையானலித்யாதி.) ஆனால் ஸ்வரூபகுணங்களிருக்க விக்ரஹத்திலே யிழிவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வரூபத்தையித்யாதி.) கீழ்வாக்யத்தால் பலிதமருளிச்செய்கிறார் (இத்தாலித்யாதி.)

| பதம். | உரை. |
|---|---|
| திருவடிவில் | விலக்ஷணமான வடிவுகளில், |
| கருநெடுமால் | காளமேக நிபச்யாமமான வடிவை யுடையனான ஸர்வேச்வரன், |
| பெருவடிவில் | பெரியகூர்ம ரூபியாய்க்கொண்டு, |
| கடல் | திருப்பாற் கடலைக்கடைந்து, |
| அமுதம்கொண்டகாலம் | அம்ருதத்தைதேவர்களுக்குக்கொடுத்தருளின க்ர்தயுகத்திலே, |
| வளையுருவாய் | சங்கம்போலே வெளுத்த நிறத்தையுடையனாய், |
| திகழ்ந்தான் | விளங்கினவனாய், |
| த்ரேதைக்கண் | த்ரேதாயுகத்திலே, |
| சேயன் | சிவந்தநிறத்தையுடையனாய், த்வாபரயுகத்தில்சிவப்பும் நீலமும் கலந்தநிறத்தையுடையனாய், |
| கருநீலவண்ணன்றன்னை | கலியுகத்தில் ஸ்வாபாவிகமான நீலநிறத்தையுடையனாய், |

| பதம். | உரை. |
|---|---|
| பெருமானை | இப்படி பலவடிவுகளையுடையனாய் விளங்குகிற ஸர்வேச்வரனை, |
| ஒருவடிவமென்று | ஒருவடிவை யுடையவனென்றும், |
| ஒருருவென்று | ஒரு நிறத்தையுடையவனென்றும், |
| உணரலாகா | ஒருவராலும் அளவிடக்கூடாது; இப்படியிருக்க, |
| கருவடிவின் | கறுத்த திருமேனியையும், |
| செவ்வண்ணக்கண்ணன்றன்னை | சிவந்த திருக்கண்களையுமுடையனான ஸர்வேச்வரனை, |
| ஊழிதோறூழி | யுகங்கள்தோறும், |
| என்றும் என்றும் | காலததத்வமுள்ளதனையும், |
| நின்று | ஒருபடிப்படநின்று, |
| ஏத்தலல்லால் | வாய்விட்டுப் புகழுமதுபோக்கி, |
| கட்டுரையே | கட்டுரைமாத்ரமே, |
| காண்கிற்பாரார் | அவன் நிர்ஹேதுககர்பையாலே நான் கண்டாப்போலே காணவல்லாரார்; ஒருவருமில்லை; ( ) |

வ்யா.—(திருவடிவில்) வடிவிடையாட்டத்தில். கீழேசேஷத்வத்தினிடையாட்டமாகவும், அந்யசேஷத்வநிவர்த்தியினிடையாட்டமாகவும் செய்தவைபோலே இவ்வடிவிடையாட்டத்தில் செய்தவைகிடீரென்கிறார். (திருவடிவு) விலக்ஷணமான வடிவென்னுதல்; திருவினுடையவடிவென்னுதல். (வடிவு) என்ன அமைந்திருக்க, (திருவடிவு) என்கிறது-(அகலகில்லேன் இறையும்) என்கிறபடியே-பிராட்டி "தண்ணீர் தண்ணீர்" என்னும்படியிருக்கிற துர்லபமான வடிவைக் கிடீர் நாட்டார்க்கு அழியமாறி முகங்கொடுத்தது என்று அவ்வடிவின்வைலக்ஷண்யம் தோற்றுகைக்காக.

அவ்வடிவை உபகரித்தபடியைச்சொல்லுகிறது மேல் (கருநெடு மால்) காளமேகநிபச்யாமமானவடிவையுடையனும் உபயவிபூதிக்கும் அவ்வருகான பெரியமேன்மையையுடையவன். இத்தால்-விலக்ஷணவிக்ரஹயுக்தனாய், ஸ்வயம்நிரபேக்ஷனாய், ஸர்வாதிகனுமிருக்குமவன்கிடீர் இப்படியானானென்கிறார். அதவா, (மால்) என்று-வ்யாமோஹமாய், அதிவ்யாமுக்தனென்னவுமாம். இத்தால்-இப்படியிருக்கிறவன் தன்னையழியமாறி முகங்காட்டுகைக்கு ஹேது ஆச்ரிதவ்யாமுக்தனாகையாலே என்று ஹேதுவாகவுமாம்.

(சேயனென்றும் திரேதைக்கண்) த்ரேதாயுகத்தில் வந்தால் சிவந்த வடிவையுடையனாயிருக்கும். அக்காலத்திலே புருஷர்கள் ரஜஃப்ரசுரராகையாலே சிவப்பிலேயாய்த்து ருசியுண்டாயிருப்பது; அந்தருச்யநுகுணமாகச் சிவந்தவடிவைக்கொண்டு முகங்காட்டும். ரஜஸ்ஸு சிவந்திருக்கக்கடவதாய், ஸத்வம் வெளுத்திருக்கக்கடவதாய், தமஸ்ஸு கறுத்திருக்கக்கடவதாயிறேயிருப்பது. (லோஹிதசுக்லக்ருஷ்ணாம்) (லோஹிதசுக்ல க்ர்ஷ்ணாம்) என்றிறே-ப்ரக்ருதிக்கு அஸாதாரண குணத்ரயத்தையும் சொல்லிற்று. சிவந்த வடிவை ப்ரதமத்திலே சொல்லிற்று - (லோஹிதசுக்லக்ர்ஷ்ணாம்) என்கிற ச்ருதிச்சாயையாலே யருளிச்செய்கிறானென்னுமிடந் தோற்ற. சேஷியுகப்புக்கு அநுகுணமாக சேஷபூதன் தன்வடிவை அமைக்கையன்றிக்கே சேஷபூதனுகப்புக் கநுகுணமாக சேஷி தன்வடிவை யழிய மாறுகிறானிறே.(தமருகந்ததெவ்வுருவம்)என்கிறபடியே. (என்றும், என்றும்) என்கிறவிவை (ஊழிதோறூழி நின்றேத்தல்லால்) என்கிறவிடத்திலே அந்வயிக்கக்கடவது.

(பெருவடிவிற் கடலமுதங் கொண்ட காலம்) க்ர்தயுகத்தில் வந்தால், (திரேதைக்கண்) என்றவோபாதி க்ர்தயுகமென்னாதே, (கடலமுதங் கொண்டகாலம்) என்கிறது-(திரேதைக்கண்) என்று

---

சிவந்தவடிவைக் காட்டுகைக்கு ரஜஸ்ஸு சிவந்திருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ரஜஸ்ஸுசிவந்தித்யாதி) (சேயன்) என்று ஈடுபட வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (சேஷியுகப்புக்கித்யாதி.) சேஷிக்கு அநுகுணமாக வமைக்கை. (நிவாஸசைய்யாஸந - நிவாஸசையாஸநேத்யாதி) மலட்டுக்காலமென்றது - த்ரேதா யுகத்திலும் பகவத்வ்யாபாரமுண்டாயிருக்க அத்தையிட்டு நிரூபியாதே, கேவலம், (த்ரேதைக்கண்) என்று யுகத்தையிட்டுச் சொன்னது தமக்கு மலடடுக்காலம்போலே தோற்றியிருக்கையாலே. இங்கு யுகத்தையிட்டுச்சொல்லாமல்பகவத் வ்யாபாரத்தை யிட்டு காலத்தை நிரூபிக்கிறானென்றபடி. த்ரேதாயுகத்திலே கடல் அடைத்தது, அதுண்டாயிருக்கவும் அத்தையிட்டு நிரூபிக்கவில்லை யென்றபடி.

மலட்டுக்காலம்போலே யிருக்கையாலே பகவத் ஸ்பர்சியான கால மென்றருளிச்செய்கிறார்; அக்காலத்தில் பண்ணின வ்யாபாரம் தமக்கு அபிமதமாயிருக்கையாலே. பெரியதிருநாளிலே ஆதரமுடையார், பங்குனிமாஸத்துக்குப்பின்புகார்யஞ்செய்கிறோ மென்ன ப்ராப்தமாயிருக்க, பெரியதிருநாளுக்குப் பின்பு கார்யம் செய்கிறோ மென்னுமாப்போலே. ஆனால், கடலமுதங் கொண்ட காலம் என்ன வமையாதோ, (பெருவடிவிற் கடலமுதங்கொண்ட காலம்) என்பா னென்னென்னில்; பதினாலுநூறாயிரக்காதமாறு பரப்பையுடைத்தாயிறே க்ஷீராப்தியிருப்பது. இப்பரப்படங்கலும் விம்மும்படியிறே (தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி) என்கிறபடியே கண்வளர்ந்தருளுவது, அவ்வடிவோடே யெழுந்திருந்து கடைகிறபோது ஒருகடல் செவ்வேநின்று ஒருகடலைக்கடைந்தாப்போலே யிருக்கையாலே யருளிச் செய்கிறார். ச்ரமஹரமாய் அபரிச்சிந்நமாயிறே கடலிருப்பது; அப்படியே ச்ரமஹரமுமாய் அபரிச்சிந்ந போக்யமுமா யிருக்கிறபடி.

அதவா, (பெருவடிவு) என்று - அஸங்க்யாதமான வடிவாலே என்னவுமாம். மந்தரம் அழுந்தாமைக்கு கூர்மரூபியாயும், மேலே கொந்தளியாமைக்கு ப்ர்ஹத்ரூபியாயும், தேவதைகளோடு அந்யதமமான வடிவைக்கொண்டும் அஸுரர்களோடு அந்யதமமான வடிவைக்கொண்டும், அவர்களுடைய மத்யேநின்று வலித்தும், வாஸுகிக்கு பலமாய்ப் புகுந்துநின்றும், (యన్న దృష్టం సురాసురైః) (யந் நத்ர்ஷ்டம் ஸுராஸுரை:) என்று - மலையோடு தேவதைகளோடு அஸுரர்களோடுவாசியறவ்யாபித்து பலாதாநம்பண்ணுவதாயும், இப்படி அநேகம் வடிவைக்கொண்டபடி.

(கடலமுதங்கொண்டகாலம்) துர்வாஸாவினுடைய சாபத்தாலே நஷ்டஸ்ரீகராய் அம்ர்தத்தை யிழந்து தரித்ராய், (శరణం త్వామనుప్రాప్తాః సమస్తా దేవతాగణాః) (சரணம் த்வா மநுப்ராப்தா: ஸமஸ்தா தேவதாகணா:) என்கிறபடியே-பிறிகதிர்படாதபடி ஸகலதேவதைகளும் வந்து சரணம்புகுர அவர்களுக்குக் கடலைக்கடந்து அம்ர்தத்தைக் கொடுத்தபடி. (கொண்ட) அவர்களுக்குக் கொடுத்தது தன்பேறாயிருக்கை. (கடலமுதங் கொண்டகாலம்) தேவதைகளுக்கும் தனக்கும் எனக்கும் கடலிலே யமுதத்தையுண்டாக்கின காலம். தேவதைகள் பந்தகமான அம்ர்தத்தைக் கொண்டுபோனார்கள், தான் பெரியபிராட்டியாராகிற அம்ர்தத்தை ஸ்வீகரித்தான்.

---

இப்படி பகவத் ஸ்பர்ஸத்தையிட்டுச் சொன்னவிடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (பெரியதிருநாளி லித்யாதி.)

ப்ர்ஹத்ரூபி - ப்ரஹ்மரூபி.

* விண்ணவரமுதுணவமுதில்வரும் பெண்ணமுதுண்ட இவையிரண்டுமன்று இவர்க்கு போக்யம், (நால்தோளமுது)என்கிறபடியேகையும்திருவாழியுமாய்க்கொண்டு கடல்கடைந்தானேயாய்த்து இவர்க்கு போக்யம். தேவதைகளும் தங்களபிமதத்தைப் பெற்றார்கள், அவனும் தன்னபிமதம் பெற்றான், நானும் என்னபிமதம்பெற்றேன். (పశ్యతాంసర్వదేవానాం యయౌవక్షస్థలంహరేః) (பச்யதாம் ஸர்வதேவாநாம் யயௌவக்ஷஸ்தலம் ஹரேঃ) என்கிறபடியே - ஸகலதேவதைகளும் பார்த்திருக்கத் திருநாபீகமலத்திலே அடியையிட்டு திருமார்பிலே யேறினளாய்த்து. இவர்களைப் பாராதே திருமார்பிலே யேறுவானென்னென்னில்; தன்னபிமதம் பெற்றாலிறே பிறர்க்கபிமதம்செய்வது; அங்ஙனன்றியே, அவன்கடாக்ஷமடியாகவிறே நம்முடைய கடாக்ஷமென்று அவன்முகத்தைப்பார்த்தாள். இவ்விடத்திலே ஜீயர், பட்டரை, "தேவதைகளடங்க நிரம்பிக்கிடக்கச்செய்தே திருமார்பிலேயேறுகை ஸ்த்ரீத்வத்துக்குப் போருமோ வென்று கேட்க; பர்த்ர் ஸம்ச்லேஷத்திலே யிழியும்போது கலசப்பானையெடுப்பார்க்குக் கூசவேணுமோ" என் றருளிச்செய்தார். ஸகல தேவதைகளும் (ஈச்வரோஹம்) என்றிருந்தாலும் இம்மிதுநத்துக்கு கிஞ்சித்கரிக்க யோக்யமாயிறே ஸ்வரூபமிருப்பது.

(அமுதங்கொண்டகாலம்) அதுவுமொருகாலமேயென்கிறார். அநந்ய ப்ரயோஜநர்க்கு முகங்காட்டுகையன்றியே ப்ரயோஜநாந்தர பரர்க்குங்கூடவாழுங்காலமிறே. மேன்மையும், நீர்மையும், போக்யதையும், ப்ரகாசிக்கிற காலமிறே. ஸகல தேவதைகளும் வந்து சரணம் புகுருகையாலே மேன்மை ப்ரகாசியா நின்றது; ப்ரயோஜநாந்தர பரர்கள், (ஈச்வரோஹம்) என்றிருக்கிறதுர்மாநிகளென்று பார்த்தல் தன்பெருமை பார்த்தல் செய்யாதே கார்யஞ்செய்கையாலே நீர்மைப்ரகாசியா நின்றது; பிராட்டியும் தானும் சேர்ந்த சேர்த்தியாலே போக்யதை ப்ரகாசியா நின்றது. (வளையுருவாய்த் திகழ்ந்தான்) என்று - க்ர்தயுக புருஷர்கள் ஸத்வோத்தராகையாலே வெளுப்பாய்த்து அவர்கள் உகப்பது; ஆகையாலே அவர்களுடைய ருச்யநுகுணமாக சுக்லவர்ணமான வடிவையுடையனா யிருக்கும்.

---

தன்னபிமதம்-பிராட்டிக்கு அவன் திருமார்பிலேறுகை; அவனுக்கபிமதம்; அதுக்காக ஒருத்தரையும்பாராமலேறினாளென்றபடி.

அவன்கடாக்ஷமடியாக-அவன்நினைவறிந்துசெய்கைக்காக. அவனுக்கு இஷ்டமானால் அவர்களைப் பார்க்கிறோம், இல்லாவிட்டால் வெறுமனே யிருக்கிறோமென்று அவர்களைப் பாராமல் மார்விலேறினாள் என்று இரண்டாம் தாத்பர்யம். கலசப்பானை யெடுப்பார்-அந்தரங்கபரிசாரகர். அவர்கள் தாஸ்யரஸமறியார்களே யென்ன; அருளிச்செய்கிறார் (ஸகலதேவதைகளு மித்யாதி.)

வளையுருவாய் - சங்கவர்ணனாய். (ஶஶிவர்ணம் சதுர்ப்புஜம்) (சசிவர்ணம் சதுர்ப்புஜம்) என்னக்கடவதிறே. கடல் கடைந்தகாலம் க்ர்தயுகமென்னு மிடத்துக்கு ப்ரமாணமென்னென்னில்;-ச்வேதவர்ணனென்கையாலே - க்ர்தயுகமென்னு மிடம் தோற்றுகிறது. (பாலினீர்மை, நிறைந்தகாலம் நான்குமாய்) என்று நாலுயுகத்துக்கும் நாலுவர்ணமாக வருளிச்செய்தாரிறே ஒருவர். (திகழ்ந்தானென்றும்) தன்னை யழியமாறி இவர்களுக்கு முகங்கொடுத்தால் அவர்கள் உஜ்வலராகையன்றியே தான் உஜ்வலனானபடி. தன்னை யழியமாறியும்முகங்கொடுக்கையாலே நீர்மைவிளங்காநிற்குமிறே.

(பெருமானை) இப்படி ஆச்ரிதர்க்காகக் கொள்ளும்வடிவுக்குத் தொகையின்றிக்கே யிருக்கிறவனை. யுகங்கள் நாலானால் வடிவும் நாலா யிருக்குமத்தனையோ வென்னில்; அவ்வவயுகங்களுக்குத் தொகையில்லாமையாலே வடிவும் அஸங்க்யாதமாயிறேயிருப்பது. த்வாபரயுகத்திலுள்ளார் ரஜஸ்தமோமிச்ரரா யிருக்கையாலே அவர்களுடையருச்யநுகுணமாகச்சிவப்புமன்றியிலே நீலமுமன்றியிலே யிருக்கும்வடிவை யுடையனா யிருக்குமென்னுமிடம் அநுக்தமாகையாலே அத்தையும்ஸமுச்சயிக்கிறது.(பாசியின்பசும்புறம் போலும் நீர்மை) என்னக்கடவதிறே.

(கருநீலவண்ணன்றன்னை) கலிகாலத்தில் தன்பக்கல் அபிமுகராய் ஒருவர்ணவிசேஷத்திலேருசிபண்ணுவா ரில்லாமையாலே-ஸ்வாபாவிகமான வடிவுதன்னைக்கொண்டிருக்கும். (கலௌஜகத்பதிம்) (கலௌஜகத்பதிம்) இத்யாதி; - மைத்ரேய! பட்டபாடு பாராயென்னுதல்; இக்காலம் தட்டாதாய் நீயொருவனுமேயிறேயென்னுதல். கருமையென்று - கறுப்புக்கும் பேர்; வர்ணஸாமாந்யத்துக்கும் பேர். நிறத்தில்வந்தால் நீலமான நிறத்தை யுடையனாயிருக்கும். (ஒருவடிவத்தோருருவென்று உணரலாகா) நிறத்தையழியமாறுகையன்றியேவடிவையுமழியமாறும்.இப்படி ஆச்ரிதார்த்தமாகவடிவையும் வர்ணத்தையும் அழியமாறுகையாலே, இதுவடிவு, இது நிறமென்று ஒருவராலும் பரிச்சேதிக்கப்போகாது.

---

க்ர்தயுகத்துக்கு ச்வேதவர்ணமென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார்(பாலின் நீர்மையென்று.)(திகழ்ந்தானென்றும்) என்கிற விடத்தில் - சகாரத்தாலே ஸமுச்சயிக்கிற தென்றபடி.

கலிகாலத்தில் பகவத்ருபி உடையார்க்கில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார் (கலௌஜகத்பதிம் - கலௌஜகத் பதிம் இத்யாதி.) பராசரனுக்கு பவிஷ்யத்தான கலியுகம் ப்ரத்யக்ஷம்போலே தோன்றுகையாலே (இக்காலமென்கிறார்.) ஒருவடிவு, ஓருரு. அத்து - அசை. உரு என்று - அழகாய் - நிறத்தைச் சொல்லுகிறது.

(సురనరతిర్యక్షు)(ஸுரநரதிர்யக்ஷு)என்கிறபடியேஸர்வயோநிபி லும்வந்து அவதரிக்கைகயாலே வடிவையுமழியமாறினானிறே.(యువా కుమారః)(யுவாகுமாரஃ)என்கிறபருவம்,காளமேகம்போலேயிருக்கிற நிறம், ஸ்வாபாவிகமாயிருக்குமென்று பரிச்சேதிக்கப்போகாதோ வென்னில்; புத்ரனாயிருக்கவுங் காண்கையாலே பருவத்தை பரிச் சேதிக்கப்போகாது ; ஆச்ரிதருடைய ருச்யநுகுணமாக வர்ணத் தை பரிக்ரஹிக்கையாலே நிறத்தை பரிச்சேதிக்கப் போகாது. ஆனாலும் இவை ஆகந்துகம், நிலை நின்றவேஷமிதுவென்று பரிச்சேதிக்கைக்குக் குறையென்னென்னில்; ஆச்ரிதார்த்தமாகக் கொண்ட வடிவையும் நிறத்தையும் பார்த்தால் அதுதான் ஆகந் துகமென்னும்படியாய். அவை தன்னை யாதரித்திருக்கையாலே பொருந்தியிருக்கும்படி. * இச்சாக்ருஹீதமிறே. (உணரலாகா) பாசுரமிட்டுப் பேசிமுடியாமையன்று, நெஞ்சாலும் நினைக்கப் போகாது.

(ஊழிதோறூழிநின் றேத்தலல்லால்) செய்யலாவது இது வென்கிறார். அவன்கொண்ட ரூபபேதங்களையும் வர்ணபேதங்களை யும் பார்த்தால் காலதத்வமுள்ளதனையும் நின்றேத்து மித்தனையல் லது பரிச்சேதிக்கப்போகாது. (கருவடிவிற் செங்கண்ணவண்ண ன்றன்னை) தமக்குக்காட்டின வடிவை யருளிச்செய்கிறார். தமக்கு ருசியுண்டாகிலிறே ருச்யநுகுணமான வடிவைக்கொண்டு காட்டு வது. நாம் பகவத்விமுகராய் விஷயப்ரவணராயிருக்க, தன்னு டைய ருசியாலே ஸ்வாபாவிகமான வடிவுதன்னையேயாய்த்துக் காட்டிற்று. காளமேகநிபச்யாமமான வடிவையும், அதுக்கு பரபாகமாய் உள்வாயிலே கிடக்கிற வாத்ஸல்யாம்ருதவர்ஷியான திருக்கண்களையுமுடையவனை. இவையும் ச்ரிய:பதித்வத்தோபாதி தனித்தனியே ஸர்வாதிகத்வலக்ஷணமாயிறேயிருப்பது.

(கட்டுரையே யாரொருவர் காண்கிற்பாரே) நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே நான்கண்டுபேசினாப்போலே எவர்தாம் கண்டு பேசவல்லார். நான்கண்டாப்போலே காணவல்லாருண் டோ; நான்பேசினாப்போலெ பேசவல்லாருண்டோ. அதவா, (கட்டுரையே) எல்லாரும் பேசியேபோமித்தனையொழியக் காண வல்லாருண்டோ வென்னவுமாம்.

---

புத்ரன்-ஸ்தநந்தயம். அதுதான்-ஸ்வாபாவிகமானவடிவுதான். அவைதன்னை – ஆச்ரிதார்த்தமான வடிவையும் நிறத்தையும்.

ச்ரியஃபதி என்னுமல் நிறத்தையிட்டு நிரூபிப்பானென்னென் ன; அருளிச்செய்கிறார் (இவையுமித்யாதி.) (கட்டுரையே) ஏவகார மாகையாலே, கட்டுரைப்பாரார், காண்கிற்பாரார் என்னுதல். அன்றியே, கட்டுரையே - கட்டுரைமாத்ரமே, காண வல்லாரில்லை யென்னுதல்.

வேதங்களும் ஈச்வரனுடையவடிவிருக்கும்படியை (நீலதோயத மத்யஸ்தா) (நீலதோயதமத்யஸ்தா) என்று கடக்க நின்று பேசிப் போமித்தனையல்லது கண்டதில்லை. (நீலமுண்டமின்னன்னமேனிப்பெருமான்) என்றவர்களும் நான் கண்டாப்போலே கண்டார்களோ.

நைஸர்க்கிகமான(க)விரக்தியையும்நைஸர்க்கிகமான(உ)ப்ரேமத்தையு முடையராயன்றோ அவர்கள்கண்டது; நைஸர்க்கிகமான பகவத்வைமுக்யத்தையும் (௩) விஷய ப்ராவண்யத்தையுமுடைய நான் அவ்வாறு இவ்வாறாய்க்கண்ட காட்சிக்குஸத்ருசமுண்டோ. ஆனபின்பு நான்கண்டகாட்சியை வேதங்கள் கண்டதோ; ஆழ்வார்கள் கண்டார்களோ.

(ஆரொருவர்காண்கிற்பாரே) ஸ்வஸாமர்த்த்யத்தாலே எவர்கள் காணவல்லார். ஸாதகரைப்போலே ஸ்வயத்நத்தாலே கண்டேனோ, ப்ரபந்நரைப்போலே ஸம்ஸார பயபீதனாய்க் கண்டேனோ, விஷயப்ரவணனாய்த்திரியச்செய்தேயன்றோநான்கண்டது. ...(௩)

அ.—(நாலாம்பாட்டு) (இந்திரர்க்கும்) கீழ் மூன்று பாட்டாலும் - அர்த்தமற்றதிறே. முதற்பாட்டில் - சேஷசேஷித்வம் ஸாக்ஷாத்கர்தமாய்த்து; இரண்டாம்பாட்டில் - அந்யசேஷத்வம் நிவர்த்தமாய்த்து; மூன்றும் பாட்டில்-போக்யதை குறைவற்றது; இனி அநுபவத்துக்கு ஸஹகாரிகளைத் தேடுமித்தனையிறே. அதில் நித்யஸூரிகள் தேசவிப்ரக்ருஷ்டராகையாலும், ஸம்ஸாரிகள் விஷயப்ரவணராகையாலும் துணையாகமாட்டார்கள்; இனிதமக்கு அவர்ஜநீயமாயிருந்துள்ள திருவுள்ளமேயிறே ஸஹகாரியாவது. ஆகையாலே, நெஞ்சே! நாம் இவ்விஷயத்தை யநுபவிக்கப் பாராயென்கிறார்.

---

ஆர் என்பானென், வேதங்களும் ஆழ்வார்களு மில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (வேதங்களுமித்யாதி.) அவ்வாறிவ்வாறு – விரக்த்யாதிகளாலன்றிக்கே அவிரக்த்யாதிகளாலே காண்கை. ஸாதகரென்கையாலே - ரிஷிகளையும், ப்ரபந்நரென்கையாலே-ஆர்த்தப்ரபந்நரையும் வ்யாவர்த்திக்கிறது. இத்தால்-பரகதஸ்வீகாரத்துக்கு முக்யாதிகாரிதாமென்றபடி. ... (௩)

நாலாம்பாட்டு.— (இந்திரர்க்கும்) அர்த்தமற்றதிறே - திருமந்த்ரார்த்த மற்றதிறே என்றபடி.

---

(க) விரக்தி - ஆசையின்மை. (உ) ப்ரேமம் - அன்பு. (௩) விஷயப்ராவண்யம் - பகவத்வ்யதிரிக்த விஷயங்களில் ஆசை.

கீழ்ச்சொன்ன விலக்ஷண விக்ரஹ விசிஷ்டனுடைய ஜகத்காரணத்வப்ரயுக்தமான வைபவத்தை ஸ்வரூபப்ரகாசகமான திருமந்த்ரமுகத்தாலே அநுபவிக்கப் பாராயென்கிறார். இவர்தாம் திருமந்த்ரமுகத்தாலே அநுபவிக்கிறாராகில் அதுக்கு உபயவிபூதிநாதத்வமும் ஸமஸ்தகல்யாண குணாத்மகத்வமுமன்றோ அர்த்தமென்னில்; அதுவும் ப்ரமாண ப்ராசுர்யத்தாலே காரணத்வத்திலே யொதுங்கியிருக்கக்கடவது;

(𑌏𑌕𑍋 𑌹 𑌵𑍈 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌆𑌸𑍀𑌤𑍍) (ஏகோ ஹவை நாராயண ஆஸீத்) என்றும், (𑌨𑌰𑌾𑌜𑍍𑌜𑌾𑌤𑌾𑌨𑌿 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑌿) (நராஜ்ஜாதாநி தத்வாநி) என்றும், (𑌆𑌪𑍋 𑌨𑌾𑌰𑌾 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌾𑌃) (ஆபோநாரா இதிப்ரோக்தா:) என்று மித்யாதிகளாலே ஜகத்காரணத்வத்தை நாராயண சப்தார்த்தமாகச் சொல்லக் கடவதிறே. அதுதனக்குக் கருத்தென்னென்னில்; முறையழிந்து கிடக்கிறது இத்தேசமாகையாலே ப்ரமாணாபேக்ஷையுள்ளது இத்தேசத்துக்கிறே. தன்காணியைப் பிறர் ஆளும்போதிறே ப்ரமாணங் காட்டவேண்டுவது; ஆகையாலே சொல்லுகிறது. ஆகையாலே நெஞ்சே ஜநகனை அநுபவிக்கப் பாராயென்கிறார்.

மூ.—இந்திரர்க்கும்பிரமர்க்கும்முதல்வன்றன்னை
யிருநிலம்தீநீர்விண்பூதமைந்தாய்ச்
செந்திறத்ததமிழோசைவடசொல்லாகித்
திசைநான்குமாய்த்திங்கள்நாயிறாகி
அந்தரத்தில்தேவர்க்குமறியலாகா
வந்தணனையந்திமாட்டந்திவைத்த
மந்திரத்தைமந்திரத்தால்மறவாதென்றும்
வாழுதியேல்வாழலாம்மடநெஞ்சமே. (௪)

| பதம். | உரை. |
|---|---|
| இந்திரர்க்கும் | இந்த்ரனுக்கும், |
| பிரமர்க்கும் | ப்ரஹ்மாவுக்கும், |
| முதல்வன்றன்னை | காரணபூதனை, |
| இருநிலம்தீநீர்விண் பூதமைந்தாய் | பெரிதான பூமிமுதலானபஞ்சபூதங்களுக்கும் அந்தராத்மதயா வ்யாபித்து நிற்குமவனை, |
| செந்திறத்த | தன்னைஉள்ளபடியே காட்டும்செவ்வையையுடைய, |

பாட்டுக்கெல்லாம் தாத்பர்யமாக மீளவும் அவதாரிகை யருளிச்செய்கிறார் (கீழ்ச்சொன்னவித்யாதி.) அர்த்தம் காரணத்வத்தைச் சொல்லுவானென், என்று சங்காபிப்ராயம். அதுவும் - திருமந்த்ரமும்.

காரணத்வத்திலே ஒதுங்கினபடியை அருளிச் செய்கிறார் (𑌏𑌕𑍋 𑌹 𑌵𑍈 - ஏகோஹவையித்யாதி.) அது தனக்குக்கருத் தென்னென்னில் - அதுதான் காரணத்வத்தை ப்ரதிபாதிக்கிறதுக்கு கருத் தேதென்று சங்காபிப்ராயம்.

| பதம். | உரை. |
|---|---|
| தமிழோசையாகி | த்ராவிட வேதமான ப்ரபந்தங்களுமாய், |
| வடசொல்லாகி | ஸம்ஸ்க்ருத வேதங்களுமாய், |
| திசைநான்குமாய் | நான்குதிக்கிக்களிலுமுள்ள பதார்த்தங்களுக்கு அந்தராத்மாவாய், |
| திங்கள்நாயிறுகி | சந்த்ர ஸூர்யர்களுக்கும் அந்தராத்மாவாய், இப்படி, |
| அந்தரத்தில் | அந்தராத்மதயாவ்யாபித்து நிற்குமிடத்தில், |
| தேவர்க்கும் | தேவாதிஸகலபதார்த்தங்களுக்கும், |
| அறியலாகா | அறியக்கூடாத, |
| அந்தணனை | சுத்தஸ்வபாவனாய், |
| அந்தணர்மாடு | ப்ராஹ்மணர்களுக்கு தநமான வேதத்தினுடைய, |
| அந்திவைத்த | முடிவிலே ப்ரகாசிக்கிற, |
| மந்திரத்தை | ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரனை, |
| மந்திரத்தால் | திருமந்த்ரத்தாலே |
| மறவாது | இடைவிடாமல் அ |
| வாழுதியேல் | நுபவிப்பாயேயாகில், |
| மடநெஞ்சமே | எனக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் நெஞ்சே, |
| என்றும் | இவ்வாத்மாவுள்ளதனையும், |
| வாழலாம் | நித்ய ஸூரிகள் நடுவேயிருந் தநுபவிக்கப்பெறுவாயென்கிறார். ... (ச) |

வ்யா.—(இந்திரர்க்கும்பிரமர்க்கும் முதல்வன்றன்னை) (மூவுருவுங் கண்டபோ தொன்ருஞ்சோதி) என்கிறவிடத்தில் சப்தத்தைநெருக்கியிறே பொருள்சொல்லுவது; அதுவே தமக்குக் கருத்தென்னுமிடந் தோற்ற அத்தை இங்கே வ்யக்தமாக்குகிறுர்; ஏகனேதிர்வாஹகனென்றுகீழ் கீழ்ச்சொல்லிற்றென்கிறுர். ஸம்ப்ரதிபந்ந க்ஷேத்ரஜ்ஞனை இந்த்ரனுக்கும், ஈச்வரனென்றுசங்கிக்கைக்கு யோக்யனை ப்ரஹ்மாவுக்கும் உத்பாதகனானவனை. சங்கநீயனை ப்ரஹ்மாவை முற்படச்சொல்லி, பின்பு இவனைச்சொல்ல ப்ராப்தமாயிருக்க இவனை முற்படச் சொல்லிற்று இவனே பாதி அவனும் ஸ்ர்ஜ்யகோடிகடிதனென்னுமிடந் தோற்றுகைக்காக.

ஆனல்ருத்ரனும் ஈச்வரனுக சங்கநீயனு யன்றே இருப்பது, அவனைச் சொல்லாதொழிவா னென்னென்னில்; (ப்ரஹ்மணச்சாபி ஸம்பூத: சிவ இத்யவதார்யதாம்) (ப்ரஹ்மணச் சாபி ஸம்பூதச்சிவ இத்யவதார்யதாம்) என்று மித்யாதி ப்ரமாணங்களாலே அவனுக்கு ப்ரஹ்மபுத்ரத்வம் ப்ரஸித்தமாயிருக்கையாலே எல்லாரிலும் ப்ரதாநனை ப்ரஹ்மாவையும் கீழான இந்த்ரனையும் சொன்னபோதே ப்ரத்யாஹாரந்யாயத்தாலே மத்யே அவனையும் சொல்லிற்றாகக்கடவது.

ப்ரத்யாஹாரம் - அலம் அலம் என்று - அகாரத்தையும்லகாரத்தையும் எடுக்கவே நடுவுள்ள அக்ஷரங்கள் தன்னடையே ஸித்திக்குமென்கிற சப்தப்ரக்ரியாந்யாயம்; அப்படியே ஆத்யந்தங்களைச் சொல்லவே நடுவுள்ளது ஸித்திக்கு மென்றபடி.

இந்திரனுக்கும் பிரமனுக்கும் என்னாதே ரேபாந்தமாகச் சொல்லிற்று - பூஜ்யதாபுத்தியாலன்று, க்ஷேபிக்கிறார். ஈச்வரனையே ஸ்ர்ஜ்யனுயிருக்கச்செய்தேகிடீர்-த்ரைலோக்யாத்யக்ஷன் நானென்றிருக்கிறதும், சதுர்த்தசபுவநமும்என்னாலே ஸ்ர்ஜ்யம், இத்தனைக்கும் நிர்வாஹகன் நானென்றிருக்கிறதும், கும்பிட்டுக்கொள்ளுகிறதும்.

(முதல்வன்) தனக்கு உத்பாதகனின்றியே யிருக்கிறவன். (தன்னை) வ்யஷ்டிஸ்ர்ஷ்டிக்குக் காரணமான தன்னை யென்னுதல். (இருநிலமித்யாதி) கீழ்வ்யஷ்டிஸ்ர்ஷ்டியைச் சொல்லிற்று; இத்தால்-ஸமஷ்டிஸ்ர்ஷ்டியைச் சொல்லுகிறது. முற்படவ்யஷ்டிஸ்ர்ஷ்டியைச்சொல்லிபின்புஸமஸ்டிஸ்ர்ஷ்டியைச்சொல்லுகிறது. ஈச்வரத்வசங்கையுள்ளது இவர்கள்பக்கலிலே யாகையாலே. நாரங்களுக்கு ஈச்வரத்வசங்கையில்லையிறே. பூதங்களை வ்யயக்ரமத்தைச் சொல்லுதல், ஸ்ர்ஷ்டி க்ரமத்தைச் சொல்லுதல் செய்யாதே அக்ரமமாகசசொல்லிற்றொரு நினைவைப்பற்ற, ஸர்வாதாரமுமாய் அஸஞ்சாரியுமாய் அபாதகமுமா யிருக்கும் பெருமையைப் பற்ற, பூமியை முற்படச்சொன்னார்;அல்லாத பூதத்ரயங்களும் ஸஞ்சாரியுமாய் ரக்ஷகத்வ பாதகத்வங்களுக்கும் பொதுவாயிருக்கையாலே அக்ரமத்திலே சொன்னார்; இத்தனைக்கும் அவகாசப்ரதாநம் பண்ணுமேற்றத்தைப் பற்ற ஆகாசத்தைப் பின்பே யருளிச்செய்தார். இவை நினைவல்லாதபோது இதுக்குப்ரயோஜநமில்லை. (முதல்வன்தன்னை) என்றார்-கீழ்; இங்கே - (ஐந்தாய்) என்கிறார் ஆகையாலே, இந்தஸாமா நாதிகரண்யத்துக்கு நிபந்தநம்-உத்பாத்யோத்பாதகபாவஸம்பந்தமென்க.

(செந்திறத்தவித்யாதி)மேல்சாஸ்த்ரவச்யருடையஸ்ர்ஷ்டியைச் சொல்லுகைக்காக சாஸ்த்ரஸ்ர்ஷ்டியைச் சொல்லுகிறார். த்ராமிடஸம்ஸ்க்ர்தங்களை ஸ்ர்ஷ்டித்து. ஆரியத்தைச்சொல்லி அதினுடைய சிதைவாகையாலே பின்னைத் தமிழைச்சொல்ல ப்ராப்தமாயிருக்க இத்தைப்ரதமத்திலே உபாதாநம் பண்ணிற்று - இதுஸர்வாதிகாரமாகையாலும், ஸ்வார்த்தத்தைச் செவ்வேப்ரகாசிப் பிக்கக்கடவதா யிருக்கையாலும், தம்பாழி யாகையாலும். இன்னமும் அத்தோபாதி இதுவும் ப்ரமாணமென்கைக்காக முற்படவருளிச்செய்கிறார்.

---

முதல்வன் - தனக்கும்தானே காரண மென்னுதல், இவ்வருகுள்ளார்க்கும் காரண மென்னுதல். (கால், தீ, நீர்) என்கிற மூன்று பூதங்களும் ஏகரூபமா யிருக்கையாலே ஸ்ர்ஷ்டிக்ரமத்திலே சொல்லிற்றென்றபடி.

ஆரியம் - ஸம்ஸ்க்ர்தம். தம்பாழி - தம்துறை.

வேதங்கள் போலேயும், இதிஹாஸ புராணங்கள்போலேயு மன்றிறே - ஆழ்வார்கள்வார்த்தை; அநுஷ்டாதாவின் வார்த்தையிறே-இது. ஐச்வர்யகைவல்யங்கள் த்யாஜ்யதயா புகுருமித்தனையிறே - இவர்கள் பக்கல். (செந்திறத்ததமிழோசை) திறம் - கூறுபாடும், ப்ரகாரமும். ஸ்வார்த்தத்தைச் செவ்விதாக ப்ரகாசிப்பிக்கையே கூறுனத்ராமிட சப்தம்; உபப்ரம்ஹணாபேக்ஷயற்றிருக்கை. வேதங்களுக்கு உபப்ரம்ஹணாபேக்ஷயுண்டிறே.

(ஓசை) என்று - பாட்டுக்கும் த்வநிக்கும்பேர். லக்ஷணயா சப்தத்தைச்சொல்லுகிறது-மேல்வடசொல்லென்கையாலே. (வடசொல்) என்று - ஸம்ஸ்க்ர்தத்தைச் சொல்லுகிறது. த்ராமிட பாஷை ஸஞ்சரிக்குந் தேசத்துக்கு வடவெல்லையாகத் திருமலையைச் சொல்லக்கடவர்களிறே. அதுக்கு வடக்கெல்லாம் ஸம்ஸ்க்ர்தமே யிறேஸஞ்சரிப்பது; அத்தேசத்தில் தமிழ்ஸஞ்சரியாது; உபயமும் ஸஞ்சரிக்குமேற்றமுண்டிறே இத்தேசத்துக்கு. ஆகில் சாஸ்த்ரத்தை ஈச்வரன் ஸ்ர்ஷ்டிக்கையாவது - ப்ரகாசிப்பிக்கை.

(திசைநான்குமாய்) நாலுதிக்கிலுமுண்டான ஸகலபதார்த்தங்களையும் ஸ்ர்ஷ்டித்து. (మఞ్చాః క్రోశన్తి) (மஞ்சாக்ரோசந்தி) இதிவத். இத்தால் - சாஸ்த்ரவச்யருடைய ஸ்ர்ஷ்டியைச் சொல்லுகிறது. (திங்கள்நாயிறுகி) (అగ్నౌ ప్రాస్తాహుతిస్సమ్యగాదిత్యముపతిష్ఠతే। ఆదిత్యాజ్జాయతేవృష్టిః వృష్టేరన్నంతతఃప్రజాః) (அக்நௌப்ராப்தாஹுதிஸ் ஸம்யக் ஆதித்யமுபதிஷ்டதே, ஆதித்யாஜ்ஜாயதேவ்ர்ஷ்டிः வ்ர்ஷ்டேரந்நம்ததःப்ரஜாः) என்னக்கடவதிறே. ஸ்ர்ஷ்டிஸமாப்தி தோற்ற (ஆகி) என்கிறது.

கீழ்-நாரசப்தார்த்தஞ் சொல்லிற்று; மேல்-அயநசப்தார்த்தம் சொல்லுகிறது. (அந்தரத்தில்) அந்தரமிடத்தில். ஸ்ர்ஷ்டமான ஸகலபதார்த்தங்களிலும் வ்யாபித்து நிற்குமிடத்தில். (పృథివ్యా అన్తరః, ఆత్మనో ఽన్తరః) (ப்ர்திவ்யா அந்தரः, ஆத்மநோந்தரः) என்று - அந்தரசப்தத்தாலே வ்யாப்தியைச் சொல்லக்கடவதிறே.

(தேவர்க்குமறியலாகா) ஸ்ர்ஷ்டமான ஸகலபதார்த்தங்களுக்கு மறியவொண்ணாதிருக்கை. (యమాత్మా న వేద) (யமாத்மாநவேத) என்று-யாவனொருவனை ஆத்மாவறியான், அவன் அந்தரனான அந்தர்யாமியென்னக்கடவதிறே. அதுதோற்றதுர்ஜ்ஞேயனென்கிறார்.

---

ஆழ்வார்வார்த்தையான த்ராவிடப்ரபந்தத்துக்கு ஆதிக்யமேதென்ன; அருளிச்செய்கிறார் (அநுஷ்டாதாவித்யாதி.) அநுஷ்டாநமேதென்ன; அருளிச்செய்கிறார் (ஐச்வர்யேத்யாதி.) லக்ஷணயாலே சப்தமாகவேணுமென்றபடி.

சந்த்ராதித்யர்களை உண்டாக்க வேண்டுவானென்னென்ன, லோகோபகாரக ராகையாலே யென்கிறார் (அக்நௌ ப்ராஸ்தாஹுதீத்யாதி.)

ஆனால் (தேவர்க்கும்) என்று இவர்களை விசேஷித்துஎடுப்பா னென்னென்னில்; ஜ்ஞாநசக்திகளால் அதிகரானவர்களுக்கும் அறியவொண்ணாதென்கைக்காக வருளிச்செய்கிறார்.

(அந்தணனை) சுத்தனை. ஆழ்வார்களெல்லாரும் இச்சப்தத்தா லே சுத்தியைச் சொல்லக்கடவதா யிருப்பதொரு ஏழுண்டு. (அறவனையாழிப்படையந்தணனை) என்றாரிறே - நம்மாழ்வார். கையும் திருவாழியுமாயிருப்பானொரு ப்ராஹ்மண னில்லையிறே. கேவலனுக்கு சுபாச்ரயமாக வருளிச்செய்கிறா ராகையாலே அங்ஙனருளிச்செய்கிறது. பகவத்ப்ராப்திகாமன்குணவிசிஷ்டமாக உபாஸிக்கக்கடவன்; குணங்களே ப்ராப்யமாகையாலே. ஆத்ம ப்ராப்திகாமன் சுத்திவிசிஷ்டனாக வுபாஸிக்கக்கடவன்; * ஜரா மரணமோக்ஷமே புருஷார்த்தமாகையாலே. ஆகில், இவர்க்குசுத்தி அபேக்ஷிதமோவென்னில்; கீழ் - ஸ்ர்ஷ்டியைச் சொல்லி, ஸ்ர்ஷ்ட மான ஸகலபதார்த்தங்களிலும் வ்யாபித்துநிற்குமென்கையாலே, தத்கததோஷைரஸம்ஸ்ப்ர்ஷ்டமென்கை யபேக்ஷிதம்; அத்தைப் பற்றச்சொல்லுகிறது. (ఏష సర్వభూతాన్తరాత్మా ఉపహతపాప్మా)(ஏஷஸர்வ பூதாந்தராத்மாஉபஹதபாப்மா) என்று - வ்யாப்தியைச்சொன்ன ப்ரதேசங்களிலே தத்கததோஷைரஸம்ஸ்ப்ர்ஷ்டங்களையுஞ் சொல் லக்கடவதிறே. இதிறே இவர் திருவுள்ளத்தில் கிடப்பது. பரமவைதிகர்களிறே – ஆழ்வார்களாகிறார்.

(அந்தணர்மாட்டந்திவைத்தமந்திரத்தை)கீழ்உக்தமான இவ் வஸ்து வேதசிரஸ்ஸிலே குஹ்யமாயிருக்குமென்கிறார்.(அந்தணர் மாடு) (బ్రాహ్మణానాం ధనం వేదః) (ப்ராஹ்மணாநாம்தநம்வேதஃ) என் கிறபடியே ப்ராஹ்மணர்க்குதநம் வேதமிறே. ( ధనం మదీయం తవ పాద పఙ్కజమ్) (தநம்மதீயம்தவபாதபங்கஜம்) என்கிற ஈச்வரனன்று காணும் தநம், வேதமாய்த்து. வேதைக ஸமதிகம்யனென்றிறே- வஸ்துவுக்கேற்றம். ப்ரமாணமுகத்தாலே யிறே-ப்ரமேயபூதனான ஈச்வரனை தநம்என்றறிவது.

---

அந்தணன் - ப்ராஹ்மணனன்றோ வென்ன; அருளிச்செய்கி றார் (ஆழ்வார்களித்யாதி.) அங்கும் ப்ராஹ்மணனானாலோவென்ன; அருளிச்செய்கிறார் (கையும்திருவாழியுமித்யாதி.) அங்குசுத்தியாக க்கொள்ளவேண்டுவானென்னென்ன;அருளிச்செய்கிறார் (கேவல னுக்கித்யாதி.) ஆனால் குணவிசிஷ்டமாக வன்றோ வுபபாதிப்பது, சுத்திவிசிஷ்டமாக வேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (பக வத் ப்ராப்தீத்யாதிவாக்யத்வயத்தாலே.)இதிறே-சொன்னவேதார் த்தமிறே திருவுள்ளத்தில் பட்டதென்றபடி.

அவனன்றோதநம், வேதம் தநமானபடி எப்படி யென்ன; அருளிச்செய்கிறார் (வேதைகஸமதீத்யாதி.)

(அந்திவைத்தமந்திரத்தை) வேதாந்தத்திலே ப்ரகாசிக்கிற ரஹஸ்யத்தை. மாட்டந்தி - வேதத்தின்முடிவிலே;— வேதாந்தத்தி லென்றபடி. மந்திரம் என்றும், ஸர்வஸ்மாத்பரனென்றும்-பர்யாயம்போலேகாணும். ஈச்வரனை ரஹஸ்யமென்கிறது – தலைக்கடையையும் புழைக்கடையையுமடைத்துக் கிழிச்சீரையை யவிழ்த்துப் பார்ப்பாரைப்போலே அஷட்கர்ணமாக வுபதேசிக்கவும் அநுஸந்திக்கவும்வேண்டிஇப்படிசீரியசரக்காயிருக்கையாலே.

அதவா, (மந்த்ரம்) என்று-ஈச்வரனுக்குத்திருநாமமாக ஸ்ரீஸஹஸ்ர நாமத்திலே சொல்லிற்று.(మన్త్రశ్చన్ద్రాంశుర్భాస్కరద్యుతిః)(மந்த்ரஶ்சந்த்ராம்ஶுர்ப்பாஸ்கரத்யுதி:) என்னக்கடவதிறே. (మన్త్రైర్జ్ఞేయత్వాన్మన్త్రః) என்கிற வ்யுத்பத்தியாலே, மந்த்ரமென்று-ஈச்வரனுக்குத் திருநாமமாகிறது. (அந்தணர்மாடு) என்கிறார்காணும் தாம் அதுக்கு அயோக்யரென்னுமிடந்தோற்ற. ஸர்வமும் திருவுள்ளத்திலே ப்ரகாசியாநிற்க வாய்விடுகை மர்யாதாஹாநி யென்றிருக்கிறாரிறே. தாம்பரமவைதிகராயிருக்கச் செய்தேபிறர் தநமென்பாரைப்போலே அத்தோடு ஸம்பந்தமற வார்த்தைசொல்லுகிறாரிறே மர்யாதாஸ்த்தாபநார்த்தமாக.

(அந்தணர் மாட்டந்திவைத்த மந்திரத்தை மந்திரத்தால்-வாழ்த்தியேல்) ப்ரதிபாத்யமும் அங்கேயாய் ப்ரதிபாதகமும் அங்கேயாயிருக்கிறபடி. (மந்திரத்தை – வாழ்த்தியேல்) ஜகத்காரணபூதனாய், ஸர்வாந்தர்யாமியாய், துர்ஜ்ஞேயனாய், தத்கததோஷைரஸம்ஸ்ப்ர்ஷ்டனாயிருக்கிறவனை அநுபவிப் புதியாகில். (மந்திரத்தால்-வாழ்தியேல்) அவ்விஷயத்தை அநுபவிக்குமிடத்தில் வேதாந்தமுகத்தாலே யாதல், இதிஹாஸபுராண முகத்தாலேயாதல் அநுபவிக்கப் பாராதே நானிழிந்ததுறையிலே யநுபவிக்கப்பார்; திருமந்த்ரத்தாலே யநுபவிக்கப்பார்;திருமந்த்ரத்தாலே அநுபவிக்குமாப்போலே ஸுகரமாயிராதிறே. (సర్వవేదాన్తసారార్థమ్) (ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம்) - என்கிறபடியே ஸர்வார்த்தங்களையும் திரளச்சொல்லுகிற மந்த்ரமிறே.

பகவந்மந்த்ரங்கள் அஸங்க்யாதங்களன்றோ, மந்த்ரம் என்னப் பெரியதிருமந்த்ரத்தைக் காட்டுமோவென்னில்; (యానినామాని గౌణాని) (யாநிநாமாநிகௌணாநி) என்கிறபடியே அல்லாதவை குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாயிறே யிருப்பது. கீழ்ச்சொன்ன அர்த்தத்துக்கு வாசகமாயிருப்பதொரு சப்தமில்லையிறே;ஆகையாலேகாட்டும்.அல்லாத வ்யாப்யமந்த்ரங்கள் இதுக்கு வாசகமன்றோவென்னில்;

---

திரள-ஸங்க்ரஹமாக.

அவற்றைப்பற்ற ஸாபேக்ஷமாகையாலே வ்யாபகாந்தரங்களை யுங் காட்டாது. அடியிலே இவர்தாம் (நான் கண்டுகொண்டேன்) என்று தலை சேய்த்தமந்த்ரம் இதுவேயிறே.

(மறவாது வாழ்தியேல்) விஸ்மரியாதே அநுபவிப்புதியேல். பகவதநுபவத்துக்குவிஸ்ம்ருதிஹேது விஷயாந்தரஸ்பர்சமாகை யாலே விஷயாந்தரம் கலசாதபடி அநுபவியென்கிறாரோவென்னி ல்;அது இவர்க்குச்சேராது,சரமதசையிலேஸாக்ஷாத்கரித்து அநு பவிக்கிறவராகையாலே. இனி இவர்க்கு விஸ்ம்ருதி ஹேதுவென் னென்னில்; தாபத்ரயாச்ரயமான தேஹஸம்பந்தத்தோடேயிருக் கையாலே தேஹத்தைப்பாரார், பூர்வவ்ருத்தத்தைப் பாரார், விஷய வைலக்ஷண்யத்தைப் பாரார், தந்நிவ்ருத்திக்கும் அபிமத ஸித்திக்கு முறுப்பாக ஈச்வரனை உபாயமாக அநுஸந்திப்பதொரு அநுஸந்தாநமுண்டு, அது பகவதநுபவத்துக்கு - விஸ்ம்ருதிஹே துவாகக்கடவது. ஆகையாலே, பூர்வார்த்தத்திலிழியாதே அநுப விக்கப்பார். இவர்தாம் த்வயநிஷ்டரன்றோ, இங்ஙனே சொல்லு வானென்னென்னில்; அடியிலே ஒருக்கால் ஈச்வரன்கையிலே நம் கார்யத்தை ஸமர்ப்பித்துவிட்டோமாகில் இனி ஸ்வோஜ்ஜீவநத் தைச் சிந்திக்கையாவது – பிறர்கார்யத்திலேயிழிகையிறே. ஸ்வர க்ஷணத்தோடு ஜகத்வ்யாபாரத்தோடு வாசியில்லையிறே ப்ராப்தியி ல்லாமைக்கு.

(வாழ்தியேல்) அவனுடைய பரத்வத்திலும் ஸாதநத்திலும் இழியாதே போக்யதையிலேயிழிந்து அநுபவிப்புதியாகில்.(வாழ்தி யேல்) வாழ்ச்சி உன்னதிறே; நானும் உனக்கு ஸஹகாரியித்தனை யிறே. (வாழ்தியேல்) என்று - தமக்குக் கரணமான மநஸ்ஸை சேதநஸமாதியாலே கர்த்தாவாகப் பேசுகிறாரிறே; மநஃப்ராதாந் யந்தோற்ற. யாவதாயுஷம் பகவதநுபவத்துக்கு பரிகரமிதுவாகை யாலே. தத்ஸாபேக்ஷையிறே முமுக்ஷுவிருப்பது. (என்றும் - வாழலாம்) நித்யஸூரிகள்நடுவேயிருந்து யாவதாத்மபாவிவாழ லாம். எங்குமொக்க அநுபவமிறே இவனுக்குள்ளது. வைஷ்ணவ னாகிறான்-ராஜகுமாரனிறே. (மடநெஞ்சமே) எனக்கு பவ்யமான நெஞ்சே. விஷயப்ராவண்யநிவ்ருத்திவேளையோடு,உஜ்ஜீவநவேளை யோடு, போகவேளையோடுவாசியற, என்பின்னே யொழுகும்படி எனக்குவிதேயமாகப் பெற்றேனென்று திருவுள்ளத்தைக்கொண் டாடுகிறார். (நெஞ்சமே நல்லைநல்லை) என்னுமாப்போலே. (ச)

---

ஸாபேக்ஷம்-வ்யாப்யபதார்த்தாதிகள் அவை அத்யாஹரிக்க வேணும், அவற்றுக்குநிக்கது வேண்டாவென்றபடி. பிறர்கார்யம்– ஈச்வரனுடையகார்யம். ஈச்வரகார்யமான ஜகத்வ்யாபாரமன்றோ இவனுக்கு வேண்டாதது, ரக்ஷணசிந்தை பண்ணவொண்ணுதோ வென்ன; அருளிச்செய்கிறா (ஸ்வரக்ஷணத்தோடித்யாதி.)

மநஸ்ஸுப்ராதாநமோவென்ன; அருளிச்செய்கிறார் (யாவதா யுஷமித்யாதி.)... ... ... ... ... .. (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. (ஒண்மிதியில்) கீழ் - ஜகத்காரணபூதனாய் ஜகச்சரீரியாயிருக்கிறபடியை யநுபவித்தார்; அநந்தரம் நாராயணசப்தார்த்தத்தை நாராயணாநுவாகமாகிற ஓலைப்புறத்தே கேட்டுப்போகாதேகண்ணாலேகண்டநுபவிக்கலாம்படிஸ்ரீவாமநனாயவதரித்துத் திருவுலகளந்தபடியை யநுபவிக்கிறார். சேஷ சேஷித்வஸம்பந்தமிறே-நாராயண சப்தார்த்தமாகிறது.ஜகத்காரணத்வத்தால் - ஈச்வரனோடு இவ்வாத்மாவுக்குண்டான ஸம்பந்தத்தையிறே சொல்லுகிறது.(காண்மின்களுலகீரென்றுகண்முகப்பே நிமிர்ந்த) என்று - ஸர்வலோகமும் இவ்வர்த்தத்தைக் கண்ணாலேகாணலாம்படியிறே திருவுலகளந்தருளினது. ஆகையாலே நாராயணசப்தார்த்தமான த்ரைவிக்ரமாபதாநத்தை யநுபவிக்கிறார். யஜ்ஞவாடத்தே சென்றபடியையும் அர்த்தித்தபடியையும் சொல்லாதே எல்லார்தலைகளிலும் திருவடிகளை வைத்த இவ்வம்சத்தைச் சொல்லுகையாலே-சேஷசேஷித்வ ஸம்பந்தத்தை அநுபவிக்கிறாரென்று தோற்றுகிறதிறே.

மூ.—ஒண்மிதியில்புனலுருவியொருகால்நிற்ப
வொருகாலுங்காமருசீரவுணனுள்ளத்து
எண்மதியங்கடந்தண்டமீதுபோகி
யிருவிசும்பினூடுபோயெழுந்துமேலைத்
தண்மதியுங்கதிரவனுந்தவிரவோடித்
தாரகையின்புறந்தடவியப்பால்மிக்கு
மண்முழுதுமகப்படுத்துநின்றவெந்தை
மலர்புரையுந்திருவடியேவணங்கினேனே. (ரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒருகால் | ஒருதிருவடிகள், | நிற்ப | தன்னைச்சிறுக்கிக்கொண்டதுமன்றி, |
| ஒண்மிதியில் | ஓரடியிட்டமாத்ரத்தில், | ஒருகால் | ஒருதிருவடிகள், |
| புனலுருவி | ஆவரணஜலத்தளவும்ஊடுருவிச்சென்று, அப்புறம்போக இடம்பெறாமையாலே, | காமருசீர் | நல்லஸ்வபாவத்தை யுடையனான, |

அஞ்சாம்பாட்டு. (ஒண்மிதி) த்ரிவிக்ரமாபதாநம்நாராயணசப்தார்த்தமெப்படியாமென்ன; அருளிச்செய்கிறார் (சேஷசேஷித்வேத்யாதி.) காரணத்வம் சொல்லிற்றே, ஸம்பந்த மானபடியெப்படி யென்ன; அருளிச்செய்கிறார் (ஜகத்காரணத்வேத்யாதி.) அப்படி அளந்தானோ வென்ன; அருளிச்செய்கிறார் (காண்மின்களித்யாதி.) வாமநாவதாரத்திலே சீலமன்றோ தோற்றுவது, ஸம்பந்தம் தோற்றும்படி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (யஜ்ஞவாடத்திலித்யாதி.)

| பதம். | உரை. |
|---|---|
| அவுணன் | மஹாபலியானவன், |
| உள்ளத்தெண்மதியம் கடந்து | தன் மநஸ்ஸிலே நினைக்கும் நினைவைக்கடந்து, |
| அண்டமீது போகி | அண்டபித்திக்கும் அவ்வருகேபோகைக்காக, |
| எழுந்து | அவனுடையயஜ்ஞவாடத்தினின்றும் கிளம்பி, |
| இரு | பூமிக்குமேலேஸ்வர்க்கத்துக்குக்கீழே நூறாயிரக் காதவழி உயரத்தை யுடைத்தான, |
| விசும்பினூடுபோய் | ஆகாச முழுமையும் ஊடுருவிச்சென்று, |
| மேலைக்கதிரவனும் | கீழேயிருக்கிறஸூர்யமண்டலத்தையும், |
| மேலை | அதுக்குமேலே நூறாயிரக்காதவழித் தூரத்திலிருக்கிற, |

| பதம். | உரை. |
|---|---|
| தண்மதியும் | குளிர்ந்த சந்த்ரமண்டலத்தையும், |
| தவிரவோடி | கடந்துசென்று, |
| தாரகையின் புறந்தடவி | அதுக்குமேலேநூறாயிரக்காதவழியிலிருக்கிற நக்ஷத்ரமண்டலத்தையுங்கடந்து, |
| அப்பால்மிக்கு | அதுக்குமேலேப்ரஹ்மலோகத்தளவும்வ்யாபித்து, |
| மண்முழுதும் | பூலோகம் முதலான பதினான்கு லோகங்களையும், |
| அகப்படுத்துநின்ற | அளந்துகொண்டுக்ர்தக்ர்த்யனாய்நின்ற, |
| எந்தை | எனக்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய, |
| மலர்புரையுந் திருவடி | தாமரைமலரையொத்ததிருவடிகளை, |
| வணங்கினேன் | அநுபவிக்கப் பெற்றேனென்கிறார். (ரு) |

---

வ்யா.—(ஒண்மிதியிலித்யாதி) ஒருதிருவடிகளாலே பூமியையடங்கவளந்தான், ஒருதிருவடிகளாலே ஊர்த்த்வலோகங்களையடங்கவளந்தானென்கிறார். (ஒண்மிதியில்) ஸர்வாதாரமானவஸ்து சேதநர்தலையிலே திருவடிகளைவைத்தால் லோகம்தரிக்கவற்றோ. க௦ஸன், திருவடிகள்படுங் காட்டில் நக்கரைந்து கிடந்திலனோவென்னில்; அவைதானேயாய்த்து தரிக்கைக்குஹேதுவும். தாரகமான பதார்த்தம் தார்யமானாலும் தாரகத்வம் நழுவாதிறே. திருவடிகளுக்குத் தான் தாரகனானவோபாதி இவர்கள்தலைக்கும் தாரகம் தானேயிறே.

---

அதுதானே - திருவடிகள் வைத்தது தானேயாய்த்து. வைத்தது தரிக்கைக்குடலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (தாரகமானவித்யாதி.) அப்படி எங்கேகண்டோமென்ன; அருளிச் செய்கிறார் (திருவடிகளுக் கித்யாதி.)

தார்யமானது தாரகமாக மாட்டாது, தாரகமானது தார்யமாகமாட்டாது. சரீரம் ஆத்மாவுக்கு அதிஷ்டாநமா யிருந்தாலும் சரீரம் தாரகமாகிறதன்று, ஆத்மா தார்யமாகிறதன்றிறே. ஆத்மாதாரகம், சரீரம் தார்யமென்னுமிடம் சரீராத்மலக்ஷணஞ்சொல்லுகிறவிடத்தே சொல்லிற்றிறே.

(மிதியில்) (மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி) (மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி) என்றும், (படிக்களவாக நிமிர்த்த நின்பாதபங்கயமே தலைக்கணியாய்) என்றும் - திருவடிகளை சிரோபூஷணமாகச் சொல்லுவது திருவடிகளின்வைலக்ஷண்யத்தையு மறிந்து தங்களுக்கும் அதிலே ஆதரமுண்டானாலிறே, தேஹாத்மாபிமாநிகளாகையாலே வெற்றுக்கால் தங்கள்தலையைத் துகைத்ததாக நினைத்திருக்கு மித்தனையிறே; ஆகையாலே அவர்களபிப்ராயத்தாலே யருளிச்செய்கிறார். (ஒண்மிதியில்) நிலாத்தென்றல் ஸஞ்சரித்தாப்போலே அநுகூலமாகத் திருவடிகளை வைத்தபடி. அல்லாதபோது (திருவாணை) என்று - ஆணையிடுவர்களிறே. அதவா, மேலொருகாலத்திலே ஆபிமுக்யம் பிறந்தால் தங்கள்பூர்வவ்ருத்தத்தையும் ஈச்வரவைலக்ஷண்யத்தையும்பார்த்து இறாயாதே வழக்குப்பேசிப் பற்றலாம்படி மிதித்த மிதியாகையாலே - (ஒண்மிதி) என்கிறது என்னவுமாம். நான் விமுகனானவன்று என்தலையிலே யிருந்த திருவடிகளை ஆபிமுக்யம் பண்ணினவின்று பற்றக்குறையென் என்னலாமிறே. (லோகவிக்ராந்தசரணௌ) (லோகவிக்ராந்தசரணௌ) என்றால் ஈச்வரனுக்கு மறுமாற்றமில்லைபோலே காணும்.

---

திருவடிகளென்றது - திருமேனியாய், திருமேனி திவ்யாத்மஸ்வரூபமான தனக்கு ஆபாதப்ரதீதியில் அதிஷ்டாநதயாதாரகம்போலேதோற்றினாலும் வஸ்துகத்யா திவ்யாத்மஸ்வரூபம் திருமேனிக்கு தாரகமாகிறாப்போலே இவர்கள்தலையிலேவைக்கையாலே தான் தார்யனானாலும் சரீரபூதரான இவர்களுக்கு தான் தாரகனாகக் குறையில்லை. தாரகத்வம் வ்யவஸ்திதமாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (தார்யமானதித்யாதி.) இப்படி வ்யவஸ்திதமாயிருக்குமென்னுமத்தைசரீராத்ம விஷயத்திலும் காட்டுகிறார் (சரீரம் ஆத்மாவுக்கித்யாதி.) இப்படிக்கு ப்ரமாண மேதென்ன; அருளிச்செய்கிறார் (ஆத்மாதாரகமித்யாதி.) சரீராத்மலக்ஷணமாவது; - யஸ்ய - சேதநஸ்ய, யத்த்ரவ்யம் - ஸர்வாத்மநா ஸ்வார்த்தே, நியந்தும் - தாரயிதும்சக்யம், தச்சேஷதைகஸ்வரூபஞ்சதஸ்ய சரீரம், ஸர்வாத்மநா - எப்போதும் ஸ்வார்த்தே வல்லவளவு. ஆபரணமாக வைத்து என்னாமல் (மிதித்து) என்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (மதீயமூர்த்தாநம் - மதீயமூர்த்தாநமித்யாதி.)

(புனலுருவி) பூமியளவாதல், ஸப்தஸமுத்ரங்களளவாதல், ஸப்தத்வீபங்களளவாதல், சக்ரவாளகிரியளவாதல், மஹாஜலத்தளவாதல், அண்டகடாஹத்தளவாதல் நிமிருகையன்றியே, ஆவரணஜலத்தளவுஞ் செல்லத் திருவடிகளை நிமிர்த்தபடி. அண்டகடாஹத்துக்குள்ளேயன்றோ ரக்ஷ்யவர்க்கம், அவ்வருகுபோகவேண்டுவானென்னென்னில்; ரக்ஷ்யத்தினளவல்ல ரக்ஷகனுடையபாரிப்பென்கை. (அதனில் பெரியவென்னவா) என்று - இவருடைய அவாவைப்போலேகாணும் அவனுடைய அவாவும்; இவருடைய ப்ரேமம்செய்ததுசெய்யமாட்டாதோ அவனுடைய வாத்ஸல்யம். திருவடிகள் அண்டகடாஹத்தையும் ஊடுருவி ஆவரணஜலத்தளவும் சென்றால் அண்டகடாஹம் போகாதோவென்னில்; அது வேண்டுவதில்லையிறே - ஸூக்ஷ்மம்ஸ்தூலத்தை வ்யாபிக்கும் போது. ஆகாசம் அண்டகடாஹத்தை வ்யாபியாநின்றது, அதிற்காட்டில் ஸூக்ஷ்மமான மூலப்ரக்ருதியிலும் ஸூக்ஷ்மமாயிறே திவ்யமங்கள விக்ரஹமிருப்பது.

(ஒருகால்நிற்ப) ஒருதிருவடிகள்நிற்ப. (திருவடியே வணங்கினேனே) என்றுநின்றார் - மேல்; கீழே - (திருவடி என்றலேமேலவே) என்றார்; ஆயிருக்க, திருவடிகள்என்னாதே(கால்)என்கிறது ஸம்ஸாரிக ளபிப்ராயத்தாலே. ஒருவன்கால் நந்தலையிலே யிருந்ததென்று நினைத்திருக்குமதொழிய, வகுத்ததுமாய் ஸூரிபோக்யமுமான திருவடிகளிறே நந்தலையிலிருந்ததுஎன்னும்முறையறியார்களிறே. (நிற்ப) திருவடிகள் பூமியையளக்கவென்று உத்யோகித்த உத்யோகத்தே குசைதாங்கின வருமையெல்லாந் தோற்றுகிறதாய்த்து. இதினுடைய வுத்யோகத்தேகுசைதாங்கினான் என்றிறே அவன் றனக்கேற்றம். (ஒருகாலும்) பூமியை யளந்த திருவடிகளை யநுபவித்தார் - கீழ்; இத்தால் - ஊர்த்த்வலோகங்களை யளந்த திருவடிகளை யநுபவிக்கிறார். (ஒருகாலும்) மற்றத்திருவடிகளும். மற்றக்காலும் என்னாதே (ஒருகாலும்) என்கையாலே - இதொன்றிருந்தபடி யென்னென்கிறார். அந்தத் திருவடிகளையநுபவிக்கிறபோது இதுக்குமேற்பட்டபோக்யவஸ்துவில்லையாகாதே யென்றிருந்தார், இந்தத் திருவடிகளைக் கண்டவாறே இதுக்கு மேற்பட்ட போக்யவஸ்து வில்லையென்கிறார்.

(காமருசீரித்யாதி) மஹாபலியுடைய மநோரதரூபமான ஜ்ஞாநத்தை அதிக்ரமித்து.

---

சேஷிக்கு சேஷபூதனிடத்தில் அபிநிவேசம் கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (இவனுடைய ப்ரேமமித்யாதி.)

குசைதாங்குகை - வேகத்திலே போகிற குதிரையைக்கடிவாளத்தை வெட்டி நிறுத்துமாப்போலே நிறுத்துகை.

(காமருசீரவுணன்) ஸ்பர்ஹணீயஸ்வபாவனான மஹாபலி. ஜ்ஞாதாக்களடங்க இவனை அஹங்காரக்ரஸ்தன், பகவத்விபூத்ய பஹாரி என்று நிந்தியாநிற்க இவர்மஹாபாக்யவானென்கிறார். அதுக்கு ஹேதுவென்னென்னில்; பிற்பாடரான நம்மைப்போலன்றியே ஸ்ரீவாமநனுடைய வடிவழகையும் சீலத்தையும் கண்ணாலேகாணப் பெற்றவனன்றோ, இவனோபாதிபாக்யவான்களுண்டோவென்றிருக்கிறார். நானும் (அடியேன்) என்றிருக்கிறத்தை விட்டு,பகவத்விபூதியை அபஹரித்து, ஔதார்யத்தை யேறிட்டுக் கொண்டு யஜ்ஞத்திலே இழியப்பெற்றிலேனேயென்கிறார். காமருதல் - விரும்புதல்.

(எண்மதியங்கடந்து) மூவடி என்றவாறே அத்தையொழிந்தவிடம் நம்மதன்றோவென்றிருந்தான், பூமியையடங்க அளந்தவாறே ஊர்த்த்வலோகங்களுண்டிறேயென்று நினைத்திருந்தான், அந்தரிக்ஷத்தைஅளந்தவாறே மேலுள்ளலோக மிழந்தோமென்று நிவர்த்தனானான்; ஆகையாலே (கடந்து) என்கிறார். (அண்டமீது போகி) ஒருதிருவடிகளே அண்டபித்திக்கு மவ்வருகேபோய். அளந்தக்ரமத்திலேசொல்லாதேப்ரதமத்திலே(அண்டமீதுபோகி) என்பானென்னென்னில்; ஸ்ரீவாமநனுடைய விஜயத்தில் தமக்குண்டானஆதராதிசயத்தாலே அளக்கும்ப்ரதேசத்துக்குக் கொண்டைக்கோல்நாட்டுகிறார். (జితంభగవతాజగత్) (ஜிதம்பகவதாஜகத்) என்று ஸ்ரீஜாம்பவாந் மஹாராஜர் அவனுடைய விஜயத்தில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலே சக்ரவாளகிரியைச் சூழப் பறையடித்துக்கொண்டு திரிந்தாப்போலே.

(மீதுபோகி) என்றது - மீதுபோகைக்காகவென்று அர்த்தத்தோடேசேர சப்தத்தை நியமித்துச் சொல்லிப்போகக்கடவது. (திருவுடையடிகள்தம்நலங்கழல்வணங்கி) என்றத்தை,(வணங்க) என்று அர்த்தத்தை நியமித்துச் சொல்லக்கடவதிறே; அப்பக்ஷத்திலும் முற்படச் சொல்லுகைக்கு ஹேது கொண்டைக்கோல் நாட்டுகிறாரென்கிற விதுவாமித்தனை. (எழுந்து - இருவிசும்பினூடுபோய்) என்றந்வயம். (எழுந்து) கையில் நீர்விழுந்த ஸமநந்தரம் மஹாபலியினுடைய யஜ்ஞவாடத்தில்நின்றும் கிளம்பி. இருவிசும்பு-பெரியவாகாசம்.

---

காமருசீர்-ஆசைப்பட்ட ஔதார்ய குணத்தையுடைய மஹாபலியினுடைய ஹ்ருதயத்திலே எண்ணா நிற்கிற ஜ்ஞாநத்தைக்கடந்தென்று சப்த்தார்த்தம். ஸ்ரீஜாம்பவன் மஹாராஜர் வாமநன் திருவவதாரத்தை உடனே விஜயத்தைக் கொண்டாடினா ரென்றபடி. மீது, போகி - போயென்னுதல்; போகைக்காக என்னுதுமிலாதல்.

பூமியைப்பற்றப் பெரிதாயிருக்கையாலும் அவனுடைய வளர்த்தியில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலும் அந்தரிக்ஷத்தை (இருவிசும்பு) என்கிறார்.

(ஊடுபோய்) பூமிக்குமேலே ஸ்வர்க்கத்துக்குக் கீழே நூறாயிரக்காதமாறு ஒக்கத்தையுடைத்தான அந்தரிக்ஷமித்தனையும் விம்மும்படியாகத் திருவடிகளை நிமிர்த்தபடி. அந்தரிக்ஷஸ்ர்ஷ்டி ஸபலமாய்த்தென்கிறார். திருவடிகள் வ்யாபியாதபோது பாழ்போலே காணும். (மேலையித்யாதி) அந்தரிக்ஷத்துக்கு மேலெல்லையாய், ஸ்வர்க்கத்துக்குக் கீழெல்லையா யாய்த்து ஆதித்யபதமிருப்பது; அதுக்குமேலே நூறாயிரக்காதமாறு-சந்த்ரபதம்; ஆனால் ஆதித்யபதத்தைச்சொல்லி சந்த்ரபதத்தைச் சொல்லாதொழிவா னென்னென்னில்; அஹங்காரக்ரஸ்தராய் பகவத்விமுகரா யிருக்கிறவர்கள் தலையிலே அத்யந்தஸுகுமாரமான திருவடிகளை வைக்கையாலே இவர் சிசிரோபசாரம் பண்ணுகிறார். அது தோற்றவிறே (தண்மதி) என்கிறது. (வெங்கதிரோன்) என்றிலரோ. வெறும் கதிரவனிறே - அங்கு. மேலைத்தண்மதியும், கீழைக்கதிரவனும். மேலென்றது - கீழையுங் காட்டுமிறே. (தவிரவோடி) அதுக்குமேலேபோய். ஓடியென்று-திருவடிகளை அமைக்கவேண்டும்படியான த்வரையிருக்கிறபடி. (தாய்நாடிகன்றேபோல்) என்று சேஷபூதன் சேஷியைக் கிட்டுகைக்குண்டான துறையோ பாதிபோருமிறே. சேஷிக்கும் சேஷபூதனை லபிக்கைக்குண்டான துறையும். எல்லார்க்கும் தந்தாமபிமதலபித்தியிலே துறையுண்டாயிருக்குமிறே.

(தாரகையின்புறந்தடவி) நக்ஷத்ரபதத்தையும் வ்யாபித்து அதுக்குமேலேபோய். சந்த்ரபதத்துக்குமேலே நூறாயிரக்காதமாறுஉண்டிறே - நக்ஷத்ரபதம்; நக்ஷத்ரபதத்துக்குமேலெல்லை சிம்சுமாரப்ரஜாபதியிறே; க்ரஹங்களோபாதி நக்ஷத்ரங்களிலே யொருவனிறே அவனும்; பன்னிரண்டுநூறாயிரக் காதமாறுண்டிறே.

---

(போகி) என்றத்தை, போக என்று நியமிக்கை சிசிரோபசாரமென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறார் (அது தோற்றவிறேயித்யாதி.)

சந்த்ரனுக்கு தட்பம் ஸ்வபாவமன்றோ,அதுஜ்ஞாபக மானபடியெப்படி யென்ன; அருளிச்செய்கிறார் (வெங்கதிரோ னென்றிலரோ யென்று.) ஆதித்யனைச் சொல்லும்போது சிசிரோபசாரம் கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (வெறுங்கதிரவனிறே யங்கென்று.)

சிம்ஸுமாரப்ரஜாபதி பதம் - நக்ஷத்ரங்களுக்கவ்வருகே பன்னிரண்டுலக்ஷம் காதமென்றபடி.

(தடவி) கெடுத்துத்தேடுவாரைப்போலே ரக்ஷகனுக்கு ரக்ஷ்யவர்க்கம் தேட்டமாயிருக்கிறபடி. இப்படி தடவித் திரிகிறவிடத்திலும் அகப்படாதே (கடந்து) என்கிறார். (புடைதான்பெரிதே புவி) என்கிறபடியே - த்ரைவிக்ரமாபதாநத்திலும் அகப்படாதேகிடப்ப தொருபுடையுண்டாவதே!. (தடவி) அநுகூலமாகத் திருவடிகளை வைக்கையாலே ஸுகஸ்பர்சமாயிருந்தபடி யென்னவுமாம். (அப்பால்மிக்கு) ப்ரஹ்மலோகமவதியாக வ்யாபித்து. மஹாபலி அபஹரித்தது த்ரைலோக்யமன்றோ, மேலுள்ளலோகங்களை அளக்க வேண்டுவானென்னென்னில்; அந்யசேஷத்வத்தாலே த்ரைலோக்யமும்நசித்தவோபாதி ஸ்வஸ்வாதந்த்ர்யத்தாலே மேலுள்ளலோகங்களும் நசித்துக் கிடந்ததாய்த்து. (ஈச்வரோஹம்)என்றிருக்குமவர்களாகையாலே. அந்யசேஷத்வத்தால் வரும் அநர்த்தம்போலன்றே ஸ்வஸ்வாதந்த்ர்யத்தால் வருமநர்த்தம். சேஷத்வத்தை யிசைந்தானிறே இவன்.

(மண்முழுதுமகப்படுத்து) சதுர்த்தசபுவநத்தையு மளந்துகொண்டு. மண்என்று பூமியைச்சொல்லி,முழுதும் என்கையாலே-ஊர்த்த்வலோகங்களை நினைக்கிறார். அங்ஙனன்றிக்கே, மண்ணென்று - ஸ்த்தலமாய் மேலுண்டான ஸ்தலங்களைச் சொல்லுகிறது. அளந்து என்னாதே (அகப்படுத்து) என்கையாலே - இவன் மேல் விழுக்காடும் அவர்கள்இறாய்ப்பும் தோற்றுகிறது. (நின்ற) க்ருதக்ருத்யனாய்நின்ற. சேஷபூதன் சேஷியையலபித்து க்ருதக்ருத்யனைப் போலேகாணும் - சேஷியும் சேஷவஸ்துவை லபித்து க்ருதக்ருத்யனானபடி. (எந்தை) ஸ்ரீவாமநனுடைய வடிவழகையும் சீலத்தையுங்கண்டால் ராஜ்யத்தைக் காற்கடைக்கொண்டு மார்பைப்பிளக்கவெழுத்து வாங்கிக் கொடுக்க ப்ராப்தமாயிருக்க, ராஜ்யத்தைக்கொண்டுபோனான் இந்த்ரன், மஹாபலி தன்னைவைத்து ராஜ்யத்தைக் கொடுத்தான்; நான் என்னைக் கொடுத்தேனென்கிறார்.

(மலர்புரையு மித்யாதி) நிரதிசயபோக்யமான திருவடிகளை அநுபவிக்கப் பெற்றேன். கீழே-(தளிர்புரையுந்திருவடி) என்றார்; இங்கே-(மலர்புரையுந்திருவடி) என்கிறார். இதுக்கு ஹேதுவென்னென்னில்; ஆழ்வாருடைய விச்லேஷத்தாலே வாடினவன் அவருடைய தலையிலே திருவடிகளை வைக்கையாலே தளிரும் முறியுமானபடியைச்சொல்லிற்று-அங்கு;இங்கு-போக்தாக்களாய் அநுபவிக்க இழிந்தவாறே போக்யமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. (மலர்புரையும்) ஆச்ரிதர்ஸந்நிதியிலே அலரும்தாமரையிறேஇது.

---

சந்த்ரனுக்கானால் அந்ய சேஷமன்றோ வென்ன; அருளிச் செய்கிறார் (சேஷத்வத்தையித்யாதி.)மலரோடொத்தால் இந்தமலர் எதுக்கலருமென்ன, அருளிச்செய்கிறார் (ஆச்ரிதரித்யாதி.)

(திருவடி) அநுபவிக்க இழியுந்துறையும் திருவடிகளிறே. (திருவடியே) என்கிற அவதாரணத்தாலே - அவயவாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறது. மேன்மையும், நீர்மையும், வடிவழகும் குறைவற்ற விஷயமிறே. (ஈச்வரோஹம்) என்றிருப்பார்தலையிலு மகப்படத் திருவடிகளைவைக்கையாலே - மேன்மையில் குறையில்லை; தன்னுடைமையை லபிக்கைக்குத் தான் அர்த்தியாய்ச்செல்லுகையாலே-நீர்மையில்குறையில்லை; துஷ்ப்ரக்ருதியான மஹாபலியையுமகப்பட எழுதிக் கொள்ளுகையாலே - வடிவழகில்குறையில்லை; ஆகையாலே புறம்புபோகவேண்டாவிறே.

(வணங்கினேன்) அநுபவிக்கப்பெற்றேன். (నమఇత్యేవవాదినః) (நமஇத்யேவவாதிநः) என்று முக்தபோக்யத்தைச் சொல்லக்கடவதிறே. இவர்க்கு ஆச்ரயணீயமும் திருவடிகளே, அநுபாவ்யமும் திருவடிகளே. (உலகமளந்த பொன்னடியை யடைந்துய்ந்தேன்) என்றிறே ஆச்ரயணவேளையிலும் அருளிச்செய்தது. விமுகனை மஹாபலிக்கும் ருசியைப்பிறப்பிக்கும் ஸௌந்தர்யத்தையுடையவனையொழிய ஆச்ரயணீயருண்டோ; தன்னுடைமையை லபிக்கைக்குத்தான் அர்த்தியாய்ச்செல்லும்சீலவானையொழிய ஆச்ரயணீயருண்டோ; அதீந்த்ரியமான விக்ரஹத்தை துஷ்ப்ரக்ருதிகள்கண்ணுக்குமகப்பட விஷயமாக்கும் ஸௌலப்யனையொழிய ஆச்ரயணீயருண்டோ; சதுர்த்தச புவநத்தையுமளந்த ஸர்வஸ்மாத்பரனையொழிய ஆச்ரயணீயருண்டோவென்கிறார். ஸர்வஸ்மாத்பரனாய் சீலவானாய் ஸௌலபனாய், ருசிஜநகனாயிருக்குமவனிறே - ஆச்ரணீயனுவானும் போக்யபூதனுவானும். (త్రివిక్రమత్వచ్చరణాంబుజద్వయంమదీయమూర్ధానమలంకరిష్యతి) (த்ரிவிக்ரமத்வச்சரணம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி) என்றார் ஆளவந்தார்; (లోకవిక్రాంతచరణౌ శరణంతేవ్రజంవిభో) (லோகவிக்ராந்தசரணௌ ஶரணம்தேவ்ரஜம்விபோ) என்றார் உடையவர். ... ... ... ... ... ... (ரு)

---

வணங்குகை ஆச்ரயணமன்றோ அநுபவமோ வென்ன; அருளிச்செய்கிறார் (నమఇత్యేవవాదినః - நம இத்யேவ வாதிநः இத்யாதி.) திருவடிகளிலே வணங்குகை ஆச்ரயணமன்றோ வென்ன; அருளிச்செய்கிறார் (இவர்க்கித்யாதி.) அவதாராந்தரங்களை யொழிய இவனே ஆச்ரயணீயனும் அநுபாவ்யனு மென்கைக்கு அநுகுணமான குணங்களை யருளிச்செய்கிறார் (விமுகனைவித்யாதி.) அவ்வவதாரத்தையே அநுபாவ்யமும் ஆச்ரயணீயமுமாகப் பற்றினபேருண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (త్రివిక్రమ - த்ரிவிக்ரமத்யாதி.) ... ... ... ... ... ... (ரு)

அ.—ஆறும்பாட்டு. (அலம்புரிந்த) (மந்திரத்தை மந்திரத் தால் மறவாதென்றும் வாழ்தியேல்) என்று - திருமந்த்ரத்தை ப்ரமாணத்தாலே கண்டுபோகையன்றியே கண்ணாலேகண்டநுப விக்கலாம்படி வந்தவதரித்து எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்து முறையுணர்த்தின ஸம்பந்தத்தையும் தத்காலத்தில் செவ்வியையும், அதுக்குப் பிற்படுகையாலே அநுபவிக்கப்பெற்றி லோமென்று விஷண்ணராக, அவதாரத்துக்குப் பிற்பட்டாரை அநுபவிப்பிக்கைக் குறுப்பாகவன்றோ நாம் செவ்வியோடே திருக்கோவலூரிலேவந்துநின்றதென்று உகந்தருளினதேசத்தைக் காட்டிக்கொடுக்க, நெஞ்சே! நமக்கு வாய்த்தது, அநுபவிக்கப்போ ராயென்கிறார். திருமந்த்ரார்த்தத்துக்கெல்லை உகந்தருளின நிலங்க ளிறே. திருமந்த்ரத்தை ப்ரத ப்ரதமத்திலே லபித்து அதினர்த்தத் தை யநுபவிக்கிறவிடத்திலே (சூழ்புனற்குடந்தையே தொழுது) என்றன்றோ யநுபவித்தது, ஆனால், (புலம்பரந்து பொன்விளைக்கும் பொய்கைவேலிபூங்கோவலூர் தொழுதும்) என்னவமையாதோ, கீழெல்லாம் சொல்லவேண்டுவானென்னென்னில்; உகந்தருளின நிலங்களுடைய அடிப்பாடு சொல்லுகிறது. மேன்மையும் நீர் மையும்போலேகாணும் நாராயணசப்தார்த்தமாகிறது.

மூ.—அலம்புரிந்தநெடுந்தடக்கையமரர்வேந்தன்
அஞ்சிறைப்புள்தனிப்பாகனவுணர்க்கென்றும்
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன்
தானுகந்தவூரெல்லாந்தன்தாள்பாடி
நிலம்பரந்துவரும்கலுழிப்பெண்ணையீர்த்த
நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்திப்
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப்
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. (௬)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அலம்புரிந்த | இரப்பாளர் (போதும்போதும்) என்னும்படி கொடாநிற்பதாய், | நெடும் | நீண்டு, |
| | | தடம் | பரந்திருந்துள்ள, |
| | | கை | திருக்கைகளை யுடையனாய், |

ஆறும்பாட்டு. (அலம்புரிந்த) திருமந்த்ரத்தை- மந்த்ரமென்று கீழேசொல்லப்பட்ட ஸர்வேச்வரனை. மந்த்ரார்த்தபூதன் ஈச்வரனன்றோ, ஊரை அநுபவிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (திருமந்த்ரார்த்தத்துக்கித்யாதி.) வரலாறு சொல்லுகிறாரென்னுதல்; மேன்மையும் அர்த்தமாகையாலேசொல்லுகிறானென்னுதல். இவற்றை வாக்யத்வயத்தாலே யருளிச்செய்கிறார் (உகந்தருளின நிலங்களித்யாதி.) அடிப்பாடு – வரலாறு.

| பதம். | உரை. |
|---|---|
| அமரர்வேந்தன் | நித்ய ஸூரி நிர்வாஹகனாய், |
| அம் | அழகிய, |
| சிறை | சிறகையுடைத்தான, |
| புள் | பெரியதிருவடிக்கு, |
| தனிப்பாகன் | அத்விதீயனான பாகனாய், |
| அவுணர்க்கு | ராக்ஷஸர்களுக்கு, |
| என்றும் | எந்தக்காலத்திலும், |
| சலம்புரிந்து | தீங்கிழைக்கும் திருமாலாய், |
| அங்கு | அவர்கள் விஷயத்தில். |
| அருளில்லாத் தன்மையாளன்தான் | க்ரோதத்தையே ஸ்வபாவமாகவுடையனான ஸர்வேச்வரன், |
| உகந்தவூரெல்லாம் | உகந்தருளின நிலங்களிலெல்லாம், |
| தன்தாள் பாடி | அவனுடைய திருவடிகளைப்ரீதிப்ரேரிதனாய்ப்பாடி, |
| நிலம்பரந்துவரும் | கரைக்குமேலே வழிந்து வருமதாய், |
| கலுழி | கலக்கத்தை யுடைத்தான, |

| பதம். | உரை. |
|---|---|
| பெண்ணை | தக்ஷிண பிநாகினியானது, |
| ஈர்த்த | இழுத்துக்கொண்டு வருகிற, |
| நெடுவேய்கள் | பெரிய மூங்கில்கள் முறிந்துவிழுவதினாலே, |
| படு | உண்டாகிற, |
| முத்தம் | முத்துக்களை, |
| உந்த | கழனிகளிலே கொண்டுதள்ள, |
| உந்தி | கர்ஷகர்தங்கள் பயிருக்குக்களையென்று தள்ளப்பட்டு, |
| புலம் | கழனிகளெங்கும், |
| பரந்து | பரவி, |
| பொன்விளைக்கும் | பொன்னை விளையாநின்றுள்ள, |
| பொய்கை | தடாகங்களை, |
| வேலி | சுற்றிலுமுடைத்தான, |
| பூம் | தர்சநீயமான, |
| கோவலூர் | கோபாலபுரத்தை, |
| நெஞ்சே | மநஸ்ஸே, |
| தொழுதும்போது | அநுபவிப்போம் வா என்றார். |

கோவலூர் - கோபாலபுரம்...(சு)

வ்யா.—(அலம்புரிந்த நெடுந்தடக்கை) இட்டுநீண்டகை என்கிறார்; அர்த்திகள் (அலம்) என்னும்படியாகக் கொடுக்கை. பின்னைப் புறம்பெருவர்வாசலிலே செல்லாதபடி பர்யாப்தமாகக் கொடுக்கை. இத்தால் - ஈச்வரனைப்பற்றியிருக்கிறவன் வ்யதிரிக்த விஷயங்களில் ஸாபேக்ஷனல்ல னென்னுமிடம் சொல்லுகிறது. அதவா, (அலம்புரிந்த) ஔதார்யம்பண்ண உத்யோகித்தால் அவன் (அமையும்) என்றவாறே மீளுமித்தனைபோக்கித் தன்கொடைக்கு அவதியின்றியிலேயிருக்கை. உழக்கிலே பதக்கைப் பொகடவொண்ணாமையாலே மீளுமித்தனை. இவனுடைய ஔதார்யத்தைப் பார்த்தால் அவனுடைய மநோரதம் கடலில்குளப்படி போலேயிறே யிருப்பது. புரிகை - கொடுக்கையும், மீளுகையும்.

(புரிந்த) புரிகை - கொடுக்கையாதல்; மீளுகையாதல். ஆசை பெருத்தன்றோ விருப்பது, உமக்கு என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இவனுடையவித்யாதி.)

அலம்என்னக் கொடுக்கையாவது - பின்னையொருத்தன்பக்கலிலும் ஸாபேக்ஷனாகாதபடியாகக் கொடுக்கை. அநந்யப்ரயோஜநனுக்குத் தன்னையும் தன்னுடைமையையும் கொடுத்தால் பின்னை தனக்குக் கொடுக்க விரகில்லை, அவனும் அபேக்ஷிக்கவேண்டுவதில்லை, அவனும் அநுபவத்திலே யிழியு மித்தனை, இவனும் * என்செய்வனென்றே யிருந்துபோமித்தனை.

(நெடுந்தடக்கை) கொடுக்கையே வினைநீராக வளர்ந்தகை. ரக்ஷகனுக்குவ்ர்த்தி ரக்ஷணதர்மத்தாலேயிறே. ஔதார்யத்தை பரிச்சேதிக்கவொண்ணாதகை என்னவுமாம்; அர்த்திகளிருந்தவளவும் செல்ல நீண்டகையென்னவுமாம். (தடக்கை)(𑌬𑌾𑌹𑍁𑌚𑍍𑌛𑌾𑌯𑌾𑌮𑌵𑌷𑍍𑌟𑌬𑍍𑌧𑌃) (பாஹூச்சாயாமவஷ்டப்தஃ) என்கிறபடியே லோகமடங்க ஒதுங்கினாலும் விஞ்சியிருக்கும்படியான தோள். ஸர்வாதிகாரமுமாய் ஆச்ரயணீயமுமாய்த் தானேப்ரயோஜநமுமாயிருக்குங்கை. தடக்கை-பரந்தகை.

(அமரர்வேந்தன்) இந்த வௌதார்யத்தை உபஜீவிக்குமவர்களைச் சொல்லுகிறது. அமரர் - மரணதர்மங்களில்லாதவர்கள். நித்யஸூரிகளுக்கு மரணப்ரஸங்க முண்டோவென்னில்; போகவிச்சேதத்திலே மூச்சடங்கு மவர்களாகையாலே மரணப்ரஸங்கமுண்டு, அதில்லாமையாலே (அமரர்) என்கிறது. அநுபவம் நித்யமானவாறே அவர்களும் நித்யரானார்களித்தனையிறே. (வேந்தன்) அவர்களை அடிமைகொள்ளக்கடவதாக முடிகவித்திருக்கிறவன். வேந்தன் - அரசன். அவன் அடிமைகொள்ளுகையிலே அபிஷிக்தனாயிருக்கும்; இவர்கள் (𑌅𑌹𑌂𑌸𑌰𑍍𑌵𑌂𑌕𑌰𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿)(அஹம்ஸர்வம் கரிஷ்யாமி) என்று தாஸ்யத்திலே ¦அபிஷிக்தரா யிருப்பர்கள்; அபிஷேகம் இருவர்க்கு மொக்கும். (அரசமர்ந்தானடி சூடுமரசு) என்னக்கடவதிறே.

(அஞ்சிறைப்புட்டனிப்பாகன்) அவர்களை யடிமைகொள்ளும்படிக்கு த்ர்ஷ்டாந்தமாக ஒருவ்யக்தியைப் பேசுகிறார். அழகிய சிறகையுடைத்தான பெரியதிருவடிக்கு அத்விதீயனானபாகன். வினையுள்ளபோதன்றோ வாஹநாபேக்ஷையுள்ளதென்னில்; வினையில்லாதபோதும் - ராஜாக்கள் அழகுசெண்டேறக் கடவதாயிறேயிருப்பது. (ஓடும்புள்ளேறி) என்னக்கடவதிறே.

---

எடுத்தச்லோகத்துக்கு தாத்பர்ய மருளிச்செய்கிறார் (ஸர்வாதிகாரமுமாயித்யாதி.)

மூச்சடங்கும்படியானால் ¦நித்யரானபடி யெப்படி யென்ன; அருளிச் செய்கிறார் (அநுபவமித்யாதி.) (முடியுடைவானவர்) என்று அவர்களுக்கு முடியுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (அவன் அடிமைகொள்ளுகையித்யாதி.) எடுத்த பாசுரத்துக்கு அர்த்தமருளிச் செய்கிறார் (அழகியசிறகையித்யாதி.)

பெரியதிருவடியுடைய செல்லாமையாலும் தன் செல்லாமையாலும் நித்யஸூரிகளை அநுபவிப்பிக்கைக்காகவும் அழகு சென்றேறக்கடவதாயிறே யிருப்பது. (செழும்பறவைதானேறித் திரிவான்) என்னக்கடவதிறே. (அம்சிறை) பெரியதிருவடியை மேல்கொண்டால் திருப்பரியட்டத்தைக் கொய்து சாத்தினாப்போலே அங்குத்தைக்கு அலங்காரமா யிருக்கை. அதவா, அழகு சென்றேறும்போதை ஆயாஸத்துக்கு ஆலவட்டம் பணிமாறினாப்போலே இரண்டு திருச்சிறகாலும் ஆச்வாஸகரா யிருக்கிறபடியைச் சொல்லுகிறது. (வ்யஜநம்த்ரயீமயஃ) (வ்யஜநமத்ரயீமயஃ) என்னக்கடவதிறே. அங்ஙனன்றியே, பரதத்வத்தை ஆச்ரிதருடையகாற்கடையிலேகொண்டுவந்து சேர்க்கைக் கடியான பரிகரத்தையுடையவனென்னுதல்.

(புள்) பாபயோநியான ஜந்மம் அவர்களுக் குண்டோவென்னில்; பிராட்டியும் ஸர்வேச்வரனும் திருத்திரைக்குள்ளேயிருந்தால், நிலா, தென்றல் ஸஞ்சரிக்கும்போது பிற்காலிக்க வேண்டும்படியிறேஅப்போதை ஐகாந்த்யமிருப்பது. அவஸ்த்தாநுகுணமாக கூனர்குறளர் ஸஞ்சரிக்குமாப்போலே அந்தரங்கஸேவைக்கு அநுகூலமான வடிவை பரிக்ரஹிப்பார்களென்கை. ஸரீஸ்ருபஜாதியோடு பக்ஷிஜாதியோடு ஸ்த்தாவரஜாதியோடுவாசியற பரிக்ரஹிப்பர்கள், ஸம்ஸாரி, கர்மபலாநுகுணமாக சரீரபரிக்ரஹம் பண்ணக் கடவன்; அவன் அவஸ்த்தாநுகுணமாக சரீரபரிக்ரஹம் பண்ணக்கடவன். (தனிப்பாகன்) பாகன் என்கையாலே-அவனுக்குத்தான் பவ்யனாய் தனக்குஅவன் பவ்யனாயிருக்கிறபடியும் தோற்றுகிறது. ஆனையைத் தன்நினைவிலே நடத்தக்கடவனாயும் அதுக்கு சேஷனாயுமிறே பாகனிருப்பது; பெரியதிருவடி முதுகிலே நற்றரிக்கவிருந்து அவனை நடத்துகையிறே ஸர்வாதிகத்வலக்ஷணம்; அது புறம்பில்லாமையாலே அத்விதீயத்வம். அதவா, தனிப்பாகன் - நித்யஸூரிகளுக்கு அத்விதீயநிர்வாஹகனென்னவுமாம். (அயர்வறு மமரர்களதிபதி) என்னக்கடவதிறே.

---

தன் செல்லாமைக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார் (செழும்பறவையித்யாதி.) (பரிகரத்தையுடையவன்) பரிகரம்-சிறகு.

புள்தனிப்பாகன் என்றது-நித்யஸூரிகளுக்கும் உபலக்ஷணமாக்கி – அத்விதீயநிர்வாஹகத்வ மருளிச்செய்கிறார் (வ்யஜநமித்யாதி.) கூனர் - வ்ர்த்தர். குறளர்-எக்கழுகள் • ஸரீஸ்ருபம்-பாம்பு. ஆனாலும் சரீர பரிக்ரஹம் கர்மபலமன்றோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரீத்யாதி.) அவன் – பெரிய திருவடி. இரண்டும் ப்ரயோஜநமானால் பரித்ராணமும் சொல்லவேண்டாவோ என்று சங்காபிப்ராயம்.

(அவுணர்க்கித்யாதி) இத்தால் - அத்தேசத்தில் விரோதிப்ர ஸங்கமில்லாமையாலே ராமக்ருஷ்ணாதிரூபத்தாலே ஸாதுபரித்ரா ணார்த்தமாகவவதரித்து தத்விரோதிநிரஸநம்பண்ணினபடியைச் சொல்லுகிறது. துஷ்க்ருத்விநாசமும் அவதார ப்ரயோஜந மிறே. அவதாரத்துக்கு ப்ரயோஜநம் விரோதிநிவ்ருத்தியைப்பண் ணுகையோவென்னில்; ப்ரதாநம் விரோதிநிவ்ருத்தியாகையாலே சொல்லுகிறது. (సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి) (ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்னக்கடவதிறே. ஸஹஜகைங்கர்ய மாகை யாலே ஆவிர்ப்பாவமிறே யுள்ளது; ஸாத்யம் விரோதிநிவ்ருத்தி யிறே. ஆகையாலிறே இத்தையிட்டு அத்தை உபலக்ஷிக்கவேண்டு கிறது. (அவுணர்) இத்தால்-அஸுரஜாதியைச் சொல்லுகிறதன்று, அஹங்கார மமகாரயுக்தராய்,(நமேயம்)என்றிருக்குமவர்களைச் சொல்லுகிறது. ஸ்ரீப்ரஹ்லாதனை, ஜந்மமதுவா யிருக்கச்செய்தே, (ఉపమానమశేషాణాం సాధూనామ్) (உபமாநமசேஷாணும் ஸாதூநாம்) என்கையாலும், ராக்ஷஸஜந்மமா யிருக்கச்செய்தே ஸ்ரீவிபீஷணாழ் வானை, (విభీషణస్తు ధర్మాత్మా) (விபீஷணஸ்து தர்மாத்மா) என்கை யாலும், தேவயோநியாயிருக்கச்செய்தேஜயந்தன். ப்ரஹ்மாஸ்த்ரத் துக் இலக்காகையாலும் ஜாதிபரமன்று, ஸ்வபாவபரம். (విష్ణుభక్తి పరో దేవో విపరీతస్తథాఽసురః) (விஷ்ணுபக்திபரோதேவோ விபரீதஸ்த தாஉஸுரः) என்னக்கடவதிறே.

(என்றும்சலம்புரிந்து)அவர்களுக்கு (நமேயம்)என்றிருக்கை வ்யவஸ்த்திதமானுப்போலேயாய்த்து அவர்கள்திறத்தில் இவனுக் கும் க்ரோதம்வ்யவஸ்த்திதமாயிருக்கும்படி.(புரிந்து)ஈச்வரனைக்கி ட்டினார்க்கு வெறுமன்போகவேண்டாங் காணும். ஔதார்யத்தைப் பெற்றுப் போதல், க்ரோதத்தைப் பெற்றுப்போதல் செய்யு மித்த னைபோக்கி ப்ரயோஜநசூந்யமாயிராது. ஸ்வவிநாசம் ப்ரயோஜந மாயிருக்குமோவென்னில், அவர்கள்நினைவால் ப்ரயோஜநமன் றியிலே யிருந்ததேயாகிலும் அதுதான் அவர்களுக்கு ஹிதமாய்த் தலைக்கட்டாநின்றதிறே. ஒருவன் தலையையறுத்துக்கொள்ளப் புக்கால் கையில்வாளைவாங்குகை ஹிதமா யிருக்குமாப்போலே, பகவத்பாகவத நிந்தைக்கு உபகரணமான கரணத்தைப் போக்கு கை உபகாரமாகக்கடவது. * தலையையறுப்பது ரக்ஷகனுடைய வ்யாபாரமாகையாலே ஸர்வமும் ரக்ஷணமா யிருக்குமிறே.

---

சரமச்லோகத்திலேதான் இஷ்டப்ராப்தி சொல்லா திருப் பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸஹஜகைங்கர்யேத்யாதி.) ஸாத்யம் - ஸாதிக்கவேண்டுவது. இத்தை - விரோதிநிவ்ருத்தியை. அத்தை - கைங்கர்யத்தை.

விநாசமும் ப்ரயோஜந மென்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன, அருளிச்செய்கிறார் (ரக்ஷகனுடைய வித்யாதி.)

(రామబాణాసనక్షిప్త మావహత్పరమాంగతిమ్) (ராமபாணாஸநக்ஷிப்த மாவஹத்பரமாங்கதிம்) என்றும், (தலையை யாங்கேயறுப்பதே கருமம்) என்றுஞ் சொல்லக்கடவதிறே. புரிகையாவது - க்ரோத கார்யமான நிரஸநத்தைப்பண்ணுகை. புரிதல் - செய்தலென்று தமிழர் சொல்லுவர்கள். சலத்தைப்பண்ணி என்றபடி. புரிதல்- செய்தலும், கொடுத்தலும்.

(அங்கருளில்லாத் தன்மையாளன்) ஆச்ரிதவிஷயத்தில் தயை வ்யவஸ்த்திதமா யிருக்குமாப்போலே அவர்கள்பக்கல் நிர்த்தயத்வம் வ்யவஸ்திதமாயிருக்கும். சீற்றமும் தயையுமிரண்டும் விருத்ததர்மம்; ஏகாச்ரயத்திலே வர்த்திக்கலாமிறே விஷயவிபாகத்தாலே. அசேதநமா யிருப்பதொரு கல்லு, சந்த்ரஸந்நிதியிலே நீராகவும் அஸந்நிதியிலே கல்லாகவுங் காணாநின்றோமிறே. (தன்மையாளன்) இதுவே தனக்கு ஸ்வபாவமாக வுடையவன். ஆச்ரிதவிஷயத்தில் உதாரனாய்தயாவானாயிருக்கையும், தத்விரோதிகள்பக்கல்க்ருத்தனாய்நிர்த்தயனாயிருக்கையுமே ஸ்வபாவனாயிருக்கும்.

(தானுகந்தவூர்) அமரர்வேந்தன் தானுகந்தவூர். (அங்கருளில்லாத்தன்மையாளன் தானுகந்தவூர்) நிரதிசயபோக்யன் வர்த்திக்கிறதேசம்; விரோதி நிரஸநசீலன் வர்த்திக்கிறதேசம். நித்யஸூரிகளும் தானுமாக வுகந்ததேசமிறே பரமபதம்; ஸம்ஸாரிகள் விமுகராயிருக்கத் தானே யுகந்ததேசமிறேயிது. உடைமை நசியாமைக்காகத் தானே ஆதரித்துவந்து நிற்கிறதேசமிறே. இத்தால்- உகந்தருளினநிலங்களே ஆச்ரயணீயமும் ப்ராப்யமு மென்கை. (அமரர்வேந்தன்) என்கையாலே-ஸ்வாமித்வங் கண்டோம், அத்தேசத்தைக் காற்கடைக்கொண்டு தோஷபூயிஷ்டமான இத்தேசத்திலே வந்து நிற்கையாலே வாத்ஸல்யங் கண்டோம், கீழ் உக்தமான சக்தி கிடக்கச்செய்தே (மூச்சில்லை) என்னும்படி தன்னை அவர்களிட்ட வழக்காக்கி வைக்கையாலே ஸௌசீல்யம் கண்டோம், சக்ஷுர்விஷயமா யிருக்கையாலே ஸௌலப்யங் கண்டோம். நித்யஸூரிகள் ஏற்றுஅஂமுண்ண இங்கேவருகையாலே ப்ராப்யபௌஷ்கல்யமுள்ளது இங்கேயிறே. (வானவர் வானவர் கோனொடுஞ் சிந்து பூமகிழுந் திருவேங்கடம்) என்றாரிறே-நம்மாழ்வார்.

---

ஹிம்ஸிக்கை உபகாரமென்னுமதுக்கு ப்ரமாண மருளிச்செய்கிறார். (రామపాణాసనేత్యాది-ராமபாணஸநேத்யாதி) (వహప్రాపణే- வஹப்ராபணே) தாது; - அடைவிப்பிக்கை.

விருத்ததர்மம் ஏகாச்ரயத்திலே கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (சீற்றமுமித்யாதி.)

ப்ராப்யமும் ப்ராபகமும் என்கைக்கு அவற்றுக்கு உபயோகியான குணங்களுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (அமரர் வேந்த னித்யாதி.)

[வானவர் வானவர்கோனேடும்] அடியறப் போந்தபடி. எல்லாரையும் போகவிட்டு அகம்பார்த்திருக்கிறுப்போலேகாணும் ஸ்ரீவைகுண்டநாதன் (தானுகந்தவூர்) அவனுகந்ததாக வமையும் போலேகாணும் இவராதரிக்கைக்கு.

(ஊரெல்லாம்)ஜ்ஞாநம் பிறப்பதற்கு முன்பு,(அவரவர்பணை முலைதுணையா) என்று ஜாதிகியதியின்றியிலே வரையாதேஉத்தேச்யமாணுப்போலே ஜ்ஞாநம்பிறந்தபின்பு திருப்பதிகளெல்லாம்உத்தேச்யமாயிருக்கிறபடி. அநுபவிக்கப்போகிறது திருக்கோவலூராயிருக்க, (ஊரெல்லாம்) என்பானென்னென்னில்; ஓருருக்குப்போம்போது நீர்ச்சாய்வையும் நிழற்சாய்வையும் பற்றிப்போவாரைப் போலேதிருப்பதிகளிலே ஒதுங்கிப் போகிறுர்.*வாஸுதேவதருவை அநுபவிக்கப் போம்போது வாஸுதேவதருச் சாயையிலேயிறே ஒதுங்கிப்போவது. “ஸர்வம்வஸதீதிவாஸுதேவ:” என்கிறபடியே-உகந்தருளினநிலங்களெல்லாம் வஸ்தவ்யபூமியிறே.தத்வ்யதிரிக்தங்களை மருபூமியாகவிறே இவர் நினைத்திருப்பது. (தன்தாள்பாடி) வழிபோவார்க்கு பாதேயம்வேணுமிறே; (పాథేయం పుణ్డరీకాక్ష నామ సంకీర్తనామృతమ్) (பாதேயம்புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தநாம்ர்தம்) என்னக்கடவதிறே. ப்ராப்யப்ராபகங்களிரண்டுமான தன்திருவடிகளை. தன்னைப்பாடி என்னுதே (தாள்பாடி) என்கையாலே, கீழ் (ஒருகால் நிற்பவொருகாலும்) என்றதிருவடிகளாய்த்துஇவர்க்கு பாதேயம். (பாடி)ப்ரீதிப்ரேரிதராய்க் கொண்டுபாடி.

(நிலமித்யாதி)பெண்ணையைக்காண்பதற்கு முன்புபோலேகாணும் திருவடிகளைப் பாடுவது, பெண்ணையைக்கண்டவாறே திருவடிகளைமறந்து இத்தைக்கவிபாடத்தொடங்கிஞர்.அதுக்குஹேது வென்னென்னில்; அத்தேசத்திலேதமக்குஆதரமுண்டாகையாலே அத்தேசத்தை ஆதரிப்பாரும் தமக்குத் துணையாயிருப்பரிறே. (நிலம் பரந்துவரும்) புருஷோத்தமனை ஒருஸ்த்ரீ அநுபவிக்க ப்ரார்த்திக்கிறு ளாகையாலே அத்யாதரத்தோடே யாய்த்துப் போகிறது.

---

அடியற - எல்லார்க்கும் ப்ரதாநரான ஸேனைமுதலியாரோடேகூட.

திருப்பதிகளிலே தங்கவேணுமோ, வேறொரு விடமாகாதோ வென்ன; அருளிச்செய்கிறுர் (வாஸுதேவ தருவையித்யாதி.) தரு-ப்ராப்யம்; நிழல்-ப்ராபகம். உபாயோபேயம் அவனே யென்றபடி. அவன் சாயையிலே போகைக்கு அங்கே வர்த்திக்கிறுனோ வென்ன; அருளிச்செய்கிறுர் (ஸர்வம்வஸதித்யாதி.) ஸர்வசப்தத்தை திவ்ய தேசமாத்ரத்திலே ஒதுக்குகிறுர்.

ஆற்றுக்கு ஆதரமுண்டோவென்ன; அருளிச் செய்கிறுர்(புருஷோத்த மனையித்யாதி.)

திருக்கோவலூரை அநுபவிக்கப்போகிற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கரைக்குமீதேவழிந்து குடியிருப்புக்களை யழித்து, கரையில் நிற்கிறவேய்களை பிட்கன்றாக வேர்ப்பற்றிலே குத்தியெடுத்து இழுத்துக்கொண்டு பெரியகிளர்த்தியோடே வருகிறபடி.

(கலுழி) கலக்கமும், காறும். ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கலங்கிப்போகிறபடி. பகவத்விஷயத்தை யநுபவிக்கப்போம்போது அவன்விபூதியை யழித்துக்கொண்டுபோகலாமோ வென்னில்; விபூதியினழிவுபாரான், இவளாதரத்தையிறே அவன் பார்ப்பது. கண்டாகர்ணன், ரிஷிப்பிணம், இப்போதுகொன்றது, இத்தை இப்போதுஅமுதுசெய்தருளவேணும் என்றானிறே.பிராட்டியைக் கண்ட ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, முதலிகள் மதுவநத்தை யழிக்க அத்தைவந்து மஹாராஜர்க்குச் சொல்ல நங்கார்யம் க்ர்தக்ர்த்யமாய்த்ததென்று உகந்தார்களிறே - மஹாராஜரும் ராஜகுமாரர்களும். (दृष्टा सीता)(த்ர்ஷ்டாஸீதா) என்னவேண்டுவதில்லை. எம்பார் இவ்விடத்திலே, "நடுவே மதுவநமொன்றில்லையாகில் முதலிகளுடையகிளர்த்தி ராஜகுமாரர்களுடையமுதுகோடே போமித்தனைகாண்" என்று அருளிச்செய்வர்.

(பெண்ணையீர்த்தநெடுவேய்கள்படுமுத்தம்)ஆஸந்நப்ரஸவைகளான கர்ப்பிணிகளை மயிரைப்பிடித்திழுத்தால் அதுவே ஹேதுவாக ப்ரஸவிக்குமாப்போலே வேர்ப்பற்றிலே குத்தியெடுத்து அலைத்துக்கொண்டு போகப்புக்கவாறே வேய்கள் உடைந்து முத்தைஈன்றபடி. (நெடுவேய்கள்) திருவுலகளந்தருளினபடிக்கு ஸ்மாரகமா யிருக்கிறதாய்த்து - வேய்களுடைய ஒக்கம். (உந்தவுந்தி) பெண்ணையானது ப்ரீதிப்ரகர்ஷத்தாலே முத்தைக்கொடு சென்று வயல்களிலே தள்ள,கர்ஷகர் தங்கள்பயிருக்குக் களைகளென்றுதள்ள அவர்களாலே நோக்கவொண்ணாதபடியாகத் தள்ளி வயலெங்கும்பரந்ததாய்த்துமுத்து. விளைவதுபொன்னாய், முத்து களையாம்படியிறேதேசத்தின்போக்யதை.*பொன்படுகுட்டமிறே. (பொன்னாய்) என்கிறவஸ்துவை விளைக்கும் தேசம்போலே காணும்.

---

பிட்கன்றாக-கீழ்க்கன்றோடே. காறு-காட்டருவிகள். ரஸோக்தியாகவருளிச்செய்கிறார்(எம்பாரித்யாதி.) முதுகோடேபோகை-ஸந்தோஷத்தாலே ஒருத்தரொருத்தராகத் திருமேனியைக்கட்டிக்கொண்டால் ஸௌகுமார்யத்தாலே ஸஹியாதென்றபடி.

உந்தவுந்தி - கர்ஷகர் களைஎன்றுதள்ள அத்தை மீறித் தான் தள்ளியென்றபடி.

(பொய்கைவேலி) இப்படிப்பட்டவயல்களையும் தடாகங்களையும் சுற்றிலே யுடைத்தாயிருக்கை. (நதீஸ்தடாகாநிசபூரயித்வா) என்கிறபடியே வர்ஷம் நிறைக்கையன்றிக்கே ஆறுநிறைக்கக்கடவதான பொய்கைகளிறே.

(பூங்கோவலூர்) அவன்றன்பாடுபோகவேண்டாதபடி தேசந்தானே போக்யமா யிருக்கிறபடி. (தொழுதும்போதுநெஞ்சே) நெஞ்சே! அநுபவிக்கப்போராய். (தொழுவோம்) என்னுமளவமைந்திருக்க (போது) என்கிறது, ஆற்றினுடைய ஆதாரத்தையும், வயலின்போக்யதையையும், ஊரின்போக்யதையையும் சொல்லக் கேட்டபோதே திருவுள்ளம், கட்டணம் கட்டியெடுக்கவேண்டும் படிதறைப்பட்டுக் கிடந்தது. அன்றியே, தன்தாள்பாடி என்று-திருவடிகளைப் பாடுகையாலே திருவடிகளின்போக்யதையும் மிடற்றோசையும் வருத்தத்திருவுள்ளம் தளர்ந்தபடியாகவுமாம். கையைக் கொடுத்துப் போராயென்கிறார். (தொழுதும்) (நமஇத்யேவவாதிந:) என்றார் - கீழ்; இதில் - (பத்தாஞ்சலிபுடா:) என்கிறார். இரண்டும் முக்தருடைய அநுபவமிறே. ... ... ... ... ... ... (சு)

அ.—ஏழாம்பாட்டு. (வற்புடைய) இப்படி திருவுள்ளத்தையுங் கூட்டிக்கொண்டு அநுபவிக்கப்பார்த்தவர், அநுபாவ்யவிஷயமானது வரையாதே எல்லார்தலைகளிலும் திருவடிகளை வைத்த தூளிதாநத்தோடே வந்து நிற்கையாலே அத்தை யநுஸந்தித்து அநுபவத்தை விஸ்மரித்து பயப்படத் தொடங்கினார். அதுவும் அநுபவத்துக்குறுப்பா மித்தனையன்றோ, பயப்பட வேண்டுவானென்னென்னில்; அநுபவிதாக்களான தம்படியாலும் அநுபாவ்யவிஷயத்தின்படியாலும் பயம் மேலிட்டது. அஸ்தாநே பயசங்கைபண்ணும்படியாய்த்து-இவர்தம்முடையப்ரேமாந்த்யதையிருப்பது. பக்திபோகோபகரணமாகைதவிர்ந்து, உபாயோபகரணமாம்படியிறே இவருடைய ப்ரேமாந்த்யதை யிருப்பது. இவர்தமக்கு அநுபாவ்யம் ஸௌந்தர்யாதிகளிறே.

---

(பொய்கைவேலி) பொய்கைகளுக்கு அதிசயமேதென்ன; அருளிச்செய்கிறார் (நதீஸ்தடா-நதீஸ்தடாகாநித்யாதி.) (சு)

ஏழாம்பாட்டு.— (வற்புடைய) தூளிதாநத்தோடே-அந்தச் செவ்வியோடே;-வந்த வாகாரத்தோடே யென்றபடி. அதுவும்-அளந்த செவ்வியும். ப்ரேமம் அநுபவத்துக் குடலன்றோவென்ன; அருளிச்செய்கிறார் (பக்திபோகோபகரணமித்யாதி.) உபாயோபகரணம் - உபாயபூதனானவனை ரக்ஷிக்கைக்கு உபகரணம்.

. (அநுபவத்தின்படியாலும்)என்றத்தைக் காட்டுகிறது (இவர்தமக்கித்யாதி.)

இதில்ஸௌகுமார்யத்தையநுஸந்தித்தவாறேவயிறுபிடிக்கவேண்டியிருக்கும்; மஹாராஜர், ஸ்ரீவிபீஷணாழ்வான் அநுகூலனாய்வந்து-சரணம்புகுரா நிற்கத் தம்முடைய ப்ரேமாந்த்யத்தாலே (வத்யதாம் வத்யதாம்) (வத்யதாம் வத்யதாம்) என்றாரிறே. அஸுரராக்ஷஸராலே மிடைந்துகிடக்கிற தேசமாகையாலே அத்தைப் பார்த்தவாறேவயிறுபிடிக்கவேண்டியிருக்கும்.இவர்பயத்தாலேஇழிந்தாலும் ரக்ஷகனுக்கு அவ்வவபயநிவர்த்தியைப்பண்ணி யநுபவிப்பிக்கை பரமிறே. ஆகையாலே மஹாராஜர் பயத்தைப் பெருமாள் தம்முடையராஜநீதியைக்காட்டியும்,சரணாகதவிஷயத்தில் (நத்யஜேயம்) என்று-பண்ணின ப்ரதிஜ்ஞையைக்காட்டியும் சமிப்பிக்க வொண்ணாதென்றுபார்த்து தம்தோள்வலியைக்காட்டி பயநிவர்த்திபண்ணினாப்போலே தன்மிடுக்கையும், காவலுரப்பையும், தேசத்தினுடைய அரணுடைமையையும் புத்திப்ரதாந முகத்தாலேகாட்டிக் கொடுக்கநிற்பயராய்,நெஞ்சே! நாம்அநுபவிக்கப்போரா யென்கிறார்.அத்தலையில்ஸௌகுமார்யத்தையநுஸந்தித்துபயப்படக்கடவன் சௌர்ய வீர்யாதிகளையநுஸந்தித்து நிர்ப்பயனாகக்கடவன்.

மூ.—வற்புடையவரைநெடுந்தோள்மன்னர்மாள
வடிவாயமழுவேந்தியுலகமாண்டு
வெற்புடையநெடுங்கடலுள்தனிவேலுய்த்த
வேள்முதலாவென்றானூர்விந்தைமேய
கற்புடையமடக்கன்னிகாவல்பூண்ட
கடிபொழில்சூழ்நெடுமறுகில்கமலவேலி
பொற்புடையமலையரையன்பணியநின்ற
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே!. (எ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | பரசுராமாவதாரம் செய்தருளி, | தோள் | தோள்களை யுடையரான, |
| வடிவாய | அழகுமிக்கிருந்துள்ள, | மன்னர் | ஸஹஸ்ரபாஹுவர்ஜுநன் முதலான அரசர்கள், |
| மழு | மழுவை, | | |
| ஏந்தி | தரித்து, | மாள | பேர் சொல்லுகைக்கும் கூட ஒருவரின்றிக்கே அழியச் செய்ததுமன்றி, |
| வற்புடைய | பலத்தையுடைய, | | |
| வரை | மலைபோலே, | | |
| நெடு | உயர்ந்த, | | |

பழிக்கக்கூடுமோ என்ன; அங்கு விரோதி பூயிஷ்டமாகையாலே மஹாராஜர் பயப்படுகிறார், இங்கு விரோதியுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (அஸுரராக்ஷஸராலேயியாதி.) (ஜபர்சக்து அஸுரா:) என்கிற அஸுரர்இங்குமுண்டே. ராஜநீதி - தம்முடைய பூர்வர்கள் சரணாகதனை ரக்ஷித்துப்போந்தவை.

| பதம். | உரை. |
|---|---|
| | சக்ரவர்த்தித் திருமகனுய்த் திருவவதரித்து ராவணுதிகளையழியச்செய்து, |
| உலகமாண்டு | திருவயோத்யையை ஆண்டருளினவனுய், |
| வெற்பு | மலைகளை, |
| உடைய | தனக்குள்ளேயுடைத்தான, |
| நெடுங்கடலுள் | மஹா ஸமுத்ரத்திலே, |
| தனிவேல் | ஒப்பற்றவேலை, |
| உய்த்த | ப்ரயோகித்த, |
| வேள்முதலா | ஸுப்ரஹ்மண்யன் முதலானுரை, |
| வென்றான் ஊர் | ஜயித்தஆண்பிள்ளையான ஸர்வேச்வரனுடைய தேசமாவது;- |
| விந்தைமேய | விந்த்யபர்வதத்திலேவர்த்திக்கிற, |
| கற்புடைய | மிக்கஅறிவை யுடையளாய், |
| மடம் | தான்பற்றின கருமத்தை விடாதவளாய், |

| பதம். | உரை. |
|---|---|
| கன்னி | அநந்ய பரையான துர்க்கையாலே, |
| காவல்பூண்ட | காக்கப்பட்டதாய், |
| கடி | பரிமளத்தை யுடைய, |
| பொழில்சூழ் | சோலையாலே சூழப்பட்டதாய், |
| நெடு | அகலத்தையும் நீளத்தையு முடைத்தான, |
| மறுகின் | திருவீதிகளையும், |
| கமலம் வேலி | தாமரைமலர்ந்திருந்துள்ள தடாகங்களையுமுடையதாய், |
| பொற்புடைய | அழகை யுடைத்தாய், |
| மலையரையன் | பர்வதராஜன், |
| பணியநின்ற | ஆச்ரயிக்கும்படியிருக்கிற, |
| பூங்கோவலூர் | அழகியதிருக்கோவலூரை, |
| தொழுதும் | தொழுவோம்; |
| நெஞ்சே | மநஸ்ஸே!, |
| போது | வாராயென்கிறுர். |

வ்யா.—(வற்புடையவித்யாதி) அநேகாவதாரங்களிலுண்டான மிடுக்கையெல்லாங்காட்டி சமிப்பிக்க வேண்டும்படி காணும் இவருடைய பயாதிசயமிருப்பது. (வற்புடையவரை நெடுந்தோள் மன்னர்) ஹிரண்யராவணுதிகளுடைய பலத்தைச் சொல்லுமாப்போலே இவர்களுடைய பலத்தை யருளிச்செய்கிறது; அத்தலையில் மிடுக்குத் தோற்றுகைக்காக. பலத்தையும் மலைபோலே ஓங்கினதோள்களையுமுடையவர்கள். மலையிலே சிலபதார்த்தங்கள் வந்தடியுண்டால் அவைதான் நக்கநாந்துபோமத்தனையொழியமலைக்குச் சிதைவில்லாதாப்போலே எதிரிகள் நசித்துப்போய் அவன் தோளுக்குச் சலநமின்றிக்கே யிருக்கை. (மன்னர்மாள) அநுகூலவேஷத்தைப் பரிக்ரஹித்தாலும் ஆஸுரமாயிருக்குமாகில் ஈச்வரன் அழியச்செய்யுமென்கை.

ராஜாக்கள் ரக்ஷகரன்றே அவர்களை யழிக்கக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறுர் (அநுகூலவேஷேத்யாதி.)

ரக்ஷகஜந்மமிறே யென்று பாரான், அவர்கள் ஆஸுரமாய்த்துப் பார்ப்பது. ஸஹஸ்ரபாஹவர்ஜுநன் முதலான ராஜாக்களெல்லாம் நிச்சேஷமாக நசிக்கும்படி.

இவர்கள் நசிக்கும்படி பண்ணின வ்யாபார மேதென்னில்; (வடிவாய மழுவேந்தி) கையிலே மழுவையேந்த நசித்துக்கிடந்த தித்தனையாய்த்து. மழுவின்கூர்மையையும் பிடித்தபிடியையுங் கண்டு நசித்தவித்தனை; நரஸிம்ஹவேஷத்தைக்கண்டு ஹிரண்யன் மர்தனைப்போலே. அங்ஙனன்றியே கையும் மழுவுமாயிருக்கிற விருப்பு தர்சநீயமா யிருக்கையாலே(ஏந்தி)என்னவுமாம். ரௌத்ரமான அஸ்த்ரமென்று வைஷ்ணவர்களெல்லாரும், இத்தைஅநாதரியா நிற்க, இவர் (வடிவாயமழு) என்கிறார். ஏதேனு மோராயுதத்தைப் பிடிக்கிலும் இவர்க்கு தர்சநீயமாயிருக்குமிறே.திருவாழியும் அவன்பிடித்தவாறே யிறே தர்சநீயமாயிருக்கிறது.

(உலகமாண்டு) ஸ்ரீபரசுராமாழ்வானுண்டதொரு ராஜ்யமில்லாமையாலே ராமாவதாரத்தை நினைக்கிறது. தன்பிதாவை நலிந்தார்களென்னும்கோபத்தாலே ராஜாக்கள்தலையையறுத்து அவர்களுடைய ரக்தத்தாலேதடாகத்தைநிரப்பிஉதகக்ரியை பண்ணிப்போனு னித்தனையிறே. ஆனாலும், (ஸ்நாத்வாபுநஶ்ச) (ஸ்நாத்வாபுநீத) என்னுமாப்போலே, (ஏந்தி) என்கிற விந்தல்யப்பு ஏக கர்த்ர்கமாகவன்றோ யிருக்கிற தென்னில்; வஸ்த்வைக்யத்தாலே ஏக கர்த்ர்கமாகவும் தட்டில்லை, அர்த்தாநுபபத்தியாலே பிந்நவ்யக்தியாகவும் தட்டில்லை. மேலே க்ர்ஷ்ணாவதாரமா யிருக்க ஏக கர்த்ர்கமாயிருக்கிறது-வஸ்த்வைக்யத்தாலேயிறே. ஆகையாலே ஆகாரத்வயத்தாலும்(உலகமாண்டு)என்கிற விது-ராமாவதாரத்தைக் காட்டுகிறது. பரசுராமாழ்வான் பெருமாளைக் கண்டவாறே கையில் மழுவைப்பொகட்டு வில்லையெடுக்க வில்லோடேகூட அவனுடைய சக்தியைவாங்கி அவ்வில்லாலே ராவணாதிகண்டக நிரஸநபூர்வகமாகச் சிறியத்தைப் பெரியது நலியாதபடி ராஜ்யத்தை யாண்டபடியைச் சொல்லுகிறது.

---

(மழு.) என்கிறார், (இது கூடுமோ) என்று பூரிப்பது.

ராஜ்யம் பண்ணுவிட்டால் நலிவானென் னென்ன; அருளிச்செய்கிறார் (தன்பிதாவையித்யாதி.) வஸ்த்வைக் யத்தாலே எங்கே கூடிற்றென்ன; அருளிச்செய்கிறார் (மேலேக்ர்ஷ்ணாவதார மித்யாதி.)(ஏந்தி,ஆண்டு) என்ற சேர்த்தியைப்பற்ற ஐக்யபக்ஷத்திலே (பரசுராமாழ்வானித்யாதி.) வில்லையெடுத்து எதிராகவர தாமும் ஏகமாகையாலே அத்தை வாங்கிப் பெருமாள் எய்தாரென்றபடி.

(வெற்பித்யாதி) வெற்பைத் தனக்குள்ளேயுடைத்தான மஹாஸமுத்ரத்திலே அத்விதீமானவேலைவிட்ட இளமறிப் போரான ஸுப்ரஹ்மண்யன். அதாவது-பர்வதங்களுடைய பக்ஷவத்தாய்க் கொண்டுபறந்துலோகங்களையும் அழித்துக்கொண்டு திரிகையாலே இந்த்ரன், தனகையில் வஜ்ரத்தாலே பக்ஷங்களை சேதித்துப்போக ஒருபர்வதம் அவனைத் தப்பித்தெரியாதபடி ஸமுத்ரத்துக்குள்ளே கிடக்க, தேவஸேநாபதியாகையாலே அதுகிடக்கிறவிடமறிந்து அழியச்செய்தபடியைச் சொல்லுகிறது. (நெடுங்கடல்) இப்போது ஸமுத்ரத்தினுடைய மஹத்தையைச் சொல்லுகிறது-பர்வதம் இன்னவிடத்திலே புக்கொளித்ததென்று ஒருவருக்கும் நிலைநாடவொண்ணாதென்கைக்காக.

(தனிவேலுய்த்த) வேலெறிந்தால் தந்நிரஸநத்துக்குப் பின்னை ஓராயுதம் விடவேண்டாதபடியா யிருக்கை. வேளென்று- காமனுக்குப் பேராயிருக்க, இவனை (வேள்) என்கிறது-பருவத்தாலும் வீர்யத்தாலும் எதிரிகளை யழியச் செய்கையாலேசொல்லுகிறது. (முதலாவென்றானூர்) ஸுப்ரஹ்மண்யன்முதலாக ஜயித்த ஆண்பிள்ளை வர்த்திக்கிறதேசம். பாணயுத்தத்திலேப்ரதாநனாய்முற்கூற்றிலேவந்தான் இவனிறே. (நேர்சரிந்தான் கொடிக்கோழி கொண்டான்) என்னக்கடவதிறே. அப்போதுவந்து எதிரிட்டார்க்கும் தோற்றார்க்கும் தொகையில்லாமையாலே (வேள்முதலா) என்று திரளச்சொல்லுகிறார். (முண்டன்நீறன்) இத்யாதி.

(வென்றானூர்) அநிருத்தாழ்வானைபந்தித்தவளவிலே ஸ்ரீநாரத பகவான் க்ர்ஷ்ணனுக்கு வந்து விண்ணப்பஞ்செய்ய பெரியதிருவடிமுதுகிலே புறப்பட்டு அழியச்செய்யக்கடவதாகச் சென்றால், க்ர்ஷ்ணன் ஒருதலையானால் நமக்கு ஜயிக்கப்போகாதென்றறியாத மதிகேடனாகையாலே அவனை ரக்ஷிக்கக்கடவதாகப் பண்ணினப்ரதிஜ்ஞையை நினைத்து, (நநமேயம்) என்றிருக்கும்நிர்ப்பந்தம் இவர்களுக்கில்லாமையாலே (ஈச்வரோஹம்) என்றிருக்கைக்கடியான செருக்கை ஒட்டி ரக்ஷிக்கக்கடவதாகவந்து பாணனைக் காட்டிக்கொடுத்துத் தோற்று முதுகிட்டு ஓடும்படி பண்ணினானாய்த்து. பாணனை யழியச் செய்யாதே அவன்செருக்குக்கடியானதோள்களைச்சேதித்துவிட்டது-உஷை, "நாம்பித்ர்ஹீநை" என்று கண்ணநீர் பாய்ச்சவொண்ணாதென்கைக்காக. அதுதான் இரண்டொருகார்யமாய்த்து.

---

திரள-ஸங்க்ரஹமாகக் கூட்டியென்றபடி. அப்படி திரளாக வந்தார்களோ? வென்ன; அருளிச்செய்கிறார் (முண்டன்நீறனித்யாதி.) அதுதான்-தலையையறுக்காமல் வைத்ததுதான். இரண்டொருகார்யம்-பிதர்ஹீநையாகாமைக்கும், தட்டித்கொண்டமைக்குமுடலாய்த்தென்றபடி.

உன்னை, ரக்ஷகனாகப்பற்றி நான்பட்டபாடேவென்று அங்யோந்யம்கட்டிக்கொண்டுகதறுகைக்குறுப்பாய்த்து.(வென்றானூர்)இப்படிப்பட்ட வீரன்வர்த்திக்கிறதேசம். (விந்தைமேயவித்யாதி) காவலூரப்பை யருளிச்செய்கிறார். (விந்தைமேய)விந்த்யாடவியிலே வர்த்தித்தவள். துர்க்கை என்னவமைந்திருக்க இப்போது இதுசொல்லுகிறது - காவல்பூண்கைக் குறுப்பாக தபஸ்ஸுபண்ணினவநம் சொல்லுகைக்காக. தான் அடிமை செய்யப்ராப்தையானாலும் அவன் இரங்கிக்கொள்ளும்போது தபஸ்ஸுபண்ண வேணும்போலே காணும். இவளுடைய வைபவமெல்லாம் அங்குத்தைரக்ஷைக்கு உறுப்பாகையாலே யருளிச்செய்கிறார்.

(கற்புடைய) கற்பு-ஜ்ஞாநம். கட்டும் கழற்று மறிந்துகாக்க வல்ல ஜ்ஞாநாதிக்யத்தை யுடையவள். கற்பென்று-ஸ்த்ரீத்வமாய், தந்தாமையழியமாறியும் ஸ்த்ரீத்வத்தை நோக்குமாப்போலே தன்னை யழியமாறியும் அத்தைநோக்கக்கடவளாயிருக்கை. மடப்பமாவது - பற்றிற்றுவிடாதொழிகை. ப்ரபல விரோதிகளுண்டானாலும் விட்டுப்போகாதொழிகை. கன்னி - அநந்யபரையென்கை. (காவல்பூண்ட) பிறர் நியமிக்கக் காக்கையன்றிக்கே தன்னுதரத்தாலே காக்கை. (காவல்பூண்ட) பருவின்மிகுதியாலே ரக்ஷணதர்மத்திலே அந்வயித்தாளென்கை. காவலுக்கு அழிவுவருமிறே - இவள் போகப்ரவணையாமாகில். கன்னியென்று-கானியாற்றுக்குப் பேராகையாலேஇவளுக்குஅழிவில்லாமையாலேஊருக்குஅழிவில்லையென்றபடி. பிறந்தவன்றேநடைபோந்தவளாகையாலே என்றுமொக்கப்பரிவையா யிருக்குமிறே. "தம்பிவளைக் காரியன்றோ" என்று நஞ்சீயரருளிச்செய்வர். சேஷபூதனா யிருக்கச்செய்தே தன்பரிவின் மிகுதியாலே ரக்ஷண தர்மத்தையேறிட்டுக் கொள்ளுமிறே. (நின் செவ்வடிசெவ்வி திருக்காப்பு) என்றாரிறே - பெரியாழ்வார். (கடிபொழிலித்யாதி)பரிமளத்தை நிரூபகமாக வுடையபொழில். நித்ய வஸந்தமான தேசமென்கை. இப்போது தேசத்தின் போக்யதை சொல்லுகிறதன்று-இவருடைய பயநிவ்ர்த்திக்குறுப்பானவற்றை சொல்லுகிற ப்ரகரணமாகையாலே. நம்மாசார்யர்கள் பயநிவர்த்திக்குறுப்பாக வருளிச்செய்து போருவர்கள்; போக மோக்ஷங்களை யொழிய புருஷார்த்த மில்லையிறே.

---

அடிமைக்கு ருசியமை யாதோ; தபஸ்ஸுபண்ணவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (தான்அடிமையித்யாதி.)

கற்பு - கல்வியாய்ஜ்ஞாநமாதல்; ஸ்த்ரீத்வமாதல். ரக்ஷ்யபூதையானதான் காவலிலே பூணக்கூடுமோ வென்ன; அருளிச்செய்றார் (பரிவின்மிகுதியாலேயித்யாதி.)

பகவத்விரோதிகளா யிருப்பார் விஷயாந்தரப்ரவணரா யிருக்கையாலே அவர்களைத் தன்னுடைய போக்யதாதிசயத்தாலே உள்ளுப்புகுராமே தன் பக்கலிலே துவக்கவற்றாயிருக்கை. உள்ளுப் புக்கு ஒருவனை அழியச் செய்யவேணுமோ, இந்தபோக்யதையை அநுபவிக்கவமையாதோ வென்னும்படி பண்ணுகை (நெடுமறுகின்) அத்தைத் தப்பிப்புகுந்தாரை, திருவீதிதான் ஆயாம விஸ்தாரங்களாலே தர்சநீயமாய் உள்ளுப்புகுராதபடி துவக்கவற்றாயிருக்கை. (கமலவேலி) பரப்புமாறப்பூத்த தாமரைத்தடங்களை யுடைத்தாயிருக்கை. ஓடைகள் பரப்புமாறப்பூத்துக்கிடக்கையாலே தர்சநீயமாய் அங்கே கால்தாழும்படி பண்ணுகை. இத்தால்-ஒருகாவல்வேண்டாதபடி அரணையுடைய தேசமென்கை. (பொற்புடைய வித்யாதி) அரணின்றியிலே யொழிந்தாலும் கிட்டவொண்ணாத காவலுறைப்பிருக்கிறபடி. இத்தேசத்தோடே செறிவை யுடைய மலயமானவர்களுக்கு ஆச்ரயணீயனானவன் வர்த்திக்கிறதேசம். தபஸ்ஸு பண்ணிவந்து காக்கையன்றியே நிலவராலே காக்கப்பட்ட தேசமென்கை. அந்யோந்ய முண்டான செறிவைச் சொல்லுதல். அதாவது - எல்லாருமொக்க ஏககண்டராய்க் காக்கும்தேசமென்கை. ஏகவசநம்-ஜாத்யபிப்ராயத்தாலே. (பணியநின்ற) ஸர்வஸமாச்ரயணீயன் வர்த்திக்கிற தேசமென்கை. (நின்ற) ஸர்வஸமாச்ரயணீயனானபின்பு காணும் க்ர்தக்ர்த்யனாய்த் தறையில் கால்பாவிற்று. சேதநர்பகவத்விஷயத்தில்போக்யதையளவுஞ்செல்ல அவகாஹித்தால் க்ர்தக்ர்த்யராமாப்போலே. விமுகராயிருக்கச்செய்தேநிர்ஹேதுகமாகஸம்பந்தத்தைஉணர்த்தினவன்ஸம்பந்தாநுரூபமாக ஆச்ரயித்தால் க்ர்தக்ர்த்யனாகச் சொல்லவேணுமோ.

(பூங்கோவலூர்தொழுதும்) அவனை யொழிய அத்தேசமே போக்யமாம்படியிறே-இவர்திருப்பதிகளிலேமண்டினபடி. (போது நெஞ்சே) இவர்க்கு பயநிவர்த்தி பிறந்தவிடத்திலும் திருவுள்ளம் தறைப்பட்டுக்கிடந்தது, ஸர்வப்ரகாரத்தாலும் ரக்ஷகமான தேசமாகையாலே நமக்கு பயப்படவேண்டா, நெஞ்சே! நாம் அநுபவிக்கப்போரா யென்கிறார். (தொழுதும்போது நெஞ்சே) "உண்ணப்போராய்" என்பாரைப்போலே அழைக்கிறார். * தொழுதெழவிறே; தொழாதபோது ஸத்தையில்லை, (தொழுதும்போது நெஞ்சே) என்கிறார். ... ... ... ... ... ... (எ)

---

பொற்பு-செறிவு. இவன் ஆச்ரயித்தமட்டில் ஈச்வரன் க்ர்தக்ர்த்யனாகக் கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (விமுகராயித்யாதி) ஊண்தாரகமானாப்போலே தொழுகையும் ஸத்தாஹேதுவோவென்ன; அருளிச்செய்கிறார் (தொழுதெழவிறேயென்று.) ( )

அ.—எட்டாம்பாட்டு. (நீரகத்தாய்) திருவுலகளந் தருளின படியை - தத்காலத்தில் அநுபவிக்கப்பெற்றிலோமென்று - விஷண்ணராக அச்செவ்வியோடே திருக்கோவலூரிலே வந்துநின்றோம், அநுபவியீரென்ன; தம்முடைய திருவுள்ளத்தையுங் கூட்டிக்கொண்டு அநுபவிக்கவிழிந்தவர், ஆயனுடைய சௌர்யவீர்யாதிகளையும் விஸ்மரித்துத் தம்முடைய அநுபவத்தையும் விஸ்மரித்தும் முகப்பிலே ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்தும் தேசஸ்வபாவத்தை யநுஸந்தித்தும்இவ்விஷயத்துக்கு என்னதீங்குவருகிறதோவென்று பீதராஞர். அவ்விஷயத்திலேஆசை பிறக்கையும் அங்குத்தைக்குபரிகையும் ஆத்மதர்மமிறே. அவன் தன்னுடைய சக்த்யாதிகளைக் காட்டித்தெளிவிக்கத்திருவுள்ளத்தையுங் கூட்டிக்கொண்டு அநுபவத்திலே உத்யோகித்தாராய் நின்றார்-கீழ்; இதில்-திருக்கோவலூரிலேபோய் அநுபவிக்க ஒருப்படுகிறார். தாமமாகையாலே போகவென்று ஒருப்பட்டவளவிலே ஸ்ரீ பாதம்பேர்ந்ததில்லை, ஆயனுடைய ஸௌந்தர்யாதிகளை யநுஸந்தித்து, (காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்) என்கிறபடியே-கரணங்கள் சிதிலமாகாமையாலும் ஸ்வரூபாநுஸந்தாநத்தாலே வந்த அப்ராப்தியாலும், ஆச்ரயணவேளையோடு போகவேளையோடு வாசியற அவன் மேல்விழுந்து ஆச்ரயிப்பிக்க ஆச்ரயிக்கையும் அவன்மேல் விழுந்து புஜிப்பிக்க புஜிக்கையுமிறே ஸ்வரூபம். (கூவுதல் வருதல் செய்யாய்)(என்திறஞ்சொல்லார்)என்னக்கடவதிறே. ஆக, கரணசைதில்யத்தாலும் அப்ராப்தியாலும்தாம்போகமாட்டிற்றிலர், தாம் இருந்தவிடம்திருக்கோவலூராகப்பெற்றிலர், கூப்பிடத்தொடங்கிஞர். திருக்கோவலூரை யநுபவிக்கப்பாரித்தவர் திருப்பதிகளைப் பற்றிக் கூப்பிடுவானென்னென்னில்; கதிபொறுக்கிக் கூட்டுவாரைப்போலே ஆயனுடைய ஸ்வபாவம் திருப்பதிகளிலே ப்ரகாசிக்கையாலே அத்தைப்பற்றிக் கூப்பிடுகிறார். (ఽష్ణూనాసర్వశ్లోకా) (விஷ்ணுநாஸத்ர்சோவீர்யே) என்னுமாப்போலே.

மூ.—நீரகத்தாய்நெடுவரையினுச்சிமேலாய்
நிலாத்திங்கள்துண்டத்தாய்நிறைந்தகச்சி
ஊரகத்தாயொண்துறைநீர்வெஃகாவுள்ளாய்
உள்ளுவாருள்ளத்தாயுலகமேத்தும்
காரகத்தாய்!கார்வானத்துள்ளாய்!கள்வா!
காமருபூங்காவிரியின்தென்பால்மன்னு
பேரகத்தாய்பேராதென்னெஞ்சினுள்ளாய்
பெருமானுன்திருவடியேபேணினேனே. (அ)

---

எட்டாம்பாட்டு —(நீரகத்தாய்) தேசஸ்வபாவம் - ஆஸுரப்ரக்ருதிகள் மேலிட்டிருக்கை. ஆசைப்படுகிறதென், துக்கப்படுகிறதென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவ்விஷயத்திலே யித்யாதி.) தாமமாகையாலே - ப்ரேமாந்தரான தாமமாகையாலே. ஆச்ரயணத்துக் கொழிய அநுபவத்துக்குத் தாம் மேல்விழ வேண்டாவோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆச்ரயணேத்யாதி.)

| பதம். | உரை. |
|---|---|
| நீரகத்தாய் | திருநீரகத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனாய், |
| நெடுவரையின் உச்சிமேலாய் | * மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் வைப்பான திருமலையிலே நின்றருளினவனாய், |
| நிலாத்திங்கள் | ஸகல கலைகளாலும் பூர்ணனான சந்த்ரனைப்போலே தாபத்தைப் போக்குமவனாய், |
| துண்டத்தாய் | பூமியிலே ஒருகண்டமான திருப்பதியிலே நின்றருளினவனாய், |
| நிறைந்த | அழகுநிறைந்த, |
| கச்சி | காஞ்சீபுரத்திலே, |
| ஊரகத்தாய் | திருவூரகத்திலே திருவுலகந்தருளின வேஷத்தோடே நின்றவனாய், |
| ஒண் | அழகிய, |
| நீர்த்துறை | தடாகத்தின் கரையிலே, |
| வெஃகாவுள்ளாய் | திருவெஃகாவிலே கண் வளர்ந்தருளுமவனாய், |
| உள்ளுவார் உள்ளத்தாய் | உன்னை சேவியென்று அநுஸந்திப்பாருடைய மநஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணுமவனாய், |
| உலகம் ஏத்தும் | லோகத்தாரெல்லாரும் ஸ்தோத்ரம்பண்ணும்படி, |
| காரகத்தாய் | திருக்காரகத்திலே நின்றருளினவனாய், |
| கார்வானத்துள்ளாய் | திருக்கார்வானத்திலே மழைக்காலத்து மேகம்போலே வர்த்திக்குமவனாய், |
| கள்வா | ஆச்ரிதர்க்காயிருக்கிற திருமேனியை அவர்களுக்குக் காட்டாத கள்வனாய், |
| காமருபூம் | மிக்க அழகையுடைத்தான, |
| காவிரியின் தென்பால் | காவேரியின் தென் கரையிலே, |
| மன்னு | நித்யவாஸம்பண்ணுகிற, |
| பேரகத்தாய் | திருப்பேரகத்திலே யெழுந்தருளியிருப்பவனாய், |
| என்நெஞ்சில் | என்னெஞ்சிலே, |
| பேராதுள்ளாய் | பேராதிருப்பவனாய், |
| பெருமான் | ஸர்வஸ்வாமியான |
| உன்திருவடியே | தேவரீருடைய திருவடிகளையே, |
| பேணினேன் | காணவேணுமென்கிற ஆசையாலேகூப்பிடாநின்றேனென்கிறார். (அ) |

வ்யா.—(நீரகத்தாய்) திருநீரகத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனே. நீரினுடைய ஸ்வபாவத்தை யுடையவன் வர்த்திக்கையாலே தத்ஸம்பந்தநிபந்தநமாக (நீரகம்) என்று-திருப்பதியைச் சொல்லுகிறது.

ஆத்மஸ்வரூபம் ஏகரூபமாயிருக்கச்செய்தே கர்மாநுகுண மாக தேவாதிஜாதிபேதமுண்டாய், ஜாத்யநுகுணமான புத்திபே தமுமுண்டாய், தநுகுணமாக ஜீவநபேதங்களுண்டானாலும் ஸர் வோபஜீவ்யமாயிறே ஜலமிருப்பது. அப்படியே திருநீரகத்துநாய னாரும் ஸர்வோபஜீவ்யராயிருக்கை. திருவுலகளந்த திருவடிகள் ஸர்வோபஜீவ்யமாயிறே யிருப்பது. இஸ்ஸ்வபாவம் இத்திருப்பதி யிலே ப்ரகாசிக்கையாலே வரையாதே எல்லார்க்கும் அநுபாவ்ய னானீ எனக்குமுகங்காட்டாதொழிவதே! என்கிறார்.

(நெடுவரையினுச்சிமேலாய்) பூமியிலுள்ளார் அநுபவிக்கை யன்றிக்கேஊர்த்த்வலோகங்களிலுள்ளாரும்அநுபவிக்கும்படி திரு மலையிலே நின்றருளினவனே. (வானவர் வானவர்கோனொடும் நமன்றெழுந்திருவேங்கடம்) என்னக்கடவதிறே. ஊர்த்த்வலோக ங்களை யளந்த திருவடிக்கு ஸ்மாரகமாயிருக்கிறதாய்த்து - திருமலை யின்நிலை. (ஈச்வரோஹம்) என்றிருப்பார்க்கு மகப்பட முகங் கொடுக்கக்கடவநீ எனக்குமுகங்காட்டாதொழிவதே!.

(நிலாத்திங்கள்துண்டத்தாய்) இதுவும் நாயனார்ஸ்வபாவத் தைப்பற்றத் திருப்பதிக்குத் திருநாமமாகிறது. ஸகலகலைகளாலும் பூர்ணனான சந்த்ரனைப்போலே தாபத்ரயாதுரர்க்குதாபஹரனா யும் அநுபவிப்பார்க்கு போக்யனாயுமிருக்கிறவனே. (సూర్యాంశుజనితం తాపం నిర్వ్యేత్తారాపతిశ్శశీ) (ஸூர்யாம்சுஜநிதம்தாபம் நிர்வ்யேதாரா பதிஶ்ஶஶம்) என்கிறபடியே - ஆதித்யகிரணங்களாலே தப்தரான சேதநர்க்கு சாந்திஹேதுவாயும் ஆஹ்லாதகரனாயுமிறே - சந்த்ர னிருப்பது. (நிலாத்திங்கள்) கலைகுறைந்தநாளில் நிலாமழுங்கியிரு க்கையாலே (நிலாத்திங்கள்) என்கிறது. பூமியிலே ஒருகண்டமி றே திருப்பதியாகிறது; அத்தைப்பற்றத் (துண்டம்) என்கிறது. இத்தால்-அல்லாத தேசங்களிற்காட்டில் இதுக்குண்டான வ்யா வ்ர்த்திதோற்றச் சொல்லுகிறது. திருவுலகளந்தருளினபோதை வடிவில் ச்ரமஹரதைக்கும் போக்யதைக்கும் ஸ்மாரகமா யிருக்கி றது. ஸர்வர்க்கும் ச்ரமஹரனாய் ஆஹ்லாதகரனாயிருக்கிறநீ என க்கு முகங்காட்டாதொழிவதே!.

---

ஆழ்வார்கள்நாயனாருடைய வோரோகுண மென்றதுக்குத் திருமலையில்நிலையிலே அந்தகுணம் ப்ரகாசிக்கிறதென்ன; அருளி ச்செய்கிறார் (ஊர்த்த்வலோகேத்யாதி.) இங்கு, வானவரென்கி றது - இரண்டா மர்த்தத்தைப்பற்ற.

வானவர் - தேவர்கள். திங்கள் என்னவமையாதோ, நிலா வென்று விசேஷிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கலைகு லைந்தநாளிலித்யாதி)

(நிறைந்தகச்சியூரகத்தாய்) அழகாலும் சீலத்தாலும் காஞ்சீபுரமித்தனையும் நிரம்பிச் சுழியாறுபடும்படி திருவூரகத்திலே நின்றருளினவனே. திருவுலகளந்தருளினமையை ப்ரத்யபிஜ்ஞை பண்ணலாம்படியிறே அங்குநிற்கிறது. (நிறைந்தகச்சி) (ஸ்ரீப்யஶ்ச ஸஜ்ஜநாஶ்ரயம்) (சோபயந் தண்டகாரண்யம்) என்னுமாப்போலே திருக்கச்சியடைய இவர் நிழலீட்டாலே நிரம்பியிருக்கை. திருப்பதிகளாலே நிறைந்தகச்சி யென்னவுமாம்.

(ஒண்துறை நீர்வெஃகாவுள்ளாய்) திருவெஃகாவில் அழகிய துறையைப்பற்றிக் கண்வளர்ந்தருளினவனே. அல்லாததுறைகளைப்போலன்றியே ஆழ்வார்திருமழிசைப்பிரான் இழிந்து தீர்த்தமாடின துறையாகையாலே அழகிய துறையென்கிறது. தத்ஸம்பந்தத்தாலேயிறே அத்துறையைப் பற்றிக்கிடக்கிறது. ஆச்ரிதன் போனபோது அவன்பின்னேபோயும் அவன் வந்தவாறே வந்து கால்கடைதலைமாடாகக்கிடந்தும் இப்படியிறேஅங்குத்தை ஆச்ரித பாரதந்த்ர்யமிருப்பது.(இருந்தவூரிலிருக்கும்மானிடரொத்தவங்கள் செய்தார் கொலோ)என்று-வைஷ்ணவனிருந்ததேசம் வைஷ்ணவனுக்கு உத்தேச்யமாயிருக்குமாப்போலே ஆச்ரிதஸ்பர்சமுள்ளதொருதுறையும் ஈச்வரனுக்குஉத்தேச்யமாயிருக்கிறபடி.(வாசல்கடைகழியாவுள்புகாகா மமருபூங்கோவலிடைகழியே பற்றியினி) என்றவர்களோடே கூட நெருக்கிக்கொண்டு புகுந்திருந்து அவர்கள்போனவிடத்திலும் அவ்விடத்தை விடாதே யிருந்தபடிக்கு ஸ்மாரகமாயிருக்கிறதாய்த்து-திருவெஃகாவில்நாயனார் ஸ்வபாவம். ஆச்ரிதரோடே காற்கடை தலைமாடாகவிறேபரிமாறிக்கிடக்கிறது. சொன்னவண்ணஞ் செய்தார். ஆச்ரிதஸ்பர்சமுள்ள தொன்றைப் பற்றி விடாதே யிருக்கிறநீ உன்னையொழியச்செல்லாத வெனக்கு முகங்காட்டாதொழிவதே!.

(உள்ளுவாருள்ளத்தாய்)சேஷியொருத்தனுண்டென்று அநுஸந்திப்பாருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணுமவனே. திருப்பதிகள்நிலையும் ஓராச்ரிதனுடைய ஹ்ருதயத்தைக்கணிசித்திறே.(நின்றதெந்தை)இத்யாதி. ஆசாலேச முடையாருடைய ஹ்ருதயத்திலே குடியிருக்கக்கடவநீ உன்னையொழியச்செல்லாத வெனக்குமுகங்காட்டாதொழிவதே!.(உலகமேத்துங்காரகத்தாய்)லோகமடங்க ஏத்தும்படியாகத் திருக்காரகத்திலே நின்றருளினவனே.

---

விவரணம் (ஸ்ரீப்யஶ்ச - சோபயனித்யாதி.) திவ்ய தேசத்தை அநுபவிக்கிறவர் ஆச்ரிதவிஷயத்தி லிருப்பைச்சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (திருப்பதிகளாலே யித்யாதி.)

(ஶ்ரீ லோகவிக்ராந்தசரணௌ)(லோகவிக்ராந்தசரணௌ) என்றும் ஸர்வலோகங்களும் வழக்குப்பேசி ஆச்ரயிக்கலாம்படி த்ரைவிக்ரமபதாநம் பண்ணின ஆயனுடைய ஸர்வஸமாச்ரயணீயதைக்கு ஸ்மாரகமாயிருக்கிறபடி. ஸர்வஸமாச்ரயணீயனான நீ எனக்கு முகங்காட்டாதொழிவதே!.

(கார்வனத்துள்ளாய்) வர்ஷுகவலாஹகம்போலே திருக்கார்வானத்திலே வர்த்திக்கிறவனே. இத்திருப்பதிக்கு திருநாமம் இந்நாயனார் ஸ்வபாவத்தைப் பற்றஆய்த்து. மேகம் ப்ரயோஜநநிரபேக்ஷமாக ஜலஸ்தலவிபாகமின்றிக்கே வர்ஷிக்குமாப்போலே அர்த்தித்வ நிரபேக்ஷமாக வெல்லார்தலைகளிலும் திருவடிகளைவைத்த ஆயனுடைய ஔதார்யத்துக்கு ஸ்மாரகமாயிருக்கிறது. அபேக்ஷாநிரபேக்ஷமாக வௌதார்யம் பண்ணக்கடவ நீஎன்பக்கல் ஔதார்யம் பண்ணாதொழிவதே!.

(கள்வா) அபஹாரகனே. நாம்(கள்வா)என்னமாட்டோமே-இவரோபாதிபந்தமில்லாமையாலே. அபஹாரமாவது-ஒருவனுக்காயிருக்குமத்தை அவனுக்காகாதபடி மறைக்கை. ஆச்ரிதனுக்கநுபாவ்யமான வடிவை அவனுக்குக் கொடாதொழிகையிறே - ஈச்வரனுக்கு அபஹாரமாவது. அதிறே சேதநனுக்கும் ஆத்மாபஹாரமாகிறது. ததர்த்தம் ஸ்வரூபமாயிருக்க, அத்தை யிசையாதே (ஸ்வதந்த்ரோஹம்) என்கையிறே - அபஹாரமாகிறது. என்னுடைய ஆத்மாபஹாரத்தைத்தவிர்த்தது உன்னுடையவாத்மாவை அபஹரிக்கைக்கோதாதர்த்யத்தைஜீவிப்பித்தது.(பக்தாநாம்)(பக்தாநாம்) என்கிறத்தை அழிக்கைக்கோ.

(காமருபூமித்யாதி) ஸ்ப்ர்ஹணீயமானவழகையுடைய காவேரியின் தென்பார்ச்வத்தில் திருப்பேரிலே நித்யவாஸம் பண்ணுகிறவனே. கோயிலை நடுவேயுடைத்தாகையாலே (காமருபூங்காவிரி) என்கிறார். ரக்ஷ்யரக்ஷக விபாகமற இரண்டுதலைக்கும் உத்தேச்யமாயிறே கோயிலிருப்பது. (தென்பால்)கரையேவழிபோவாருண்டோவென்று கரையைப்பற்றிக் கிடக்கிறபடி. ஜீவநார்த்தமாகக் கரையைப் பற்றியிருப்பாரைப்போலே - ரக்ஷகத்வ ஸித்திக்காகக் கரையைப்பற்றிக் கிடக்கிறபடி. (மன்னு) ஸம்ஸாரம் கிழங்கெடுத்தா லல்லது கிளம்போமென்று கிடக்கிறபடியிறே. "ஆரோநம்மை வந்து கிட்டுவார்" என்று அவஸரப்ரதீக்ஷையக்கிடக்கிற நீஎனக்கு முகங்காட்டாதொழிவதே!. இதுவும் ஆச்ரிதனை யொழியச்செல்லாதே யிருக்கிற ஆயனுக்கு ஸ்மாரகமாயிருக்கிறது.

---

ஆத்மா தேஹேயென்கிறந்யாயத்தாலே உன்னுடைய வாத்மா உன் திருமேனியிலே நடுவே யுடைத்தென்கைக்கு நம்பெருமாள் கோயிலுக்கு ஆதிக்யமேதென்ன; அருச்செய்கிறார் (ரக்ஷ்யரக்ஷகேத்யாதி.)

(பேராதென்னெஞ்சினுள்ளாய்) உன்னை சக்ஷுர் விஷயமாக்கா தொழிந்தால் மநஸ்ஸுக்கு விஷயமாக்கவும் வேணுமோ. அக வாய் பெரியதிருநாளாய்ச் செல்லும்படி பண்ணுதல் புறம்பு ஊத்தும் சுவடுமற்றுக் கிடக்கவும் வேணுமோ. நெஞ்சுக்குவிஷய மாக்கா தொழிந்தாயாகில் மறந்து பிழைக்கலாய்த்தே!, கண்டு பிழைக்கலாய்த்தே. கண்டுபிழைக்கப்பெற்றிலேன், மறந்துபிழைக் கப்பெற்றிலேன், முடிந்துபிழைக்கப்பெற்றிலேன். கண்டுபிழைக் கப்பெற்றிலர்-காட்சி அவன்பக்கலதாகையாலே; மறந்துபிழைக்க மாட்டிற்றிலர் - விஷயவைலக்ஷண்யத்தாலே; முடிந்து பிழைக்கப் பெற்றிலர் - இன்னமொருக்கால் காணலாமென்னும் நசையாலே. பிரிந்தாலும் (அது, அது) என்று கிடக்கும்படியிறே விஷயவைலக்ஷ ண்ய மிருப்பது. விஷயாந்தரங்களாகிலிறே-நாளோட்டத்தோடே மறந்து பிழைக்கலாவது; நாள்செல்லச்செல்ல ஆற்றாமை மிகுக் கும் விஷயமிறே இது. முடிந்து பிழைக்கமாட்டுகிறிலர் - ஸத்தை அவனதீநமாகையாலே. பிராட்டிக்கு ஆற்றாமைமீதூர்ந்து வேண் யுத்க்ரதநத்திலே யொருப்பட்டவிடத்திலும் முடியப்போய்த்த தில்லையிறே; தான் பிறர்சரக்காகையாலே. (உயிரினுல் குறைவிலம்) என்றவிடத்திலும் முடியாமையாலே, (சாமாறே - பணி) என்று அவனை இரக்கவேண்டிற்றிறே.

(பெருமான்) இப்படிப்பட்ட திருப்பதிகளுக்குத் தொகையில் லாதவனே. (ஆயன்) ஸ்வபாவத்துக்கு ஸ்மாரகமான திருப்பதிக ளுக்குத் தொகையில்லாமையாலும், அவை எல்லாவற்றையும் பேசத் தமக்கு சக்தியில்லாமையாலும், அநுக்தமான திருப்பதிகளை ஸமுச்சயிக்கிறார். அதவா, (பெருமான்) சேஷியானவனே. முறை யறிந்து என்னகார்யம் செய்தேனென்கிறார். முறையறிந்திலே னுகில் ஸம்ஸாரிகளைப்போலே விஷயப்ரவணனாய்க்களித்துத் திரிய லாய்த்தே. தாபத்ரயதப்தரான ஸம்ஸாரிகளைப்போலேயாகப் பெ ற்றிலேனென்பா னென்னென்னில்; அஹங்காரமமகாரங்க ளடி யாகவரும் துக்கத்தைப் பொறுக்கலாம், அதுபோலன்றே விரஹ தாபம்.

(సర్వంసహామమూత) (நான்கண்டுகொண்டேன் நாராயணுவென் னும் நாமம்) என்றது ஸுகஹேதுவென் றிருந்தோம், துக்கஹே துவாய்த்தலைக்கட்டிற்றி யென்கிறார். ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் ஸ்வரூபாநுரூபமான ஜீவநம்பெற்றாலிறே - ஸுகமுள்ளது; அல் லாதபோது துக்கஹேதுவாமித்தனையிறே.

---

ஊத்து - காஹளத்வநி. சுவடு - த்வஜாதி. ஸத்தை பராதீந மானல் முடியவொண்ணுதோ வென்ன; அருளிச்செய்கிறார். (பிராட்டிக்கித்யாதி.)

மாந்த்யமுடையவனுக்கிறே பசி உத்தேச்யமாவது; பசியனுக்கு சோறுபெறுதபோது பசிதானே து:கஹேதுவாயிறே யிருப்பது. ஒன்றில் ஸம்ஸாரிகளைப்போலே விஷயாநுபவத்தாலே களித்தே னல்லேன், முக்தரைப்போலே பகவதநுபவத்தாலே களித்தேனல் லேன், முமுக்ஷுக்களைப்போலே ஸ்வரூபத்தையுணர்ந்து (தத்ஸ்ய ஸத்ரூஸம்பவேத்) (தத்தஸ்யஸத்ரூஸம்பவேத்) என்றிருந்தே னல் லேன். இவை யொருகோடியிலும் அந்வயியாதேயிருப்ப தொரு புடையுண்டாவதே! எனக்கு என்கிறார்.

தேஹாத்மாபிமாநிகளாய் விஷயப்ரவணராய்த் திரிகிற வுமக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தையுண்டாக்கி,ஸ்வரூபாநுரூபமானபுருஷார்த்தத்தை யறிவிப்பித்து, நம்மோட்டை ஸம்ச்லேஷ விச்லேஷங்களே ஸுகது:கமாம்படி புகுர நிறுத்தி, இப்படி நாம் பண்ணின வுபகாரங்களெல்லாம் கிடக்க க்ர்தக்நரைப்போலே ஒன்றுஞ் செய்திலோமாக நீர் இங்ஙனே கூப்பிடுவானென்னென்னில்; (உன் திருவடியேபேணினேனே)செய்தஅம்சத்தில்க்ர்தக்நனாய்க்கூப்பிடுகிறேனல்லேன், அவ்வம்சத்தில் க்ர்தஜ்ஞன், உன் திருவடிகளைக் காணவேணுமென்கிற வாசையாலே கூப்பிடுகிறேனென்கிறார். நாட்டாரில்காட்டில் ஒரு வ்யாவ்ர்த்தியோ வெனக்கு புருஷார்த்தம், உன்னைக் கண்ணாலே கண்டநுபவிக்கையன்றோ யெனக்கு புருஷார்த்தம். உன்திருவடியைக் காட்டாதபடியாலே நீபண்ணின க்ர்ஷியும் து:கஹேதுவாய்விட்டதித்தனை.

(உன்திருவடி) ப்ராப்யமும் ப்ராபகமுமான வுன்திருவடி. அநேகம் திருப்பதிகளைச் சொல்லி, (உன்திருவடி) என்கையாலே ஆயன்படியையே திருப்பதிகளிலு மநுபவிக்கிறானென்னு மிடந் தோற்றுகிறது. (உன்திருவடி) ஏவம்விதமான ஸ்வபாவத்தை யுடைய வுன்திருவடி. ... ... .. ... ... (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. (வங்கத்தால்) தாமிருந்தவிடம் திருக்கோவலூராகப் பெருமையாலும், அவன் தாமிருந்தவிடத்திலே வந்து முகங்காட்டாமையாலும்,அவன் வந்துமுகங்காட்டுகைக்கு ஹேதுவான ஸ்வபாவங்களைப் பற்றிக் கூப்பிட்டாராய் நின்றார்-கீழ்; இதில் - திருவுலகளந்தருளினபோதைச் செவ்வியை யநுபவிக்கவேணுமென்று ஆசைப்பட்டவர்க்கு அச்செவ்வியோடே திருக்கோவலூரிலே வந்து நின்றபடியைக் காட்டிக்கொடுத்தோமாகில் ஸாபேக்ஷரான தாம் நம்பக்கலிலேவந்து அநுபவிக்குமத்தனையன்றோ வென்று நினைத்திருந்தானோ வென்றும், நாம்அயோக்யனென்று முகந்தாரா திருந்தானோ வென்றும் சங்கித்து,

---

ஸுகஹேதுவான சேஷத்வஜ்ஞாநம் து:கஹேதுவாமோ வென்ன; அருளிச்செய்கிறார்.(மாந்த்யமுடையவனுக்கித்யாதி.(அ)

அவன்படியைப்பார்த்தால் ஆசாலேசமுடையா ரிருந்தவிடத்தே சென்று முகங்கொடுக்குமவன், யோக்யாதாயோக்யதைபாராதேமு கங்கொடுக்குமவன்; ஆகையாலே அக்குறை அவனுக்குண்டாகமாட் டாது. இனி இழக்கைக்கடி என்பாபமிறே. ஆகையாலே யாதநா சரீரம்போலே முடியவும்பெறாதே தரிக்கவும்பெறாதே கிடந்துழை க்குமிதுவே யாய்விட்டது என்கார்மென்று தம்முடைய அவஸ்த் தையை யநுஸந்தித்து விஷண்ணராகிறார்.

ரூ.—வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர்
மல்லையாய்மதிட்கச்சியூராய்பேராய்
கொங்குத்தார்வளங்கொன்றையலங்கல்மார்வன்
குலவரையன்மடப்பாவையிடப்பால்கொண்டான்
பங்கத்தாய்பாற்கடலாய்பாரின்மேலாய்
பனிவரையினுச்சியாய்பவளவண்ணா!
எங்குற்றாயெம்பெருமானுன்னைநாடி
ஏழையேனிங்ஙனமேயுழிதருகேனே. (கூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வங்கத்தால் | மரக்கலங்களாலே, | குலவரையன்மடப்பாவை | ச்லாக்யனானபர்வதராஜன்புத்ரியான பார்வதியை, |
| மா | பெருவிலையுள்ள, | இடப்பால் | இடது பக்கத்திலே |
| மணி | ரத்நங்களை, | கொண்டான் | யுடைய ருத்ரனை, |
| வந்து | கொண்டுவந்து, | பங்கத்தாய் | வலதுபக்கத்திலேயுடையனாய், ஆச்ரிதர்க்கு முகங்கொடுக்கைக்காக, |
| உந்தும் | தள்ளா நின்றுள்ள, | பாற்கடலாய் | திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளுமவனாய், |
| முந்நீர் | கடற்கரையிலுள்ள, | பாரின்மேலாய் | பூமியிலுள்ளார்க்கு நன்மை செய்கைக்காகத் திருவவதரித்தவனாய், |
| மல்லையாய் | திருக்கடல் மல்லையிலே நித்யவாஸம் பண்ணுமவனாய். | பனிவரையினுச்சியாய் | குளிர்ச்சியே வடிவான திருமலையிலே நின்றருளினவனாய், |
| மதிள் | திருமதிள்களையுடைய, | பவளவண்ணா! | பவளம்போலேபோக்யபூதனானவனே! |
| கச்சியூராய் | கச்சி நகரிலே வர்த்திப்பவனாய், | | |
| பேராய் | திருப்பேரிலே வர்த்திப்பவனாய், | | |
| கொங்கு | தேன்மாறாத, | | |
| ஆர்வளம் | மிக்க பரிமளத்தையுடைத்தான, | | |
| கொன்றையலங்கல் | கொன்றைமாலையை | | |
| மார்வன் | மார்விலே யுடையனாய், | | |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எங்குற்றாய் | எங்கேபுக்காய், | நாடி | தேடிக்கொண்டு, |
| எம்பெருமான் | எனக்கு ஸ்வாமியானவனே, | இங்ஙனமே | இவ்வண்ணமாகவே |
| உன்னை | தேவரீரை, | உழிதருகேன் | அலைச்சல்படாநின்றேன். (௬) |
| ஏழையேன் | அதிசபலனான நான், | | |

வ்யா.—(வங்கத்தாலித்யாதி) ஓராச்ரிதன் இக்கரையிலே திருப்பளித்தாமத்தைச்சமைத்து இச்செவ்விமாறுவதுக்கு முன்பே போய்ச் சாத்தவேணுமென்றுநினைத்துக் கடல்வற்றிலல்லது நமக்கு வழிபோகவொண்ணாதென்று கடலையிறைக்கத் தொடங்க இவனுடைய ஆதராதிசயத்தைக்கண்டு கடற்கரையிலே இவன் ஆக்கின திருவிளையாடு சூழலுக்குள்ளே வந்து தறைக்கிடை கிடந்தவிடமாய்த்து - திருக்கடல்மல்லை. ஆனால் (முந்நீர்மல்லை) என்ன வமைந்திருக்க, கீழ்ல்விசேஷணங்களுக்கு ப்ரயோஜநமென்னென்னில்; மரக்கலமாகிறது - த்வீபாந்தரவஸ்துவை த்வீபாந்தரத்திலே கொடுவந்து தள்ளுமதிறே; அப்படியே பரமபத நிலயனானதன்னை லீலாவிபூதியிலே கொடுவந்து பொகட்டதாய்த்து-ஆச்ரிதவாத்ஸல்யம். இதுக்கு, மரக்கலஸ்தாநீயம்-ஆச்ரிதவாத்ஸல்யம். மாமணி-மஹார்க்கமானமணி. (கையார் சக்கரத்தென்கருமாணிக்கம்) என்றும், (வானவருச்சிவைத்தபெருமணி) என்றுஞ் சொல்லுகிற மாணிக்கத்தையிறே - கொடுவந்து தள்ளிற்று. (வந்துந்தும்) கொள்வாரற்றிருக்கக் கடற்கரையிலே வந்து தள்ளிக்கிடக்கிறபடி.மாணிக்கத்தின் சீர்மையறிந்து கிழிச்சீரையிலேயிட்டு ஆளுமாப்போலே ஸுஹிரிபோக்யமானவஸ்து கடல்கரையிலே வந்து கிடக்கிறதென்று வாசியறிந்து பேணுவாரற்றிருக்கச்செய்தேயிவர் கண்வளர்ந்தருளுகிறது. கிட்டினாலும் ப்ரயோஜநத்தை கொடுபோமதேயொழியத் தன்னை யாசைப்படுவாரில்லையே.

(முந்நீர்மல்லையாய்) மஹார்க்கமான த்வீபாந்தரச்சரக்கு-த்வீபாந்தரத்திலேவந்து விலையுண்ணாதேபோகச் சோம்பாதே கடற்கரையிலேகிடக்கிறபடி. அநந்தசாயியிவர், அவனைவிட்டு ஆச்ரிதனுக்காகக் கடற்கரையிலே தறைக்கிடைகிடக்கிறான். நித்யாநபாயினியானபிராட்டியையும் விட்டுக்கிவர் - ஓராச்ரிதனுக்காகத்தனியே வந்துகிடக்கிறது. இவ்விசேஷணங்களாலே அவன்சீர்மையறிந்து பேணுவாரில்லையென்று இத்தேசத்தினுடையதண்மையைச்சொல்லுகிறது. ஆச்ரிதனிருந்தவிடத்தே வந்து முகங்காட்டும் வத்ஸலனிவர் - என்னாற்றாமைக்கு முகங்காட்டாதொழிகிறான்.

(மதிட்கச்சியூராய்) கீழ்ச்சொன்ன திருப்பதிகளை இங்கே சொன்னாராகிலும்-ப்ரயோஜநபேதத்தாலேபுநருக்திதோஷமில்லை.

ஒன்பதாம்பாட்டு. (வங்கத்தால்) (மல்லையாய்)என்று-தறைக்கிடை கிடக்கிறத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (அநந்தசாயியித்யாதி.)

திருக்கடல்மல்லைபோலே பேறுவாசற்றிருக்கையன்றியே இவ்விஷயத்தினுடைய சீர்மையையறிந்துசில தார்மிகர்மதிளிட்டு நோக்கப்பெற்றோமிறே யென்றார். அங்கு - இழவைப்பற்றக் கூப்பிட்டார்; இங்குப்பரிகிறார். இழவிலும் அத்தலைக்கு என்ன தீங்குவருகிறதோவென்று பரியவேண்டும்படியிறே-ஸ்வரூபமிருப்பது. அதவா, ப்ரதிகூலர் கிட்டாமைக்கு இட்டமதிளென்றிருந்தோம், அது போய் அநுகூலர் கிட்டாமைக்கு இட்டமதிளாயிருந்ததீ! என்கிறாரென்னவுமாம். (மல்லையாய் மதிட்கச்சியூராய்) ஒருதுறையிலே வந்திறங்கினது ஒருநகரத்திலே விலைபெறுவது; அப்படியே திருக்கடல்மல்லைத்துறையிலேயிறங்கி காஞ்சீபுரத்திலே வந்து விலைபெற்றபடி. அத்தலையில் ஸௌகுமார்யத்தைப் பார்த்துப் பரிகையும் தனிமையைப் பார்த்துக் கிலாய்க்கையும் இரண்டும் ஆத்மதர்மமிறே.

(பேராய்) ஆச்ரிதரைக்கிட்டுமோவென்று அவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறபடியிறே-கீழ்ச்சொல்லிற்று; இங்கு-(திருமாலிருஞ்சோலைமலையென்றேனென்னத் திருமால்வந்தென் னெஞ்சு நிறையப்புகுந்தான்) என்கிறபடியே - விமுகரையுமுட்பட மடிமாங்காயிட்டு விஷயீகரிக்க வந்திருக்கிறவன்கிடீர் தன்னையொழியச் செல்லாதவென்னை வந்துவிஷயீகரியாதிருக்கிறானென்கிறார். இத்தால்-ஆச்ரிதருகந்தவிடத்திலே தானேவந்து முகங்கொடுக்கும்படியைச் சொல்லுகிறது. மேல் அயோக்யதை பாராதே முகங்கொடுக்கும்படியைச்சொல்லுகிறது (கொங்கித்யாதி) (நாயேகொள், பேயேகொள்) என்கிற வடிவுகிடீர்; அவ்வடிவை யொழியச்செல்லாதவெனக்கு அரிதாய்த்தென்கிறார். தேனையும் பரிமளத்தையும் செவ்வியையுமுடைத்தான கொன்றைமாலையாலே அலங்க்ர்தமான மார்பையுடையவன். கொங்கு - தேன். ஆர் - மிகுதி. வளம்- அழகு; - புஷ்பத்துக்கு அழகு - செவ்விபெற்றிருக்கையும், பரிமளிதமாயிருக்கையுமிறே.

(குலவரையித்யாதி) பார்வதியைத் தனக்கு பார்யையாகவுடையவன். ருத்ரனுக்கு பார்ச்வத்தைக் கொடுத்துஎன்னவமைந்திருக்க, இவனை இங்ஙனம் திருநாளெழுந்தருளுவிக்கிறது இவனுடைய துர்மாநந் தோற்றுகைக்காக.

---

இழந்துநோவுபகிறவர் பிரியக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (இழவிலுமித்யாதி.) பிரிந்தவர் வெறுக்கக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (அத்தலையித்யாதி.)

அவஸரப்ரதீக்ஷனாயிருக்கையன்றிக்கே தானேமேல்விழும்படி சொல்லுகிறது (இங்குத்திருமாலிருஞ்சோலைமலையித்யாதி.) இத்தால் - கீழ்ச்சொன்ன மூன்று பதத்தாலும். பேயேகொள்- ருத்ரன் சுடுகாட்டுப் பேய். திருநாளெழுந்தருளுவிக்கிறது - குவலாக விசேஷணங்கள்சொல்லுகிறது.

திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனாய் ச்ரியப்பதியாயிருக்கிற ஸர்வேச்வரனோடே ஸமமாகக் கொன்றைமாலையிட்டு, (ஈச்வரோஹம்) என்றிருக்கிற துர்மாநிக்குக்கிடீர் உடம்புகொடுத்ததென்று தோற்றுகைக்காக.

(கொங்குத்தார் வளங்கொன்றையலங்கல்மார்வன்) * தண்டுழாய்மாலைமார்பனுக் கெதிர்த்தட்டாயிருக்கிறபடி. ஈச்வரன் ஜகத்ரக்ஷணத்திலே தனிமாலையிட்டிருக்கிறபடியைக் கண்டு, நமக்கும் ஈச்வரத்வஸித்தி யுண்டாம்போதைக்கு ஒருமாலை வேணுமென்று பார்த்து கொன்றையை மாலையாக இட்டிருக்கிறபடி. (குலவரையன் மடப்பாவை) * மலர்மகள் விரும்பும் நமரும்பெறலடிகளுக்கெதிர்த்தட்டாயிருக்கிறபடி. அவன் ச்ரியப்பதியாயிருந்தானே, நமக்கும் அதுஸித்திக்கும்போது ஒருமிதுநமாயிருக்க வேணுமென்றுபார்த்து உமாபதியாயிருக்கிறபடி.

(இடப்பால்கொண்டான்) * வலமார்பினில் வாழ்கின்ற மங்கைக்கெதிர்த்தட்டாயிருக்கிறபடி. (பங்கத்தாய்) (கூறுநந்தனியுடம்பன்) என்கிறபடியே - பெரியபிராட்டியாரோடே வழக்குப்பேசியிருக்கும்படியிறே உடம்புகொடுத்தது. நித்யாநபாயிநியான பிராட்டிக்குக் கொடுத்த வுடம்பைக்கிடீர் - அந்யபரனாய் (ஈச்வரோஹம்) என்றிருக்குமவனுக்குக் கொடுத்தது. அவன் படியையும் இவள் படியையுமன்று காணும் பார்ப்பது, ஸம்பந்தத்தையாய்த்துப் பார்ப்பது. (ஈச்வரோஹம்) என்றிருக்கிற துர்மாநிகளுக்குக் கொடுத்த வடிவுகிடீர் - பாதந்த்ரனாய் அத்தை யொழியச்செல்லாத வெனக்கு அரிதாய்த்தென்கிறார்.

(பாற்கடலாய்) குணக்ஷதந்யாயமாய் ருத்ரனொருவனுக்குமுடம்புகொடுத்தவளவேயோ, ப்ரஹ்மாதிகளுக்கு ஓராபத்துவந்தபோது ரக்ஷகரானநாம் தூரஸ்தனாகவொண்ணாதென்று பரமபதத்தைக் காற்கடைக்கொண்டு க்ஷீராப்தியிலே வந்துகண்வளர்ந்தருளுகிறவனே. அபேக்ஷாநிரபேக்ஷனாகவந்து முகக்கொடுக்கிறவன்கிடீர் அபேக்ஷையுடையவெனக்குமுகங்காட்டாதொழிகிறான்.

(பாரின்மேலாய்) அஸுரராக்ஷஸராலே குடியிருப்பிழந்து ஸகலதேவதைகளும் வந்து சரணம் புகுர ராமக்ருஷ்ணாதிரூபத்தாலே தன்னை யழிய மாறிவந்தவதரித்துரக்ஷித்தபடி சொல்லுகிறது.

---

பிராட்டியோடொக்க துர்மாநியான ருத்ரனுக்குக் கொடுத்த வுடம்பென்றுகூட்டி யோஜிப்பது. பராக்ஷகந்யாயம் - உத்க்ருஷ்டரை ரக்ஷிக்கவேணுமென்கிறந்யாயம்.

(సహి దేవై రుదీర్ణస్య రావణస్య వధార్థిభిః। అర్థితో మానుషే లోకే జజ్ఞే విష్ణుస్సనాతనః.) (ஸஹிதேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபிஃ - அர்த்திதோ மாநுஷேலோகே ஜஜ்ஞேவிஷ்ணுஸ்ஸநாதநஃ.) [సః - ஸஃ] தச்சப்தம் ப்ரக்ருதபராமர்சியிறே. (బహువగుణవ ద్రతః) (பஹுவகுணவத்ரதஃ) என்றிறே - கீழ்ச்சொல்லிற்று; அப்படிப்பட்ட குணாதிகளு கையாலே (பிறந்தான்) என்கிறார். அநந்யப்ரயோஜநர்க்காகப்பிறக்கை குணமன்றிறே. * [హి - ஹி] சப்தம்ஹேதுவிலே. [దేవైః - தேவைஃ]வந்து பிறந்தது, திருவடி திருவநந்தாழ்வான் அர்த்திக்கவோ, ப்ரயோஜநாந்தரபரராய் (ஈச்வரோஹம்)என்றிருக்கிற துர்மாநிகள் அர்த்தித்த கார்யஞ் செய்யக்கிடீர். கார்யம்கொண்ட ஸமநந்தரம் எதிரம்பு கோக்குமவர்களிறே. [ఉదీర్ణస్యరావణస్య వధార్థిభిః- உதீர்ணஸ்யராவணஸ்யவதார்த்திபிஃ] தன்னுடைய செருக்காலே லோகத்தையடைய வழித்துக்கொண்டுதிரியும்ராவண நிரஸநார்த்தமாக. ஸம்பந்தம் ஸர்வஸாதாரணமாயிருக்க அர்த்திக்கிறவர்கள் ப்ரயோஜநாந்தரபரராயிருக்க அவர்களை யழியச்செய்கைக்காகக் கிடீர்வந்து பிறந்தது. [అర్థితః-அர்த்திதஃ] இது கிடீர் அவர்கள் பண்ணினதபஸ்ஸு. [మానుషేలోకే - மாநுஷேலோகே] தேவதைகளுமகப்படக் கீழ்நோக்கிமுகம்நாட்டாததேசத்திலேகிடீர்வந்துபிறக்கிறது. [జజ్ఞే - ஜஜ்ஞே] நாட்டார் பத்துமாஸம் கர்ப்பவாஸம் பண்ணுவார்களாகில் பன்னிரண்டு மாஸம் கர்ப்பவாஸம் பண்ணிக்கிடீர் பிறந்தது. (విష్ణుః - விஷ்ணுஃ) வ்யாபக வஸ்துகிடீர்-வ்யாப்யைகதேசத்துக்கு சேஷமாய்ப் பிறந்தது. [సనాతనః-ஸநாதநஃ] நித்யவஸ்துகிடீர் பிறந்தானென்னும்படி ஒருத்தனுக்குபுத்ரனாய் வந்து பிறந்தது. இப்படி ப்ரயோஜநாந்தரபரர்க்கு மகப்படத் தன்னை யழியமாறிகார்யஞ் செய்கிறவன்கிடீர்அநந்யப்ரயோஜநரானவெனக்குமுகங்காட்டாதொழிகிறா னென்கிறார்.

(பனிவரையினுச்சியாய்) ப்ரயோஜநாந்தரபரர்க்கு முகங்கொடுத்தவளவேயோ, (கானமும்வானரமும் வேடுமுடைவேங்கடம்) என்கிறபடியே திர்யக்ஸ்தாவரஜாதிக்கு மகப்பட முகங்கொடுக்கத் திருமலையிலே வந்து நிற்கிறவன்கிடீர் எனக்குமுகங்கொடாதொழிகிறான். (பவளவண்ணா) அதுவுமாமிறே;-க்ரமப்ராப்தியைஸஹித்திருக்கலாம் வடிவு படைத்தானாகில். அப்படி பெற்றோமாகில் வேண்டினபோது முகங்கொடுக்கிறா னென்று ஆறியிருக்கலாமிறே. ஸ்வரூபத்தையநுஸந்தித்து ஆறியிருக்கும்படியன்றே அவன் வடிவு படைத்தது.

---

ப்ரயோஜநாந்தர பரர்க்காகப் பிறக்கை குணமோ வென்ன; அருளிச்செய்கிறார் (அநந்யப்ரயோஜநர்க்கித்யாதி.)

முகம்நாட்ட - முகம்வைக்க.

அதுவுமாமிறே - முகங்கொடாமையுமாமிறே.

(பவளவண்ணாவெங்குற்றாய்) வடிவின்போக்யதையை யநுஸந்தித்துக் கண்ணாஞ்சுழலையிட்டு முன்னடிதோற்றாமையாலே (எங்குற்றாய்) என்கிறார். (రామంమేనుగతాదృష్టి రద్యాపిననివర్తతే । నత్వాప శ్యామికౌసల్యే సాధుమాంపాణినాస్పృశ.) (ராமம்மேநுகதாத்ருஷ்டி ரத்யாபி நநிவர்த்ததே । நத்வாபச்யாமி கௌஸல்யே ஸாதுமாபாணிநா ஸ்ப்ர்ஶ.) [మేదృష్టిః - రామమ్ - అనుగతా] [மேத்ருஷ்டிஃ - ராமம் - அநுகதா] என்னுடைய கண்ணானது - அபிராமனதையைப்பற்றி பெருமாள்பின்னே போய்த்து. ஆச்ரயத்தை விட்டு விஷயத்தின்பின்னேபோய்த்து. பிறந்தகத்தில்ஸம்பந்தம் விஷயம்பெறுமளவும்போலே காணும். [మేదృష్టిః - மேத்ருஷ்டிஃ] என்று - கண்ணைக்கொண்டாடுகிறான். நான் விச்லேஷத்தாலே தளர்ந்து தறைப்பட்டுக் கிடந்தேன், கண் கூடப்போகப்பெற்றதிறே. கர்த்தாவாயிராதே கரணமாகப் பெற்றிலேனென்கிறான். [అద్యాపిననివర్తతే- அத்யாபிநநிவர்த்ததே] இவ்வளவிலும் மீண்டதில்லை; - உன்னுடைய தர்சநத்தாலே ஆச்வஸிப்பிக்க யோக்யதையுண்டானதசையிலும் மீண்டதில்லை. [నత్వాపశ్యామి - நத்வாபச்யாமி] ஆச்ரயமான நீர் இங்கே யிருக்க கண்அவர்பின்னேபோகையாவதென்னென்னில்; கார்யத்தைக்கொண்டு காரணத்தைக் கற்பித்தேனென்கிறான். வந்து நிற்க உன்னைக்காணப்பெற்றிலேனே, அத்தாலே சொல்லுகிறேன். நித்யாநுமேயமாயிறே இந்த்ரியங்களிருப்பது. பதார்த்த தர்சநத்தாலே இந்த்ரியங்களுண்டென்றறிகையும், அவை தோற்றாதபோது இல்லை யென்றறிகையுமாயிறே யிருப்பது. [కౌసల్యే-கௌஸல்யே] கைகேயியாயிட்டுக் காணாதொழிகிறேனன்றே. [సాధుమాం పాణినాస్పృశ - ஸாதுமாபாணிநாஸ்ப்ர்ஶ] என்னுடைய அதிக்ரமத்தை நினையாதே துர்க்கதியைப் பார்த்து ஐயோ என்றிரங்கி உன் கையாலே என்னை ஸ்பர்சியாயென்கிறான். அபிஷேகத்தைப்பாரித்துக் காப்பைக் கட்டி வநத்தேறப்போகவிட்டேனென்றதுபாராமல் அவனைப் பிரிந்து முடியும்படியாய் விடுவதே! என்றிரங்கி ஸ்பர்சியாயென்கிறான் "கண்ணானது அவன் பின்னேபோய்த்து, த்வகிந்த்ரியம் போய்த்தோ வில்லையோவென்றறியும்படி உன்கையாலே தடவிப்பாராயென்கிறான்" என்று அருளிச்செய்வர்பட்டர்.

(பவளவண்ணா வெங்குற்றாய்) (భక్తానామ్ - பக்தாநாம்) என்கிறவடிவைக் கொண்டு எங்கே புக்காய். வடிவின்வைலக்ஷண்யத்தைப்ரகாசிப்பித்தது அவ்வடிவைக் கொண்டு ஒளிக்கவோ. அதவா, (எங்குற்றாய்) ஸர்வதா இவ்வாற்றாமையில் அவன் வாராதொழியானென்றும் தம்முடைய ஆற்றாமையே செப்பேடாக வருமென்றும் நினைத்து (எங்குற்றாய்) என்று கையை நீட்டுகிறாரென்னவுமாம். கையை நீட்டினவாறே கைக்கெட்டும், பிடித்துக்கொள்ளலாமென்றிருக்கிறார்.

உபக்ரம் பெறாத கொடிபோலே தரைப்பட்டுக்கிடக்கிறவ ராகையாலே உபக்ரம் தேட்டமாயிறே யிருப்பது. படர்கொடியா யிறே யிருப்பது. படர்கொடியிறே ஆத்மவஸ்துவாகிறது.

(எம்பெருமான் - எங்குற்றாய்) உன்னுடைமை நோவுபடா நிற்க உடையநீயெங்கேபுக்கிருக்கிறாய். உடைமை யிருந்த விடத் தே உடையவன் வந்து முகங்காட்டு மித்தனை யொழிய உடையவ னிருந்தவிடத்தே உடைமை செல்லவற்றோ. சோறிருந்த விடத் தே பசியன் செல்லு மித்தனை யொழிய பசிய னிருந்தவிடத்தே சோறுசெல்லவற்றோ.

(உன்னைநாடி) நிரதிசயபோக்யனுமாய் ப்ராப்தனுமாயிருக் குறவுன்னைத் தேடி. ப்ராப்தியும் த்வரைக்குடலா யிருக்கிறதிறே - இவர்க்கு. அதவா, (உன்னைநாடி) அநாதிகாலம் * எதிர்சூழல்புக் குத் தேடித்திரிந்தவுன்னை நான் தேடும்படியாவதே!. (ஓடினே னோடி) என்கிறபடியே விஷயாந்தரங்களிலேலகைகழிந்த வெனக்கு நீயே மேல்விழுந்து முறையையுணர்த்தி உன்னை யொழியச்செல் லாதபடிபண்ணி, (தளிர்புரையுந்திருவடி யென்தலைமேலவே) என் னும்படி பண்ணி உன்பேறாக என்தலையிலே யுன்திருவடிகளை வைத்தது, இன்று உன்னைப் பிரிந்து நோவுபடவந்துமுகங்காட்டா தொழிகைக்கோ.

அழகிது, நாமே மேல்விழுந்து கார்யஞ்செய்தோமென்னும் படி யறிந்தீராகில் பின்னை மேலுள்ளதும் நாமேசெய்தபடிகண்டு, (తత్తస్యసదృశంభవేత్ - தத்தஸ்யஸத்ர்சம்பவேத்) என்றிருக்கையன் றோப்ராப்தம், இங்ஙனே த்வரிக்கக்கடவீரோவென்ன; (ஏழை யேன்) அது செய்யவொட்டுகிறதில்லை யென்னுடையசாபலம். அதி சபலன் நானென்கிறார். நீசெய்தத்தை யநுஸந்தித்து மேலும் தானே செய்கிறானென்று ஆறியிருக்கவொட்டுகிறதில்லை. (இங்ஙன மேயுழிதர்கேனே) அவன் ஆச்ரிதபரதந்த்ரனல்லனென்னவொண் ணாது, அவன் யோக்யதைபார்த்து முகந்தருவானென்னவொ ண்ணாது, இனி இழக்கைக்கடி என் பாபமிறே. இப்படி க்லேசித் தேபோமித்தனையாகாதே!.

(இங்ஙனமே) (ఏహిపశ్యశరీరాణి - ஏஹிபச்யசரீராணி) என்று- ஸ்ரீதண்டகாரண்யத்தில் ரிஷிகள் ராக்ஷஸர்கள் தின்ற சரீர த்தைக் காட்டினாப்போலே விரஹம்தின்றவுடம்பைக்காட்டுகிறார்.

---

பிடிக்கவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ப்ரா ப்தியுமித்யாதி.)

பலிதமருளிச்செய்கிறார் - (ஓடினேனித்யாதி.)

இங்ஙனமே-இப்படியே-இப்ரகாரத்திலே யென்னுதல்; தேஹ த்தைக்காட்டுதல். ... ... ... ... ... (கூ)

(உழிதர்கேனே) யாதநாசரீரம்போலே விரஹம் தின்ற வுடம்பைக் காட்டுகிறார். (உழிதர்கேனே) யாதநாசரீரம்போலே முடியவும்பெறுதே தரிக்கவும்பெறுதே துக்கோநுபவமே யாத்ரை யாம்படி பண்ணுவதே! என்கார்யமென்கிறார். ஒன்றில் பகவத் விஷயத்தை யநுபவிக்கப்பெற்றிலேன், ஒன்றில் ஸ்வரூபத்தை யநுஸந்தித்து (தத்தஸ்யஸத்ர்ஸ0பவேத் - தத்தஸ்யஸத்ர்ஸ0பவேத்) என்றிருக்கப்பெற்றிலேன், ஒன்றில் சிந்தயந்தியையும்சக்ரவர்த்தியை யும்போலே முடியப்பெற்றிலேன், எனக்குக்கூறு விரஹக்லே சாநுபவமேயாய்விடுவதே! என்கிறார் ... ... ... (கூ)

அ.—பத்தாம்பாட்டு. (பொன்னாய்) இப்பாட்டால்-ஆச்ரிதரிருந்தவிடத்தேசென்று முகங்கொடுக்குமவனாய் யோக்யதாயோக்யதைபாராதே முகங்கொடுக்குமவனாயிருக்க ஸர்வதா நமக்கு முகங்காட்டாதொழிந்தது, அடியிலே, (மந்திரத்தைமந்திரத்தால் மறவாதென்றும் வாழ்தியேல்வாழலாம்) என்று சொன்னவர் ஸாதநத்திலே அந்வயித்து வந்துமுகங்காட்டா தொழிந்தாகை வேணுமென்று சங்கித்து ஸம்பந்தஜ்ஞாபகமான திருமந்த்ரத்தை உபகரணமாகக்கொண்டு இங்கேஅநுபவிப்பார்க்குஅங்கும் யாவதாத்மபாவிஅநுபவிக்கலாமென்று காலக்ஷேபார்த்தமாகச் சொன்னவித்தனை யொழிய, ப்ராப்யம் உன்னையொழிய வேறுண்டென்று அறியிலன்றே-ப்ராபகம் உன்னையொழியவேறுண்டென்றறிவது, நான் என்னறிவனென்கிறார். (மந்திரத்தால்) என்கையாலே-ஒரு ஸாதநபாவமும், (மறவாது - வாழ்தியேல்) என்கையாலே - ஒரு கர்த்தவ்யமும், (வாழலாம்) என்கையாலே - ஒரு பலமுமாய்த் தோற்றுமிறே. இவருடைய*நோற்றநோன்பிருக்கிறபடி. (நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்) என்று – ஆகிஞ்சந்யத்தைச் சொல்லியாகிலும் (இனி யுன்னைவிட்டொன்று மாற்றகிற்கின்றிலேன்) என்று - ருசியில் குறைவற்றிருக்கிறபடியையு மருளிச் செய்தாரிறே.

மூ.—பொன்னாய்பொழிலேழுங்காவல்பூண்ட
புகழாய்இகழ்வாயதொண்டனேன்நான்
என்னாயென்னாயென்னலல்லால்
என்னறிவனேழையேனுலகமேத்துந்
தென்னாய்வடவாய்குடபாலாய்
குணபாலமதயாய்இமையோர்க்கென்றும்
முன்னாய்!பின்னார்வணங்குஞ்சோதி
திருமூழிக்களத்தாய்முதலாயே. (க0)

---

பத்தாம்பாட்டு. (பொன்னாய்) * நோற்றநோன்பு இப்பாட்டு.

| பதம். | உரை. |
|---|---|
| உலகமேத்தும் | லோகத்தார்ஸ்துதிக்கத்தக்க, |
| தென்னாய் | தென்திருமாலிருஞ்சோலை மலையிலே நின்றருளினவனாய், |
| வடவானாய் | வட திருவேங்கடத்திலே நின்றருளினவனாய், |
| குடபாலானாய் | மேற்றிசையிலே கோயிலிலே கண்வளர்ந்தருளினவனாய், |
| குணபால மதயானாய் | கிழ்த்திசையில் திருக்கண்ண புரத்திலே மதயானைபோலே செருக்குத்தோன்றநின்றவனாய், |
| இமையோர்க்கு | நித்ய ஸூரிகளுக்கு, |
| என்றும் | எக்காலத்திலும், |
| முன்னோனாய் | கண்ணாற்கண்டநுபவிக்கலாம்படியிருப்பவனாய், |
| பின்னானார் | அவதாரத்துக்குப்பிற்பட்டவர்கள், |
| வணங்கும் | ஆச்ரயிக்கத் தக்கதாக, |
| சோதி | தேஜோமயனாய், |

| பதம். | உரை. |
|---|---|
| திருமூழிக்களத்தானாய் | திருமூழிக்களத்திலே வர்த்திக்கிறவனாய், |
| முதலானாய் | ஜகத்காரண பூதனாய், |
| பொன்னானாய் | பொன்போலே எல்லாப்படியாலும் எனக்கு உபகரிக்குமவனாய், |
| பொழிலேழும் | ஸப்த லோகங்களையும், |
| காவல்பூண்ட | ரக்ஷிக்கையால்வந்த, |
| புகழானாய் | குணப்ரதையையுடையனாய், |
| இகழ்வாய | இகழ்வையே வடிவாகவுடைய, |
| தொண்டனேன் நான் | தாஸபூதனானநான், |
| என்னானையென்னானையென்னலல்லால் | என்னுடைய ஆனையென்னுடைய ஆனாய்என்று சொல்லுமித்தனையல்லது, |
| ஏழையேன் | உன் விஷயத்தில் அதிசபலனானநான், |
| என் அறிவன் | உன்னுடைய குணசேஷ்டிதங்களில் எத்தை யறிவேன். ... (௧0) |

வ்யா.—(பொன்னானாய்) எனக்குப்ராப்யமானவனே. (रुक्माभं स्वप्नधीगम्यम्) (ருக்மாபம்ஸ்வப்நதீகம்யம்) என்றும், (अव्ययो निधिः) (அவ்யயோநிதி:) என்றும், (வைப்பாம்) என்றும் - ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலே, நிதிசப்தத்தாலே - ப்ராப்யத்வஞ்ச் சொல்லக்கடவதிறே. தநமாவது - ஆபத்ஸகமாய் உண்டென்ன உயிர் நிற்கும்படியாய், ஸர்வாநுபாவ்யமாயிறே யிருப்பது.

இப்போது இது சொல்லுகிறது - உன்னையொழிய வேறொருப்ராப்யமுண்டென்றறியிலன்றோ உன்னையொழிய வேறொருப்ராபகமுண்டென்றறிவது என்கைக்காக. அங்ஙனன்றிக்கே, ப்ராபகாபேக்ஷையுள்ளது ப்ராப்யஸித்திக்கிறே; அத்தைப்பற்றச்சொல்லிற்றாகவுமாம். (வைப்பாம்மருந்தாம்) என்றாரிறே - நம்மாழ்வாரும். மேற்சொல்லுகிறஸாதநம், (అనన్యసాధ్యే) (அநந்யஸாத்யே) என்கிற ஸாத்யத்துக்கநுரூபமென்கைக்காக ப்ரதமத்திலே உபாதாநம்பண்ணுகிறதாகவுமாம். (ஆனாய்) நான்விஷயப்ரவணனாய்த்திரியாநிற்க உன்னுடைய வினைகேட்டாலே நீயே மேல்விழுந்து எனக்கு ருசியைப் பிறப்பித்து ப்ராப்யனானாய், இத்தனை யன்றோசெய்தது.

(பொழிலேழும் காவல்பூண்ட புகழானாய்) இத்தால் - ப்ராபகமும் நீயேயென்கிறார்.லீலாவிபூதிக்கு ரக்ஷகனானவனே. (பொழிலேழும்)என்று-ஸப்த லோகங்களையுஞ் சொல்லுகிறது. இத்தால்-கீழுள்ள லோகங்களையும் உபலக்ஷிக்கிறது. (ఈదృశానామ్) (ஈத்ர்சாநாம்) என்கிற அண்டாந்தரங்களுக்கும்உபலக்ஷணம். பொழில்-லோகம். (காவல்பூண்ட) ராஜாவாய் அபிஷேகத்தைப் பண்ணியிருந்து ஆளிட்டு ரக்ஷிக்கையன்றியே கையிலேஆயுதத்தையெடுத்து ஒருவூரைநோக்குவாரைப்போலேயன்றோ ஸகலலோகங்களையும் அவதாரம் பண்ணி ரக்ஷிப்பது. (பூண்ட) ரக்ஷணப்ரதிபந்தகமுண்டானாலும் அதில் குறையாதிருக்கை. அதாவது - எத்தனையேனும் அந்தரங்கமான மஹாராஜப்ரப்ர்திகளும், (వధ్యతామ్) (வத்யதாம்) என்றாலும், (నత్యజేయమ్) (நத்யஜேயம்) என்னும்படியிறே - ரக்ஷகத்வத்தில் பூட்சியிருப்பது.

(అభయంసర్వభూతేభ్యః) (அபயஂஸர்வபூதேப்யஃ) என்கிறபடியே தன்கையிலே தன்னைக் காட்டிக் கொடாதேயிறே ரக்ஷிப்பது. இத்தால் - என்னுடைய அவித்யாகர்மவாஸநாருசிகளைப் போக்கி ரக்ஷித்தாய்நீயேயன்றோ வென்கிறார். அதவா (பூண்ட) போக்யதையேயிறே வஸ்துவுக்கு வேஷம். உபாயமாகிறது - கதிசூந்யதையாலேயிறே.பால் பித்தஹரமானாலும்கஷாயமாகாதிறே. இத்தால்-நீயே மேல்விழுந்தன்றோ எனக்குப்ராபக னாய்த்தது மென்கிறார்.

---

அவனுடைய ப்ராபகத்வஞ் சொல்லுகிற விடத்திலே ப்ராப்யஞ் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (இப்போதித்யாதி.) அநுரூபமான ஸாதநமென்கைக்ஃகாகப்ராபகத்தைமுன்னே சொல்லுகிறதென்று மூன்றாம் பரிஹாரம். மேற்சொல்லுகிற ஸாதநம் - (காவல்பூண்ட) என்று சொல்லுகிற ரக்ஷகத்வம். வினைக்கேடு - செயல்மாட்சி. தன்கையிலே - சேதநனான தன் கையிலே. இதுக்கு பலிதமருளிச் செய்கிறார் (இத்தால் என்னுடைய வித்யாதி.) கடைசியாயுற்றிருக்கையாலே;ஏறிட்டுக்கொள்ளுகையாதல்.

(புகழானாய்) இப்படிரக்ஷிக்கையால் வந்த குணப்ரதையை யுடையவனே!. (𑌯𑌶𑌸𑌶𑍍𑌚𑍈𑌕𑌭𑌾𑌜𑌨𑌮𑍍) (யஶஸஶ்சைகபாஜநம்)(உலப் பில் கீர்த்தியம்மானே) என்னக்கடவதிறே. (𑌯𑌾𑌨𑌿𑌨𑌾𑌮𑌾𑌨𑌿𑌗𑍌𑌣𑌾𑌨𑌿) (யாநிநாமாநிகௌணாநி) என்கிறபடியே - ரக்ஷணதர்மத்தால்வந்த குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாயிறே திருநாம மிருப்பது. (இகழ்வாய தொண்டனேன் நான்) இத்தால் - ப்ராப்யப்ராபகங்களை ப்ராபிக்கவுரிய அதிகாரிஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. உனக்குப் புகழேவடிவா யிருக்கிறாப்போலேயன்றே எனக்கு இகழ்வே வடிவாயிருக்கிற படியும். ஆகிஞ்சந்யமிறே அதிகாரம்; ஸ்வதோஷம் ஸம்பாதிக்க வேண்டுவதில்லை; ஜ்ஞாபநமே யபேக்ஷிதம். (𑌅𑌹𑌮𑌸𑍍𑌮𑍍𑌯𑌪𑌰𑌾𑌧𑌾𑌨𑌾𑌮𑌾𑌲𑌯𑌃) (𑌰𑌾𑌵𑌣𑍋𑌨𑌾𑌮𑌦𑍁𑌰𑍍𑌵𑍃𑌤𑍍𑌤𑌃) (அஹமஸ்ம்யபராதாநாமாலய:) (ராவணோநாமதுர்வ்ர்த்த:) (𑌅𑌮𑌰𑍍𑌯𑌾𑌦𑌃𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌃) (அமர்யாத: க்ஷுத்ர:) என்கிறவிடத்திலும்ஜ்ஞாபநமேயிறே யுள்ளது, ஸாத்யம் ஆகிஞ்சந்யமேயிறே. (தொண்டனேன்நான்) உன்பக்கலிலே அதிசபலனான நான். இத்தால் - ப்ராப்யருசியைச் சொல்லுகிறது. ப்ராபகப்ரார்த்தனைக்கு ஆகிஞ்சந்யமும் ஸ்வதோஷ க்யாபநமும் வேண்டினவோபாதி ப்ராப்யப்ரார்த்தனைக்கும் ப்ராப்யருசி வேணுமிறே. ஆகிஞ்சந்யமும் அவனை யொழியச்செல்லாமையு மிறே-த்வயத்துக்கதிகாரம். அதவா, (இகழ்வாயதொண்டனேன் நான்) ஒருகடதாஸி ஸார்வபௌமனை யாசைப்பட்டால் நாட்டார் இகழுமாப்போலேயும், மௌஷ்டிகன் அபிஷேகத்தை யாசைப்பட்டால் இகழுமாப்போலேயுமன்றே, நித்யஸம்ஸாரியான நான் உன்னை யாசைப்படுகிறது.

(என்னாயென்னாயென்னலல்லால்) இத்தால்-இவ்வதிகாரியுடைய காலக்ஷேபஞ் சொல்லுகிறது. காலக்ஷேபத்துக்காக உன்னுடைய குணங்களை யநுபவித்தே னித்தனை யொழிய என்றற்றமையை ஸாதநமாக நினைத் திருந்தேனோ. ஆனையினுடைய ஸ்வபாவங்கள் ஈச்வரனுக் குண்டாகையாலே அந்தஸ்வபாவங்களைப் பற்ற (என்னாய்) என்கிறார்.

---

* காவல் பூண்ட இன்றொன்றுபேரைச்சொல்லாமல், (புகழானாய்) என்று குணத்தையிட்டுச் சொல்லுவானென்னென்ன; அருளிச் செய்கிறார் (𑌯𑌾𑌨𑌿𑌨𑌾𑌮𑌾𑌨𑌿 - யாநிநாமாநீத்யாதி.) (இகழ்வாய) என்று-தம்முடைய ஆகிஞ்சந்யஞ் சொல்ல வேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஆகிஞ்சந்யமேயித்யாதி.) ஆனால் தோஷம் பண்ணவேணுமோ என்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வதோஷமித்யாதி,) ஸாத்யம்-ஸாதிக்கவேண்டினது. ஆகிஞ்சந்யமும் ருசியும் வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஆகிஞ்சந்யமுமித்யாதி.) (இகழ்வாய) இகழ்வென்று - தோஷமாய், தோஷமே வடிவென்னுதல்; எல்லாரும் இகழும்படியென்னுதல்.

ஆனையானது (ஒருநாள் கண்டோம்) என்றிருக்கவொண்ணாதபடி நித்யஸ்ப்ருஹணீய மாயிருக்கையும் பெரியசெருக்கையுடைத்தாயிருக்கையும், தான் நினைத்தபோது கைக்கு எட்டினாரை யெடுத்து கழுத்திலேவைத்துக் கொள்ளக்கடவதா யிருக்கையும், தாந்தாமே ஏறவேண்டி யிருப்பார்க்குப் படிந்து கொடுக்கக்கடவதா யிருக்கையும், தான் உகவாதாரைக்கீண்டு போகட்டால் ஆராய்ச்சியின்றிக்கே யிருக்கையும், தன்னைக்கட்டக்கயிறுதானேகொடுக்கக் கடவதுமாயிறே யிருப்பது; அப்படியே நித்யஸ்ப்ருஹணீயமா யிருக்கிற வடிவழகும், செருக்கால் பலித்த ஸமாதிக ரஹிதத்வமும், ராஜா ஒருபாணிச்சியை தனக்கு மஹிஷியாக்கி வைத்தால் நிவாரகரில்லாதாப்போலே ஒரு நித்யஸம்ஸாரிக்கும் தன் பக்கல் ந்யஸ்தபரதையே ஹேதுவாகத் தன்னைக் கொடுத்தால் நிவாரகரின்றியிலே யிருக்கும்படியான ஸ்வாதந்த்ர்யமும், ஆனை தன்மேலே யேறப்படிந்து கொடுக்குமாப்போலே ஸாதநாந்தர நிஷ்டருக்கு நேதாவாயிருக்கிற சீலமும், ஆச்ரித விரோதிகளை ஸம்பந்தங்கிடக்கச் செய்தே யழியச்செய்தாலும் நிவாரகரில்லாதபடியான விரோதிநிரஸந சீலமும், போகோபகரணபக்தியைத் தானே கொடுக்கக்கடவதான ருசிஜநகத்வமுமாகிற இஸ்ஸ்வபாவங்களாய்த்து - இவர்க்கு காலக்ஷேபத்துக்கு விஷயம். (எட்டினோடிரண்டெனுங்கயிறு) என்று - பக்தியைக் கயிறாகச்சொல்லக்கடவதிறே. ஈச்வரனைப் புறம்புபோக வொட்டாதபடி மநஸ்ஸாகிறஸ்தம்பத்தோடே பக்தியாகிற கயிற்றாலேயிறேகட்டுவது. வீப்ஸையாலே - அவ்வவஸ்வபாவங்களே காலக்ஷேபத்துக்கு விஷயமா யிருக்கை. நிவ்ர்த்தி துஸ்ஸகம். விஷயாந்தரங்களில்இழியவொண்ணாது; அவற்றுக்கஞ்சிப்புகுந்தவராகையாலே: ஸாதநாந்தரங்களி லிழிய வொண்ணாது; வேறொன்றை ஸாதநமாகஸஹியாதவுபாயத்தைப் பரிக்ரஹிக்கையாலே: இனி இவ்விஷயந்தன்னை முகாந்தரத்தாலே யநுபவிக்கையிறே யுள்ளது.

(என்னலல்லால்) இப்படிதேவரீர்படிகளை யநுஸந்தித்து காலக்ஷேபம்பண்ணினேனித்தனையொழிய. (என்னறிவன்) நான் அடைவுபட ஒன்றறிவனோ.

---

இதுவே விஷயமாகவேண்டுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (நிவ்ர்த்திதுஸ்ஸகமென்று.) குணாநுபவத்தில்நின்றும் மீளப்போகாமையைப் பற்ற (துஸ்ஸகமென்கிறது.) விடப்போகாதபடிஇதிலே யிழிவானென், வேறொன்றாகாதோ வென்ன; அருளிச்செய்கிறார் (விஷயாந்தரங்களி லித்யாதிவாக்யத்ரயத்தாலே.) முகாந்தரம்-ப்ராப்யாகாரம். அடைவுபட - சாஸ்த்ரக்ரமத்திலே. விஷயங்களிலே யுக்தாயுக்த விபாகமற பலமானாப்போலே இங்குமென்றபடி.

அமாநித்வாத்யாத்ம குணங்களை யறிவனோ, கர்மயோகத்தையறிவனோ, ஜ்ஞாநயோகத்தை யறிவனோ, உபயஸாத்யமான பக்தியோகத்தை யறிவனோ, நானதத்தையறிந்தேன். உறங்குகிறவனுக்கு விடிந்தாப்போலே விஷயாந்தரங்களை யொழியவே றொன்றறியாதே ப்ரியச்செய்தே உன்னுடையவைலக்ஷண்யத்தைக் காட்டக்கண்டே னித்தனைபோக்கி ஸாதநாந்தரங்களை எங்கே கண்டேனென்கை. நாமேப்ராப்யப்ராபகங்களென்றிருந்தீராகில் உம்முடைய கையில் முதலில்லை யென்றிருந்தீராகில் நாம்செய்தபடிகண்டிருக்கையன்றோ ப்ராப்தம், முகங்காட்டாதொழிவதே! என்று கூப்பிடக்கடவீரோ வென்ன; (ஏழையேன்) சாபலப்ரேரிதனானல் நான் செய்வதென். அத்யந்த சபலனானேன். விஷயாந்தரங்களில் எனக்கோரடைவுண்டாகி லன்றோ இவ்விஷயத்திலும் எனக்கோரடைவுண்டாவது. ப்ராப்தாப்ராப்தவிவேகம் பண்ணவொட்டாத வென்னுடைய சாபலாதி சயத்தாலே கண்டவற்றிலே கால்தாழ்ந்து போந்தேன், இத்தனையன்றோ செய்தது. ஆற்றாமையை ஸாதநமென்று பழியிட்டு விடப்பார்க்கில் நித்யஸூரிகளை முற்படவிட்டுப் பின்னையன்றோ என்னை விடுவது. ஆனையின் ஸ்வபாவங்கள்நமக்குண்டென்றறிந்தது சாஸ்த்ரமுகத்தாலேயோ, ஆசார்யமுகத்தாலேயோ வென்னில்; உகந்தருளின நிலங்களிலே கண்டறிந்தே னென்கிறார் (உலகமித்யாதி) திருமங்கைமன்னன் கட்டினதிக்கஜங்க ளிருக்கிறபடி. (உலகமேத்தும்தென்னானாய்) உபயவிபூதியும் வந்து ஆச்ரயிக்கும்படி தெற்குத் திருமலையிலே நின்றருளினவனே. இருந்ததேகுடியாகத் தெற்குதிக்கிலுள்ளார் வாழ்கையன்றிக்கே, (வலஞ்செய்யும்வானோர்மாலிருஞ்சோலை) என்கிறபடியே-நித்யஸூரிகளும் ஏற்று அம்சகமுண்ணவரும்படியிறே திருமலையிலே நின்றருளிற்று. தெற்குதிக்கிலானாய். (வடவானாய்) அப்படியேயிறே வடக்கு திக்கிலும் நின்றருளிற்று (வானவர்வானவர்கோனொடுஞ் சிந்து பூமகிழுந் திருவேங்கடம்) என்றும், (வானவர் வானவர்கோனொடும் நமன்றெழுந் திருவேங்கடம்)என்றும், (எல்லாவுலகுந்தொழுமாதிமூர்த்தி) என்றுஞ் சொல்லுகிறபடியே-நித்யஸூரிகளோடு ப்ரஹ்மாதிகளோடு மநுஷ்யர்களோடு வாசியற வாழும்படியாகவிறே - திருவேங்கடமுடையான் நின்றருளிற்று. (குடபாலானாய்) கீழ்ச்சொன்ன ஆனைகளைப்போலே நிற்கையன்றியே மேலைத்திக்கிலே ஒருமதஹஸ்தி சாய்ந்தாப்போலே யாய்த்து-கோயிலிலே வந்து பெரிய பெருமாள் கண்வளர்ந்தருளுகிறபடி.

---

ஆனை கட்டுகிறவன் ராஜாவாகையாலே-இங்கும் (திருமங்கை மன்னன்) என்கிறது. (உலகு) என்கிற ஸாமாந்யத்தாலே - அவ்விபூதியையும் காட்டுகிறது.

(வன்பெருவானகமுய்ய வமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய) என்கிறபடியே ஸகலலோகங்களும் அநுபவித்து ஸத்தை பெறும்படியிறே கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. (குணபாலமதயானாய்) பெரியமுதலியார்பக்கல் தமக்குண்டான ஆதரத்தாலே மன்னனுடைய வடிவழகையும் செருக்கையும் நிலையழகையும் பற்ற உடையவர் மன்னனாயருளிச் செய்வர். (குணபால மதயானாய்) என்று - (𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌕𑍃𑌷𑍍𑌣𑌨𑌗𑌰𑌮𑍍) (த்ர்தீயஂ க்ர்ஷ்ணநகரம்)என்கிறபடியே பஞ்சக்ஷேத்ரத்திலே த்ர்தீயக்ஷேத்ரமாகச் சொல்லுகையாலும், (கருவரைபோல் நின்றானைக் கண்ணபுரத்தம் மானைக் கண்டாள்கொலோ) என்றும், (கண்ண புரமொன்றுடையானுக் கடியே னொருவர்க் குரியேனோ) என்றும், (கற்றார்சேர் கண்ணபுரம்) என்றும் - இவர்தாம் அத்தேசத்திலே மிகவும் மண்டி யிருக்கையாலும் திருக்கண்ணபுரத்தை யருளிச் செய்கிறாராகவுமாம். (உலகமேத்தும்) என்றது, எங்கும் அந்வயிக்கக் கடவது. (இமையோரித்யாதி) இத்தால் - ப்ராப்யஸ்தாநத்தையும் ப்ராபகஸ்தாநத்தையு மருளிச்செய்கிறார். (இமையோர்க்கென்றும் முன்னானாய்) நித்யஸூரிகளுக்குஎன்றுமொக்கப்ரத்யக்ஷவிஷயமாயிருக்கிறவனே. யாவதாத்மபாவி ஸதாதர்சநத்துக்கு விஷயமாயிருக்கிறவனே. (பின்னானாரித்யாதி) பரமபதத்தோடு க்ஷீராப்தியோடு அவதாரங்களோடு, அர்ச்சாவதாரங்களோடு வாசியற, பிற்பட்டார்க்கும் ஆச்ரயணீயனாய்க்கொண்டுதிருமூழிக் களத்திலே வர்த்திக்கிறவனாய், நாஸ்திக்யப்ரசுரரானவர்களுக்கும் ஆச்ரயணீயனாகைக்கிறே மேலை ஸமுத்ரக்கரையிலே நித்யவாஸம் பண்ணுகிறது. அதவா, த்ரைவர்ணிகாதிகாரமா யிருத்தல், சதுர்த்த வர்ணாதிகாரமாயிருத்தல் செய்கையன்றியே, (இனியில்லை) என்னும்படி நிஹீநஜந்மத்திலே பிறந்தவர்களுக்கும் ஆச்ரயணீயனா யிருக்கிறபடியைச் சொல்லிற்றாகவுமாம். தேசகாலங்களால் விப்ரக்ர்ஷ்டரானாரோடு ஜந்மத்தால் விப்ர்க்ஷ்டரானாரோடு வாசியற ஸர்வஸமாச்ரயணீயனென்கை. (சோதி) அந்தகாரத்தில்தீபம்போலே நிஹீநஜந்மாக்களும் ஆச்ரயிக்கும்படி நிற்கையாலே ஸர்வஸமாச்ரயணீயத்வத்தால் வந்த ஔஜ்வல்யம். (திருமூழிக்களத்துறையுமொண்சுடரை)என்றும், (என் கண்பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதி) என்றுஞ்சொல்லக்கடவதிறே. (முதலானாயே) இவையெல்லாவற்றுக்கு மடியான ப்ரதமஸுக்ர்தமானவனே.

---

மலையாளர், நாஸ்திகராய்கோயில் திருமலைவாசி யறியாமையாலே (பிற்பட்டார்க்கு மென்கிறது.) இவை யெல்லாவற்றுக்கும் தானே ப்ராப்யப்ராபகனாகை யறிகையும், திவ்யதேசங்களில் அநுபவமாகிற விவையெல்லாவற்றுக்கும் ஹேதுவானஸுக்ர்த மென்றபடி.

(త్వత్పాదకమలాదన్యంన మేజన్మాన్తరేష్వపి । నిమిత్తం కుశలస్యాస్తి) (த்வத் பாதகமலாதந்யம் நமேஜந்மாந்தரேஷ்வபி। நிமித்தம் குஶலஸ்யாஸ்தி) என்னக்கடவதிறே. அங்ஙனன்றியே, ஜகத்காரணத்வத்தைச் சொல்லவுமாம். அதவா, (முதலானுயே) அழகிதாக உத்பாதகனுனென்று கிலாய்ப்போடே தலைக்கட்டுகிறூர். ... (௯0)

அ.—பதிஞோராம்பாட்டு. (பட்டுடுக்கும்) ஆற்றுமையோடே (முதலானுய்) என்றூர். அந்த வெக்காயத்தோடே ஆண் பெண்ணுய் அதுதன்னிலும் தம்வாயாலே கூப்பிடுகைக்கு யோக்யதையில்லாதபடி மோஹங்கதையாய் வைத்துவாயாலே கூப்பிடும்படியாய்ச் செல்லுகிறதுமேல். அதாகிறது - இயற்கையிலேபுணர்ந்து பிரிந்து பிரிவாற்றுதாளொரு பிராட்டி மோஹம்உணர்த்தியும் இவைமுதலான தசாவிசேஷங்களும் ஒருக்கால் பிறக்கையும் அதுதான் அக்ரமமாகப்பிறக்கையுமாய்ச் செல்லாநிற்க பந்துவர்க்கத்திலுள்ளாரும் யுக்தாயுக்த நிரூபணம் பண்ணமாட்டாதேயிருக்க இந்நோவுக்கு நிதாநமறியாதே பேஷஜகுசலரும் மந்த்ரவாத குசலரும் புகுந்து ப்ரவர்த்தியாநிற்கிறவளவிலே பகவத்பரையாயிருப்பாளொருகட்டுவிச்சி, இவளுடைய நோவுக்குநிதாநமறிகிலீகோள்,இவளுக்கு எம்பெருமானடியாகவந்ததுேவு, இது அவனாலே பரிஹ்ர்தமாகவேணுமென்று அவள் சொன்னவார்த்தையைக்கேட்ட திருத்தாயார், வினவவந்தார்க்குஇப்பெண்பிள்ளையுடையப்ரவ்ர்த்தியையும் கட்டுவிச்சிச்சொல்லுகிற வார்த்தையையும் சொல்லுகிற பாசுரத்தாலே தம்தசையை யருளிச்செய்கிறூர்.

இவர் பிராட்டிதசையைப்ராபிக்கையாகிறது அநுபபந்நமன்றோ வென்னில், உபபந்நம்;-பிராட்டிமார்க்கும் இவர்க்கும்அநந்யார்ஹ சேஷத்வமாகிற ஸம்பந்த மொத்திருக்கையாலும், (நமக்கும் பூவின்மிசைநங்கைக்கு மின்பனே) என்கிறபடியே போகம் ஸமாநமாயிருக்கையாலும், (ముహూర్తమపిజీవావో జలాన్మత్స్యావివోద్ధృతౌ) (முஹூர்த்தமபிஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்ர்தௌ) என்று - இளையபெருமாள் பிராட்டியோடே ஏகப்ரக்ர்தியாய் தம்மைச்சொல்லுகையாலே - வ்யதிரேகத்தில் ஆற்றுமையொத்திருக்கையாலும், பிராட்டிதசையை ப்ராபிக்கத்தட்டில்லை.

---

மேலுக்கநுகுணமாக (கிலாய்ப்போடேயென்றது.) ...(௯0)

பதிஞோராம்பாட்டு. * பட்டுடுக்கும் ப்ரவேசே; வெக்காயம்-பயம். அக்ரமமாக-உணர்ந்து இரங்கியயாமல். அயர்த்தி-இரங்குகை. பேஷஜகுசலர் - ஔஷதத்திலே ஸமர்த்தர்.

ஆனாலும்தாம் ஸ்த்ரீயென்கிறபுத்திபிறக்கக்கூடுமோவென்னில்; (స్వామిత్వాత్మత్వశేషిత్వ పుంస్త్వాద్యాస్స్వామినో గుణాః। స్వేభ్యో దాసత్వదేహత్వశేషిత్వస్త్రీత్వదాయినః) (ஸ்வாமித்வாத்மத்வ சேஷித்வபுoஸ்த்வாத்யாஸ் ஸ்வாமிநோகுணாஃ। ஸ்வேப்யோதாஸத்வதேஹத்வ சேஷித்வ ஸ்த்ரீத்வதாயிநஃ)என்கிறபடியே-புருஷோத்தமனுடையபுoஸ்த்வமானது எதிர்த்தலைக்கு ஸ்த்ரீத்வதாயியா யிருக்கையாலே, நான் ஸ்த்ரீயென்றுபுத்திபிறக்கத் தட்டில்லை; ஸ்த்ரீயென்கிற புத்திபிறக்கையாவது-தான்ஸ்த்ரீகளோடு ஆகார ஸாம்யத்தாலே பிறக்கும் புத்தியல்ல, புருஷ விஷயத்தில், ஸ்த்ரீகளுக்குப் பிறக்கும் அநுராகவிசேஷபுத்தி பிறக்கை. ஸஜாதீயவிஷயத்தில் விஜாதீய புத்திபிறக்க எங்கே கண்டோமென்னில்; (పాఞ్చాల్యాః పద్మపత్రాక్ష్యాః స్నాయన్త్యా జఘనం ఘనమ్। యాః స్త్రియో దృష్టవత్యస్తాః పుంభావం మనసాయయుః) (பாஞ்சால்யாஃ பத்மபத்ராக்ஷயாஃ ஸ்நாயந்த்யா ஜகநம் கநம், யாஸ்த்ரியோ த்ர்ஷ்டவத்யஸ்தாஃ புoபாவoமனஸாயயுஃ) என்று எதிர்த்தலையில் வைலக்ஷண்யத்தாலே ஸஜாதீயைகளான ஸ்த்ரீகளுக்கு ஸ்த்ரீகளைக்கண்டால்புருஷர்க்குப்பிறக்கும்அநுராகவிசேஷபுத்தி பிறந்ததிறே.அப்படியே, புருஷோத்தமவிஷயமாகஇவர்க்குஸ்த்ரீகளுக்குப்பிறக்கும் அநுராக விசேஷம் பிறக்கத்தட்டில்லை. எதிர்த்தலையில் வைலக்ஷண்யமேயிறே விஜாதீய புத்திக்கு உத்பாதகம். ஆகையாலே, ஒருபிராட்டி தசையைப்ராபிக்கிறார். இன்னமும் இயற்கையில் புணர்ச்சி என்கிற விதுக்கு கினைவென்னென்னில்; - ஸர்வேச்வரனுக்கு சேதந விஷயத்தில் ஸ்வஸம்பந்தமே ஹேதுவாகவிஷயீகரிக்கும் நிர்ஹேதுக விஷயீகாரத்தைச் சொல்லுகை. எங்ஙனேயென்னில்; பாஹ்யோபவநந்திலே ஒருபிராட்டி புறப்பட்டு புஷ்பாபசயம் பண்ணுகிற ஸமயத்திலேஅபிமதனானகாந்தனும்ம்ர்கயாவ்யாஜத்தாலேவர, தோழிமார்களும், அந்ய பரைகளாயிருக்கிற தசையிலே தர்மிப்ரயுக்தமான ஸ்த்ரீத்வபும்ஸ்த்வங்களே ஹேதுவாகஜ்ஞாபகருமின்றிக்கேகடகருமின்றிக்கே யிருக்க, ஸoச்லேஷிக்கையிறே - இயற்கைப் புணர்ச்சியாகிறது. ஸ்த்ரீத்வமாகிறது-ஒருவிஷயத்துக்கு அநந்யார்ஹ சேஷமாயிருக்கையிறே. எதிர்த்தலையில் புoஸ்த்வமாவது-வகுத்த விஷயமுமாய் ஸர்வவிதரக்ஷகருமா யிருக்கையிறே. ஆகையாலே நிர்ஹேதுக விஷயீகாரத்தைச் சொல்லுகிறது.

---

ஸ்வேப்யஃ - ஸ்வங்கள் பொருட்டுக் கீழ்சொன்னவை யடைய ப்ரதியோகியைக் கொடுக்கு மென்றபடி. ஆகாரஸாம்யம் - அவயவாகாரஸாம்யம். ம்ருகயா-வேட்டைவ்யாஜம். அப்போது ஆசார்யகர்த்யத்தையும் புருஷகாரகர்த்யத்தையும் தானே யேறிட்டுக் கொண்டானென்றபடி.

ஆனால் ஜ்ஞாபகராயிருப்பார்சிலஆசார்யர்களும், பொறுப்பித்துப் சேர்ப்பிக்கைக்குச் சிலபுருஷகார பூதரும் வேண்டியன்றோ ஈச்வர விஷயீகார மிருப்பதென்னில்; அப்போதும் ஆசார்யன் ஜ்ஞாபகனாகிறதும் இந்த சேஷ சேஷித்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக. தேஹத்தில் ஆத்மபுத்தியையும் தத்ஸம்பந்த நிபந்தநமான ஸ்வாதந்த்ர்யத்தையும் நிவர்த்திப்பிக்கையிறே; - புருஷகாரபூதையான பிராட்டியும் பூர்வ வ்ர்த்தத்தை க்ஷமிப்பிப்பதும், இஸ்ஸம்பந்தத்தையும் இதனடியாகவந்த வாத்ஸல்யாதிகளேயும் முன்னிட்டிறே; இன்னமும் பிராட்டியுடைய நோவுக்கு நிதாநமறியாதே மந்த்ரௌஷதாதிகளாலே வ்யாபரிக்கிறார்சிலரும் அத்தை நிஷேதிக்கிற ளொருகட்டுவிச்சிவார்த்தையுமாய்ச்செல்லுகிறவிதுக்குக்கருத்தென் னென்னில்; விஷயாந்தரப்ராவண்யமடியாகவந்த அவஸாதம், ஸாதநாந்தரநிவர்த்யம்; பகவத்ப்ரா வண்யத்தால் வந்த அவஸாதம், அதுக்கு ஹேதுபூதனு யிருந்துள்ள வீச்வரன்றானேவந்து முகங்காட்டிப்போக்கவேணும்.

தத்ஸம்ஸ்லேஷம்யாவதாத்மபாவியாகையாலும், இந்தப்ரேமாதிசயம் ஸ்வரூபப்ராப்தமாகையாலும் அநிவர்த்யம்;ஸ்வவாக்யத்தோபாதி திருத்தாயார்பாசுரத்தாலும் பேசுகிறார் தாமாயிராநின்றது, இது ஸங்கதமாகிறபடி யெங்ஙனே யென்னில்; ஓராறு பெருகிப்போகாநின்றால் கரையைப்பற்றிப்போமளவன்றிக்கேபெருக்குமிக்கிருந்தால் கைவாய்க்கால்களாய்ப் போம்போக்கும் நிரம்பிப் போகாநிற்க, தானும் குறையாதேசென்று கடலிலே புகுமாப்போலே,இவருடைய ப்ரேமாதிசயத்தாலே திருத்தாயார்வார்த்தையும் குறைவற்றுச் செல்லாநிற்கச்செய்தே தம்வார்த்தையுங் குறைவற்றுச் செல்லுகையாகிறவிது-ஸங்கதம். இன்னமும் பெண்பிள்ளை மோஹங்கதையாயிருக்க, (भृशं भवत्युद्विग्नः) (ப்ரசம்பவதிது ஃகிதஃ) என்று அவளிலும் தான் அவஸந்நையாயிருக்க ப்ராப்தமாயிருக்க தெளிந்து வார்த்தைசொல்லுகிறவிது யுக்தமோவென்னில்; பிராட்டியைப் பிரிந்த ஸமயத்தில்சக்ரவர்த்தித்திருமகனுருக்குப்பிறந்த வவஸாதத்தில்காட்டில் இளையபெருமாளுக்கும் அவருடைய அவஸாதத்தால் வந்ததும் தம்முடைய காவற்சோர்வால் வந்த அவஸாதமுமாய்க்கொண்டு அவஸாதம் இரட்டித்திருக்க அவற்றைப் பொறுத்துத்தெளிந்து வார்த்தை சொல்லவேண்டும் ஸமயமறிந்துபெருமாளைத்தேற்றினாப்போலே இவளும்இப்பெண்பிள்ளையுடைய உஜ்ஜீவநார்த்தமாகத் தெளிந்திருக்கையுக்தம்.

---

பகவானடியாக வந்தவவஸாதம் விஷயாந்தர மடியாக வந்த **வவஸாதம்**போலே ஸாதநாந்தரநிவர்த்ய மல்லாமைக்கு ஹேது வேதென்ன; அருளிச்செய்கிறார் (தத்ஸம்ச்லேஷமித்யாதி.)

ரக்ஷ்யபூதர் அவஸந்நராயிருக்க வமையும், அவஸாதமொத் திருக்கச்செய்தேயும் அத்தையறிந்து பொறுத்துத் தெளிந்திருந்து வார்த்தை சொல்லவேண்டும் அருமையுண்டிறே-ரக்ஷகர்க்கு; இவளுடைய வார்த்தை இவளுக்குஜ் ஜீவநஹேதுவானபடி யென்னென்னில்; கட்டுவிச்சி வார்த்தை, பகவத்பரமா யிருக்கையாலும், இவள்தன்னுடைய வ்யாபாரம் விரக்திபரமா யிருக்கையாலும், இவளருகிலே அவன் படும்பாட்டை இவள் படுவதே! என்று அவனைப்ரஸங்கிக்கையாலும், *தீர்ப்பாரை யாமினியில் கட்டுவிச்சி போலன்றியே திருமடலில்கட்டுவிச்சிபோலே மஹாபாகவதையாயிருப்பாளொருத்தி யாகையாலே நோவுதீர்கையன்றிக்கே வர்த்திக்கிலும் அவள்ஸ்பர்சமமையுமென்னும்படி யிருக்கிறவளை ப்ரஸங்கிக்கையாலும், ஆச்வாஸ ஹேதுவாகத்தட்டில்லை. இன்னமும் முதல்பத்து, இவர் தம்முடைய வார்த்தை; இரண்டாம்பத்து திருத்தாயார் வார்த்தை; மூன்றாம்பத்து பிராட்டியார் வார்த்தை. (மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்) (மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்) என்கிறபடியே மூன்று பத்துக்கும் மூன்றுவாக்யார்த்தம்;- [மச்சித்தா:- மச்சித்தா:] விஷயாந்தரம் கலசாதபடி அநந்யார்ஹராய் அநந்யபோக்யரா யிருக்கிறபடியைப் பேசுகையாலே-முதல்பத்து ஜ்ஞாநபரம்; இரண்டாம்பத்து-அந்த ஜ்ஞாநகார்யமான வைராக்ய பூர்வகமாக பகவத்ப்ராவண்யாதிசயத்தைச்சொல்லுகிறது; ப்ரேமபூர்வகமானால் ப்ராப்தியளவும் செல்ல நிலவரோடே காலக்ஷேபம் பண்ணும்படியைச் சொல்லுகிறது-மூன்றாம்பத்து; இரண்டாம்பத்து [மத்கதப்ராணா: - மத்கதப்ராணா:] என்றதிறே-தன்மூச்சடங்கித் தாயார்வாயாலே வார்த்தைசொல்லுகையாலே; [போதயந்த: பரஸ்பரம் - போதயந்த: பரஸ்பரம்] என்றதிறே தோழியோடேவ்ர்த்த கீர்த்தநம் பண்ணுகையாலே. இதில் முதல்பாட்டில் திருத்தாயார் இவளுடைய விரக்தியையும் கட்டுவிச்சிசொன்ன வார்த்தையையும் வினவவந்தார்க்குச் சொல்லுகிறாள். அவர்களுக்குச் சொல்லுகிற வார்த்தையொன்றும் தன்னுடைய பாவவ்ர்த்தி யொன்று மாயாய்த் திருக்கிறது. விச்லேஷத்தில் இப்படி அவஸந்நையாம்படி ப்ரணயத்தில் தேசிகையாவதே!யென்கிற வுகப்பாய்த்து உள்வாயில் தனக்குச்செல்லுகிறது.

---

பரார்த்தமாகத் தெளிந்திருக்கை தானு மருமையென்கிறார், ரக்ஷ்யபூதர்க்காசைதானும் அருமையென்கிறார் (ரக்ஷ்யபூதர்க்கித்யாதி.) இவளுடைய வார்த்தையாவது - கட்டுவிச்சிவார்த்தையை யநுவதிக்கையாலும், மகள் வ்யாபாரத்தைச்சொல்லுகையாலும், கட்டுவிச்சியினுடைய வைலக்ஷண்யத்தைச் சொல்லுகையாலும். தாயாருடையவார்த்தைமகளுக்குஜ்ஜீவநஹேதுவென்று உத்தரம்,

தனக்கு அபிமதமாயிருந்தால் அதுதன்னை இவர்களுக்குச் சொல்லக்குறையென்னென்னில்; இயற்கையில் புணர்ச்சியாகையாலே அவர்களுக்குச் சொல்லமாட்டுகிறிலள், கடகரடியாகப் பிறந்த ஸம்பந்தமாகிலிறே சொல்லலாவது; ஆசார்யோபதேசபூர்வகமாக பகவத்ஸம்பந்த யுக்தனாகிலிறே நமக்குக் கொண்டாடலாவது. ஜ்ஞாநகார்யமான கலக்கம் யதாஜ்ஞாநத்தாலே நிவர்த்யம், யதா அஜ்ஞாநகார்யமான கலக்கம்-யாவதாத்மபாவி அநிவர்த்யம் என்னுமதிறே - இப்பாட்டில் ப்ரகாசிக்கிறது.

மூ.—பட்டுடுக்குமயர்த்திரங்கும்பாவைபேணாள்
பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள்
எட்டுணைப்போதென்குடங்காலிருக்ககில்லாள்
எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்
மட்டுவிக்கிமணிவண்டுமுரலுங்கூந்தல்
மடமானையிதுசெய்தார்தம்மைமெய்யே
கட்டுவிச்சிசொல்லென்னச்சொன்னாள்நங்காய்
கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாராமே. (கக.)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| | இயற்கைப்புணர்ச்சியாலே மொஹங்கதையான என்பெண்ணானவள், | கண் | கண்களில், |
| பட்டு | நாயகன் மோஹித்துமேல் விழுகைக்கீடாக, உயர்ந்தபட்டுச்சீரைகளை, | நீர் | சோகாச்ருக்கள், |
| உடுக்கும் | அரையில்தரியாநின்றாள்; அவன் வாராமையாலே, | ததும்ப | துளும்புகையாலே, |
| அயர்த்து | மோஹித்து, | பள்ளிகொள்ளாள் | உறங்குகிறிலள்; |
| இரங்கும | அலமராநின்றாள்; | எட்டுணைப்போது | க்ஷணகாலங்கூட, |
| பாவை | மரப்பாவைகளை, | என்குடங்கால் | என்மடியிலே, |
| பேணாள் | அநாதரம் பண்ணாநின்றாள்; | இருக்ககில்லாள் | உட்காந்திருக்கவும்க்ஷமையாகிறிலள்; பின்னையென்செய்யுமென்னில்; |
| பனி | குளிர்ந்து | எம்பெருமான் | என்னை அநந்யார்ஹையாக்கின ஸர்வேச்வரனுடைய, |
| நெடு | காதளவும்நீண்ட, | திருவரங்கம் | திருவரங்கம் பெரியகோயிலானது, |
| | | எங்கேயென்னும் | எங்கேயென்றுவாய்வெருவாநின்றாள்; |

---

முப்பதுபாட்டையும்மூன்றுபத்தாகப்பிரித்து அருளிச்செய்கிறார் (அஜ்ஞாநகார்யமித்யாதி.) * "எட்டனைப்போது" என்றும்.

| பதம். | உரை. |
|---|---|
| மணிவண்டு | அழகியவண்டுகள், |
| மட்டு | தேனைப்பாநம் பண்ணி, |
| விக்கி | விடாயின்மிகுதியாலே விக்கி, |
| முரலும் | ஆலாபனை பண்ணுகின்றுள்ள, |
| கூந்தல் | மயிர்முடியையுடையளாய், |
| மடம் | மடப்பத்தையும், |
| மானை | மான்போன்ற கண்களையு முடையளான என்பெண்ணை, |
| இதுசெய்தார் தம்மை | இப்படி அலங்கோலமாக்கினவரை, |
| கட்டுவிச்சி | கட்டுவிச்சியே!, |

| பதம். | உரை. |
|---|---|
| மெய்யே சொல்லென்ன | உண்மையாகச் சொல்லென்று சொல்ல, |
| கடல்வண்ணர் | கடலின்நிறம்போலே ச்ரமஹரமானதிருநிறத்தை யுடைய ஸர்வேச்வரன், |
| இதுசெய்தார் சொன்னாள் | இப்படிச் செய்ததாகச்சொன்னாள், |
| நங்காய் | என்னுயிர்த்தோழியே!, |
| இதுகாப்பார் யார் | இத்தைப் பரிஹரிக்கவல்லவர்கள் வேறேயாரிருக்கிறார்கள், அவனேபோக்கவேணும். (கக) |

வ்யா.—(பட்டுடுக்கும்) இதுவும் மேற்சொல்லுகிற வவஸ்த்தைகளோபாதி ஆற்றாமையிலே ஒரு அவஸ்த்தாவிசேஷம். அவன், ஸம்ச்லேஷதசையில் அவயவசோபையைக் காட்டிலும் ஸமுதாய சோபையைக் காட்டிலும் உடையழகிலே யீடுபட்டு, இதொரு உடையழகிருக்கும்படியே! என்று அதிலே ஸக்தனாயிருக்கும் படியைக்கண்டு, அவன் வருகைக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிறாள்;-புடைவை யுடுக்கத்தொடங்கினாள். அவ்வுடையையுடுக்க, "இத்தை யிழக்கவொண்ணாதென்று அவன் வரும்" என்று அத்தை யுடுக்கத்தொடங்கினாள். (உடுக்கும்) அவன் ஆதரிக்கும் உடை அவன் வருமளவும்அழிப்பது உடுப்பதாகிறபடி. அவனுக்கு உறுப்பாகத் தன்னுடம்பை அலங்கரிக்கையும் ப்ராப்தமிறே. சேஷிக்கு அபிமதமானபோது சேஷித்வமு முத்தேச்யமாயிறேயிருப்பது.

* மோஹித்தவள் உடுக்கக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (இதுவும் மேற்சொல்லுகிறவித்யாதி.) அவஸ்த்தா விசேஷத்தாலேபலித்தத்தை அருளிச்செய்கிறார் (அவன்ஸம்ச்லேஷ தசையிலித்யாதி.) வர்த்தமாநத்தைப்பற்ற அருளிச்செய்கிறார். (அவனாதரிக்கும் உடை அவன் வருமளவித்யாதி.) தன்னுடம்பை அலங்கரிக்கலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (அவனுக்கித்யாதி.) அவனுக்கு உறுப்பானாலும் செய்யாதது செய்யலாமோவென்ன; அருளிச்செய்கிறார் (சேஷிக்கபிமதமித்யாதி.) ஆற்றாமையாலேயென்னுதல்; ஸ்வரூபஹாநியாலே யென்னுதல்.

(அயர்த்து) உடைவாய்த்தவாறே அவன் வருமென்று ஸந்துஷ்டையா யிருந்தாள், அவ்வளவிலும் வரக்காணாமையாலே மோஹங்கதையானாள். அவன் வருகைக்குறுப்பாக அலங்கரித்தாள், அதிலும் அவன் வரக்காணாமையாலே ஸ்வார்த்தமாய் விழுந்தது, ஸ்வரூபஹாநியாலே மோஹங்கதையானாள். ஆற்றாமையால் வரும் மோஹம்போலன்றே - ஸ்வரூபஹாநி பிறந்தால் வரும் மோஹம். (இரங்கும்) (ப்ரலாபஸ்ததா ஸம்மோஹ:) (ப்ரலாபஸ்ததா ஸம்மோஹ:) என்று இரக்கத்துக்குப்பின்பு மோஹமாகப்ராப்தமாயிருக்க அக்ரமமாகச் சொல்லும்படியிறே இவ்விஷயத்தினுடைய வைலக்ஷண்ய மிருப்பதும், இவளுடைய வாற்றாமையின் வைலக்ஷண்ய மிருப்பதும். இரக்கமாவது - அவனை யணையவேணுமென்னும் த்வரையாலேபடுமலமாப்பு. மோஹம் ஸ்வஸ்த தசை என்னும்படியிறே இந்தவலமாப்பிருப்பது.

அதவா, (பட்டுடுக்கும்) நக்நமாய்த் திரிகிறது லஜ்ஜாவஹமாய்,பட்டுடுக்கும்படியானபருவங்கிடீஎன்கிறாள்.(பட்டு) வஸ்த்ர ஸாமாந்யத்துக்கும்பேர்; "பொத்திப்புலியுகிர்ப்பட்டு" என்றாப்போலே வஸ்த்ரவிசேஷத்துக்கும்பேர். (உடுக்கும்) அரையிற்றங்காதபடியாலே எடுப்பது உடுப்பதாகிறபடி. (முலையோமுழு முற்றும்போந்தில மொய்பூங்குழல்குறிய கலையோவரையில்லை- இவள்பரமே!) என்றிறே ஒருதிருத்தாயார் வார்த்தை. (அயர்த்து) பருவமிதுவாயிருக்க வ்யதிரேகத்தில் மூச்சடங்கும்படியிறே ப்ரணயத்தில் தேசிகையானபடி. (இரங்கும்) அதுதான் ஸ்வஸ்த தசை யென்னும்படி மோஹங்கதையான தசையிலே ஜ்ஞாநம்வந்து குடிபுகுந்து அவனை நினைத்து அரதியாய்ச்செல்லா நின்றதாய்த்து. மோஹத்தில் ஜ்ஞாநம்நடையாடாதபடியாலே துக்கமில்லையிறே.

---

ஆற்றாமையாலே யென்னவமையாதோ, ஸ்வரூபஹாநியாலு மென்னவேணுமோ வென்ன, அருளிச்செய்கிறார் (ஆற்றாமையால் வருமித்யாதி.) மோஹித்தவள் இரங்கக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (மோஹம் ஸ்வஸ்த்ததசையித்யாதி.) மோஹத்திலே ஜ்ஞாநமில்லாமையாலே துக்கம்மட்டமாய் இரங்குகிறவவஸ்த்தையிலே ஜ்ஞாநமுண்டாகையாலே துக்கமதிசயித் திருக்குமென்றபடி.

கலை அரையிற்றங்காதவவஸ்தையிலே ப்ரணயத்திலே விரக்தையென்ற விடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (முலையோமுழுமுற்றுமித்யாதி.)(இரங்கும்) என்றத்தைப்பற்ற அருளிச்செய்கிறார் (அதுதானித்யாதி.)

(பாவைபேணாள்) இவளுடைய தசாவிசேஷத்தைக் கண்டு "இவளைத் தரிப்பிக்கும் விரகேதோ" என்று பார்த்து, பண்டு ஊணுறக்கமில்லாதபடி பாவையோடே போதுபோக்கக் காண்கையாலே பாவையைக்கொண்டுவந்து காட்டினாள், அது த்ர்ஷ்டி விஷம்போலே யாய்த்து. பாவையை யொழியச்செல்லாதவள்கிடீர் பாவையை அநாதரிக்கிறாள். போகோபகரணங்களோடு தொற்றும்படிகிடீர் ஒருவிஷயத்திலே அவகாஹித்தபடி. இத்தால் - பகவத்விஷயத்திலே அவகாஹித்தபடி. இத்தால் - பகவத்விஷயத்திலே அவகாஹித்தார்க்கு விஷயாந்தரங்கள் த்ர்ஷ்டிவிஷம்போலேயிருக்குமென்னு மர்த்தத்தை வெளியிடுகிறார். பகவத்விஷயத்தில் ப்ராவண்யம் பகவத்ப்ரஸாத ஸித்தமானவோபாதி விஷயாந்தரங்களில் விரக்தியும் பகவத்ப்ரஸாத பலமிறே.

(பனிநெடுங்கண்ணித்யாதி) உறக்கமும் குடிபோய்த்து.(பனிநெடுங்கண்ணீர்ததும்ப) ஆநந்தாச்ருவுக்கிலக்கானகண் சோகாச்ருவுக்கிலக்காவதே!. ஸௌக்ஷேத்ரம் *வெள்ளங்கொண்டாப்போலேஈச்வரபோக்யமானகண் படும்எளிவரவே! இது. (பனிநெடுங்கண்) (𑌆𑌹𑍍𑌲𑌾𑌦𑌶𑍀𑌤𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌮𑍍𑌬𑍁𑌃) (ஆஹ்லாதசீதநேத்ராம்புः) என்கிறபடியே ஸம்ச்லேஷதசையில்கண்ணீர் சீதளமா யிறே யிருப்பது. (நெடுங்கண்) அல்லாதஅவயவங்களில் காட்டில் கண்ணழகிலே யீடுபடும்படியிறே கண்ணின்போக்யதையிருப்பது. (𑌏𑌕𑍈𑌕𑌗𑍁𑌣𑌾𑌵𑌧𑍀𑌪𑍍𑌸𑌯𑌾-𑌸𑌦𑌾 𑌸𑍍𑌥𑌿𑌤𑌾𑌗𑌿𑌰𑌃) (ஏகைககுணாவதீப்ஸயா - ஸதாஸ்த்திதாகிரः) என்கிற படியே - பகவத்குணங்களில் ஓரோகுணங்களே அவதிகாணவொண்ணாதாப்போலே யாய்த்து-விபுவாய் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாயிருக்கிற ஈச்வரனுக்கும் இவள்கண்ணின் போக்யதையை பரிச்சேதிக்கவொண்ணாதபடி. அவன் ஸ்வரூபத்தாலே அபரிச்சிந்நன்; இவள் போக்யதையாலே அபரிச்சிந்நை. அதவா, (நெடுங்கண்) உபயவிபூதி யுக்தனையுங்கூட வொருபுடையிலே யடக்கவற்றான கண்ணென்னவுமாம். இத்தால் - ஜ்ஞாநவைபவத்தைச் சொல்லுகிறது.(நீர்ததும்ப) சோகாச்ருவாலே ததும்புகையாலே.

---

த்ர்ஷ்டிவிஷம் - கண்ணுக்குவிஷம்போலே அஸஹ்யமாயிருக்கை. இப்படி அஸஹ்யமாகைக்கு அடியேதென்ன; அருளிச்செய்கிறார் (பகவத்விஷயத்திலேயித்யாதி.)

தாயாருக்கும் தனக்கும் அவனுக்கும் போக்யமானவாகாரத்தைப்பற்ற தாத்பர்யத்வய மருளிச்செய்கிறார் (ஆநந்தாச்ருவுக்கித்யாதி வாக்யத்வயத்தாலே.) எல்லாமிருக்கக் கண்ணழகைச் சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அல்லாதவவயவங்களிலித்யாதி.) நெடுமை - அழகால் வந்த மிகுதியாதல்; கண்ணின்பெருமையாதல்.

---

* "வெள்ளங்கோத்தாப்போலே" என்றும்பாடம்.

(பள்ளிகொள்ளாள்) உறங்குகிறிலள். ஸம்ச்லேஷதசையில் ஆநந்தாச்ருவாலே யுறங்கப்பெறாள்; விச்லேஷ தசையில் சோகாச்ருவாலே யுறங்கப்பெறாள். ஸம்ச்லேஷ தசையில் அவனுறங்கவொட்டான்; விச்லேஷதசையில் விரஹம் உறங்கவொட்டாது. தன்வயிற்றில் பிறந்த இவள் உறங்காளென்ன ப்ராப்தமாயிருக்க, (பள்ளிகொள்ளாள்) என்பானென்னென்னில்; வயிற்றிற் பிறந்தவளேயாகிலும் ராஜமஹிஷியாகப் பட்டங்கட்டினால் "ஆழ்வார்" என்றிறே சொல்லுவது. அப்படியே புத்ரனோடு சிஷ்யனோடு வாசியற அவர்களுக்கு பகவத்ஸம்பந்தமுண்டானால் உத்தேச்யதை தோற்ற பூஜாவாசி சப்தங்களாலே சொல்லக்கடவதென்று பூர்வாசார்யர்களநுஷ்டித்துப் போந்த சாஸ்த்ரார்த்தத் துக்கடி இதிறே. இவளுடைய ஸௌகுமார்யத்தை யநுஸந்தித்து உறங்காதொழிவதே! என்கிறாள்.

(எட்டுணைப்போதென் குடங்காலிருக்ககில்லாள்) இவள்உறங்கக்காணாமையாலே முன்பு தன்மடியிலே யுறங்கிப்போகக் கண்ட வாஸனையாலே தன்மடியைக் கொடுத்தாள், அது நெருப்பிலே அணைந்தாப்போலிருக்கையாலே துணுக்கென்னவெழுந்திருந்தாள். (எட்டுணைப்போது) ஸர்வகாலமும் என்மடி யொழியச் செல்லாதவளுக்குக்கிடீர் - க்ஷணகாலமும் பொருந்தாதொழிகிறது. (என் குடங்கால்)பெற்றதாயானவென்மடிபொருந்தாதபடி துர்ஶிக்ஷையைப் பண்ணினவனோ வென்கிறாள். ரக்ஷ்யத்தோடு ரக்ஷகையோடு வாசியற ஸம்பந்தமற்றபடி. அபிமதவிஷயங்களோடு பூஜ்யவிஷயங்களோடுவாசியற ஸம்பந்தமற்றபடி.

(இருக்ககில்லாள்)உறங்குகை அபேக்ஷிதமல்லாமையாலேஎழுந்திருந்தாகிலு மிருக்குமோ வென்னும் நசையாலே அணைத்து மடியிலே யிருத்தப் பார்த்தாள், அதுவும் பொருந்திற்றில்லை.(கில்லாள்) சக்தையாகிறிலள். என்முகத்தில் பயிர்ப்பைக்கண்டு இருக்கத்தேடினாலும் அதுக்கு சக்தையாகிறிலள். ஏதேனு மளவிலும் தன்மகளைக் குறைசொல்லுமவளன்றே; நெருப்பிலே கிடக்கஆசையுண்டானாலும் மடியிற் கிடக்கப்போகாதிறே.

---

இப்போது உறங்காளென்னாமல், கேவலம்(உறங்காள்)என்று ஸாமாந்யேந உறக்கத்தை நிஷேதிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ச்லேஷதசையிலித்யாதி.) ரக்ஷ்யம்மாநமாகையாலே ரக்ஷகமானதாயோடு வாசியறவுறவற்றபடி.

தன்படிஅஸஹ்யமா யிருக்க, (கில்லாள்) என்று இவளுக்கு அபேக்ஷைதோற்றச் சொல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஏதேனுமளவித்யாதி.)ஆசையுண்டானால்இருக்கக்கூடாதோ வென்ன; அருளிச்செய்கிறார் (நெருப்பிலே யித்யாதி.)

இத்தால் - ப்ரக்ர்திப்ராக்ர்தங்களில் விரக்திஜ்ஞாநதயா வந்த தன்று, ஸத்தாப்ர யுக்தமென்கை. பகவத்ப்ரேமம் ஸத்தாப்ரயுக்த மானவோபாதி இதரவிஷயத்தில் விரக்தியும் ஸத்தாப்ரயுக்தமாயி றே யிருப்பது.

அவ்வளவேயோ, (எம்பெருமானித்யாதி) என்னை அநந்யார் ஹமாக்கினவன்கோயில் எங்கேயென்கிறாள். பாவையோடு தாய் மடியோடுவாசியறப் புறம்புள்ள துவக்கையறுத்தவனூர் எங்கே யென்று நின்றாள். இன்னாருடைய கோயிலெங்கேயென்று அவன் பேரைச் சொல்லாதே (எம்பெருமான்) என்பானென்னென்னில்; இயற்கைப் புணர்ச்சியாகையாலே ஸ்த்ரீத்வ பு0ஸ்த்வங்களே ஹேதுவாகக் கலந்த இத்தனையிறே. ஜ்ஞாபகருண்டாய்க் கலக்கி லிறே பேரறியலாவது. அவனூர் கோயிலென்றறிந்தபடி யென் னென்னில்; ஸ0ச்லேஷதசையில்பிரிவைநினைத்து, "பிரியேன், பிரி யில்தரியேன்" என்று பிரிவைப்ரஸங்கிக்கிற வளவிலே இவள் தரித் திருக்கவேணுமென்று, (நம்மூர்கோயில்) என்றுஊரை ப்ரஸங் கித்தான், அத்தாலே (ஊர்கோயில்) என்கிறாள். (எம்பெரு மான்) எனக்குத் தன்னை எழுதித்தந்து என்னை யெழுதிக்கொண் டவன். (திருவரங்க மெங்கேயென்னும்) கோயில் மேற்கேயென் றறியுமே, எங்கே யென்பானென்னென்னில்; ஆற்றாமையாலே கண்ணுஞ் சுழலையிட்டு திக்ப்ரமம் பிறந்தால் பின்னை திக்குத்தேட வேண்டியிறே யிருப்பது.

(மட்டுவிக்கியித்யாதி) அவனை இப்படி படுத்தக்கடவ மயிர் முடியையுடையவள்கிடீர் அத்தலையித்தலையாய் இப்படி நோவுபடு கிறாள். செவ்வைப்பூசலிலேயிறே அவன் நோவுபடுவது, வஞ்ச நத்தே அகப்பட்டாளா மித்தனை யென்கிறாள். (மட்டுவிக்கி) பெரிய அபிநிவேசத்தோடே மதுபாநம்பண்ண விழிந்து விடாயின்மிகுதி யாலே விக்கினபடியைச் சொல்லுதல்; மதுவைக்கழுத்தே கட்ட ளையாகப் பாநம்பண்ணின விடத்திலும் அபிநிவேசம் மாளாதபடி யாலேதரித்து இழிய அவகாசமில்லாதபடியாலே விக்கினபடியைச் சொல்லுதல்; ஸாரஸ்யத்தாலே விக்கினபடியைச் சொல்லுதல். ஸாரஸ்யத்தாலேஉள்ளிழிச்சவும்மாட்டாதேஉமிழவும்மாட்டாதே நடுவேநாக்கடியிலே வைத்திருக்கிறபடியைச் சொல்லுதல்.

---

அவனுக்கு நோவில்லையோ வென்ன; அருளிச்செய்கிறார் (செவ்வைப்பூசலிலேயித்யாதி.) செவ்வைப்பூசல்-இவளழகு அவன் நெஞ்சிலே படுகை. வஞ்சநம்-அவனழகு இவ்ள் நெஞ்சிலே படு கை. இத்தால்-இயற்கைப் புணர்ச்சியாகையாலே இவளழகு தன் னெஞ்சிலேபடாமல் தன்னழகு இவள்நெஞ்சிலேபடும்படி வஞ் சித்துக்கலந்தானென்றபடி.

மநுஷ்யர்க்கு அங்கபாகங்களிரண்டும்தாரகமாகையாலே, அந்நத்தாலே விக்கினல் நீராலே ஸமாதாநம்பண்ணலாம், மதுவ்ரதமாகையாலே மதுவாலே விக்கினல் மதுவையிட்டு ஆச்வஸித்தல், தவிருதல் செய்யுமித்தனை யொழியத்ரவ்யாந்தரத்தால் ஆச்வஸிப்பிக்க வொண்ணுதிறே. (పతింవిశ్వస్య) (பதிംவிச்வஸ்ய) என்கிறபடியாலே பதிவ்ரதைக்கு வந்த ஆபத்தை பதிதானே போக்குமதொழிய விஷயாந்தரங்களால் பரிஹரிக்கவொண்ணுதிறே.

(மணிவண்டு) ரஸாயநஸேவை பண்ணினபடியாலே நரைதிரை மூப்பற்றிருக்கிறபடி. (அரும்பினையலரை) என்கிற விஷயத்திற்கு ஸ்மாரகமா யிருக்கிறதாய்த்து. இவளுடைய மயிர்முடியைக் கண்டு (தூவியம்புள்ளுடைத் தெய்வவண்டு) என்கிறபடியே ஒரு * தெய்வவண்டு படு மலமாப்புக்கு ஸ்மாரகமா யிருக்கிறதாய்த்து. இவள் குழலில் மதுவாலே வண்டுகள் படுமலமாப்பு. (முரலும்) மதுவைக்கழுத்தே கட்டளையாக பாநம்பண்ணின ப்ரீதிப்ரகர்ஷத்தாலே இருக்கிற விடத்திலே யிருக்கமாட்டாமையாலும், வாய் விட்டுக் கூப்பிடமாட்டாமையாலும் ஆளத்திவைக்கிறபடி. (மடமானை) எனக்கு பவ்யையானவள் கிடீர் இப்போது அபவ்யையா யிருக்கிறாள். அங்ஙனன்றியே, மடப்பமென்று - ஸ்த்ரீத்வமாய், நிருபாதிகஸ்த்ரீத்வத்தை யுடையவளென்னவுமாம். தனக்கு ஆற்றாமை மீதூர்ந்தாலும் அதுபிறர்க்குத் தெரியாதபடி யடக்கி அவிக்ர்தையாயிருந்துஎதிர்த்தலையை விக்ர்தமாக்கக் கடவ விவள்கிடீர், (எம்பெருமான் திருவரங்கமெங்கே) என்று வாய்விட்டுக் கூப்பிடுகிறாள். (இது செய்தார்தம்மை) இவளுடைய தசாவிசேஷம் பாசுரமிட்டுச்சொல்லப்போகாமையாலே கடலைக்காட்டுமாப்போலே (இது) என்று கையாலேகாட்டுகிறாள். (இதுசெய்தார்) பண்டு நான் ஒப்பித்துவிட்டால் அவ்வொப்பனைகுறியழியாதேவரும்; இப்போது இக்குழலை ஆற்றஸாரமாக்கினவளோ வென்கிறாள். அங்ஙனன்றியே, இவள்மயிரில் பூவைச் சருகாக்கி வண்டுகளைப் பட்டினிகொண்டவளோ வென்னுதல். (தம்மை) இவளுடைய அவஸாதத்தைக்கொண்டு அவனுடையவைலக்ஷண்யத்தை நிலையிடுகிறாள். இவளை இப்பாடுபடுத்தின ஸௌபாக்யத்தை யுடையவருமொருவரோ!. (தம்மை) இதென்னஸௌபாக்யம். அவர் எம்மடியிலே வளர்ந்தாரோ. (தம்மை) இவளை இப்படி ப்ரணயத்வத்தில் தேசிகையாக்கின பரமப்ரணயியாரோ வென்கிறாள்.

---

விக்கினல் வேறொன்றாலே ஸமாதாநம் பண்ண வொண்ணாதோ வென்ன; அருளிச்செய்கிறார் (மநுஷ்யர்க்கித்யாதி.)

இத்தால் பலத்தை இவளிடத்திலேயேறிடுகிறாள் (పతింవిశ్వస్య-பதிംவிச்வஸ்யேத்யாதி.)

(இதுசெய்தார்) மூன்றுதாத்பர்யம்;-(தம்மை)வடிவின் வைலக்ஷண்யமாதல், அவன்ஸௌபாக்யமாதல்; ப்ரணயித்வத்வத்தால் வந்தவைலக்ஷண்யமாதல்.

இவ்வாற்றாமையை விளைப்பித்தது அஸஹ்யமாகில் இது செய்தவனைச் சொல்லென்னவேணும், அது தமக்கபிமதமென்னு மிடம் ப்ரகாசிக்கிறதாய்த்து - (தம்மை) என்கையாலே.

(மெய்யே கட்டுவிச்சிசொல்) யதார்த்தத்தைச்சொல். கட்டுவி ச்சி,ஸத்யவாதியென்று ப்ரஸித்தையாயிருக்க யதார்த்தத்தைச்சொ ல்லென்பா னென்னென்னில்; இயற்கைப் புணர்ச்சியாகையாலே நேராகச்சொல்லவொண்ணாதென்றிராதே, இதுஎனக்கபிமதம்உள் ளபடி சொல்லென்கிறாள்.கிஞ்சித்காரம் ஸித்திக்கும்போது உள்ள படி யறியவேணுமிறே. (சொல்லென்னச்சொன்னாள்) நெடுநாள் அநுவர்த்தித்துக்கேட்கவேண்டும்வார்த்தையைஏவச்சொன்னாள். எம்பெருமானைப்போலேயும் கீதோபநிஷதாசார்யனைப்போலே யுங்காணும் இக்கட்டுவிச்சியைபவமிருப்பது; - செவிதாழ்த்தார்க் கெல்லாம் வார்த்தைசொல்லிப் போந்தார்-உடையவர்; ருசியைப் பிறப்பித்து வார்த்தைசொல்லிப்போந்தான் - கீதோபநிஷதாசார் யன். (சொன்னாள்) தென்றலும் சிறுதுளியும்போலே இதுக்கோ ரர்த்தம்வேணுமோ, இப்பாசுரமே யமையாதோ வென்னும்படி காணும் வார்த்தைசொன்னசீர்மையிருந்தபடி.(சொன்னாள்)எனக் குக் கேட்கை தேட்டமானாப்போலேகாணும் இவளுக்குச் சொல் லுகை தேட்டமாய்ச்சொன்னபடி. ஆசார்யனுக்கு பகவதநுபவ ப்ரீதிக்கு பரிவாஹாபேக்ஷை யுண்டாகையாலே ஆள் தேட்டமா யிறே யிருப்பது. சிஷ்யன் கேட்டுதரிக்கக்கடவன், ஆசார்யன் சொல்லி தரிக்கக்கடவன். இவனுக்குக் கேட்கை உஜ்ஜீவநஹேது; அவனுக்கு சொல்லுகை போகஹேது.

(நங்காய்)அவள்சொன்ன வார்த்தை சொல்லலாம்படி.புறம்பு கையொழிந்திருக்கும்படியான பூர்த்தியுண்டிறே. அவளுக்கு நான் தேட்டமானாப்போலே காண் எனக்கு நீதேட்டமானபடி. அவள் சொன்ன வார்த்தைதானேதென்ன; சொல்லுகிறாள் (கடல்வண் ணரிதுசெய்தார்) * எம்பெருமான் திருவரங்கமெங்கேயென்றாள்- அவள்; இவள் (கடல்வண்ணர்) என்று-பெரியபெருமாளைச் சொல் லுகிறாள். இங்கு கடலின் ஸ்வபாவத்தைசொல்லுகிறதன்று, நிறத் தைச் சொல்லுகிறது.

---

தாய்க்கு அபிமதமென்கைக்கு ஜ்ஞாபகங்காட்டுகிறார் (இவ் வாற்றாமையித்யாதி.)

உள்ளபடி சொல்லவேண்டுவா னென்னென்ன; அருளிச்செய் கிறார் (கிஞ்சித்காரமித்யாதி.) இவளைத் தன்விஷயத்திலே ப்ரவண மாக்குகை-அவன் இவளுக்குப்பண்ணின கிஞ்சித்கார மென்றபடி. கேட்டவுடனேசொல்லவேண்டுவானென்னென்ன; அருளிச்செய் கிறார் (ஆசார்யனுக்கித்யாதி.) தாய்,கட்டுவிச்சி,இருவர்க்கும் நினை வொன்றென்னுமத்தை அருளிச்செய்கிறார்(எம்பெருமானித்யாதி.)

ஸ்வரூபத்திலேபுகாதே குணத்திலேபுகாதே வாய்கரையிலே யழுந்தினு ளென்கிறுள். ஒருக்கா லணைத்துவிட்டான்போலே காணும், அவ்வடிவிலே யகப்பட்டாள். ஸ்வரூபத்திலே இழிந்தார்க்கு குணங்களிலேயிழியவேணும், உபயத்துக்கும் ப்ரகாசகமான விக்ரஹத்திலே யிழிந்தார்க்குப் புறம்புபோகவேண்டாவிறே. ருசிஜநகமாயிருப்பதும் வடிவே, ஆச்ரயணீயமா யிருப்பதும் வடிவே, போக்யமா யிருப்பதும் வடிவேயிறே.

(இதுசெய்தார்) * நீராநோய்செய்தார். (இது)நீரோமுண்டு மோஹித்தாரை வடிவிலே தெரியுமாப்போலே நோய் இவள்வடிவிலே தோற்றுகிறபடி.இந்நோய்பெரும்பேறென்னுமிடந்தோற்ற(இது) என்கிறுள். * தெய்வநன்னோயிறே. தெய்வமடியாகவந்த நோயாகையாலே விலக்ஷணமான நோயிறே. நாட்டார் புருஷார்த்தமென்று ஸாதிக்கிற வித்தை நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே பெற்றவளன்றோ இவள். (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு) (ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு) இத்யாதியிற் சொல்லுகிறபடியே ஸாதநாந்தர நிஷ்டர்க்கு அநேக ஜந்மஸாத்யையான பக்தி இவளுக்குநிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே ஸித்தித்ததிறே. உபாஸகனுக்கு ஸாதநத்தினுடைய மேலெல்லையாய் ப்ரபந்நனுக்கு ப்ராப்யத்தினுடைய முதலடியாயிறே பக்தியிருப்பது.

(கடல்வண்ணரிதுசெய்தார்)ஒருவடிவைக்காட்டிஒருவடிவைக்கொண்டார். (நஜீவேயம்க்ஷணமபி) (நஜீவேயம்க்ஷணமபி) என்கிற வடிவைக்காட்டி, (ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே) (ஊர்த்த்வம்மாஸாந் நஜீவிஷ்யே) என்கிற வடிவைக் கிடீர் கொண்டது. (காப்பாராரே) ரக்ஷகரால்வந்த வாபத்தைஉங்கள்வேராலும்பரிஹரிக்கப்போமோ.விஷயாந்தரங்களால் வந்தநோவு பகவத்விஷயத்தைக் கிட்டிப்போக்கலாம், பகவத்விஷயமடியாக வந்தநோவு ஸ்வரூபப்ராப்தமாகையாலே - யாவதாத்மபாவி அநிவர்த்த்யமிறே.

---

ஸ்வரூபகுணங்களிருக்க விக்ரஹத்திலே விழிவா னென்னென்ன; அருளிச்செய்கிறுர் (ஸ்வரூபத்திலேயித்யாதி.)

நோயென்று-பக்தியாய், அதுக்கு வைலக்ஷண்ய மேதென்ன; அருளிச்செய்கிறுர்(நாட்டாரித்யாதி.)ப்ரபந்நனுக்கு பக்திவேணுமோவென்ன; அருளிச்செய்கிறுர் (உபாஸகனுக்கித்யாதி.)

வடிவுக்கு வடிவு ஸமமாறுல் துக்கமேதென்ன; அருளிச்செய்கிறுர் (நஜீவேயம் - நஜீவேயமித்யாதி) (ஊர்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே - ஊர்த்த்வம்மாஸாந்நஜீவிஷ்யே.) என்னும்படியான தன்வடிவைக்காட்டிக் கிடீர் (நஜீவேயம்க்ஷணமபி - நஜீவேயம்க்ஷணமபி) என்று வாய்புலத்தும்படியான விவள்வடிவைக்கொண்டது என்று வாக்யத்தை அந்வயித்து யோஜிப்பது. விஷயாந்தரப்ராவண்யத்தோபாதி இத்தைப்போக்க வொண்ணுதோ, (ஆர்-காப்பார்) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறுர் (விஷயாந்தரங்களாலித்யாதி.)

(கடல்வண்ண ரிதுசெய்தார், காப்பாராரோ) கடல்கொண்ட வஸ்துவைக் கடலே*வீசவேண்டாவோ. (காப்பாராரோ) இவளால் பரிஹரிக்கப்போமோ, உன்னால் பரிஹரிக்கப்போமோ, பிறரால் பரிஹரிக்கப்போமோ. வேலியே பயிரையழித்தால் வேலிதான் நோக்கும்த்தனையொழியப்பயிராலேநோக்கிக்கொள்ளப்போமோ. இத்தால் ஸ்வாபதேசமாய்த்தது - நிர்ஹேதுகவிஷயீகாரம், தத்கார்யமான ப்ரேமாதிசயம், தத்கார்யமானவிரக்தி, ஆசார்யோபதேசபூர்வகமாக ஜ்ஞாநவிருத்தி ஆகிறவிவை. ... ... (கக)

அ.—பன்னிரண்டாம்பாட்டு. (நெஞ்சுருகி) (கடல்வண்ணர்) என்று கட்டுவிச்சி திருநாமத்தைச் சொல்லுகையாலும், அத்தை திருத்தாயார்அநுபாஷித்தும்,வினவவந்தார்க்குச்சொல்லியும் இவள்தான் வாய்வெருவினபோலே, (எம்பெருமான்திருவரங்கமெங்கே)என்று தன்வாயாலே திருநாமத்தைச்சொல்லுகையாலும், பூர்வாவஸ்த்தையிற்காட்டில் சிறிதுணர்த்திபிறந்தது, அவ்வளவிலும் அபிமதன் வந்துமுகங்காட்டாமையாலேஅதுவும்ஆற்றாமைக்குடலாய் இடைவிடாமல் கூப்பிடத் தொடங்கினாள்; அத்தை வினவவந்தார்க்குச்சொல்லிஇன்னாதாகிறாள். இவளுடையக்லேசம்நின்ற நிலையிது, ஸ்வரூபஹாநிநின்றநிலையிது, எனக்குஅபவ்யையானபடியிது, இத்தனைக்குமடி என்பாபமிறே யென்று அவர்களுக்குச் சொல்லி இன்னாதாகிறாள். லோகாபவாதம் பரிஹரிக்கச் சொல்லுகிறாளித்தனைபோக்கி அகவாயில் இவ்விஷயத்தில் இவளுடைய அவகாஹநம் தனக்கு அநிஷ்டமாயிருக்கிறதன்றிறே.

மூ.—நெஞ்சுருகிக்கண்பனிப்பநிற்கும்சோரும்
நெடிதுயிர்க்குமுண்டறியாளுறக்கம்பேணாள்
நஞ்சரவில்துயிலமர்ந்தநம்பீயென்னும்
வம்பார்பூம்வயலாலிமைந்தாவென்னும்
அஞ்சிறையபுட்கொடியேயாடும்பாடும்
அணியரங்கமாடுதுமோதோழீயென்னும்
என்சிறகின்கீழடங்காப்பெண்ணைப்பெற்றேன்
இருநிலத்தோர்பழிபடைத்தேன்ஏ!பாவமே. (கஉ)

---

(காப்பாரார்) என்று-கட்டுவிச்சிவார்த்தையாகையாலேதாயானவுன்னால் பரிஹரிக்கப் போமோவென்றபடி. ... ... (கக)

பன்னிரண்டாம்பாட்டு. (நெஞ்சுருகி) (நம்பீ) என்று நாமக்ரஹணம் பண்ணுகை ஸ்வரூபஹாநி, கீழ்ப்பாட்டில் இவளாற்றாமை ஹார்த்தமாக இஷ்டமாயிருந்தவள் இப்போது இன்னாதாக வேண்டுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (லோகாபவாதமித்யாதி.)

---

* "கரையேற்ற" என்றும் பாடம்.

| பதம். | உரை. |
| --- | --- |
| நெஞ்சு | மநஸ்ஸானது, [கி, |
| உருகி | நீர்ப்பண்டமாக வுரு அது உள்ளடங்காமையாலே, |
| கண் | கண்களினின்றும், |
| பனிப்ப | தாரைதாரையாகவிழ, [ள்; |
| நிற்கும் | அசைவற்றுநிற்கிரு |
| சோரும் | மோஹங்கதையாகிருள்; [யாலே, |
| | சோகத்தின் மிகுதி |
| நெடிதுயிர்க்கும் | நெடுமூச்சு விடாநின்ருள்; |
| உண்டறியாள் | ஊணை மறந்து விட்டாள்; |
| உறக்கம்பேணாள் | உறக்கத்தைமறந்து விட்டாள்; |
| | பின்னையென்செய்யுமென்னில்; |
| நஞ்சு | ஆச்ரிதவிரோதிகளைக்கண்டால்விஷத்தை உமிழாநின்றுள்ள, |
| அரவில் | திருவனந்தாழ்வானுகிறதிருப்படுக்கையிலே, |
| துயிலமர்ந்த | யோக நித்ரை பண்ணுமவனுய், |
| | வெள்ளித் தகட்டிலழுத்தின நீலரத்நம்போலே, |
| நம்பியென்னும் | அழகால் வந்தபூர்த்தியை யுடையவனே! என்றுசொல்லாநின்ருள்; |
| வம்புஆர் | பரிமளம்மிக்கிருந்துள்ள, [ய, |
| பூ | புஷ்ப்பங்களை யுடை |
| வயல் | வயல்கள் சூழ்ந்த, |
| ஆலி | திருவாலியி லெழுந்தருளியிருக்கிற, |
| மைந்தாவென்னும் | என்னை ஆநந்யார்ஹையாக்கின யுவாவானவனே என்று சொல்லாநின்ருள்; |
| அஞ்சிறைய | அழகிய சிறகை யுடைத்தான, |
| புட்கொடி | கருடத்வஜத்தை, |
| ஆடும் | மநஸ்ஸிலே நினைத்தும், |
| பாடும் | அநுகரித்தும், |
| | அவன் வரக் காணாமையாலே, [யே, |
| தோழீ | என் உயிர்த் தோழி |
| அணி | ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, |
| அரங்கம் | கோயிலேபோய், |
| ஆடுதுமோ | அவனுடன்ஸம்ச்லேஷிக்கப் பெறுவோமோ, [ருளென்ன; |
| என்னும் | என்றுசொல்லாநின் |
| | இவளை உன்வழியில் நிறுத்தக் குறையென்னென்ன; |
| என்சிறகின்கீழடங்கா | என்கைக் கடங்காத, |
| பெண்ணைப்பெற்றேன் | பெண்ணைப் பெற்றேன்; [யிலே, |
| இருநிலத்து | இந்தமஹாப்ருதிவி |
| ஓர்பழிபடைத்தேன் | ஒப்பற்ற பழியை லபித்தேன்; |
| ஏ!பாவமே | நான் செய்த பாபமே யென்று வயிறு பிடிக்கிருள். () |

வ்யா.—(நெஞ்சித்யாதி) கீழ்ப்பாட்டில் (இரங்கும்) என்ற இரக்கத்தினுடைய வகைகளிருக்கிறபடி. (நெஞ்சுருகி) நிரவயவமான மநஸ்தத்வம் நீர்ப்பண்டமாகாநின்றது. அக்நிஸகாசத்திலே மெழுக்குப்போலே விரஹாக்நியாலே த்ரவத்ரவ்யமாகாநின்றது. லௌகிகாக்நிக்கு உருகாதென்றால்விரகாக்நிக்கு உருகாதொழியுமோ; விரஹாக்நிக்குருகாதபோது ஜ்ஞாநப்ரஸரத்வாரமின்றியிலே யொழியக்கடவதிறே. (கண்பனிப்ப) அதுஉள்ளடங்காமையாலே பரீவாஹரூபத்தாலே புறப்பிடுகிறபடி. அந்தஃகரணமுருகி பாஹ்யகரணத்தாலே புறப்படுகிறபடி.

(நிற்கும்சோரும்) அவையிரண்டினுடையகார்ய மிருக்கிறபடி. க்ர்த்யாக்ர்த்யவிவேகம் பண்ணமாட்டாமையாலே ஸ்தப்த்தையாய் நிற்கும்;க்ர்த்யாக்ர்த்யவிவேகத்துக்கடியானநெஞ்சழிகையாலே ஒருவ்யாபாரக்ஷமையன்றியே நிற்கும். (శత్రుఘ్నో నన్తరస్థితః) (ஶத்ருக்நோநந்தரஸ்த்திதஃ) என்னக்கடவதிறே. ஸ்வாமி தறைப்பட்டுக்கிடந்து ப்ரலாபியாநிற்க சேஷபூதன் தரித்து நின்றானென்கை ஓரர்த்தமன்றே. க்ர்த்யாக்ர்த்ய விவேகம் பண்ண மாட்டாமையாலே ஸ்தப்த்தனாய்நின்றானென்கை. இவனுடையப்ரலாபத்தைத் தவிர்க்கமாட்டான், பெருமாளை யழைக்கமாட்டான்; ஆகையாலேஸ்தப்த்தனாய்நின்றானென்கை.(சோரும்)ஓராலம்பநம் பெறிலிறே ஸ்த்திதையாய் நிற்கலாவது, அதில்லாமையாலே மோஹங்கதையானாள். க்ர்த்யாக்ர்த்யவிவேக மின்றியிலே யொழிந்தாலும் ஒருப்ரவ்ர்த்தி பண்ணலாவது கண்ணாறுண்டாகிலிறே, அதழிகையாலே மூச்சடங்கினாள்.

(நெடிதுயிர்க்கும்) உள்ளுண்டான சோகாவேசத்தாலே நெடுமூச்செறியா நிற்கும். கோடரத்திற்பற்றினஅக்நிபோலே அந்தஃகரணத்தையுருக்கி விடுமளவன்றியே தச்சேஷம் நெடுமூச்சாய்ப் புறப்படாநின்றது. (దహన్తీమివ నిశ్వాసైః వృక్షాన్ పల్లవధారిణః) (தஹந்தீமிவநிஶ்வாஸைஃ வ்ர்க்ஷாந்பல்லவதாரிணஃ) என்னக்கடவதிறே. திருவடி, லௌகிகாக்நியாலே ஊரைச்சுட்டான், இவள் விரஹாக்நியாலே அசோகவநிகையைச் சுட்டாள். (உண்டறியாள் உறக்கம் பேணாள்) தன்கார்யம் தலைக்கட்டினபடியிது, என் கார்யத்தில் இவள் நின்றநிலையிது. இவளுடைய ஊணுமுறக்கமும்போலேகாணும் தனக்கு உத்தேச்யம்.

---

நிரவயவமாய் அதளவ அதாஹ்யமான நெஞ்சு உருகக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (லௌகிகாக்நிக்கித்யாதி.)

கண்ணாறு-சாடு.

க்ர்த்யாக்ர்த்ய விவேகம் பண்ணமாட்டாமல் நின்றவிடமுண்டோவென்ன; அருளிச்செய்கிறார் (శత్రుఘ్నః-சத்ருக்ந இத்யாதி.)

(உண்டறியாள்) உண்கிறிலளென்கையன்றியே முதலிலே ஊணை மறந்தாளென்கிறாள். ஸம்ச்லேஷ தசையில், (உண்ணுநாள் பசியாவ தொன்றில்லை) என்றும், (உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங்கண்ணன்)என்றுமிருக்கையாலே- ஊணில்லை; தத்விச்லேஷத்தில் உபவாஸக்ர்சையா யிருக்கையாலே ஊணில்லை.

(உறக்கம்பேணாள்) நித்ரையைக் காற்கடைக் கொள்ளாநின்றாள். (பட்டுடுக்கும்) என்று - அவன் ஆதரித்த வுடையென்றன்றோ நீஅவ்வுடை யுடுக்கத் தொடங்கிற்று, அவ்வோபாதி அவனாதரித்த வுடம்பன்றோ வுன்னுடம்பு, அவன்வந்து முகங்காட்டினால் அதின்போக்ய மழிந்ததென்று விஷண்ணனாகாதபடி உன்ஸௌகுமார்யத்துக்கு அநுகூலமாக வருந்தியாகிலுமுறங்கவேணுங்காணென்ன அவற்றையும் அநாதரியாநின்றாள். (பேணாள்) என்கிறவிது - வருந்தியாகிலு முறங்கவேணுமென்று சொன்னத்தைக் காட்டுகிறதிறே. ( ........ ) (அநாதிமாயயாஸுப்தঃ) என்கிறபடியேபகவத்விஷயத்தைக்கிட்டுவதுக்குமுன்பு உணர்த்தியறியாதாப்போலே பகவத்விஷயத்தைக் கிட்டினுலு முறக்கமறியாதிருக்கக்கடவதிறே.

(நஞ்சித்யாதி) தன்ப்ரயோஜநமுங்கிடக்கஎன் ப்ரயோஜநமுங்கிடக்க ஸ்வரூப மழிந்தபடி பார்க்கலாகாதோ வென்கிறாள். அபிமதவியோகத்தால் வந்தவாற்றாமையாலே அகவாயழியாநிற்கச் செய்தேயும் அத்தைப் பிறரறியாதபடியடக்கிப் பொரிபுறந்தடவி எதிர்த்தலையை யழிப்பிக்கையிறே - ஸ்த்ரீத்வலக்ஷணம், அதுதவிர்ந்து வாய்விட்டுக்கூப்பிடாநின்றாள். (எம்பெருமான் திருவரங்கமெங்கே) என்று அத்தை வாய்வெருவினளென்று நினைத்திருந்தோம், அதுபோய் இடைவிடாமல் வாய்புலத்தத் தொடங்கினாள். முன்பு (திருவரங்கம்) என்று ஊரைச்சொன்னாள்; கட்டுவிச்சி, (கடல்வண்ணர்) என்று - பெரியபெருமாளைச் சொன்னாள்; இப்போது படுக்கையைச் சொல்லுகிறாள். முதல்படுக்கை கோயில் போலேகாணும் இவளுக்கு.

(நஞ்சரவிற்றுயிலமர்ந்தநம்பியென்னும்)தானழியாநிற்கஎதிர்த்தலையைப் பேணாநின்றாள்.(நஞ்சரவு)ப்ரதிகூலர்க்குக்கிட்டவொண்ணாதபடுக்கையாகப் பெறுவோமே!. (அரவு) படுக்கைக்கு ஸம்பாத்யமான லக்ஷணங்கள் ஸ்வதஸ்ஸித்தமாகப் பெற்றோமே.

---

(........) என்று தரித்துநிற்கையையன்றோ காட்டுவது, ஸ்தப்தனைகையைக் காட்டும்படி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (அபிமதவியோகத்தாலித்யாதி.) முன்னும் வாய்விட்டாளே, இங்குவாசியேதென்ன; அருளிச்செய்கிறார் (எம்பெருமா னித்யாதி.) (நஞ்சரவு) என்றத்தைப்பற்றஅருளிச்செய்கிறார் (நிர்ப்பயமாகவித்யாதி.)

மென்மை, குளிர்த்தி, நாற்றமென்கிற விவை ஜாதிப்ரயுக்தமாயி றே ஸர்ப்பத்துக்கிருப்பது. சேதநமான படுக்கையுமாகப் பெற் ரோமே. (ప్రకృష్టవిజ్ఞానబలైకధామని) (ப்ரக்ர்ஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி) என்கிறபடியே அவஸ்தாநுகுணமாக,குழைய வேண்டுமிடத்திலே குழைந்து உறையவேண்டு மிடத்திலே யுறைந்து கொடுக்கும் படுக்கையாகப் பெற்றோமே. (துயிலமர்ந்த)படுக்கைவாய்ப்பாலே *வீசி வில்லிட்டெழுப்பினாலும் எழுந்திராதபடியாயாய்த்துப்படுக் கைவாய்ப்பிருக்கிறபடி. நிர்ப்பயமாகக் கண்வளரப்பெற்றோமே, போகரூபமாகக் கண்வளர்ந்தருளப்பெற்றோமே.

(நம்பியென்னும்) திருவநந்தாழ்வான்மடியிலே சாய்ந்தபின்பு தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே அழகால் வந்த பூர்த்தியைச் சொல்லுகிறது. (సమయాబోధితశ్శ్రీమాన్ సుఖసుప్తః పరంతపః) (ஸமயா போதிதஶ்ஶ்ரீமாந் ஸுகஸுப்தஃபரந்தப:) என்று ஆலத்தி வழிக்க வேண்டும்படியிறே உறங்கும்போதை யழகிருப்பது. அதவா(நஞ் சித்யாதி) ப்ரணயரோஷந்தோற்ற வாய்விடா நின்றாளென்கிரு ளாகவுமாம். நஞ்சரவு - ப்ரதிகூலர் கிட்டாமைக்கு நஞ்சை யுமிழு கிறானென்றிருந்தோம், அதுஒருவ்யாஜமாய், அவ்வஸ்துவையொழி யச்செல்லாதார் கிட்டாதபடி நஞ்சையுமிழும்படியாவதே! படுக் கையின் ஸ்வபாவம். அவனோடு இன்னாதாமதொழிய படுக்கையோ டின்னாதாவானென்னென்னில்; அவனோடு தான் இன்னாதாகைக்கு ஹேது அவர்ஜநீய ஸம்பந்தமும் போக்யதையு மன்றோ; அவ்வோ பாதி ததீயரோடும் அவர்ஜநீய ஸம்பந்தமும் போக்யதையு முண் டானால் கிலாய்க்கத்தட்டில்லையிறே. அவனுடைய அநந்யார்ஹ சேஷத்வத்திலேஅந்தர்ப்பூதமிறேததீயசேஷத்வமும்; அவனுடை யபோக்யதையிலேஅந்தர்ப்பூதமிறே ததீயருடையபோக்யதையும். ஆகையாலே படுக்கையோடு கிலாய்க்கைப்ராப்தம். (துயிலமர்ந்த) இருவர்க்குப் படுத்த படுக்கை ஒருவர்க்குப் பொருந்துவதே!. எனக்குத் தாய்மடி பொருந்தாதிருக்கத் தமக்குப் படுக்கைபொரு ந்துவதே!. பரமப்ரணயிகளாயிருக்கிற தம்முடைய ப்ரணயித்வத் துக்கு நமஸ்காரமென்கிறாள். (நம்பியென்னும்) இத்தலை வெறுந் தறையாயிருக்க அத்தலை குறைவற்றிருக்கிறபடி.

(வம்பார்பூமித்யாதி) அப்படுக்கையோடேசேருகைக்கு பாணி க்ரஹணம்பண்ணின தேசத்தைச் சொல்லுகிறது. பரிமள ப்ரசுர மான பூவை யுடைத்தான வயல். அவனுடைய யுவத்வம் நித்யமா னாப்போலே வயலும் நித்யவஸந்தமா யிருக்கிறபடி. தம்முடைய (அரும்பினையலரை) என்கிற பருவத்துக்கு அநுகூலமாக நித்ய வஸந்தமான வயலாகப் பெறுவோமே.

* வீசி வில்லிட்டு - தனியிட்டு.

தம்முடைய (அரும்பினை யலரை) என்கிறபருவத்துக்கு அநு கூலமாக நித்யவஸந்தமான வயலாகப் பேறுவோமே. அதவா, நானிருக்கிறதேசம் நீரும் பூவும் பரிமளமுமின்றிக்கே வரண்டு தறையாய்க்கிடக்க, தானிருக்கிறதேசமகப்படத் தளிரும் முறியு மாம்படி யாவதே!. அவனுடைய செந்தலிப்பேயிறே அத்தேசத் துக்கும் செந்தலிப்பு. அப்படியே தன்னுடையசெந்தலிப்பாயிருக் குந் தேசமாகையாலே தான் உறுவுகையாலே அத்தேசமுமுறுவிக் கிடக்கிறதிறே. (மைந்தாவென்னும்) என்னையுபேக்ஷிக்கப் பார்த் தால் தன்பருவத்தைக் காட்டி என்னை அநந்யார்ஹ மாக்குவா னென், அடியிலே நான் விஷயப்ரவணனாய்த் திரிய, (வாடினேன்) என்று சொல்லும்படி உன்போக்யதையைக்காட்டிப் புறம்புள்ள துவக்கையறுத்து உன்னையொழியச் செல்லாதபடிபண்ணிற்று இன்று என்னைக்கைவிடுகைக்கோ.

(அஞ்சிறையபுட்கொடியே யாடும்பாடும்)பாணிக்ரஹணம்பண் ணிவைக்கக்கொண்டுவந்த விச்வாமித்ரனைச் சொல்லுகிறது. அழ கிய சிறகையுடைய பெரிய திருவடியாகிற த்வஜத்தை அநுகரியா நின்றாள். வந்தால் ப்ரியப்படுகையன்றியிலே வருகிறானென்று தூரத்திலே கண்டால் விச்வஸிக்கும்படியிறே பெரியதிருவடி யுடைய ஔதார்ய மிருப்பது. பெரியதிருவடி தூரத்திலே தோ ற்றி ஆச்வஸிப்பிக்கும்படியை நினைத்துக்கொண்டிருந்தாள், அவ ன்வரக்காணாமையாலேஅவனையநுகரிக்கத் தொடங்கினாள்,விடாய் த்தார்ஹஸ்தமுத்ரையாலே தண்ணீர்வேண்டுமாப்போலே அவன் வரவில் தனக்குண்டான ஆகாங்க்ஷை தோற்ற அவன்வரும்படியை பாவிக்கத்தொடங்கினாள்.

(புட்கொடியேயாடும்) பெரியதிருவடிமுதுகிலே அவன்றான் வரும்படியை பாவிக்கையன்றியே கொடியையே பாவியாநின்றாள். (பாடும்) அவனை அநுகரிக்கையாலே பிறந்த ஆச்வாஸத்தாலே வாய்திறக்க வல்லளாய்ஆர்த்திதோற்றக்கூப்பிடத்தொடங்கினாள்.

---

செந்தலிப்பு-குளிர்த்தி.

அநந்யார்ஹை யாக்கினபடியை அருளிச்செய்கிறார் (அடி யிலே நானித்யாதி.)

பருவத்தால்வந்த போக்யதை விச்வாமித்ரனைப்போலே. திரு வடியும். ஆடுகை - அநுகரிக்கை. நாயகனை யநுகரியாமல் திருவ டியை யநுகரிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார்(வந்தாலித் யாதி.)

அவதாரணத்தைப் பற்றஅருளிச்செய்கிறார் (பெரியதிருவடி முதுகிலேயித்யாதி.)

பாட்டாவது-கண்ணுங் கண்ணீருமாய்க்கொண்டு கால் தாழ்ந்திருக்கும்படியான த்வநியிறே.அப்படியே இவளும் உரக்க ஆர்த்தநாதத்தாலே, (மரங்களு மிரங்கும்வகை) என்கிறபடியே பிறர் கால்தாழ்ந்து கண்ணுங் கண்ணீருமாயிருக்கையாலே (பாடும்) என்கிறது.சோகரஸத்தோடு போகரஸத்தோடு வாசியில்லை யிறே-பிறரைக்கால்தாழப் பண்ணுகைக்கு.

(அணியரங்கமித்யாதி) இவளுடைய ஆர்த்தநாதத்தைக் கேட்டதோழி, தாயானவள் கடக்கநின்று ஹிதஞ்சொல்லுமவளாகையாலே ஆச்வாஸகரையாக மாட்டாள், நம்முடைய ஸந்நிதி ஆச்வாஸ ஹேதுவாமோ வென்று பார்த்து, ([illegible]) (ஏகா0துகோ0ஸா–கஞ்சநௌ)என்றிருக்குமவளாகையாலே காய்ந்த தலையும் க்ர்சமானவடிவும் உருவினமுகமுமாய்க் கொண்டு தன்னார்த்தியெல்லாம் வடிவிலே தோற்றும்படி முன்னே வந்துநின்றாள், அவள்முகத்தைப்பார்த்து, தோழீ!, நாம்கோயிலிலேபோய் பெரியபெருமாளை யநுபவிக்க வல்லோமோ வென்கிறாள். ([illegible]) (ஏஷப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மிக்ரீஷ்மே சீதமிவஹ்ரதம்) என்று ஈச்வரனைத் தடாகமாகச்சொல்லக்கடவதிறே. தாபத்ரயாதுரர்க்கு தாபஹரமாயிருக்கையாலும் விரஹதாபாதுரர்க்கு விரஹதாபசமநமா யிருக்கையாலும் (ஆடுதுமோ) என்கிறாள்.

(அணியரங்கமாடுதுமோ) (தொல்லை வேங்கடமாட்டவுஞ் சூழ்கின்றிலர்) என்று - கல்லைப்பொய்கையாகச் சொல்லவல்லவர்கள் ஆற்றைப் பொய்கையாகச் சொல்லச் சொல்லவேணுமோ. அநந்யார்ஹராய் அநந்யபோக்யரா யிருப்பார்க்கிறே - இவ்வூரில் புகுந்தால் ஒருமடுவிலே புகுந்தாப்போலே ச்ரமஹரமா யிருப்பது. (தோழீயென்னும்) அவள்முகத்தில் பயிர்ப்பைக் கண்டு, நாம்போய்க் கோயிலிலே யநுபவித்து நம்முகம் பண்டுபோலே செந்தலித்திருக்க நாம் காண்பதெப்போதோ வென்னும்.

---

கூப்பீட்டைப் பாட்டாகச் சொல்லுவா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (பாட்டாவதித்யாதி.) சோகமானகூப்பீட்டுக்கு கால்தாழ்க்கக் கூடுமோ வென்ன, அருளிச்செய்கிறார் (சோகரஸத்தோடித்யாதி.)

மதிஸாம்யமே தென்ன; அருளிச்செய்கிறார் (தாபத்ரயாதுரரித்யாதி.)

ஊர்மடுவாமோவென்ன; அருளிச்செய்கிறார் (தொல்லைவேங்கடமித்யாதி.) அப்படி மடுவாகத் தோற்ற வில்லையேவென்ன; அருளிச்செய்கிறார் (அநந்யார்ஹராயித்யாதி.)

உன்வயிற்றிற்பிறந்தவளை ஸ்வரூபஹாநியிலே ப்ரியப்புக் கால் நியமிக்கக் குறை யென்னென்னில் (என்சிறகின் கீழடங்காப் பெண்ணைப் பெற்றேன்) என்னைக் கடங்காத படியானாள். ஆச்ரயணதசையில் அவன்மேல் விழுந்து ஆச்ரயிப்பிக்க ஆச்ரயித்த வோபாதி, போகதசையிலும் அவன் செய்தபடி கண்டிருக்கை காண் ஸ்வரூபம், நீமேல்விழுகை ஸ்த்ரீத்வத்துக்குப் போராது காணென்று நானறிந்தத்தைச் சொன்னாலும் அத்தைக்காற்கடைக் கொள்ளா நின்றாள். (என்சிறகு) என்பக்ஷத்திலே; என்னபிமாநத்திலேயென்றபடி. அவனபிமாநத்திலே யடங்கினவளாகையாலே என்னபிமாநத்தை விட்டாளிறே. ஸ்வரூபத்தை நோக்கினாளல்லள், என்னபிமதஞ் செய்தாளல்லள், எனக்கு பவ்யையானாளல்லள். (பெற்றேன்) இதெல்லாம் இவள் குற்றமாக்காதே பெற்ற தன் குற்றமாக்குகிறாள்.

(இருநிலத்து ஓர் பழிபடைத்தேன்) இவளைப் பெற்றத்தாலுண்டான பேறு இது விறே. பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையானபூமிப் பரப்படங்கலும் வ்யாப்தமாம்படியான பழியைப் படைத்தேன். தன்கார்யத்தே ப்ரவர்த்திக்கை குடிப்பழியாம்படியிறே இக்குடியினுடைய வேற்றமிருப்பது. (ஓர்பழி) அத்விதீயமானபழி. (ஏ! பாவம்) இவள் குறையுமன்று, அவன் குறையுமன்று, நான் பண்ணினபாபமே இதுக்கு ஹேதுவென்கிறாள். (నమన్థరాయాః)(நமந்தராயாః) இத்யாதி. [నమన్థరాయాః - நமந்தராயாః] இவ்வநர்த்தத்துக் கெல்லாம் ஹேதுபூதை மந்தரையென்றுநினையா அவளுடைய தோஷமன்று, அவள்வார்த்தைகேட்ட கைகேயிதோஷமென்று நினைத்தான்; [నచమాతురస్యాః - நசமாதுரஸ்யாః] இவளுடைய தோஷமுமன்று, இவள்வார்த்தைகேட்ட சக்ரவர்த்திதோஷமென்று நினைத்தான்; [దోషోనరాజ్ఞః - தோஷோநராஜ்ஞঃ] ராஜாவுக்கு ஒரு தோஷமுமில்லை, அவன்வார்த்தையைக்கேட்டு தமக்குவருத்தவபிஷேகத்தைப் போகட்டுக் காட்டிலேபோன வவர்குற்றமித்தனை; [నచరాఘవస్య - நசராகவஸ்ய] அவர்க்குத்தான் குற்றமென், அவர் அபிஷிக்த்தராயிருந்தால் அநுகூலவ்ர்த்தி பண்ணக்கடவனாயிருக்க அதுக்கல்லாத வென்பாபமே இவ்வநர்த்தத்துக்கெல்லாம் ஹேதுபூதம்; [వనప్రవేశేరఘునన్దనస్య - வநப்ரவேசேரகுநந்தநஸ்ய] இக்குடி வாழப்பிறந்த செல்வப்பிள்ளைவநவாஸம் பண்ணுகைக்கு நிமித்தம் என்பாபமே யாமித்தனை.

---

கீழ்ப்பதங்க ளெல்லாவற்றையும் பற்ற அருளிச்செய்கிறார் (ஸ்வரூபத்தை நோக்கினாளல்ல ளித்யாதி.)

பெருமாள் ஸத்யஸந்தராகையாலே - பித்ர்வசந பரிபாலநம் பண்ணவேணும், ஆகையாலே அவர்தோஷமன்று என்பாபமே யாமத்தனை யென்றபடி. ... ... ... (கஉ)

கூனிசொன்னது கைகேசிக்குக் கேட்கவேண்டா, அவள் சொன்னது சக்ரவர்த்திக்குக் கேட்கவேண்டா, அவன் சொன்னது பெருமாளுக்குக் கேட்கவேண்டா. கூனிசொன்னது கேட்கவேண்டா தொழிகிறது - அடியாட்டியாகையாலே, கைகேயி சொன்னது சக்ரவர்த்திக்குக் கேட்கவேண்டா தொழிகிற தென்னென்னில்; ஸ்த்ரீ, புத்ரவாத்ஸல்யத்தாலே சொன்ன வார்த்தையை பர்த்தாவுக்குக் கேட்கவேணுமோ, சக்ரவர்த்தி சொன்னது பெருமாளுக்குக் கேட்க வேண்டாவோ வென்னில்; தர்மாபாஸத்தை ஆலம்பநமாகக்கொண்டு ஸ்த்ரீ பாரதந்த்ர்யத்தாலே ப்ரமித்துச் சொன்னவார்த்தையை பெருமாளுக்குக் கேட்கவேணுமோ, தம்முடைய அங்வயவ்யதிரேகங்களில் நான்படும் பாடறிவர்,தாம் ராஜ்யப்ராப்தரென்னுமிடமறிவர்,ஆனபின்பு அவனைக்கட்டி இட்டுவைத்து ராஜ்யத்தை யாளத் தட்டென், அவன் சொன்ன வசநத்தை யநாதரித்து ராஜ்யத்தை யாண்டாராகில்தம் முடைய வ்யதிரேகத்தில் நான் முடியாதபடி ரக்ஷித்தாராகிலாய்த்தே;ஆகையால் என்பாபமே யிதுக்கு நிமித்தமென்றனிறே ஸ்ரீபரதாழ்வான். ... ... ... ... ... (கஉ)

அ.—பதின்மூன்றாம்பாட்டு. ( கல்லெடுத்து ) திருத்தாயார், இவள், திருநாமத்தைத்தன்வாயாலே சொல்லாநின்றாள், திருநாமம் ஸாத்மிக்கும் தசைபோலே யிருந்த தென்று பார்த்து, இவள்வார்த்தை கேளாதே உறுவிக்கிடக்கிற கிளியை இவள்கண்முகப்பேவைத்து திருநாமத்தைச் சொல்லுவிக்க இவளுக்குஆச்வாஸம் பிறக்குமென்றுநினைத்துஇவள்முன்பேகிளியைக் கொண்டுவந்துவிட்ட விடத்திலும் அது பேசாதேயிருக்க இவள் திருநாமத்தைச் சொல்லீரென்றாள்; இவள்தசையைக்கண்டுஉறுவியிருக்கையாலும், சேஷபூதரான நாம் இவள் கற்பித்தவையேயாகிலும் இவள் ஸந்நிதியில் சொல்லக்கடவோமல்லோ மென்னும் நினைவாலும் பேசாதேயிருந்தது, ஆசார்யன் போக்கினவையே யாகிலும் தத்ஸந்நிதியிலே சொல்லக்கடவ தல்லவென்கிற சாஸ்த்ரார்த்தம்இவ்விடத்திலேவெளியிடப்படுகிறது. நானுச்சரிக்கஅநந்தரம்உனக்கும் உச்சரிக்கலாமே யென்ன; அடியிலும் கற்பித்த ப்ரகார மதுவாகையாலே யதுக்கிசையத் தான் ஆதிக்ரஹணம் பண்ண அநந்தரம் சொன்னவாறே இது ஒருமுகத்தாலே ஸாத்மியாமையாலே தளர்ந்தாளென்கிறாள்.

---

பதின்மூன்றாம்பாட்டு. ஒருமுகத்தாலே - ஆபத்ஸகத்வம் முதலான வர்த்த முகத்தாலே.

திருநாமம் ஸாத்மிக்குந் தசையென்றும் ஸாத்மியாத தசை யென்று முண்டோ வென்னில்; திருநாமந்தான் ஓரவஸ்த்தையில் பாவநமுமாய் ஓரவஸ்த்தையில் போக்யமுமாய் ஓரவஸ்த்தையில் ஸம்ஸாரபயநிவர்த்தகமுமாய், ஓரவஸ்த்தையில் ஸாதநமுமாய், ஓரவஸ்த்தையில் தாரகமுமாய், ஓரவஸ்த்தையில் நஞ்சுமாயிருக்கும். தேஹாத்மாபிமாநிகளுக்கு அந்நம், இத்தனையு மாகாநின்றதிறே. (𑌆𑌹𑌾𑌰𑌶𑍁𑌦𑍍𑌧𑍌 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃) (ஆஹாரசுத்தௌஸத்வசுத்தி:) என்கிறபடியே அந்நம் பாவநமுமா யிருக்கும், தாரகமுமாயிருக்கும், போக்யமுமா யிருக்கும், தாநாதிமுகத்தாலே புருஷார்த்தஸாதநமுமா யிருக்கும், அதிசயித்தவாறே நஞ்சுமாயிருக்குமிறே; அப்படியே, பரசேஷ மாத்மாவென்றிருக்குமவனுக்கு, (𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌹𑌿 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌰𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇) (பவித்ராணாம்ஹிகோவிந்த: பவித்ரம்பரமுச்யதே) என்கிறபடியே ப்ரதமத்தில் பாவநமுமாயிருக்கும்; அநந்தரம் (𑌪𑍁𑌣𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌪𑍁𑌣𑍍𑌯𑍋𑌽𑌸𑍌) (புண்யாநாமபிபுண்யோஸௌ) என்கிறபடியே உஜ்ஜீவநஸாதநமு மாயிருக்கும்; (𑌮𑌙𑍍𑌗𑌳𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌮𑌙𑍍𑌗𑌳𑌮𑍍) (மங்களாநாஞ்சமங்களம்) என்கிற படியே ப்ராப்யமுமாயிருக்கும்; (𑌯𑌨𑍍𑌨𑌾𑌮𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑌨𑌤𑍋 𑌮𑌹𑌾𑌭𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿) (யந்நாமஸங்கீர்த்தநதோ மஹாபயாத்விமோக்ஷமாப்நோதி) என்கிறபடியே ஸம்ஸாரபயநிவர்த்தகமுமா யிருக்கும்; இது ரிஷிகள் கோஷ்டியில்பரிமாற்றம்; ஆழ்வார்கள் கோஷ்டியிலுள்ள தொன்றுய்த்து;- திருநாமம் போக்யமென்றும், தாரகமென்றும், பாவநமென்றும், நஞ்சென்றும் சொல்லுகிற விது. (அச்சுதாவமர ரேறே ஆயர்தங்கொழுந்தே) என்று திருநாமம்போக்யமா யிருக் கிறபடியைச் சொன்னார்கள்; (நின்னுமங் கற்றவாவலிப்பு) என்று பாவநமென்னுமிடம் சொன்னார்கள்; (கோவிந்தன் குணம்பாடி- ஆவிகாத்திருப்பேன்) என்று-தாரகமென்னுமிடம்சொன்னார்கள்; (கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர்) என்றும், (பிழைப்பில் பெரும்பெயர்) என்றும்-நஞ்சென்னுமிடத்தைச்சொன்னார்கள்.

மூ.—கல்லெடுத்துக்கன்மாரிகாத்தாயென்னும்
காமருபூங்கச்சியூரகத்தாயென்னும்
வில்லிறுத்துமெல்லியல்தோள்தோய்ந்தாயென்னும்
வெஃகாவில்துயிலமர்ந்தவேந்தேயென்னும்
மல்லடர்த்துமல்லரையன்றட்டாயென்னும்
மாகீண்டகைத்தலத்தென்மைந்தாவென்னும்
சொல்லெடுத்துத்தன்கிளியைச்சொல்லேயென்று
துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (கரு)

---

ஒன்றுக்கே அநேகாவஸ்த்தை யுண்டாகக்கூடுமோ வென்ன, அருளிச்செய்கிறார் (தேஹாத்மாபி மாநிகளுக்கித்யாதி.) பரசே ஷம்-ஈச்வரசேஷம்.

| பதம். | உரை. |
|---|---|
| | க்ர்ஷ்ணன் நியமித்தபடியே, |
| கல்மாரி | இந்த்ரன் வர்ஷித்த கல்வர்ஷத்தை, |
| கல்லெடுத்து | அம்மலையை எடுத்து, |
| காத்தாயென்னும் | ரக்ஷித்தவனேயென்கிறாள்; |
| காமர் | ஆசைப் படத்தக்கதாய், |
| பூ | அழகிதா யிருந்துள்ள, |
| கச்சி | காஞ்சீபுரத்திலே, |
| ஊரகத்தாய்என்னும் | திருவூரகத்திலே நித்யவாஸம் பண்ணுமவனே என்கிறாள்; |
| | ஜநகமஹாராஜா பலபரீக்ஷார்த்தமாக வைத்த, |
| வில்இறுத்து | த்ர்யம்பக மென்கிற வில்லைமுறித்து, |
| மெல்லியல்தோள் தோய்ந்தாயென்னும் | ம்ர்துஸ்வ பாவையான பிராட்டியை ஸம்ச்லேஷித்தவனேயென்கிறாள்; |
| வெஃகாவில்துயிலமர்ந்த வேந்தேயென்னும் | திருவெஃகாவிலேகண் வளர்ந்தருளுகிற ராஜாவானவனேயென்கிறாள்; |
| அன்று | கம்ஸன் தன்னை நலிகைக்காகமல்லரை வாசலிலே காவலாக வைத்தவன்று, |
| மல்லடர்த்து | அவர்கள் பலத்தைப் போக்கி, |
| மல்லரையட்டாயென்னும் | சாணூர முஷ்டிகர்களாகிறமல்லர்களை நிரஸித்தவனே என்கிறாள்; |
| | குதிரை வடிவையுடைய, |
| மாகீண்ட | கேசி யென்னும் அஸுரனுடையவாயைக் கிழித்துப் போகட்ட, |
| கைத்தலத்து என்மைந்தாவென்னும் | புஜபலத்தையுடையனாய் யுவாவானவனே யென்கிறாள்; |
| | இப்படி பலவகையாகக் கூப்பிட்டும், |
| தன்கிளியை | தான்வளர்த்த கிளியைப் பார்த்து, |
| சொல்லெடுத்து | அது சொல்லுகைக்காக முதலையெடுத்துக்கொடுத்து, |
| சொல்லென்று | மேலுள்ளதைநீயே சொல்லென்றுசொல்லி, |
| துணைமுலைமேல் | ஒன்றுக்கொன்றொப்பானஸ்தநங்களிலே, |
| துளி | கண்ணீர்த்துளிகள், |
| சோர | அருவிபோலேபாய, |
| சோர்கின்றாள் | துவளாநின்றாளென்கிறாள். ... (கங) |

வ்யா.—(கல்லெடுத்தித்யாதி) தான் ஆபன்னையா யிருக்கையாலே ஆபந்நிவர்த்தகமான திருநாமங்களை யெடுத்தாய்த்து அவற்றைச் சொல்லச்சொல்லுகிறது. (கல்லித்யாதி) ரக்ஷகனுகவைத்த விந்த்ரன் பாதகனுக, ரக்ஷ்யவர்க்கம் அவன்கையிலே பாத்யமாய்நிற்க நிருபாதிகரக்ஷகன் ரக்ஷித்தபடியைச்சொல்லுகிறது. திருவாய்ப்பாடியிலுள்ளார் வர்ஷார்த்தமாகஇந்த்ரனை ஆராதிக்கப்புக, க்ர்ஷ்ணன் அத்தை நிஷேதித்து, "நமக்கு ரக்ஷகம் காடும் மலையுமாய்த்து, அவற்றை யாராதிக்க வமையும்" என்றுசொல்ல, அவர்களும் அப்படியே மலையை யாராதிக்க, மலைத்தெய்வமா யிருந்து அத்தை யமுது செய்தானுய்த்து.

தன்னபிமாநத்தில் கிடந்தவர்கள் தேவதாந்தரபஜநம்பண்ணுகையாகிறவிது — ஸ்வஸ்த்ரீயைப் பிறர்க்குக் கொடுத்தாப்போலே யிருந்ததாய்த்து ஈச்வரனுக்கு. இவ்வளவிலே நமக்கென்றுநிவேதித்தத்தை அபிமாநோபஹதமென்று பாராதே அமுது செய்யப் பெறுவதே! யென்று அவைகளை வாங்கிவரப்ராப்தமாயிருக்க க்ர்ஷ்ணனையண்டைகொண்டு நம்முடைய யாகபங்கத்தைப் பண்ணினுர்கள் இடையரென்று குபிதனுய் ஸம்வர்த்தககணங்களை யழைத்து கல்வர்ஷமாகச் சொரிந்து திருவாய்ப்பாடியை யழித்துப்போகடுங்களென்னதிருவாய்ப்பாடியிலுள்ளாரும், (गोगोपीजनसंकुलमतीवार्त्तम्) (கோகோபீஜநஸங்குலமதீவார்த்தம்) என்கிறபடியே ஆபந்நராக அத்தசையிலே, "மலையை யாராதித்தோம், க்ர்ஷ்ணன் ரக்ஷித்தான்" என்ன வொண்ணுதென்று பார்த்து, இவர்கள் ஆராதித்த மலைதன்னையேயெடுத்து ரக்ஷித்தபடி.

(கல்லெடுத்து) அவனெடுத்தது * சோலைசூழ்குன்றுயிருக்க, (கல்லெடுத்து) என்று - ஒருசிலாமாத்ரத்தை யெடுத்தாப்போலே ஓசழக்காகச்சொல்லுகிருள். ஸ்ரீகோவர்த்தநத்தை யெடுத்தபோதையநாயாஸத்தைக் கண்டிருந்தவளாகையாலே இந்தசக்தியிறே இவளுடைய ஹ்ர்தயத்தில் கிடப்பது. கிட்டுவதும் அநுபவிப்பதும், பெறுவதும் ஈச்வரசக்தியாலே யென்றிருக்கு மவளிறே. அசக்தாதிகாரமிது, சக்தாதிகாரமிது, ஸாதநாந்தரங்களென்கிறவார்த்தைகள் நம்மாசார்யர்கள்கோஷ்டியிலே புகுரக்கடவ தன்றியேயிறேயிருப்பது. சக்தரோடு அசக்தரோடு வாசியில்லை-ஈச்வர சக்தியைக்கொண்டு தலையெடுக்கைக்கென்றிருக்கும் கோஷ்டியிறே.

---

இந்த்ரன் தன்னை யெழுதிக் கொடுக்கப்ராப்தமாயிருக்க அவன்சக்தி ஹ்ர்தயத்திலே கிடக்கவேண்டுவா னென்னென்ன; அருளிச்செய்கிருர் (கிட்டுவது மித்யதி.) அவன்சக்தியை யநுஸந்திக்கை அசக்தர்க்கோ, சக்தர்க்கு வேண்டாவோவென்ன; அருளிச்செய்கிருர் (அசக்தாதிகார மித்யாதி.)

(श्रीभवहानामतः) (ஸ்ரீதோபவஹநாமதஃ) என்கிறசக்தி ஸ்வாச்ரயத்திலே கிடக்க, (नारायणसहस्रंमेयुद्धेप्रतिबलंभवेत्) (நாராயண ஸஹஸ்ரம்மே யுத்தேப்ரதிபலம்பவேத்) என்கிறசக்தியுடையவன் ஸஹகாரியாகத் தனக்கோராற்றுமை அதிசயித்திருக்க, (तत्तस्य सदृशंभवेत्) (தத்தஸ்யஸத்ருசம்பவேத்) என்றிறே - ப்ரதமாசார்யையானபிராட்டியிருந்தது."கன்மாரியாகையாலே கல்லையெடுத்து ரக்ஷித்தான், நீர்மாரியாகில் கடலையெடுத்து ரக்ஷிக்குங்காணும்'' என்று பட்டரருளிச்செய்வர். இத்தால் – இன்னத்தைக்கொண்டு இன்னகார்யஞ் செய்யக்கடவோமென்னும்நியதியில்லை;ஸர்வசக்தனென்கை.பிறரால்வந்த ஆபத்திலோ ரக்ஷிக்கலாவது,உன்னால்வந்தவாபத்தில் ரக்ஷிக்கலாகாதோ.கல்வர்ஷத்திலகப்பட்டாரையோ ரக்ஷிக்கலாவது, (बहुधारासन्ततदुर्दिनवर्षिणी) (பஹுதாரஸந்தததுர்திகவர்ஷிணி) என்கிற துர்திகவர்ஷத்தி லகப்பட்டாரை ரக்ஷிக்கலாகாதோ. ஒருவூராரகப்பட நோவுபட்டாலோ ரக்ஷிக்கலாவது, அவ்வூராகப்பட்ட நோவை ஒருத்திபட்டால் ரக்ஷிக்கலாகாதோ. என்னுடைய ரக்ஷணத்துக்கும் மலையை யெடுக்கவேணுமோ, மலையையெடுத்த தோளைக் காட்டவமையாதோ.

(காமருபூமித்யாதி) அக்காலத்தில் பிற்பட்டார்க்கு முன்னே ஸர்வஸ்வதாநம் பண்ணுகைக்கன்றோ திருவூரகத்திலேவந்து நின்றருளிற்று. திருவூரகத்தில் த்ரைவிக்ரமாபதாநவேஷத்தோடே வந்துநிற்க க்ர்ஷ்ணன்வந்து நின்றானாகப் பேசுவானென்னென்னில்; வரையாதே எல்லாரையும் தீண்டுகையும் தன்பேறாகக் கார்யஞ் செய்கையும் இரண்டவதாரத்துக்கும் நிரூபகமா யிருக்கையாலே, தத்ஸாம்யத்தைப்பற்ற அபிந்நமாகப்பேசாநிற்பர்கள். (காமருபூங்கச்சி)ஆதரிக்கப்படுவதாய் தர்சநீயமா யிருக்கை. போக்யங்களாலும் போகோபகரணங்களாலும் ஸம்ர்த்தமான காஞ்சீபுரமென்கை. திருப்பதிகளால்ஸம்ர்த்தமாயிருக்கையாலே போக்யங்களால் ஸம்ர்த்தமான தேசமென்கிறது. (படைவீடாகையாலே போகோபகரணங்களாலே ஸம்ர்த்தமான தேசமென்கிறது; பரமபதத்துக்கும் ஏற்றம் இதுவே யிறே. விமுகர்க்கு ஸுலபமான திருவடிகள் ஆற்றாமையுடையவெனக்கு துர்லபமாவதே! என்கிறாள்.

அந்த தூளிதாநந்தான் ப்ராதேசிகமாய்த்தான் ஆறியிருக்கிறேனே; அக்காலத்தில் பிற்பட்டார்க்கு முதவவந்து நிற்க அக்காலத்திற்குப் பிறப்பட்டேனென்றாறியிருக்கிறேனோ; ஒன்றில் அவதாரங்களைச் சேர அநுபவிக்கிறிலர், ஒன்றில் திருப்பதிகளைச் சேர வநுபவிக்கிறிலர், கலசியாய்த்து அநுபவிக்கிறது.

அதுக்கு ஹேதுவென்னென்னில்; பிடிதோறும் நெய்வார்ப் பாரைப்போலே திருப்பதிகளை யொழியத் தமக்குச் செல்லாதபடியாலே - திருப்பதிகளினுடைய அடிப்பாடு வேண்டுகையாலே யிறே அவதாரத்தி லிழிகிறது, அல்லாத; ஆழ்வார்களுக்கும் இவர்க்கு முண்டானவாசி யிதுவிறே. அவர்கள் மேன்மையை யநுபவிக்கும்போது பராவஸ்த்தையைப் பேசுவர்கள்; நீர்மையை யநுபவிக்கும்போது அவதாரங்களைப் பேசுவர்கள்; அந்நீர்மையை ஸாக்ஷாத்கரிக்கைக்காகத் திருப்பதிகளிலே யிழிவர்கள்; இவர்,மேன்மையை யநுபவிப்பதும் திருப்பதிகளிலே, நீர்மையை யநுபவிப்பதும் திருப்பதிகளிலே, அத்தை ஸாக்ஷாத்கரிப்பதும் திருப்பதிகளிலே.

(வில்லிறுத்தித்யாதி) பிராட்டியை லபிக்கைக்கு இடைச்சுவரான வில்லை முறித்து, அவ்வாண்பிள்ளைத் தனத்தைக்காட்டி ஸ்த்ரீத்வத்தால் வந்தவபிமாநத்தையும்போக்கி, ப்ரகர்த்யாம்ருவாயிருந்துள்ளபிராட்டியோடேஸம்சலேஷித்தவனே.ஸ்ரீஜநகசக்ரவர்த்தி "இவ்வில்லை முறித்தார்க்கு இவளைக்கொடுக்கக்கடவோம்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணுகையாலே, வில்லையெடுத்து நாணியேறிட்டு வலிக்கப்புக்க வளவிலே வில்லுமுறிந்தது, அவ்வளவிலே பொற்கிண்டியைச்கொண்டுவந்து உதகம்பண்ணப்புக, "ராஜகுமாரராகையாலே வீரவாசி கொண்டாடவந்தோ மித்தனையொழிய விவாஹம்தாழ்த்துப் பெண்தேடிவந்தோமோ நாங்கள், அத்தை வஸிஷ்டாதிகளையும் ஐயரையும் கேட்பதென்ன; வில்லைமுறித்த ஆண்பிள்ளைத்தனத்தையும் வார்த்தைசொன்ன சீர்மையையுங் கண்டு நீராடினாள் பிராட்டி, அவ்வில் முறித்த ஆயாஸத்தால்வந்த ச்ரமந்தீர அவள்தோளிலே முழுகினுறைய்த்து.

(தோள்தோய்ந்தாயென்னும்) விபுத்வம் ஏகாவயவத்திலேயடங்கினபடி. அல்லாத அவயவங்களும் ஆத்மகுணங்களும் குமரிருந்துபோமித்தனை. இத்தால்-நித்யாநபாயிநியான பிராட்டியைப் பிரிந்தாலும் உதகம் பண்ணுவாரும் சேர்ப்பாரும் வேண்டி யிருக்கிறபடி. சேதநனுக்கும் இவளோபாதி அநந்யார்ஹத்வம் ஸ்வரூபத்திலே யுண்டானாலும் ஆசார்யஸமாச்ரயணமும் புருஷகாராபேக்ஷயுமுண்டாயிறே ஈச்வர விஷயீகாரத்துக்கு மிருப்பது. உன்னைப் பிரிந்து தனியிருப்பாருடைய ஆபத்தைப் போக்கின நீ என் தனிமையால்வந்த ஆபத்தைப் போக்காதொழிவதே!.

(வெஃகாவில் துயிலித்யாதி) பிராட்டியை பாணிக்ரஹணம் பண்ணிவந்துகிடந்ததேசம்திருவெஃகாவாய்த்து.

---

(அடிப்பாடு வேண்டுகையாலே) பிராட்டி யணைக்கவென்று பூரிப்பது.

(வேந்தேயென்னும்) ஒருராஜகுமாரன் வந்து கிடக்கிருனென்று ப்ரதிபத்தியைப் பண்ணலாம்படியாய்த்துத் திருவெஃகாவில் நாயனார் கண்வளர்ந்தருளும்படி. இருவரும் சேர்ந்த சேர்த்தியிலே யநுபவிக்க வாசைப்பட்டு அது கிடையாதே நோவுபடுகிற வெனக்கும் அச்சேர்த்திக்குமென்ன ஸங்கதியுண்டு.

(மல்லடர்த்தித்யாதி) சாணூர முஷ்டிகர்களை நிரஸிக்கிற போது ப்ரதமத்திலே அவர்கள் மிடுக்கையழித்துப்பின்னையாய்த்து அவர்களை நிரஸித்தது. (மர்கமத்யேயதாஸிம்ஹௌ ஸர்வலீலாவிநோதிநௌ) (ம்ர்கமத்யேயதாஸிம்ஹௌ ஹளஸர்வலீலாவிநோதிநௌ)என்கிறபடியே-குவலயாபீடத்தை நிரஸித்து அதினுடைய கொம்பை இருவரும்கையிலே பிடித்துக்கொண்டு சத்ருபக்ஷமென்று மதியாதே குருவேர்ப்பும் தாங்களுமாய்ப் பெரியசெருக்கோடே ரங்கமத்யத்திலே புகுந்தபோது ஒருமான்குழாத்தின் நடுவேஇரண்டுஸிம்ஹம் புக்காப்போலேயிருக்கையாலே தர்சித்தபோதே மிடுக்குப்போய்த்து, பின்னை ஆச்ரயத்தை யழித்துவிட்டா னத்தனையாய்த்து. அங்ஙனன்றியே, (மல்லடர்த்து) வரும் மல்லரை நிரஸித்தபடியைச் சொல்லுகிற தென்னவுமாம். திருத்தோள்களின் மிடுக்கு நான்குமிருந்துபோமித்தனையோ, என் நினைவுநீர விஷயங்காட்டவேணுமென்ன நெருக்கி விஷயங் காட்டிக்கொடுத்தபடி.

(அன்றித்யாதி) அன்றுமின்றும்போலேகாணும் ஆபத்துள்ளது. ஸ்ரீவஸுதேவரும் தேவகிப்பிராட்டியும் பிறந்தவன்று கண்டுவிட்டோம், ஸமாப்திவேளையிலேயாகிலும் பிள்ளைமுகத்திலே விழிக்கவல்லோமே என்று ஆபந்நராய்க்கிடந்தஅவர்களாபத்துத் தன்னுபத்துக்கு நிதர்சநமா யிருக்கையாலே (அன்று) என்கிருள். இவர்கள்முகத்திலே சென்று விழித்துப் பின்னை விரோதிநிரஸநம் பண்ணப்ராப்தமா யிருக்க அது செய்யாதொழிந்தது, விரோதி கிடக்கச்செய்தே சென்று விழிக்கிறவிதுக்கு ப்ரயோஜநமென்னென்னும் நினைவாலே. விரோதி நிவ்ர்த்தி பூர்வகமாயிறே ப்ராப்யஸித்தியிருப்பது. (மல்லரையன்றட்டாயென்னும்) மாதாபிதாக்களுக்கு வந்த ஆபத்தோ போக்கலாவது, ப்ரணயிநிக்கு வந்த ஆபத்துப்போக்கலாகாதோ. மஹாபாபிகளான சாணூர முஷ்டிகர்கள் பெற்றதோள், அத்தோளை யொழியச் செல்லாத வெனக்கு அரிதாவதே! என்கிருள். நான் இவ்வாற்ருமையை விட்டு ப்ரதிகூலவேஷத்தைக்கொண்டுவந்தேனுகில் தோளையநுபவிக்கலாமே! என்கிருள்.

---

(அச்சேர்த்திக்கும்) என்துக்கத்தைப் போக்கினுலன்றோ அச்சேர்த்தி, சேர்த்தியாவது-ஸுகமாவது; அதுஸுகமன்றென்றபடி. மல்லடர்த்து - திருத் தோளில் மிடுக்கு விஷயத்தைக்காடென்று அடர்க்க வரும்மல்லரை எதிர்த்து; வருகிறமல்லரை யட்டானென்று இரண்டாம் தாத்பர்யம்.

(மாகின்ட வித்யாதி) பஞ்சலக்ஷம்குடியிற் பெண்களுக்கும் தன்னை யநுபவிக்க வருகிற வழியிலுண்டான வன்னியமறுத்துக் கொடுத்தபடியைச் சொல்லுகிறது. கம்ஸப்ரேரிதனாய்வந்த கேசி இவனுடையபருவத்தையும்ஸௌகுமார்யத்தையுங்கண்டு, "இவன் ஒருபொருளோ? எடுத்துவிழுங்குகிறேம்" என்றுவாயைத்திறந்து கொண்டுவர, சிறுப்பிள்ளைகள் த்வாரங்கண்டவிடத்திலே கையை நீட்டக்கடவர்களாயிறே யிருப்பது, அத்தாலேகையைநீட்டினான், ரக்ஷகனுடைய கையாகையாலே ரக்ஷணதர்மம் பெற்றவாறே வளர்ந்துகொடுத்தது, வெள்ளரிப்பழம் விரிந்தாப்போலே விரிந்து கிடந்தானித்தனையென்கை. (என்மைந்தாவென்னும்) திருவாய்ப்பாடியிற் பெண்களை வசீகரித்த பருவத்தைக்காட்டி என்னை அநந்யார்ஹையாக்கினவனே யென்னும். இப்படிக்கு ஆபத்ஸகமான திருநாமங்களை ஆதிக்ரஹணம்பண்ணி.

(சொல்லெடுத்து) சப்தோச்சாரணம் மலையெடுத்தாப்போலே யிருக்கிறதுகாணும் இவளுக்கு. அவன் மலையை யெடுக்கிறபோது அவனுடைய சக்தியைநினைத்து, (கல்லெடுத்து) என்றாள்; தன்னளவிலே வந்தவாறே வாய்விடுகைக்கும் சக்தியற்றிருந்தபடி. (தன்கிளியை) தான் விரும்பிவளர்த்தகிளியை. (பாவைபேணாள்) என்றது போக்யமாய்த்தோற்றினவாறே பாவையை யநாதரித்தாள்; இதுக்குத் திருநாமஸ்பர்சமுண்டாகையாலே யாதரிக்கிறாள். பரிக்ரஹங்களில் வந்தால் ஸ்வரூபேண த்யாஜ்யமுமில்லை, ஸ்வரூபேண உபாதேயமு மில்லையிறே. ப்ரதிகூலமானபோது ஸர்வமும் த்யாஜ்யமாகக்கடவது, அநுகூலமானபோது ஸர்வமு முத்தேச்யமாகக்கடவதிறே. (சொல்லேயென்று) திருநாமத்தைச் சொல்லீரென்று ஆதிக்ரஹணம் பண்ணிக்கொடுத்தாள், அநந்தரம் அது சொல்லத்தொடங்கிற்று.

(துணைமுலையித்யாதி) கேட்பாரைப்பெற்றதில்லையென்கிறாள். ஸ்த்ரீத்வபாவனை யொழிய ச்மச்ருவியோகமும்பிறந்துஸ்தநோத்பேதமும்பிறந்ததோவென்னில்; ச்மச்ரு ஸ்வதந்த்ரலக்ஷணம், ஸ்தநம் பரதந்த்ரலக்ஷணம், அந்தஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியையும் பாரதந்த்ர்யத்தையும் சொல்லுகிறது. ஸ்த்ரீகளுக்கு போகோபகரணமிறே முலை. சேஷபூதனுக்கு, முலையென்கிற வித்தால் - பக்தியை நினைக்கிறது. இவனுக்கும் போகோபகரணம் பக்தி; அவனுக்கும் போகோபகரணம் பக்தி; * [illegible]-பக்திக்ரீதனிறே.

---

சொல்லெடுக்கை ஆயாஸமாகில், (கல்லெடுத்து) என்று அநாயாஸமாகச் சொல்லும்படி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவன்மலையித்யாதி.) அநுகூலம்-பகவத்ஸ்பர்சம். பாவனையொழிய-பாவிக்கைமாத்ரமன்றிக்கே, ஸ்த்ரீத்வம் முற்றிற்றேயென்றபடி.

(துணைமுலை) போக்தாவுக்கு போகோபகரணமிறே துணைமுலையாவது. அங்ஙனன்றிக்கே, ஒருமுலைக்கு ஒருமுலை துணையாமித்தனையொழிய வேறொப்பின்றிக்கேயிருக்கை. அவனுடைய திருவடிகளைப் போலேயாய்த்து இவளுடைய முலையுமிருப்பது. அல்லாத ஆழ்வார்களைப்போலன்றியே ஸுகுமாரராயிறே திருமங்கையாழ்வாரிருப்பது. மலையாளர் ஒருமாஸத்துக்கு ஒருக்காலே யுண்ணவும் வல்லர்களாய் ஒருமாஸம் பட்டினிவிடவும் வல்லர்களாயிருக்குமாப்போலே, ஸம்ச்லேஷதசையில் நெடுநாள் தரித்திருந்து அநுபவிக்கவும் வல்லர்களாய் விச்லேஷத்தில் நெடுநாள் தரிக்கவும் வல்லர்களாயிறே மற்றையாழ்வார்களிருப்பது; ஸம்ச்லேஷிக்கவும் மாட்டாதே விச்லேஷிக்கவும் மாட்டாதபடியாயாய்த்து இவருடைய ஸௌகுமார்யமிருப்பது. இவர் உண்ணவும் மாட்டார், பட்டினிவிடவும் மாட்டார். (நும்மடியா ரெல்லாரோடு மொக்கவெண்ணி யிருந்தீரடியேனை) என்னக்கடவதிறே. (துணைமுலைமேல் துளிசோர) ஸ்பர்சேந்த்ரியமும் த்ர்ஷ்டியும் ஸ்வபோகங்களை யிழந்து தன்னிலே கட்டிக்கொண்டு கிடந்து கதறுகிறாப்போலே யிருக்கிறபடி. கண்ணனீர் அல்லாத ப்ரதேசங்களிலே விழாதே முலையிலே விழுகையாலே - கண்ணும் முலையும் தன்னிலே கட்டிக்கொண்டுகிடந்து கதறுகிறாப்போலே யிருக்கிறதாய்த்து. (சோர்கின்றாளே) போகோபகரணமான ஜ்ஞாநபக்திகளழிகையாலே தானும் சோராநின்றாள். முன்பு திருநாமத்தைச்சொல்லுகையாலே ஆச்வாஸம் பிறந்தது; ஆகையாலே திருநாமம் ஆச்வாஸ ஹேதுவாமோ வென்று பார்த்து அத்தைச் சொல்லுவிக்கத் தொடங்கினாள்; அதுக்குள்ளீடான வர்த்தத்தை யநுஸந்தித்து மோஹங்கதையானாள்; ஆபத்ஸகனானவன் ஆபந்நையான வெனக்கு உதவாதொழிவதே! யென்று மோஹங்கதையென்றுளென்கை. ... ... ... ... ... (கரு)

அ.—பதினொலாம்பாட்டு. (மூளைக்கதினை) திருநாமம் ஸாத்மியாததசையும், ஸாத்மிக்குமோவென்று சங்கிக்குந் தசையும், ஸாத்மிக்கும் தசையுமாயிருக்கிறபடியையிறே இம்மூன்று பாட்டிலுஞ் சொல்லுகிறது. ஆபத்ஸகங்களான திருநாமங்களைத் தான் ஆதிக்ரஹணம்பண்ணித்தந்து சொல்லச்சொல்லுகையாலே சொன்னோம்,

---

துணைமுலை-போக்தாவுக்குத் துணையாதல்; ஒன்றுக்கொன்று துணையாதல். ஒப்பில்லாமைக் குத்திருவடிகள் த்ர்ஷ்டாந்தம். வேறொப்பில்லையென்பானேன், மற்றை யாழ்வார்களில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (அல்லாதவாழ்வார்களித்யாதி.) ... (கரு)

பதினொலாம்பாட்டு.—(மூளைக்கதினை) சங்கிக்குந்தசை-நெஞ்சுருகி)என்கிறபாட்டு.

அது மோஹஹேதுவாய்த் தென்றுபார்த்து, கிளி, தன்னுடைய விவேகத்தாலே முன்பு தெளிந்தகாலத்தில் தான் உஜ்ஜீவித்த ப்ரகாரத்திலே கற்பித்த திருநாமங்களை அடைவே சொல்லக்கேட்டு தரித்து, (வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக) என்று கிளியைக்கொண்டாடுகிறாள்.

மூ.—முளைக்கதிரைக்குறுங்குடியுள்முகிலை
மூவாமூவுலகுங்கடந்தப்பால்முதலாய்நின்ற
அளப்பரியவாரமுதையரங்கமேயவந்தணனை
யந்தணர்தஞ்சிந்தையானை
விளக்கொளியைமரதகத்தைத்திருத்தண்காவில்
வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு
வளர்த்ததனால்பயன்பெற்றேன்வருகவென்று
மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே. (கச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முளைக்கதிரை | பாலஸூர்யனையொத்தவனாய், | விளக்கொளியை | விளக்கொளிபோலே நெஞ்சிலே ப்ரகாசிக்குமவனாய், |
| குறுங்குடியுள்முகிலை | திருக்குறுங் குடியில் நித்யவாஸம்பண்ணுகிறமேகத்தையொத்தவனாய், | திருத்தண்காவில் | திருத்தண்காவிலே, |
| மூவாமூவுலகுங்கடந்து | நித்யமான த்ரிவிதாத்மவர்க்கத்துக்குமவ்வருகானவனாய், | மரதகத்தை | மரதகப்பச்சைபோலே போக்யபூதனாய்க் கண்வளர்ந்தருளுமவனாய், |
| அப்பால் | பரமபதத்திலே, | வெஃகாவில் | திருவெஃ காவிலே கண்வளர்ந்தருளுகிற, |
| முதலாய்நின்ற | உபயவிபூதிக்குங்காரணபூதனாய், | திருமாலை | ச்ரியபதியான ஸர்வேச்வரனை, |
| அளப்பரிய | ஸ்வரூபரூபகுணங்களால் அளவிடக்கூடாதவனாய், | பாட | ப்ரீதி ப்ரகர்ஷத்தாலேபாட, |
| ஆரமுதை | அம்ர்தக் கடல்போலே நிரதியபோக்யபூதனாய், | கேட்டு | அன்பானது தூண்டச் செவியாரக்கேட்டு, |
| அரங்கம் | கோயிலிலே, | | இது சொன்ன திருநாமம் தனக்குதாரகமாயிருக்கையாலே, |
| மேய | நித்யவாஸம் பண்ணுகிற, | | |
| அந்தணனை | பரிசுத்தனாய், | | |
| அந்தணர் தம்சிந்தையானை | பரிசுத்தரானாருடைய ஹ்ர்தயத்திலே நித்யவாஸம் பண்ணுமவனாய், | | |

தான் உஜ்ஜீவித்த-நாயகியான்தான்தரித்த.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வளர்த்தத ளுல் | உன்னைவளர்த்ததனு லுண்டான, | மடக்கிளி யை | லஜ்ஜா விஷ்டமான கிளியை, |
| பயன்பெற் றேன் | ப்ரயோஜநத்தைப் பெற்றேன், | கைகூப்பி | அஞ்சலியைப் பண்ணினதுமன்றி, |
| வருக என் று | இங்கேவாவென் றழைத்து, | வணங்கினு ள் | அதின்காலிலும் விழுந்தாள்...(கச) |

வ்யா.—(முளைக்கதிரித்யாதி) அடியில் அவற்றைக் கற்பித்த திருநாமங்களுடைய அடைவிருக்கிறபடி. (முளைக்கதிர்) என்னீர், (குறுங்குடியுள் முகில்) என்னீர், என்றுய்த்துக்கற்பித்தது.(முளைக்கதிரை) உதிக்கிற ஆதித்யனைப் போலே கண்ணாலே முகந்து அநுபவிக்கலாம்படி யிருக்கிற திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவனை. (ప్రసన్నాదిత్యవర్చసమ్) (ப்ரஸந்நாதித்யவர்ச்சஸம்) என்னக் கடவதிறே. தம்மை,அடியிலே அவன் விஷயாந்தரங்களினின்றும் மீட்டதும், ஸ்வவிஷயத்திலே ருசியைப் பிறப்பித்ததும் வடிவைக் காட்டி, ஆகையாலே அத்தையாய்த்து இதுக்கு ப்ரதமத்திலே யுபதேசித்தது. (மணியுருவில் பூதமைந்தாய்) என்றன்றோ அடியிலே விஷயீகரித்த வடிவைச் சொல்லிற்று, இங்கு (முளைக்கதிரை) என்பானென்னென்னில்; வஸ்துத்தேச்யம் ப்ரயோஜகம், ப்ரகாசகத்வமே யாய்த்து ப்ரகாசிப்பித்தது. ஆகையாலே தேஜோமயமான விக்ரஹமென்கை. (குறுங்குடி யுள்முகிலை) இவ்வடிவை சாஸ்த்ரமுகத்தாலு மன்று ஆசார்யோபதேசத்தாலு மன்று,திருக்குறுங்குடியிலே யாய்த்து ப்ரகாசிப்பித்தது. இரண்டாம்பாட்டில், (முகிலுருவம்) என்று - வடிவின் ச்ரமஹரதையையும் ஔதார்யத்தையும் பற்ற வருளிச்செய்தார், அத்தை இங்கே சொல்லுகிறூர் (குறுங்குடியுள் முகிலை) இன்ன பர்வதத்திலேமேகம்படிந்ததென்றால் வர்ஷம் தப்பாதென்றிருக்குமாப்போலே திருக்குறுங் குடியிலேநின்றுனென்றால் லோகமெல்லாம்க்ர்தார்த்தமாம்படியாயாய்த் திருப்பது. (உள்முகிலை) வந்து வர்ஷித்துப்போம் மேகம்போலன்றே ஸ்த்தாயியாய்நிற்கும்மேகமாய்த்துஇது.

திருக்குறுங்குடியில்வந்து நின்றருளின சீலாதிகனுடைய அடிப்பாடு சொல்லுகிறது மேல் (மூவாமூவுலகித்யாதி) மூவாமூவுலகென்று - நித்யமான த்ரிவிதாத்மவர்க்கத்தை யருளிச்செய்கிறூர். (கடந்து) ஸகலசேதநாசேதநங்களுக்கு மவ்வருகாயிருக்குமவன். (அப்பால்) பரமபதத்திலே.

---

அவற்றைக் கற்பித்த - அந்தக்கிளியைக் குறித்துக் கற்பித்த. (முளைக்கதிர்) என்று - பரமபதநாதனை, (மணியுரு) என்று - நீலவர்ணனுகச்சொல்லி, இப்போது,(முளைக்கதிர்) என்று சிவப்பாகச் சொன்னால் கறுப்பும் சிவப்புமான இரண்டுவிக்ரஹ விசிஷ்டமான வஸ்து விரண்டுண்டோ வென்று சங்காபிப்ராயம்.

(முதலாய்நின்ற) உபய விபூதிக்கும் ஸத்தாஹேதுவாய் நின்ற, நித்யஸூரிகளுக்கு போக்யதையாலே ஸத்தாஹேதுவாய் ஸம்ஸாரிகளுக்கு கரணகளேபரப்ரதாநத்தாலே ஸத்தாஹேதுவா யிருக்குமென்கை.

(அளப்பரியஆரமுதை) ஸ்வரூபரூபகுணங்களால்அபரிச்சிந்நனாய் அம்ர்தஸாகரம்போலே நிரதிசயபோக்ய பூதனா யிருக்குமவனை. (அரங்கம்மேயவந்தணனை) அந்த அம்ர்தஸாகரத்தில் நின்றும் ஒருகுமிழி புறப்பட்டு ஒருதடாகத்திலே வந்து தேங்கினாப் போலேயாய்த்து - கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறபடி. பெரியபெருமாளுக்கடி க்ஷீராப்த்தியன்றுகாணும், பரமபதமாய்த்து. (அண்டர்கோனணியரங்கன்) என்னக்கடவதிறே. (அரங்கம் மேய)பரமபதத்திலிருப்புபேருகைக்கு யோக்யதையுண்டு,அவதாரங்கள் தீர்த்தம் ப்ரஸாதிக்கயோக்யதையுண்டு, ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது கிளம்போமென்றுகிடக்கிற கிடையிறே. கல்பாவஸாநத்திலும் விஷயமில்லாமையாலே போகிறவித்தனை. (அந்தணனை) தன்வடிவழகைக்காட்டி அஹங்காரமும் விஷயாந்தர ப்ராவண்யமுமாகிற அசுத்தியைப்போக்கும்படியான சுத்தியையுடையவனை.

(அந்தணர்தஞ்சிந்தையானை) சுத்தராளுருடைய ஹ்ர்தயத்திலே நித்யவாஸம்பண்ணுமவனை. கோயில்வாஸமும் ராகாதிதூஷிதனன்றியே யிருப்பா னொருசுத்தனுடைய ஹ்ர்தயத்தைக் கணிசித்திறே. (அன்று வெஃகணைக்கிடந்தது என்னிலாதமுன்னெலாம்) என்னக்கடவதிறே. (விளக்கொளியை) தன்வடிவழகைக் காட்டி அஹங்காரத்தையும் விஷயாந்தர ப்ராவண்யத்தையும் போக்கிவிடுகையன்றியே நெஞ்சிலே புகுந்து முறையுணர்த்தினவனை. (விளக்கொளியை) ப்ரகாசகனானவனை. அதாகிறது-ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களையும், தத்விரோதி ஸ்வரூபத்தையும், விரோதிநிவ்ர்த்திபூர்வகமாக புருஷார்த்தம் ஸித்திக்கும்படியான உபாயஸ்வரூபத்தையும்ப்ரகாசிப்பிக்கை.

(திருத்தண்காவில் மரதகத்தை) "அருமணவனை" என்னுமாப்போலே (திருத்தண்காவில் மரதகம்) என்கிறார்.

---

பேருகை - சலிக்கையாய்-அவதரிக்கைக்கு யோக்யதை யுண்டென்றபடி.

கோயிலை யநுபவிக்கிறவர் ஆச்ரித விஷயத்தி லிருப்பைச் சொல்லுவானென்னென்னென்ன; அருளிச்செய்கிறார் (கோயில்வாஸமுமித்யாதி.)

அருமணவன் - த்வீபவிசேஷம். விளக்கொளியெம் பெருமான்-பூர்வம் கண் வளர்ந்தவிக்ரஹம்.

இன்னதீவிலே பட்டவானை யென்றால் விலக்ஷணமாயிருக்கு மாப்போலே திருத்தண்காவில் கண்வளர்ந்தருளுகிறவனுடைய வடிவென்றால் விலக்ஷணமா யிருக்கிறபடி. (பச்சைமாமலைபோல் மேனி) என்கிற வடிவையுடையவர். வடதேசத்தினின்றும் பெருமானை யநுபவிக்கவருமவர்கள் இளைத்துவிழுந்தவிடத்திலே அவர்களை எதிர்கொண்டு அநுபவிப்பிக்கக் கிடக்கிறகிடை.

(வெஃகாவில்திருமாலை) (திருத்தண்காவில் - மரதகம்) என்கிற வடிவிலே மினுக்கமுண்டானாப்போலே யாய்த்து திருவெஃகாவிலேவந்து கண்வளர்ந்தருளினபின்பு ச்ரியபதித்வம்நிறம்பெற்றபடி. (வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தா யென்னும் வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தேயென்னும்) பிராட்டியைத்திருமணம் புணர்ந்த மணக்கோலத்தோடேகூட இருவரும்வந்து கிடக்கிற கிடையாக வருளிச்செய்தாரிறே - கீழே; ஆச்ரயணவேளையோடு போகவேளையொடுவாசியற ஒருமிதுநமாக ஆச்ரயமாயிறேயிருப்பது. (பாட) திருநாமம் ஸாத்மித்தபடியாலே அவகாசத்திலே கிஞ்சித்கரிக்கப்பெற்றேனுமென்கிறப்ரீதிப்ரகர்ஷத்தாலேசொல்ல.(கேட்டு) ப்ரீதிப்ரேரிதையாய்க் கொண்டு கேட்டு. (சொல்லே என்று - சோர்கின்றாள்) என்று - முன்பு திருநாமஞ்சொன்னவிடத்தில் கேட்பாரைப்பெற்றதில்லை; இப்போது ஸாம்யை யாகையாலே கேட்பாரைப்பெற்ற தென்கிறாள்; (செல்வன் நாரணனென்ற சொல்கேட்டலும்) என்னுமாப்போலே.

(வளர்த்ததனால் பயன் பெற்றேன்)இது சொன்ன திருநாமம் தனக்குதாரகமாயிருக்கையாலே உன்னை வளர்த்தப்ரயோஜநம்பெற்றேனென்கிறாள். ஆபத்ஸகனானவன் ஆபத்தை விளைத்துப்போனான், அத்தசையிலும் நீ ஆபத்ஸகமாகப் பெற்றே னென்கிறாள். (வருக) என்று- முன்கை முப்பதின்காதமா யிருக்கிறபடி. (மடக்கிளியை) லஜ்ஜாவிஷ்டமான கிளியென்னுதல்; பவ்யமான கிளியென்னுதல்.

---

மரதகம்போல் வடிவையுடையார் அங்குக்கண்வளரவேண்டுவானென்னென்ன;அருளிச்செய்கிறார் (வடதேசத்தினின்றுமித்யாதி.)

போக வேளையிலும் ச்ரியபதித்வம் சொல்லவேணுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஆச்ரயணவேளையோடித்யாதி.) இங்கேப்ரீதியோடேகேட்கைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (சொல்லேயென்று - சோர்கின்றாளித்யாதி.) ஸாம்யையான- கடகையானபிராட்டியைச்சொல்லுகை. பிராட்டிச்சேர்த்தியாலல் கேட்கலாயிருக்குமென்னு மத்தை யருளிச்செய்கிறார் (செல்வன் நாரணனித்யாதி.)

(வளர்த்ததனால் பயன்பெற்றேன்) என்று - தன்னோட்டை ஸம்பந்தத்தை ஔபாதிகமாக்குவதே! என்றும், சேஷபூதரான நாம் ஸ்வரூபப்ராப்தமான கிஞ்சித்காரத்தைப்பண்ண உபகாரங் கொண்டாரைப்போலே சொல்லுவதே! என்றும் லஜ்ஜாவிஷ்டமாயிருந்தது; சேஷபூதன் ஸ்வரூபப்ராப்தமான கிஞ்சித்காரத்தைப்பண்ண, (ധർമ്മതഃപരിരക്ഷിതഃ) (தர்மதஃபரிரக்ஷிதஃ) என்றானிறே. சேஷிபவ்யதையானபோது இவள் கொண்டாடப் புக்கவாறே தன்னுடைய சேஷத்வந்தோற்ற, (നിഭൃതപ്രണതപ്രഹ്വഃ) (நிப்ர்தப்ரணதப்ரஹ்வஃ) என்கிறபடியே ஒதுங்கின படியைச் சொல்லுகிறது.

(கைகூப்பிவணங்கினாள்) அந்தவுபகாரஸ்ம்ர்தியானது அவ்வளவில்பர்யவஸியாமையாலே அஞ்சலியைப்பண்ணினாள். லஜ்ஜை தன்னையுங்கைவிட்டது. அதுக்குஹேது வென்னென்னில்; வாத்ஸல்யத்தாலே செய்ததுக்கு வழக்குப் பேசக்கடவோமோவென்னும் நினைவாலே. (வணங்கினாளே) அஞ்சலி ஸாதமித்ததிறே யென்னுக் காலிலே விழுந்தாள். உடையவர், முதலிகளும் தாமுமாக நீராடவெழுந்தருளுகிறபோதை ஸமூஹத்தைக்கண்டப்ரீதியாலேபெரியநம்பி தெண்டனிட விநயம்பாவிப்போமாகில் தண்டனை ஸ்வீகரித்தோமாவுதோமென்று பேசாதே யெழுந்தருளினாரிறே. (கச)

அ.—பதினைஞ்சாம்பாட்டு. (கல்லுயர்ந்த) கீழ்ப்பாட்டிலே - கிளி, திருநாமத்தைச் சொல்லக்கேட்டு ஆச்வஸ்தையாய் அதின்பக்கலிலே உபகாரஸ்ம்ர்தியும் கொண்டாடினாளாய்நின்றது; இதில் - அத்தசைபோய்த் தன்வாயாலே திருநாமத்தைச் சொல்லி அதுதன்னை வீணையிலேயேறிட்டு நுனுங்கினாள், அந்தவீணையோட்டை ஸ்பர்சம் ப்ரத்யபிஜ்ஞா ப்ரத்யக்ஷத்தாலே ஸம்ச்லேஷதசையில் தன்படிகளையும் அவன் படிகளையும் வீணையிலே யேறிட்டுவாசிக்கும்படிக்கு ஸ்மாரகமாக அந்த வீணைமுகத்தாலே அவன்வடிவை ஸாக்ஷாத்கரித்து, அந்தவீணையை அவனாகக்கொண்டு அவனோட்டைஸம்ச்லேஷதசையில் பண்ணும் வ்யாபாரவிசேஷங்களை இவ்வீணையிலே பண்ணாநின்றாள். இவள் உணர்ந்தால் என்னாய்விழப்புகுகிறதோவென்று இன்னாதாகிறாள்.

---

கிட்டவிருக்கிறத்தை, (வருக) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (முன்கை முப்பதின்காதமித்யாதி.) கிஞ்சித்காரத்தை உபகாரமாகக் கொண்ட விடமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (சேஷபூதனித்யாதி.)

திருவடியைப் பெருமாள் சொன்னார், வாத்ஸல்யத்துக்கு வழக்குண்டோ வென்றிருந்த பேருண்டோ வென்ன; அருளிச்செய்கிறார் (உடையவரித்யாதி.)   ...   ...   ...   ...   (கச)

பதினைஞ்சாம்பாட்டு.—(கல்லுயர்ந்த) நுனுக்குகை - வீணையிலே யிட்டுவாசிக்கை; ஆலாபித்தாளென்றபடி.

மூ.—கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ்கச்சிமேய
களிறென்றுங்கடல்கிடந்தகனியேயென்றும்
அல்லியம்பூமலர்ப்பொய்கைப்பழனவேலி
அணியழுந்தூர்நின்றுகந்தவம்மானென்றும்
சொல்லுயர்ந்தநெடுவீணைமுலைமேல்தாங்கித்
தூமுறுவல்நகையிறையேதோன்றநக்கு
மெல்விரல்கள்சிவப்பெய்தத்தடவியாங்கே
மென்கிளிபோல்மிகமிழற்றுமென்பேதையே. (கரு)

| பதம். | உரை. |
|---|---|
| கல் | கல்லாலே செய்யப்பட்டு, |
| உயர்ந்த | சத்ருக்கள்கிட்டவொண்ணாத உயர்த்தியையும், |
| நெடு | விஸ்தாரத்தையு முடைத்தான, |
| மதிள்சூழ் | மதிளாலே சூழப்பட்ட, |
| கச்சி | கச்சிநகரில் திருப்பாடகத்திலே, |
| மேய | பொருந்தி வர்த்திக்கிற, |
| களிறென்றும், | யானையென்றும், |
| கடல் | திருப்பாற்கடலிலே, |
| கிடந்த | கண்வளர்ந் தருளுகிற, |
| கனியேயென்றும் | கனிபோலே போக்யபூத ஞானவனே யென்றும், |
| அல்லி | தாதுமிக்கு, |
| அம் | பரிமளத்தை யுடைத்தாய், |
| பூ | தர்சநீயமா யிருந்துள்ள, |
| மலர் | புஷ்பங்களையுடைத்தான, |
| பொய்கை | தடாகங்களையும், |
| பழனம் | நீர்நிலங்களையும், |
| வேலி | வேலியாகவுடைய, |
| அணி | அழகிய, |
| அழுந்தூர் | திருவழுந்தூரிலே, |
| நின்று | ஆச்ரிதர்க்காக நின்றருளி, |
| உகந்த அம்மானென்றும் | அவர்கள் ஆச்ரயிப்பதற்கு உகந்த ஸ்வாமீ யென்றும் சொல்லுவதுமன்றி, |
| சொல்உயர்ந்த | நாதம்மிக்கிருப்பதாய், |
| நெடு | இசைநீண் டிருந்துள்ள, |
| வீணை | வீணையை, |
| முலைமேல் | தன் ஸ்தநங்களிலே |
| தாங்கி | தரித்துக்கொண்டு, |
| தூமுறுவல் | மந்தஹாஸத்தாலே, |
| நகை | பற்களின்வரிசை, |
| இறையே தோன்ற | அல்பமே ப்ரகாசிக்கும்படி, |
| நக்கு | சிரித்து, |
| மெல்விரல்கள் | தன்னுடைய மெல்லிய விரல்களானவை, |
| சிவப்பெய்த | சிவக்கும்படியாகத் |
| தடவி | தடவி, |
| ஆங்கே | அதுக்குமேலே, |
| என்பேதை | என்பெண்ணானவள், |
| மென்கிளி போல் | கிளிப்பிள்ளைபோலே, |
| மிகமிழற்றும் | பலபடியாகச் சொல்லாநின்றாள்.(கரு) |

வ்யா.—(கல்லுயர்ந்தவித்யாதி) திருநாமந்தான் ஆபத்ஸகமாயும் உஜ்ஜீவநஹேது வாயும் போக்யமாயுமிறே யிருப்பது. அதில் அவையிரண்டும் கீழேசொல்லி போக்யமான திருநாமங்களை இங்கே சொல்லுகிறாள். (கல்லித்யாதி) உள்ளுநிற்கிற ஆனையினுடைய ச்லாக்யதையெல்லாம் மதிளிலே தோற்றுகிறபடி. ஸம்ச்லேஷவிச்லேஷங்கள் அப்ரயோஜகம், விஷயத்துக்குப்பரியுமதுவேப்ரயோஜகம், சேஷவஸ்துவுக்கு அநுவர்த்தாகாரம் சேஷியை அதிசயிப்பிக்குமிது விறே. கல்லாலே செய்யப்பட்டு ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமான ஒக்கத்தையுடைத்தாய் ஆனைக்குஸ்வைர ஸஞ்சாரம் பண்ணலாம்படியான விஸ்தாரத்தையு முடைத்தான மதிளென்கை. (கச்சிமேயகளிறு) என்கிறது-திருப்பாடகத்து நாயனாரை. நித்ய ஸ்ப்ருஹணீயமாகவிருக்கையாலும்நிவாரகரில்லாத ஸ்வாதந்த்ர்யத்தாலும் ஒருமதஹஸ்திபடிந்தாப்போலேயாய்த்து எழுந்தருளியிருப்பது. சேனைமுதலியார் பெரியதிருவடி இவர்களுடைய நியமநமும் ஸ்வச்சந்தாநுவர்த்திகளாய்க்கொண்டுநியமிக்கிறார்களாகையாலே கிஞ்சித்காரத்திலே ஒருமுகபேதமா யித்தனையொழிய சேஷிகளாய்க்கொண்டு நியமிக்கிறார்களன்றிறே; ஸர்வஸ்ப்ருஹணீயனாயிருக்கிறவன்கிடீர் தன்பக்கலிலே ஸ்ப்ருஹைபண்ணினவெனக்கு முகங்காட்டா தொழிகிறான். செய்ததுக்கு நிவாரகரில்லாத ஸ்வதந்த்ரன்கிடீர் எனக்கு முகங்காட்டா தொழிகிறான்.

(கடல்கிடந்த கனியேயென்றும்) இவ்வானை பட்ட ஆகாரத்தைச் சொல்லுகிறது. ப்ரதிகூலர்க்குதுஷ்ப்ராபமான க்ஷீராப்தியிலே பக்வபலம்போலே கண்வளர்ந்தருளுகிற நிரதிசயபோக்யபூதனே. கனியானது கண்டபோதே நுகரலாயிருக்கையும், புஜிப்பாரைப் பெறாதபோது தான்அழியும்படியுமாயிறே யிருப்பது; அப்படியே, தம்மை அநுபவிப்பார் தேட்டமாய் அவர்களைப் பெறாதபோது தான் அழியும்படியா யிருக்கை. போக்தாக்களைக்குறித்து அவஸரப்ரதீக்ஷனா யிருக்கிறவன் எனக்கு முகங்காட்டாதொழிவதே!. போக்தாக்களைப்பெறாதபோது அழியும்படியாயிருக்கிறவன் தன்னைப்பெறாதபோது முடியும்படியாயிருக்கிறவெனக்கு முகங்காட்டாதொழிவதே!.

---

விச்லேஷதசையிலே பிரியக்கூடுமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ச்லேஷவிச்லேஷங்க ளித்யாதி.) சேனைமுதலியார்பிரம்பின்கீழிலும் பெரியதிருவடிமுதுகிலும் வளராநிற்க நிவாரகரில்லை யென்பா னென்னென்ன; அருளிச்செய்கிறார் (சேனைமுதலியாரித்யாதி.)

(அல்லியம்பூ இத்யாதி) அவ்வானை ஸ்வைரஸஞ்சாரம் பண்ணிவந்து நிற்கிற தேசத்தைச் சொல்லுகிறாள். தாதுமிக்குப் பரிமளிதமாய் தர்சநீயமாயிருந்துள்ள புஷ்பங்களை யுடைத்தான தடாகங்களையும் நீர்நிலங்களையும் வேலியாக வுடையதேசம். ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமாய் அநுகூலர்க்கு ச்ரமஹரமாயிருந்துள்ள தேசமென்கை.

(நின்றுகந்த) ஸம்ஸாரிகளுக்கு ஆச்ரயணார்த்தமாகநின்று அவர்கள் தன் நிலையழகையும் அதுக்கடியான குணங்களையு மநுஸந்தித்து திருவடிகளைக் கிட்டினால் உகப்பானுந்தானே யாயிருக்கை. ப்ராபகனும் தானாய் ப்ராப்யத்தில்உகப்பானும் தானாயிருக்கை. ஆத்மலாபம் ஈச்வரனதிறே. (நின்றுகந்த) நிற்கிறநிலை பலித்தவாறே உகந்தபடி. அதுக்கு ஹேது வென்னென்னில்; (அம்மானென்றும்) உடையவனாகையாலே உடைமையை லபிக்க யத்நம்பண்ணுவானும்தானாய் உகப்பானும் தானாயிறே யிருப்பது. சேஷிக்கு சேஷித்வஸித்தியும் திருப்பதிகளிலே, சேஷபூதனுக்கு சேஷத்வஸித்தியும் திருப்பதிகளிலே யென்றாய்த்து இவரிருப்பது.(நின்றதெந்தையூரகத் திருந்த தெந்தைபாடகத் தன்றுவெஃகணைக்கிடந்ததென்னிலாத முன்னெலாம்) என்று-திருமழிசைப்பிரான் அநுபவித்த படியை இம்மூன்றுஸ்தலத்திலும் அநுபவிக்கிறாள் இவள்.

(சொல்லுயர்ந்தநெடுவீணை) ஸாமாந்யமானயாழிலும் குழலிலுங் காட்டில் நாதம்மிக்கிருக்கையும் இசைநீண்டிருக்கையும். இசைநீண்டிருக்கையாவது - அக்ஷரம் நரம்பில்லாதபடி கரைந்து இசையேயாயிருக்கை. அதவா (நெடுவீணை) கேட்டார்க்கு (அது,அது) என்று கிடக்கும்படியா யிருக்கையென்னுதல். (வீணைமுலைமேல் தாங்கி) வீணையை ஸ்பர்சித்தவாறே காந்தனானவன் ஸம்ச்லேஷதசையில் தன்னுடைய போக்யதையையும் இவளுடைய போக்யதையையும் வீணையிலே யேறிட்டு வாசிக்கும்படியை ஸாக்ஷாத்கரித்து, அத்தைத் தடவுங்கையை ஸாக்ஷாத்கரித்து, அதுக்கு ஆச்ரயமானதோளை ஸாக்ஷாத்கரித்து, அதுக்காச்ரயமான வடிவை ஸாக்ஷாத்கரித்து, அவனை ஸம்ச்லேஷதசையிலே தன்மார்பிலே யேறிட்டுக்கொள்ளுமாப்போலே வீணையை மார்பிலே யேறிட்டுக் கொண்டாள்.

---

அல்லி - தாது. (அம்) என்றத்தாலே - பரிமளம்.

(நின்று) என்கையாலே-ப்ராபகம். இங்கே வந்தோ அம்மானாய்த்தது, அங்கில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (சேஷிக்கித்யாதி.)

நரம்பில்லாத-தோற்றாதபடி. உதர்க்கத்தின்முடிவில் உணர்ந்துணரி லென்றபடி-

இவ்வீணையை அவனுகநினைக்கக்கூடுமோவென்னில்;(గృహీత్వా ప్రేక్షమాణా సా భర్తుః కరవిభూషణమ్ । భర్తారమివ సంప్రాప్తా జానకీ ముదితాఽభవత్) (க்ர்ஹீத்வாப்ரேக்ஷமாணுஸா பர்த்துஃகரவிபூஷணம் । பர்த்தாரமிவஸம்ப்ராப்தா ஜாநகீமுதிதாபவத்) என்று - பிராட்டி, பெருமாளை ப்ரத்யபிஜ்ஞா ப்ரத்யக்ஷரூபத்தாலே அநுபவித்தாளிறே. [గృహీత్వా - க்ர்ஹீத்வா] தேசாந்தரம்போன பந்துக்களைக்கண்டாப்போலே மேல்விழுந்தாள். [ప్రేక్షమాణా - ப்ரேக்ஷமாணு] வைத்த கண்மாருதே பார்த்துக்கொண்டிருந்தாள்.(సా-ஸா)இவன் வரவை ராவணன் வரவாக சங்கித்தவள்கிடீர் இப்படி மேல்விழுந்தாளென்கிருன். [భర్తుః కరవిభూషణమ్ - பர்த்துஃகரவிபூஷணம்] அடியில் தன்னைக் கைப்பிடிக்கிறபோது தன்கையிலுறுத்தின மோதிரத்தை. அங்ஙனன்றியே, தானும் அவரும் ஸம்ச்லேஷிக்கும்போது போகத்தின்மிகுதியாலே ப்ரணயரோஷம்தலையெடுத்து ஒருவரையொருவர் முகம்பாராதே யூடியிருப்பார்கள், அப்போது இருவரையுஞ்சேர்த்த மோதிரமென்னுதல். அதாவது - அப்போது நேர்முகம் பார்க்கையும் வார்த்தைசொல்லுகையும் இருவர்க்கும் அபேக்ஷிதமாயிருக்கும்; வேறுசேர்ப்பாரில்லையாகையாலே கையில் திருவாழி மோதிரத்தைக் கழற்றிப் பெருமாள் தறையிலே விழவிடுவர், அப்போதுதான் அம்மோதிரத்தை விழவிட்டீர்காணுமென்னும் வார்த்தையை யுண்டாக்கின மோதிரமாகையாலே கடகமானமோதிரமென்கிறது. [భర్తారమివ సంప్రాప్తా – பர்த்தாரமிவஸம்ப்ராப்தா] திருவாழிமோதிரத்தைக் கண்டவாறே பெருமாள்கையை நினைத்தாள், அதுக்காச்ரயமான தோளையும் அதுக்காச்ரயமான வடிவையும் நினைத்தாள், ஸந்நிதியில் அவரைத் தழுவிக்கொள்ளுமாப்போலே திருவாழிமோதிரத்தைத் தழுவிக்கொண்டாள்.(భర్తారమివ-பர்த்தாரமிவ)அவள் பெருமாளாகவே தழுவிக்கொண்டாள், இவன் பர்த்தாவைப்போலே யென்கிருன். [జానకీ ముదితాభవత్ - ஜாநகீமுதிதாபவத்] ஸ்ரீஜநகராஜன் திருமகள் உகவாநின்ருள், உதர்க்கத்தில்என்னுய்விழப்புகுகிறதோவென்று பீதனுகிருன்றிஷி. தாங்கிவைத்தென்னுதே (தாங்கி) என்கிறது, ஸம்போகதசையில் (అపూర్వవద్విస్మయమాదధానయా) (அபூர்வவத்விஸ்மயமாததாநயா) என்கிறபடியே தன்போக்யதையாலே குமிழ்நீருண்டு தளர்ந்த தசையிலே அவனைத் தன்கையாலே யெடுத்தணைத்துக்கொள்ளும்படி ஸ்மர்திவிஷயமாய் அவனுகநினைத்து வீணையை யெடுத்து முலையிலேதாங்கினபடி.

(தூமுறுவல்) அவனை ஸ்பர்சிக்கையால்வந்த ஹர்ஷத்தாலும், எதிர்த்தலையைத் தோற்பிக்கையால் வந்த ஹர்ஷத்தாலும் ஸ்மிதம்பண்ணினபடி. (நகைஇறையேதோன்றநக்கு) தந்தபங்தி அல்பமே ப்ரகாசிக்கும்படி சிரித்து.

அந்த ஹர்ஷம் ஸ்மிதத்தளவில் பர்யவஸியாதபடியாலே இளநிலாப்பாய்ந்தாப்போலே யிருக்கும்படியாக வாய்விட்டு ஹாஸம் பண்ணினபடி. (కాన్తస్మితాలక్ష్మణజాతహాసా) (காந்தஸ்மிதா லக்ஷ்மண ஜாதஹாஸா) என்னக்கடவதிறே. (மெல்விரல்கள் சிவப்பெய்தத் தடவி) ஸம்ச்லேஷதசையிலே காந்தன் முதுகிலே தான்படுத்தும் போகசிஹ்நங்களை நினைத்து நாணியைத்தடவினபடி.

(மெல்விரல்கள்) அதிஸௌகுமாரமானவிரல்கிடுரென்கிறாள். (சிவப்பெய்தத்தடவி) ஸம்போகதசையிலேவிமர்த்தநம் ஸஹ்யமாயிறே யிருப்பது. (சிவப்பெய்த) என்கையாலே - தத்காலீநமான சிவப்பென்கை. (ஆங்கே) அதுக்குமேலென்னுதல்; அத்தசையிலென்னுதல். (மென்கிளிபோல் மிகமிழற்றும்) முக்தமான கிளிபோலே மிகமிழற்றாநின்றாள். கிளியின்வாயிலும் திருநாமத்தைக் கேட்டவளாகையாலே அதிற்காட்டில் தன் மகளுக்குண்டான மார்த்தவத்தையும் மௌக்த்யத்தையுஞ் சொல்லுகிறாள்.

(மிகமிழற்றும்) பருவமிதுவாயிருக்க ப்ரணயத்தில்தேசிகையானபடி பேச்சுக்கு நிலமன்றென்கிறாள். எதிர்த்தலையில் அபஜயத்தைக்கண்டு சிரித்து, (త్వామాహసీతాబహువాక్యజాతమ్) (த்வாமாஹ ஸீதாபஹுவாக்யஜாதம்) என்கிறபடியே நாங்கள் ஸ்த்ரீகளன்றோ, அபலைகளன்றோ, நீர் ஆண்பிள்ளையன்றோவென்று இப்புடைகளிலேசொல்லுகிறவார்த்தைகளுக்குத்தொகையில்லையென்கிறாள். (నైవమాకిఞ్చిదబ్రవీత్) (நைவமாகிஞ்சிதப்ரவீத்) என்று-அவன் வார்த்தைகேட்கையிலே வாய்நீரும்படி கம்பீரையாயிருக்கக்கடவதான் அந்தபோகரஸத்தாலே காம்பீர்யம் குலைந்து தன்வெற்றி தோற்றவிதக்த்தையாய்நின்று வார்த்தைசொல்லுகிறாளிறே.

---

(தூமுறுவல்) என்று - ஸ்மிதஞ்சொல்லியிருக்கத் திரியவும் (நக்கு) என்று சிரிப்பைச்சொல்லுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அந்தஹர்ஷமித்யாதி.)

சிவப்புண்டாம்படி மடிதடவஸஹிக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்போகதசையிலேயித்யாதி.) ஸ்வபாவந்தன்னிலே விரல்சிவந்தன்றோ விருப்பதென்ன; அருளிச்செய்கிறார் (சிவப்பெய்தவித்யாதி.) (கிளிபோல்) என்னாநிற்க, (மிக) என்பானென்னென்ன, அருளிச்செய்கிறார் (கிளியின்வாயிலுமித்யாதி.)

(மிகமிழற்றும்) கிளியைப் பற்றவும் நன்றாக வென்னுதல்; அநேகவார்த்தைகளென்றபடி. பஹுவார்த்தை சொன்னாளென்கைக்கு முன்பிருக்கும்படி தானேதென்ன; அருளிச்செய்கிறார் (నైవమాకిఞ్చి - நைவமாகிஞ்சித்யாதி.) அவன் - ஸுமந்த்ரன்,

(என்பேதையே) என்வயிற்றிற் பிறந்த சிறுப்பெண், இவை யெல்லாமெங்கேகற்றாள். இப்பருவத்தில் ப்ரணயத்தில் வைதக்த்ய மெல்லாமெங்கேகற்றாள். பருவமும் காலமுமென்றுஒன்றில்லையா காதே, படுத்துமவன்கையதாகாதே!. சிறியவயற்றிலே பெரிய ஜகத்தையடக்கினஅகடிதகடநம்போலன்றியே அணுபூதன்பக்கல் விபுவானதான் ஸமாப்யவ்யாபித்த அகடிதகடநம் போலன்றியே இதொரு அகடிதகடந மிருந்தபடியே! யென்கிறாள். (மென்கிளி- என்பேதையே) மௌக்த்யவைதக்த்யங்களிரண்டும் ஏகாச்ரயத் தில் கிடப்பதே!. ... ... ... ... (கடு)

அ.—பதினொரும்பாட்டு. (கன்றுமேய்த்து) (மென்கிளிபோல் மிகமிழற்றும்) என்று-ஸம்ச்லேஷதசையில் தன்னுடைய ஜயமும் அவனுடைய அபஜயமும் தோற்றமேலிட்டு வார்த்தைசொன்னவி டத்தில் அவனும் அப்படியே மேலிட்டுவார்த்தை சொல்லக்கேட் டிலள், அத்தாலே நின்றநிலைகுலைந்து தன்கர்வமும்தானும்வீணை யுமாய்விட்டது,கூப்பிடத்தொடங்கினாள்.(భర్తారమివసంప్రాప్తాజానకీముదితాభవత్) (பார்த்தாரமிவஸம்ப்ராப்தா ஜாநகீமுதிதாபவத்) என்று உகந்தஸமநந்தரம்,(హారామహాలక్ష్మణహాసుమిత్రే) (ஹாராமஹாலக்ஷ்மண ஹாஸுமித்ரே)என்று-பிராட்டிகூப்பிட்டாப்போலே. "ஹாராம" என்று - போக்யவஸ்துவை நினையா, (హాలక్ష్మణ - ஹாலக்ஷ்மண) என்று-புஜிப்பாரைநினையா, (హాసుమిత్రే-ஹாஸுமித்ரே) என்று-நிமி த்தபூதரைநினையாக் கூப்பிட்டாளிறே. அப்படியே வரையாதே ரக்ஷிக்கும்படியையும் முகம்கொடுக்கும்படியையும் சொல்லிக் கூப் பிட்டுத் தரைப்படா நின்றாளென்கிறாள்.

மூ.—கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றும்
கடிபொழில்சூழ்கணபுரத்தென்கனியேயென்றும்
மன்றமரக்கூத்தாடிமகிழ்ந்தாயென்றும்
வடதிருவேங்கடம்மேயமைந்தாவென்றும்
வென்றசுரர்குலங்களைந்தவேந்தேயென்றும்
விரிபொழில்சூழ்திருநறையூர்நின்றாயென்றும்
துன்றுகுழல்கருநிறத்தென்துணையேயென்றும்
துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (கசு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கன்று | கற்றுத்திரள்களை, | காளாயெ ன்றும் | காளைபோலேசெருக் குத்தோற்ற வர்த் திக்கிறவனே யெ ன்றும், |
| மேய்த்து | ரக்ஷித்து, | | |
| இனிதுஉ கந்த | மிகவும் ஸந்துஷ்ட னுகையாலே, | | |

(வடதளசாயி) இத்யாதிகளைப் பற்ற விது ஆச்சர்யமோவென்ன; அருளிச்செய்கிறார் (சிறியவயிற்றிலே பெரியவித்யாதி.) ... (கடு)

| பதம். | உரை. |
|---|---|
| கடி | பரிமளம் மிக்கிருந்துள்ள, |
| பொழில் சூழ் | சோலையாலே சூழப்பட்ட, |
| கணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே, |
| என்கனியேயென்றும் | எனக்கு பக்வபலம்போலே போக்யபூதனானவனே யென்றும், |
| மன்றுஅமர | நாற்சந்தியிலே பொருந்தும்படி, |
| கூத்தாடி | நர்த்தநம்பண்ணி, |
| மகிழ்ந்தாயென்றும் | மகிழ்ந்தவனே யென்றும், |
| | * வானோர்க்கும்மண்ணோர்க்குமாக, |
| வடதிருவேங்கடம் | வடக்குத் திருமலையிலே, |
| மேய | நித்யவாஸம் பண்ணுகிற, |
| மைந்தாவென்றும் | மிடுக்கனேயென்றும், |
| அசுரர்வென்று | கரதூஷணாதி களைக் கொன்று, |
| குலம்களைந்த | அவர்களுக்குத் தலைவனான ராவணனை யழியச்செய்த, |
| வேந்தேயென்றும் | சக்ரவர்த்தித் திருமகனேயென்றும், |
| விரி | விஸ்தீர்ணமான, |
| பொழில்சூழ் | பொழிலாலே சூழப்பட்ட, |
| திருநறையூர் | திருநறையூரிலே, |
| நின்றாயென்றும் | நின்றருளினவனே யென்றும், |
| துன்று | மிகவும்நெருங்கின, |
| குழல் | குழலையும், |
| கருநிறத்து | காளமேகம்போலே கறுத்ததிருமேனியையுமுடையனாய், |
| என்துணையேயென்றும் | எனக்குத் துணையானவனே யென்றும்சொல்லி, |
| துணைமுலைமேல் | ஒன்றுக்கொன்றொப்பானஸ்தநங்களிலே, |
| துளி | கண்ணீர்த்துளிகள், |
| சோர | அருவிபோலேபாயும்படி, |
| சோர்கின்றாள் | தளராநின்றாளென்கிறாள். (௧௬) |

வ்யா.—(கன்றுமேய்த்து) ப்ரதமத்திலே வரையாதே ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறது. (கன்றுமேய்த்தித்யாதி) ஸர்வரக்ஷகனானநீ ரக்ஷணத்தில்நின்றுங் கைவாங்கினாயோவென்கிறாள். மேய்க்கை - ரக்ஷிக்கை. நித்யஸூரிகளை ரக்ஷித்தவளவாய்ஆறியிருக்கிறேனோ; ஸநகாதிகளையும் காதாசித்கமாகரக்ஷித்தவளவாய்ஆறியிருக்கிறேனோ; ராமக்ருஷ்ணாதிரூபத்தாலே வந்தவதரித்து இடக்கையும் வலக்கையுமறியாத இடையரை ரக்ஷித்த வளவாயாறியிருக்கிறேனோ; அறிவுகேட்டுக்கு மேலெல்லையான கன்றுகளை மேய்த்தவுன்னைவிட்டு எங்ஙனே யாறியிருப்பேன்.

பதினேழாம்பாட்டு.—(கன்றுமேய்த்து) காளை-மேனாணிப்பாய், அத்தால் - ராஜாவாதல்; யுவாவாதல். முந்தினத்தை யருளிச்செய்கிறார் (நித்யஸூரிகளை ரக்ஷிக்கையித்யாதி.)

(கன்றுமேய்த்தினிதுகந்த) நித்யஸூரிகளை ரக்ஷிக்கை தட்டியிலிருப்பாய், கன்றுமேய்த்தபின்புகாணும்ஸார்வபௌமனாய்த்து. ஸர்வரக்ஷகத்வம்புஷ்கலமாய்த்தது - கன்றுமேய்த்தபின்பிறே. (இதுகந்த) (திவத்திலும் பசுநிரைமேய்ப் புவத்தி) என்கிறபடியே-பசுக்களை மேய்த்து உகக்கும்;கன்றுமேய்த்து இனிதுகக்கும். அவற்றுக்கு ரக்ஷகன்பக்கல் (ரக்ஷகன்) என்கிறஜ்ஞானமுண்டு; இவற்றுக்கு அதுவுமில்லையிறே. அஜ்ஞானத்துக்குமேலெல்லையான கன்றுகளையு மகப்பட ரக்ஷித்தநீ உன்வாசியை யறிந்து உன்னையொழியச் செல்லாதவென்னை ரக்ஷியாதொழிவதே! யென்கிறாள். நானும் இவ்வாற்றாமையை விட்டு அஜ்ஞர் கோடியிலே அந்தர்ப்பவிக்கப் பெற்றிலேன்.

(காளாயென்றும்) தான்சோகாவிஷ்டையா யிருக்கச்செய்தேயும் தன்னை வடிம்பிடும்பருவத்தில்தோற்றுச் சொல்லுகிறாள். (తరుణౌ రూపసమ్పన్నౌ) என்று-பிணைந்தின்னியையுமகப்பட ஆழங்கால் படுத்தும்பருவம் இவளைவிடுமோ. அவனோடேகலந்துதான் இளகிப்பதிக்கஆசைப்படுகிறாள்காணும். அதவா, ரஸாயந ஸேவைபண்ணினாரைப்போலே கன்றுகளை ரக்ஷித்தபின்பு வடிவு இளகிப்பதித்தபடி. மநுஷ்யர் அந்நமயஸ்வரூபரா யிருக்கையாலே அந்நமேவ்ர்த்திஹேதுவாமாப்போலே ரக்ஷகனுக்கு ரக்ஷணதர்மமேயிறே இளகிப்பதிக்கைக்குஹேது.

(கடிபொழிலித்யாதி) அவ்வவகாலத்திற் பிற்பட்டாரையும் ரக்ஷிக்கவன்றோ திருக்கண்ணபுரத்திலேவந்து போக்யபூதனாய் நின்றருளிற்று; இது பூர்வர்கள் நிர்வாஹம். "பசுக்கள் கைகழியப் போகையாலே அவற்றை மறிக்கப்போனவிடத்திலேச்ரமஹாரமாயிருப்ப தொருபொழிலைக்கண்டு திருவாய்ப்பாடியாக நினைத்துப் புக்கான், அப்பொழில் * மயல்மிகுபொழிலாகையாலே கால்வாங்க மாட்டிற்றிலன்," என்றருளிச்செய்வர் பட்டர். அதுக்குஹேது, அவதாரத்திலும் அர்ச்சாவதாரத்திலும் தமக்குண்டான ஸ்வரூபைக்யப்ரதிபத்தியாலே யருளிச்செய்தார்.

---

அங்குஸார்வபௌமத்வமில்லையோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸர்வரக்ஷகத்வமித்யாதி.)

இரண்டாமர்த்தத்தை யருளிச்செய்கிறார் (தான்சோகாவிஷ்டையாயித்யாதி.) சோகாவிஷ்டையை யீடுபடுத்துமோவென்ன; அருளிச்செய்கிறார் (తరుణౌ - தருணௌ வித்யாதி.) (காளை) என்று ஸ்வாபாவிகமானபருவத்தைச்சொல்லிற்று-கீழ்; அதுக்குபூர்வபாவி [illegible] அருளிச்செய்கிறார் (ரஸாயநேத்யாதி.)

(கடிபொழில்சூழ் கணபுரம்) பரிமளமே உபாதாநமென்னும் படியான பொழிலாலே சூழப்பட்டதேசம்.(ஸர்வகந்தः) (ஸர்வகந்தः) என்கிற வஸ்துவையுங் கூடக் கால்தாழப் பண்ணும்படியிறே இப்பொழிலின்பரிமளமிருப்பது.

(என்கனியே யென்றும்) அச்சோலைபழுத்தபழமிருக்கிறபடி. எனக்கு பக்வபலம்போலே போக்யமாயிருக்கிறவனே. (என்கனியே) என்று - ஸ்வாதிகாரத்தை வெளியிடுகிறார். ஸாதநாந்தர நிஷ்டர்க்கு ஸாதநஸமாப்தியிலே அநுபவமாகையாலே அவர்களுக்கு அவன் காயாயிருக்கும்; ப்ரபந்நர்க்கு ப்ரபத்திபண்ணி னஸமநந்தரமேபிடித்து போக்யமாயிருக்கையாலே பக்வபலமா யிருக்கும். (என்கனியேயென்றும்) (கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன்,ஒருவர்க்குரியேனோ) என்றிருக்குமவரிறே; ஆகையாலே, (என்கனியே) என்கிறார். (கனியேயென்றும்) இரண்டுதலையையு மழிக்கப் பார்க்கிறீரோ வென்கிறாள். கனிக்கு போக்தாவையொழியச் செல்லாது, போக்தாவுக்குக் கனியையொழியச்செல்லாது.

(மன்றமரக்கூத்தாடி மகிழ்ந்தாயென்றும்) போக்தாவுக்கு போக்யமா யிருக்குமளவன்றியே அம்பலத்திலே அவல்பொதியவிழ்ப்பாரைப்போலே ஸமுதாயஸ்த்தலத்திலே ஸர்வஸ்வதாநம் பண்ணிற்றிலையோ. (மன்றமரக்கூத்தாடி) மன்றானது கூத்தோடே பொருந்தும்படியாகக் கூத்தாடினவனே. மன்று அமருகையாவது - கூத்தாடி விட்டாலும் மன்று நர்த்தகந்தியாயிருக்கை. "பெருமாளெழுந்தருளிப்புக்க திருவீதிபோலேகாண் திருவாய்ப்பாடியில் அம்பலமிருப்பது" என்றருளிச்செய்வர் பட்டர். மன்று-நாற்சந்திக்கும்பேர்; அம்பலத்துக்கும்பேர். இடையரெல்லாரும் திரள விருக்கிறவிடமாய்த்து - அம்பலமாகிறது. அங்ஙனன்றியே, மன்றிலுள்ளாரைச் சொல்லிற்றாய், இடையரெல்லாரும்அநந்யார்ஹராம்படிக் கிடாக ஆடினபடியென்றுமாம். அதாவது - புறம்பு-நெஞ்சுசெல்லாதே"அது,அது"என்றுகூத்திலேநெஞ்சுகிடக்கை,

(மகிழ்ந்தாயென்றும்) கூத்துக்கண்டவர்கள்உகக்கையன்றியே உகப்பானும் தானாயிருக்கை. அவர்களைத் தன்கூத்தாலே எழுதிக்கொள்வானும்தானாய் உகப்பானும்தானாயிருக்கிறபடி.

---

பரிமளமே உபாதாநமென்கைக்குஜ்ஞாபகமே தென்ன;அருளிச்செய்கிறார் (ஸர்வகந்தः - ஸர்வகந்தः இத்யாதி.)

ப்ரபந்நர்க் கெல்லாம் ஓரத்தால் எங்கள்கனி என்னவேண்டாவோ, (என்கனி) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (கண்ணபுரமொன்றுடை யானித்யாதி.) அல்லாதாரைப்போலன்றிக்கேதாம் இங்கேயற்றுத் தீர்ந்தவராகையாலே தமக்கே கனியென்கிறாரென்றபடி.

(கூத்தாடி மகிழ்ந்தாயென்றும்) தன்போக்யதையையநுபவித்த தும்புருநாரதர்கள்கூத்தாடக்கண்டுஉகக்கக்கடவதான்கிடீர் அத்த லையித்தலையாய், கூத்தாடுவானும் தானாய் உகப்பானும் தானாயிருக் கிறானென்கிறாள். குடக்கூத்தாடுகைதான் ஈச்வரத்வலக்ஷணமோ வென்னில்; ப்ராஹ்மணர் ஐச்வர்யம் மிக்கால் யாகாதிகளைப்பண்ணு மாப்போலேயும், விஷயப்ரவணர் ஐச்வர்யம் மிக்கால் அழித்து விவாஹம்பண்ணுமாப்போலேயும், இடையருக்கு ஐச்வர்யம் மிக் கால் செருக்குக்குப் போக்குவீடாக ஆடுவதாய்த்துக் குடக்கூத் தாகிறது. அந்தஸஜாதீயபாவத்தில் புரையறுதியாலேகுடக்கூத்தா டினபடியென்கை. ஊர்ப்பொதுவானபண்டங்கிடீர் எனக்கரிதாய்த் தென்கிறாள். அங்காடிப்பண்டங்கிடீர் எனக் கரிதாய்த்தென்கிறாள்.

(வடதிருவேங்கடம் மேயமைந்தாவென்றும்) ஒருவூரில்மன்றி லே நின்று கொள்ளைகொடுக்கையன்றியே உபயவிபூதிக்கும் நடு வானமன்றிலேநின்று தன்னைக்கொள்ளைகொடுத்தபடியைச் சொல் லுகிறது. (கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்கு) என் னக்கடவதிறே. (மைந்தாவென்றும்) திருமலையிலே நின்று தன் பருவத்தையாய்த்துக் கொள்ளைகொடுத்தது. (வானவர் வானவர் கோனொடும் நமன்றெழுந்திருவேங்கடம்) என்றும், (கானமும் வானரமும் வேடுமுடைவேங்கடம்) என்றும் சொல்லுகிறபடியே- ஈச்வராபிமாநிகளோடு நிஹீநஜந்மாக்களோடுவாசியறக் கொள்ளை கொள்ளும்வடிவுகிடீர் எனக்கரிதாய்த் தென்கிறாள். அதவா- (భక్తానాం) (பக்தாநாம்)என்கிறவடிவு மதேகவர்ஜ்யமாயோவிரு ப்பதென்கிறா ளென்னவுமாம்.

(வென்றசுரரித்யாதி) தான் போக்யபூதனா யிருக்குமளவே யாய் விரோதிநிவர்த்தி பிறக்கையரிதாய்த்தா னிழக்கிறேனோவெ ன்று, கரதூஷணாதிகள்முதலாக ராவணன்தானே தானும்படி பரிகாரத்தைக்கொன்று. அஸுரவ்யக்திகளைக்கிழங்கெடுத்து,அவர் களுக்கு கூடஸ்த்தனான ராவணனை யழியச்செய்த சக்ரவர்த்தித் திருமகனே. அஸுரவ்யக்திகளிறே ராக்ஷஸரும், அத்தைப்பற்ற (அசுரர்குலங்களைந்த) என்கிறாள். (வேந்தேயென்றும்) (రామో రామో రామఇతి ప్రజానామభవన్ కథాః) (ராமோராமோராமஇதி ப்ரஜாநா மபவந்கதாஃ) என்று அநுகூலர் வாய்ப்புலத்தும்படியாய் தத்ப்ரதி கூலர் மண்ணுண்ணும்படியாயிருக்கிறவன்கிடீர் எனக்கு முகங் காட்டாதொழிகிறான். (தாயர் மகிழவொன்றார் தளர) என்றும், (திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான்) என்று மிறே வஸ்து ஸ்வபாவமிருப்பது.

---

(திருவேங்கடம்மேய) என்றத்தைப்பற்றச் சொல்லிற்று-கீழ்; (மைந்தா) என்றத்தைப்பற்ற (భక్తానాం - பக்தாநாம்) என்கிறவடி வென்கிறது.) ராக்ஷஸரன்றோ இவர்கள், அசுரரென்பானென்னெ [illegible]ருளிச்செய்கிறார் (அஸுரவ்யக்திகளையித்யாதி.)

(விரிபொழிலித்யாதி) அவ்வவதாரத்துக்குப் பிற்பட்டார்க்கும் முகங்கொடுக்கைக்காக சக்ரவர்த்தித்திருமகன் வந்துநிற்கிற தேசமாய்த்து-திருநறையூராகிறது. ஏகதாரவ்ரதன் வந்துநிற்கிறானென்று தோற்றும்படியா யிறேயிருப்பது. விரியாநின்றிருந்துள்ள பொழிலாலே சூழப்பட்ட தேசம். நம்பியும் நாய்ச்சியாரும் கடாக்ஷித்த அக்கடாக்ஷமே விளைநீராக வளருகிற பொழிலாகையாலே நாள்தோறும் வர்த்தித்துவரக்கடவதிறே. அக்கடாக்ஷம் மாறிலிறே பொழில்விரிவும் மாறுவது. (நின்றாயென்றும்) பிராட்டியைத்தேடி அலமந்து திரிந்தவன் அத்தேசத்திலே அவளைக்கண்டவாறே அங்கே தரித்துநின்றபடி. அந்நிலை உனக்கு ஸித்திக்கும்போது எனக்கு முகங்காட்டவேண்டாவோ. எனக்குமுகந்தாராதபோது அவள்முகம் உனக்குக் கிடைக்குமோவென்கிறாள்.

(துன்று குழலித்யாதி) இத்தாலும் நம்பியுடைய திருக்குழலையும் வடிவையுஞ் சொல்லுகிறது. அறநெருங்கி இருண்டகுழலையும், காளமேகநிபச்யாமமான வடிவையுமுடைய என்துணையே. * தோளுநான்குடைச் சுரிகுழல் கமலக்கட்கனிவாய்க்காளமேகத்தையிறே இவர்கள் துணையாகப் பற்றுவது. இந்தக்குழலிலும் வடிவிலும்போலே காணும் தானகப்பட்டது. பிராட்டியைத்தேடித் திரிகிறகாலம் திருக்குழல் பேணாமையாலே ஜடையாய்க்கிடந்து, கண்டவாறே அவள் கையாலே வகிர்ந்துபேணின குழலாகையாலே (துன்றுகுழல்) என்கிறது.

(என்றுணையே) ஸ்நிக்த்தநீலகுடில குந்தளமென்கிற மயிர்முடியையும் வடிவில் ச்ரமஹரதையையுங் காட்டி என்னை அநந்யார்ஹையாக்கினவனே. நான் விமுகையானதசையில் ஸத்தையைநோக்கி உன்வடிவழகைக்காட்டி அநந்யார்ஹமாக்கி என்னோடே வந்து ஸம்ச்லேஷித்தது என்னையுபேக்ஷித்துப் போகவோவென்கிறாள். (துணை) என்று-காந்தனையும் சொல்லக்கடவது, ரக்ஷகனையுஞ் சொல்லக்கடவதிறே. (இலைதுணை) என்னக்கடவதிறே. எனக்கு ப்ராப்யமும் ப்ராபகமுமானவனேயென்கை.

(என்றுந்துணைமுலைமேல் துளிசோரச்சோர்கின்றாளே) இப்படிசொல்லாநிற்கச்செய்தே தறைப்படாநின்றாள். (துணைமுலை) போகோபகரணமோ துணை, இதுவே போக்தாவுக்குத்துணை. அவன்பிரிந்ததசையிலும் முலை துணையாயிறே யிருப்பது.

---

துணை - ரக்ஷகனுதல்; காந்தனுதல். அவற்றை வாக்யத்வயத்தாலே அருளிச்செய்கிறார் (தோளுநான்குடையித்யாதி.) பிராட்டியைத் தேடுகையாவது-க்ஷீராப்த்தியிலும்புறப்பட்டு மேதாவி மஹாரிஷியிடத்தில் திருநறையூரிலே வந்திருக்க இங்கே தேடிவந்தார் நம்பிஎன்கிறகதை.

அவனைத் துணையாகச் சொல்லியிருக்க முலைதுணையானபடியென்னென்ன; அருளிச்செய்கிறார் (அவன்பிரிந்ததசையி-

(துளிசோரச்சோர்கின்றாளே) அது அழிகையாலே தானும் அழிந்தாளென்கிறாள். (துணையே-என்று சோர்கின்றாளே) விழுவார் "அம்மே!" என்றுவிழுமாப்போலே அவன் முகங்காட்டாமையால் வந்த ஆற்றாமையாலே நோவுபடா நிற்கச்செய்தேயும் அவனைத் துணையாகச்சொல்லித்தறைப்படாநின்றாள். துணையான நான், என்முகம் பார்க்கவல்லவளேயென்று ப்ரார்த்தியாநிற்க தான் துணையாக நினைத்தவன் முகங்காட்டாதே யுபேக்ஷித்துப் போகாநிற்கப் பின்னையும்அவன்முகத்தை ஆகாங்க்ஷித்துத் தறைப் படாநின்றாள். இதுபோலேகாணும் பகவத்ஸம்பந்த யுக்தனிருக்கு மிருப்பு. விஷயாந்தரங்கள்தான் மேல்விழாநின்றாலும் அத்தைக்காற்கடைக் கொண்டிருக்கையும் அவன் உபேக்ஷகனானாலும் அவனை யொழியச்செல்லாதே யிருக்கையுமிறே-பகவத் ஸம்பந்த யுக்தன்படி. தாய்ரக்ஷகையாக வபிமாநியாநிற்கச்செய்தே அவளைக் காற்கடைக் கொண்டாளிறே. ... ... ... (கசு)

அ.—பதினேழாம்பாட்டு. (பொங்கார்) இவள் முழுமிடறு செய்து கூப்பிட்டு அத்தோடே தறைப்பட்ட படியைக்கண்டு, கிளியும் வீணையும் ஆச்வாஸஹேதுவாமென்று அவற்றை முன்னேவைத்துப் பார்த்தோம், அவையும் அகிஞ்சித்கரமாய்த்தென்று அவற்றை ஒருங்கவிட்டு நாம் ஹிதம்சொன்னால் அது ஜீவிக்கையாமோவென்று பார்த்து நீஇங்ஙனே வாய்விட்டுக்கூப்பிடுகையும் மோஹிக்கையுமாகிற விது உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப் போராது, இக்குடிக்கும் அவத்யமென்ன;அவற்றையோநான் இப்போது பார்த்திருக்கிறதென்ன; அதுதான் கிடக்க,நீதான் ஆதரிக்கிற விஷயந்தன்னைப்பேண வேண்டாவோ, ஆசாலேச முடையார்க்கு முகங்காட்டக்கடவவஸ்து தன்னை யொழியச்செல்லாமையாலே நோவுபட்டுக் கூப்பிடுகிற ப்ரணயினிக்கு முகங்காட்டாதொழிவதே! என்று நாட்டார் சொல்லும் அவத்யத்தை பரிஹரிக்கவேண்டாவோவென்ன; 'எனக்கோடுகிறதசையை யறியாதே ஹிதஞ்சொல்லுகிற விவள்முகத்திலேவிழியாதே, பிரிந்தார்படும் நோவையறியுமவன்முகத்திலே விழிக்கவல்லேனோஎன்று அவனைப்பற்றிக் கூப்பிடுகிறாள்.

---

அதழிகையாலே,யென்றது-அக்நிகணம்போலே கண்ணீர்விழ அத்தாலே அதுவைவர்ண்யமாகத் தானுமழியா நின்றாளென்றபடி... ... ... ... ... ... (கசு)

பதினேழாம்பாட்டு.—(பொங்கார்) ஒருங்கவிட்டு - இரண்டுடே வோரிடத்திலேவைத்து.

மூ.—பொங்கார்மென்னிளங்கொங்கைபொன்னேபூப்பப்
பொருகயற்கண்ணீரரும்பப்போந்துநின்று
செங்காலமடப்புறவம்பெடைக்குப்பேசுஞ்
சிறுகுரலுக்குடலுருகிச்சிந்தித்தாங்கே
தண்காலுந்தண்குடந்தைநகரும்பாடித்
தண்கோவலூர்பாடியாடக்கேட்டு
நங்காய்நங்குடிக்கிதுவோநன்மையென்ன
நறையூரும்பாடுவாள்நவில்கின்றாளே. (கள)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொங்கு | வளராநிற்பதாய், | தண்காலும் | திருத்தண் காலூரையும், |
| ஆர் | சுற்றுடைத்தாய், | தண்குடந்தைநகரும் | திருக்குடந்தை யென்னும் நகரத்தையும், |
| மென் | மென்மைத் தன்மையையுடையதாய், | பாடி | ப்ரீதிக்குப் போக்குவிட்டுப்பாடியும், |
| இளம் | இளையதான, | தண் | ச்ரமஹரமான, |
| கொங்கை | ஸ்தநங்களிலே, | கோவலூர் | கோபால புரத்தைப் |
| பொன்பூப்ப | பசலை நிறமுண்டாக, (பொருகிற, | பாடி | பாடியும், |
| பொரு | என்றோ டொன்று | ஆட | அப்பாட்டுக்குத்தக்கபடியாட, |
| கயல் | சேல் மத்ஸ்யம்போன்ற, | கேட்டு | ஆட்டத்தைக் கண்டுபாடுவதைக்கேட்டு, |
| கண் | கண்களிலே, | நங்காய் | ஸ்த்ரீத்வ பூர்த்தியையுடையவளே, |
| நீர் | நீர்த்துளிகள், | நங்குடிக்கு | நம்முடையகுலத்துக்கு, |
| அரும்ப | அரும்பா, | இது | வாய்விட்டுக் கூப்பிடுகிறவிது, |
| போந்து | தாயாரைவிட்டுப்புறம்பேவந்து, | நன்மையோவென்ன | நலந்தானோ வென்றுசொல்ல, |
| நின்று | தரித்துநின்று, | நறையூரும் | திருநறையூரையும், |
| செங்கால | சிவந்தகால்களையும், | பாடுவாள் | பாடுவதாகநினைத்து, |
| மடம் | அறிவழிந்து கிடக்கிற, (வை, | நவில்கின்றாள் | ஆளத்திவையாநின்றாள்; அதாவது-ஆரம்பிக்கிறாளென்றபடி. |
| புறவம் | ஆண் புறாக்களான | | |
| பெடைக்கு | தம்பெடைகளுக்கு, | | |
| பேசும்சிறுகுரலுக்கு | இட்டீடுகொள்ளுகிற பேச்சுகளுக்கு, | | |
| உடலுருகி | நெஞ்சுருகி, | | |
| சிந்தித்து | அவன்முறைகெடப்பரிமாறும்படியை நினைத்து, | | |
| ஆங்கே | அப்போதும், | | |

வ்யா.—(பொங்கித்யாதி) தான் படுகிறபாடித்தனையும் எதிர்த்தலையைப் படுத்தக்கடவதான பரிகரத்தையுடையவள்கிடீர் அத்தலையித்தலையாய்த் தான்படுகிறாள். வளர்த்திமிக்கு ம்ர்துவாய் இளையதான முலை. பொங்கார்ந்தமுலை-மேலேமேலே வளராநிற்பதாய்ச் சுற்றுடைத்தான முலை. ஆர்ந்திருக்கையாவது-சுற்றுடைத்தாயிருக்கை. (மென் - கொங்கை) முலைக்கு காடிந்யம்ஸ்வபாவமாயிருக்க, மென்முலை என்கிறது - விரஹஸஹமல்லாத முலையென்கைக்காக. (இளங்கொங்கை) உத்யோகித்தவளவா யிருக்கை. நரம்பில்லாத முலையென்கை. (பொன்னேபூப்ப) ஸுக்ஷேத்ரம் * மணல்மேடானாப்போலே அவனுக்கு போகோபகரணமானமுலையை வைவர்ண்யம்கொண்டுபோய்த் தென்கிறாள். (பொன்னேபூப்ப) ஒருகற்பகக்கன்று கோட்புக்காப்போலே யிருக்கிறதாய்த்து - தனக்கு இவளுடைய முலையின் வைவர்ணயம். பண்டு அவனோட்டைக் கலவி ஆபரணம் பூட்டினாப்போலே இப்போது பிரிவு ஆபரணம் பூட்டினபடி. வினவவந்தார்க்குத் தன்னளவை சாதித்துச் சொல்லுகிறாளித்தனையொழியத் தனக்கு இதுதர்சநீயமாயிறே யிருக்கிறது.

(பொருகயற்கண்ணீரரும்ப) ஸதாதர்சநத்துக்கு உபகரணமான கண்ணும்அழிந்த தென்கிறாள். (பொருகயற்கண்) அவனைப் பொருகிறகண்ணென்னுதல்;தன்னிலேபொருகிற கண்ணென்னுதல்.(கயற்கண்) கயல்போலே மிளிரா நின்றுள்ளகண். எப்போது மொக்க அலமாப் பேயாய்த்து இவள்கண்ணுக்குள்ளது. ஸம்ச்லேஷதசையில் ஹர்ஷத்தாலே அலமாக்கும்; விச்லேஷ தசையில் சோகத்தாலே யலமாக்கும். முலையிலே வைவர்ண்யம் குடியிருந்தாப்போலே கண்ணிலே சோகாச்ரு குடியிருந்தது. அவனுடைய ஸதாதர்சநத்துக்கு விஷயமான கண்கிடீர் சோகாச்ருவுக் கிலக்காய்த் தென்கிறாள்.

---

(பொங்கார்) ஆர்தல் - மிகுதியாதல், பரம்புதல்ர்தல்; சுற்றுடைமையாதல். இவற்றை யருளிச்செய்கிறார்(வளர்த்திமிக்கித்யாதி வாக்யத்வயத்தாலே.) நரம்பில்லாத-முற்றாத. வைவர்ண்யம் என்னுமல் (பூப்ப) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஒருகற்பகக் கன்றித்யாதி.) கோட்புகை-புதுமரம் புதுசாகப்பூக்கை. ஸம்ச்லேஷதசையில் நிறமன்றோ போக்யமாயிருப்பது, இது போக்யமோவென்ன; அருளிச்செய்கிறார் (பண்டித்யாதி.) போக்யமானால் வெறுப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (வினவவந்தார்க்கித்யாதி.) சாதிக்கை - மறைக்கை.

அவனை, பொருகை - ஈடுபடுத்துகை.

---

* "வண்டலிட்டாப்போலே" என்றும்பாடம்.

(துணைமுலைமேல் துளிசோர) என்றது-கீழ்; இங்கு-விரஹாக்நியாலே நீர்ப்பசையறும்படி புள்ளுலர்ந்து கிடக்கையாலே(அரும்ப) என்கிறது. பதக்குப்பானையிலே உழக்குப்பாலைக்காய்ச்சினால் *வாயாலே அறப்பொங்காநிற்கச் சேய்தேகிழ், நீரற்றிருக்குமாப்போலே உள் அடியற்றிருக்கை.

(போந்து) அவன் மேல்விழும்படியான முலையழகையும் கண்ணழகையுமுடைய நீ மேல்விழுகை ஸ்த்ரீத்வத்துக்குப் போராது காணென்று தாயார் சொன்னஹிதம் தனக்குச்ரவணகடுகமாயிருக்கையாலே நெருப்புப் பட்டவகத்தில்நின்றும் த்வரித்துப் புறப்படுமாப்போலே அவளிருந்த வகத்தினின்றும் புறப்பட்டாள். ஸ்ரீ விபீஷணாழ்வான் சொன்ன ஹிதத்தைக்கேட்ட ராவணன், (ధ్వాంక్షధిక్కులపాంసనమ్) (த்வாந்துதிக்குலபாம்ஸநம்) என்ன, (ఆజగామ ముహూర్తేన) (ஆஜகாமமுஹூர்த்தேந) என்று - அத்தலையில் ஒருக்ஷணமுந் தரியாதே சடக்கெனப் புறப்பட்டாப்போலே.(நின்று) அவள் ஸந்நிதியில் நின்றும் போந்தபின்பு தரித்து நின்றபடி. (ఉత్తరం తీరమాసాద్య ఖస్థ ఏవ వ్యతిష్ఠత) (உத்தரம்தீரமாஸாத்ய கஸ்த்த ஏவவ்யதிஷ்டத) என்று மஹாராஜப்ரப்ர்திகள்,(వధ్యతామ్వధ్యతామ్) (வத்யதாம்வத்யதாம்)என்னாநிற்க,பெருமாள் விஷயீகரியாதிருக்க, ஆகாசத்திலே தரித்துநின்றாப்போலே.

(செங்காலவித்யாதி) அவள் சொன்ன ஹிதம் தனக்குபாதகமாகையாலே உள்ளுநின்றும் புறப்பட்டாள், புறம்பு த்ர்ஷ்டிவிஷமாயிருந்தது, ஆகையாலே புறம்புயாரிடத்திலும் புகல்பெற்றிலள். இத்தால் - ஸம்ஸாரம் உள்ளோடு புறம்போடு வாசியறஸார்வத்ரிகமாகது:கமாயிருக்கையாலே போகஸ்த்தாநம் ஒருதேசவிசேஷமேயென்கை. (செங்காலமடப்புறவம்) ஸம்ச்லேஷ தசையில் தன்தலையிலே வைத்துக்கொள்ளுமவன்காலுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி.(மடப்புறவம்)மடப்பத்தால்-இப்போது அறிவின்மையைச்சொல்லுகிறதன்று, அக்காலத்தில் உணர்த்தி யழிந்துபரிமாறும்படிக்கு ஸ்மாரகமாய்நலிகிறபடி.

(பெடைக்குப் பேசுஞ் சிறுகுரலுக்கு) ஸம்ச்லேஷதசையில் அவன் தன்னைக்குறித்துப் பண்ணும் நீசபாஷணங்களுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி.

---

(அரும்ப) என்கைக்கு ஆற்றாமைமட்டமாய்த்தோ வென்ன; அருளிச்செய்கிறார் (துணைமுலைமேலித்யாதி) நீர்ப்பசையற்றால் அரும்பத்தான் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (பதக்குப்பானையித்யாதி.)

அபிமதம் பெறாமல் தரித்து நிற்கக்கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (உத்தரம் தீரமித்யாதி.) புறவம் - மாடப்புறா.

---

* "வாயிலேவர" என்றும் பாடம்.

(சிறுகுரல்) ஸம்ச்லேஷதசையில் பலஹாநியாலே சொன்ன சொல்லென்னுதல்; அசுட்கர்ணமான சொல்லென்னுதல். அத்த லைக்குத் தான்சொல்லும் நீசபாஷணங்கள் ஸதஸ்யமல்லாமையா லே தன்செவியிலே யாய்த்து அவன் சொல்லுவது. (உடலுருகி) அதின்வடிவைக்கண்டு நெஞ்சுருகிற்று, பேச்சைக்கேட்டு உட லுருகிற்று. (சிந்தித்து) அத்தசையில் அவன் பண்ணும் வ்ருத்தி விசேஷங்களைச் சிந்தித்து; - பரியட்டம் மாறுடுவது, அஞ்சலி யைப் பண்ணுவதாய்க்கொண்டு முறையழியப் பரிமாறும்படியை நினைத்து.

(ஆங்கே) அத்தசையில். இவை பாதகமானால் தாய்சொன்ன ஹிதத்தைக் கேட்கையிறே ப்ராப்தம், அத்தசையிலும். (தண்கா லித்யாதி) அவனோடுபரிமாறும் ஸங்கேதஸ்த்தலங்களைப் பற்றிக் கூப்பிடா நின்றாளென்கிறாள். (தண்காலும்) திருத்தண்காலில் வர்த்திக்கிறவனுடைய ஸ்வபாவத்தைப்பற்றி, (தண்கால்) என்று திருப்பதிக்குப் பேராகிறது. ச்ரமஹரமான காற்றென்கை. தென் றல்போலே ஸுகஸ்பர்சமும்ச்ரமஹரமுமான வடிவையுடையவன் வர்த்திக்கிற தேசமாகையாலே "தண்கால்" என்று - திருநாம மாகிறது. தன்னை அவன் அடியில் அணைக்கிறபோது ச்ரமஹரமாயி ருக்கையாலும் ஸுகரூபமாயிருக்கையாலும் (தண்கால்) என்று கூப்பிடுகிறாள்.

(தண்குடந்தைநகரும்பாடி) ஆச்ரிதரோடு முறையழிய ஸம் ச்லேஷித்த விடமாய்த்துத் திருக்குடந்தை. (త్వదీయభుక్తోజ్ఝితశేషభో జినా) (த்வதீயபுக்தோஜ்ஜித சேஷபோஜிநா) என்கிறபடியே சேஷி அமுதுசெய்தப்ரஸாதம் சேஷபூதன் ப்ரதிபத்திபண்ணுகை முறையாயிருக்க, ஆராவமுதாழ்வார், தமக்காக்கின திருப்போனக த்தை முற்படத் திருமழிசைப்பிரானை அமுதுசெய்யப் பண்ணிப் பின்னையிறே தாம் அமுதுசெய்தது; அவரும், வாத்ஸல்யாதிசயத் தாலே வந்ததாகையாலே வழக்குப்பேசமாட்டிற்றிலர். இத்தால்- தனக்கு ப்ரயோஜநமென்னென்னில்; தோழிமார்பேறும் தன்பேறு யிறே இவளுக்கிருப்பது.

(தண்கோவலூர்பாடி)ஆச்ரிதர்வந்து கிட்டினால் பின்னை அவர் களோடு முறையழியப் பரிமாறுகையன்றியே தானே மேல்விழுந் து ஸம்ச்லேஷித்தவிடமாய்த்து - திருக்கோவலூராகிறது.

---

அஷட்கர்ணமாகச் சொல்லவேண்டுவானென்னென்ன; அரு ளிச்செய்கிறார் (அத்தலைக்கித்யாதி.) நெஞ்சுருகியே உடலுருகவே ண்டுகையாலே அர்த்தாத்ஸித்தம்.

தனக்கு முகங்கொடுத்தது திருத்தண்கால், இப்போதநுபவிப் தவன் திருத்தண்காலூரானென்றபடி.

அவர்கள் மழைகண்டு ஒதுங்க அவர்களிருந்தவிடத்திலேதானே சென்றுதன்னை அவர்கள்நெருக்கத் தான் அவர்களைநெருக்கஇப்படி பரிமாறி அவர்கள் போனவிடத்திலும் அவ்விடத்திலே நிற்கிறுனி றே. (வாசல் கடைகழியாவுள்புகா) என்று. (பாடி) தனக்கு முகங் கொடுத்த தேசத்தையும், தன்பேறுடையார்க்கு முகங்கொடுத்த தேசத்தையும் நினைத்து முன் பட்டக்லேசத்தையும் மறந்து ப்ரீதி ப்ரேரிதையாய்க்கொண்டு சொல்லி. (ஆட) அவ்வளவில் பர்யவஸி யாத காயிகமான விக்ர்தியைச் சொல்லுகிறது. (கேட்டு) இவள் ஆடுகிறபடியைக்கண்டு பாடுகிறபடியைக் கேட்டென்கை. (பாடி யாடக்கேட்டு) இவள் என்னபேறுபெற்றுத்தான் இங்ஙன் ஸம் ப்ரமிக்கிறதென்கிறுள்.

(நங்காய்) "முகரி" என்று பூர்வர்கள் நிர்வாஹம். அதாகிற து - அவன்றுன் மேல்விழுகிறதொழிய நீவிதக்த்தையாய் இப்படி மேல்விழக்கடவையோவென்கை. அதவா, "பூர்ணையானவளே" என்றுபட்டரருளிச்செய்வர். (తత్తస్య సదృశంభవేత్) (தத்தஸ்யஸத்ர்ச0 பவேத்) என்றிருக்கும்பூர்த்தியன்றோ வுன்னுடையபூர்த்தி. அங்ங னன்றியே, உன்பூர்த்திகொண்டு இக்குடிவாழவிருந்தபடிஇதுவோ வென்னவுமாம். (நங்குடி) "ப்ரபந்நக்குடி" என்கிறவிதுவேறேயொ ருகுடிபோலேகாணும். (நங்காய்) அவனுக்கு ஸதாதர்சநம் பண்ண வேண்டும்படியான வடிவையுடையை; அவன்றனே வந்து மேல் விழும்படியான போகோபகரணங்களையுடையை; அவிளம்ப்ய பல ப்ரதமான ஸாதநத்தையுடையை; (తత్తస్య సదృశంభవేత్) (தத்தஸ்ய ஸத்ர்ச0பவேத்) என்றிருக்கும் ஜ்ஞாநத்தையுமுடையை. இப்படி யிருக்கிற நீ அபூர்ணரைப்போலே கூப்பிடக்கடவையோ. (இது வோநன்மை) தன்பூர்த்திகொண்டுவாழவிருப்பார்க்கு நீபண்ணும் நன்மையாகிறது - வாய்விட்டுக் கூப்பிடுமிதுவோ. இக்குடிவிளங் கப் பிறந்தநீ இக்குடிக்கு அவத்யத்தை விளைக்கக்கடவையோ. (என்ன) இப்படி சொல்ல. மீளுகை தவிர்ந்து (நறையூரும்பாடு வாள் நவில்கின்றளே) மீட்கவொண்ணுத விடத்தேபுக்காள். இன்னங் குடிகொண்டு உண்ண விருக்கிறீர்களோ வென்று ஆசிலே கைவைக்கப்பார்க்கிறுள்.

---

முகரிஎன்று - ப்ரார்த்தனையாய், அத்தாலே-வைதக்த்யத்தால் வந்த ப்ராகாங்யம். நங்காய் - வ்யங்க்யம். மூன்றுமர்த்தம்.-கீழெல் லாப்பதங்களையும் பற்றி அருளிச்செய்கிறுர் (அவனுக்கு ஸதாதர் சநமித்யாதி.) அவிளம்ப்யபலப்ரதம் - ஆற்றுமை; ஆசிலே - சாடு; பாடுகை - அர்த்தம்; ஆயுதத்திலே - த்வநி.

(நறையூருமித்யாதி) அவஸ்த்தையை யறியாதே ஹிதஞ்சொல்லுகிறவிவள்முகத்தில் விழியாதே பிரிவால் வந்த ஆற்றாமை யறியும்வகுத்ததாய்முகத்திலேவிழிப்பதெப்போதோ வென்கிறாள். (அகலகில்லேனிறையும்) என்றிருக்குமவளாகையாலே ஆற்றாமை யறியுமிறே. அங்ஙனன்றியே நம்பியைப்பற்றிக் கூப்பிடுகிறாளாகவுமாம். பிராட்டியைத் தேடித்திரிந்து கண்டவனாகையாலே ஆற்றாமை யறியுமிறே. என்னாற்றாமை யறியும் தாய்முகத்திலும் தமப்பன்முகத்திலும்விழிப்பதெப்போதோவென்கை. (பாடுவாள் நவில்கின்றாளே) பாடுவாளாக நினைத்து ஆளத்திவையாநின்றாள். பாடுகையாவது - மடலெடுத்தவேபாதி யிறே. (நவில்கின்றாள்) நணுகாநின்றாள். பாடினாளாகிற கடலேயிறே குடியென்கை. இத்தால்-ஆளத்தியிலே கருத்தறியும் தாயாருடைய பாட்டில் நைபுண்யந் தோற்றுகிறது. ... ... ... ... (கஎ)

அ.—பதினெட்டாம்பாட்டு. (கார்வண்ணம்) (நங்காய்நங்குடிக்கிதுவோ நன்மை யென்ன நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே) என்று தான் சொன்ன ஹிதத்தைக்கடந்தபடியாலே இனி இவளை ஹிதஞ்சொல்லிமீட்கையென்று நமக்கொன்றில்லையென்று கூடி உடன்பட்டு இவள்கருத்தைக் கேட்போமென்றுபார்த்து, உனக்கோடுகிற தென்னென்ன; இங்கிருந்து கூப்பிடக்கடவேனல்லேன், அவனிருந்ததேசத்தேறப் போகக்கடவேனென்ன; அளவுடையாரும் குமிழிநீருண்ணும்விஷயத்திலே தான் மேல்விழுந்தநுபவிக்க நினையாநின்றாள், இதுவன்றோ ஸ்த்ரீத்வத்தைப்பாராதே விஷயவைலக்ஷண்யத்தைப்பார்த்தார் படியிருக்கும்படியென்று வினவவந்தார்க்குச் சொல்லுகிறாள். (நிறை வழிந்தார் நிற்குமாறு - இதுவன்றோ) என்று - இவளுக்கு ப்ரணயத்திலுண்டான தேசிகத்வம் தனக்கிஷ்டமென்னுமிடம் ஹார்த்தமாய்ப் போந்தது, அத்தை இங்கே ப்ரகாசிப்பிக்கிறாள். இவ்விடத்திலே ஓரர்த்தத்தை தாயார் வார்த்தையாலே பூர்வபக்ஷித்து மகள்வார்த்தையாலே ஸித்தாந்திக்கிறது.

---

பாடினால் விரோதமேதென்ன; அருளிச்செய்கிறார் (பாடுகையாவதித்யாதி.)பாடவுத்யோகித்தவளவிலேஇன்னபாட்டுப்பாடப் போகிறாளென்று தாயாரறிகையாலே நிபுணையென்றபடி. (கஎ)

பதினெட்டாம்பாட்டு.—(கார்வண்ணம் திருமேனி)கூடி-மகளோடேகூடி. மகள் வார்த்தையாலே ஸித்தாந்திக்கையாவது;-(கார்வண்ணம்) என்று தொடங்கி, (பனிமலர்மேற்பாவைக்கு) என்னுமளவும் விஷயவைலக்ஷண்யத்தைச் சொல்லி, இப்படிப்பட்ட விஷயத்திலே முறைகெட இழியப்பார்க்கிறாளென்கை - போகாநுரூபமான ஸ்வரூபமே ஸித்தாந்தமென்கை.

ப்ரதமத்திலே ஸ்வரூபத்தையுணர்ந்து பின்னை ஸ்வரூபாநுரூபமானபுருஷார்த்தத்திலே யிழியவேண்டாவோவென்றாய்த்துத் தாயார் ஸித்தாந்தம். அது வேண்டுகிறதென்னென்னில்; சாஸ்த்ரங்களில் ஸ்வர்க்காதிகளையும் புருஷார்த்தமாகச் சொல்லுகையாலே ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்த மிதுவென்று நிர்ணயிக்கும்போது ஸ்வரூபம் முன்னாக வேணுமென்கை. அதோரர்த்தமன்றுகாண், போகாநுரூபம் ஸ்வரூபமா மித்தனையொழிய ஸ்வரூபாநுரூபமாயோபோகமிருப்பது என்றாய்த்து மகள்ஸித்தாந்தம்.

மூ.—கார்வண்ணந்திருமேனிகண்ணும்வாயும்
கைத்தலமுமடியிணையுங்கமலவண்ணம்,
பார்வண்ணமடமங்கைபத்தர்பித்தர்
பனிமலர்மேல்பாவைக்குப்பாவஞ்செய்தேன்,
ஏர்வண்ணவென்பேதையென்சொல்கேளாள்
எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்,
நீர்வண்ணன்நீர்மலைக்கேபோவேனென்னும்
இதுவன்றோநிறைவழிந்தார்நிற்குமாறே. (கஅ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கார்வண்ணம் | கறுத்த நிறத்தை யுடைய, | பனிமலர்மேற்பாவைக்கு | குளிர்ந்த செந்தாமரை மலரிலெழுந்தருளியிருக்கிற பெரிய பிராட்டியார் விஷயத்தில், |
| திருமேனி | திருமேனியையும், | பித்தர் | அதிவ்யாமுக்தனான ஸர்வேச்வரன் விஷயத்திலே, |
| கமலவண்ணம் | செந்தாமரைமலரையொத்த, | பாவஞ்செய்தேன் | பாபத்தைப்பண்ணினேன்; அதென்னவென்றால்;- |
| கண்ணும் | திருக்கண்களையும், | ஏர்வண்ணம் | அழகியவடிவையுடைய, |
| வாயும் | திருப் பவளத்தையும், | என்பேதை | என் பெண்ணானவள், |
| கைத்தலமும் | திருக்கைகளையும், | என்சொல் | என்சொல்லை, |
| அடியிணையும் | திருவடிகளையுமுடையனாய், | கேளாள் | கேளாதவளாய்க் கொண்டு, |
| பார்வண்ணமடமங்கை | பூமியை ப்ரகாரமாகவுடையளாய் மடப்பத்தை யுடையளான பூமிப்பிராட்டிக்கு, | | |
| பத்தர் | இட்டவழக்காயிருக்குமவராய், | | |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எம்பெருமான் | என்னை அநந்யார்ஹையாக்கினவனுடைய, | நீர்மலைக்கு | திருநீர்மலைக்கு, |
| திருவரங்கமெங்கே யென்னும் | கோயிலானது எங்கே யென்றுகேட்பதுமன்றி, | போவேனென்னும் | போவேனென்கிறாள்; |
| நீர்வண்ணன் | கடலின் நீர்போலே நீல நிறத்தையுடைய கண்ணன் எழுந்தருளியிருக்கிற, | நிறைவழிந்தார் | தம்முடையஸ்த்ரீத்வத்தைப்பாராதவர்கள், |
| | | நிற்குமாறு | நிற்கும்ப்ரகாரம், |
| | | இதுவன்றோ | இதுவன்றோ வென்றுதாய்விஷண்ணையாகிறாள். (கஅ) |

வ்யா.—(கார்வண்ணத்திருமேனி) இவளுடைய ஸித்தாந்தமே ஸித்தாந்தமென்னுமிடத்தை வினவவந்தார்க்கு மூதலிக்கிறாள். திருமந்த்ரத்தில் ப்ரதமபதத்திலே யிழிந்து, பின்னை த்ருதீயபதத்திலே யிழிந்தவளோ விவள், ப்ரதமத்திலே வடிவிலே யன்றோ இவளிழிந்தது, அநர்த்தஹேதுவாயிருக்கும்வடிவைப்பற்றி புருஷார்த்தமென்றுநின்ற வென்பெண்ணை தன்வடிவைக்காட்டியன்றோ அவற்றில் துவக்கறுத்தது; ஸௌரிபோக்யமானவடிவிலேயன்றோ விவள்ப்ரதமத்திலே யிழிந்த தென்கிறாள். (ఏషసర్వస్వభూతస్తు పరిష్వఙ్గో హనూమతః) (ஏஷஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோஹநூமத:) என்று-அடிமை செய்தார்க்குப் பரிசிலாகக்கொடுத்ததும் வடிவையிறே. (మామేకం శరణంవ్రజ) (மாமேகம்ஶரணம்வ்ரஜ) என்று - உழவுகோலும் சிறுவாய்க்கயிறும் ஸேநாதூளிதூஸரிதமான திருக்குழற்கற்றையுமாய் நின்ற வடிவைக்காட்டியிறே. ப்ராப்யத்தில் மேலெல்லையான வடிவன்றோ விவளுக்கு விஷயாந்தரப்ராவண்ய நிவர்த்திக்கு பரிகாரமாய்த்தது.

---

போகாநுரூபஸ்வரூபமே ஸித்தாந்தமாகவேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (திருமந்த்ரத்திலித்யாதி.) ப்ரதமத்திலே த்ருதீயபதத்திலே யிழிவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (அநர்த்தஹேதுவா யிருக்குமித்யாதி.) அவன் காட்டிக்கொடுக்கையாலே காண்பானென்றபடி. துவக்கறுக்கும்படி போக்யமாயிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸௌரிபோக்யமானவித்யாதி.) கீழ்வாக்யத்தாலும் இத்தாலும்- விக்ரஹமே ப்ராப்யப்ராபகமென்னுமிடம் சொல்லிற்று; அப்படி விக்ரஹமே ப்ராப்யமும் ப்ராபகமுமா யிருக்குமோவென்ன; அருளிச்செய்கிறார் (ఏషసర్వస్వభూతః- ஏஷஸர்வஸ்வபூதேத்யாதி வாக்யத்வயத்தாலே.) ஸ்வரூபகுணங்களிருக்கவிக்ரஹமே யிரண்டுக்கும்வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ப்ராப்யத்தில் மேலெல்லை யித்யாதி வாக்யத்வயத்தாலே) ப்ராப்யமான ஸ்வரூபகுணங்களுக்கு ப்ரகாசகமாகையாலே விக்ரஹத்தை (எல்லையான ப்ராப்யமென்கிறது.)

அர்ச்சிராதிமார்க்கத்தாலே ஒரு தேசவிசேஷத்திலே செல்லு கிறதும் பூர்ணஷாட்குண்ய விக்ரஹத்தை யநுபவிக்கைக்கிறே.

(கார்வண்ணம்) தாபத்ரயாதுரர்க்கு தாபஹரமாய் விரஹ தாபாதுரர்க்கு விரஹதாபத்தைப் போக்கக்கடவதா யிருக்கும் வடிவிறே. (கண்ணுமித்யாதி) அம்மேகம் பரப்புமாறத் தாமரை பூத்தாப்போலே யாய்த்து - காளமேகநிபச்யாமமான வடிவுக்கு பரபாகமாய்க்கொண்டு திவ்யாவயவங்களிருப்பது. இப்படியிருப்ப தொருமேகமுண்டாகிலிறே வடிவுக்கு த்ருஷ்டாந்தமாவது. இது அபூதோபமை. (கண்ணும் வாயும் கைத்தலமுமித்யாதி) இவளு டைய வாத்ஸல்யாதிகுணங்களிருக்கிறபடி. ஸ்வரூபமடியாக விழு ந்தபோதிறே ஸ்வரூபாச்ரயமான குணங்கள் உபாயமாவது, ரூப மடியாகவிழுந்தவளாகையாலே ரூபகுணங்களேயாய்த்து இவளு க்கு உபாயம். ஸம்ஸாரபயபீதிபூர்வகமாக ஸ்வஸ்வரூப பரஸ்வ ரூபங்களையுணர்ந்து, தத்பூர்வ வ்ருத்தத்தையு முணர்ந்து, தத்பரி ஹாரார்த்தமாக திவ்யாத்மகுணங்களிலே யடியிட்டிழிந்தவளன் றேஇவள்.

(கண்ணும்) * தூதுசெய் கண்ணிறே. தன்பக்கல் விமுகரா ய்ப்போருவாரையு மகப்படக் காலைக்கட்டித் துவக்குவிக்கும் கண் ணிறே. (జితంతే పుణ్డరీకాక్ష) (ஜிதம்தேபுண்டரீகாக்ஷ) என்று ப்ரத மத்திலே ருசிஜநகமாயிருப்பது கண்ணிறே; [పుణ్డరీకాక్షనజానే శరణమ్పరమ్ - புண்டரீகாக்ஷநஜாநேசரணம்பரம்] என்று ருசிபிறந் தார்க்கு உபாயமாயிருப்பதும் கண்ணே;(தாமரைக்கண்ணனைவிண் ணோர் பரவுந்தலைமகனை) என்று ப்ராப்திதசையில் ஸதாதர்சநத் துக்கு விஷயமாயிருப்பதும் கண்ணேயிறே. (வாயும்) அக்கண்ணி லேதுவக்குண்டாரை நெடுங்காலம் இழந்த விழவெல்லாம் தோற் றும்படியாகஸாந்த்வநம்பண்ணும்முறுவலும்.

---

இவளுடைய வாத்ஸல்யாதியாவது - ஸ்வரூபத்தை ஆச்ரயிக் கிறவர்களுக்கு ஸ்வரூபகுணமானவாத்ஸல்யாதிகளை முன்னிடவே ண்டுமாப்போலே-விக்ரஹத்தை ஆச்ரயிக்கிறவர்களுக்கும் விக்ரஹ குணமான ஸௌந்தர்யாதிகளை முன்னிடவேண்டுகையாலே அவ யவங்களை(இவளுடையவாத்ஸல்யாதியென்கிறது.)விக்ரஹகுணம் உபாயமாகக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வரூபமடி யாகவித்யாதி.) ஸ்வரூபமடியாகவிழிய வேண்டாவோவென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ஸாரபயபீதியித்யாதி.) போகபரையா கையாலே யென்று பலிதம்.

ஸ்வரூபகுணங்களோபாதி விக்ரஹகுணங்களும் உபாயமு மாய் உபேயமுமா யிருக்குமென்னுமத்தை யருளிச்செய்கிறார் (தூதுசெய்கண்ணுமித்யாதிவாக்யங்களாலே.)

ஸாபராதரான நம்மளவிலே திருவுள்ள மென்னாயிருக்கிறதோ வென்று கூச்சத்தோடே கிட்டினால் நிரபராதர்நாமென்று அவர்கள் தாங்களேதங்களை நினைக்கும்படியாயாய்த்து முறுவலிருப்பது. அபராதத்துக்கு நேர்த்தரவுகொடுக்கும்முறுவலிறே.

(கைத்தலமும்) கிட்டினாரை (మాశుచః - மாசுச:) என்னும்கையும். (அணிமிகுதாமரைக்கையையந்தோ வடிச்சியோந் தலைமிசை நீயணியாய்) என்று ப்ராப்யமாயிருப்பதும் இக்கையிறே. (அடியிணையும்) அக்கையைக்கண்டு நிர்ப்பயரானார் அநுபவிக்க ஒழியுந்துறையான திருவடிகளும். (లోకవిక్రాన్తచరణౌ - லோகவிக்ராந்தசரணௌ) என்று-ஆச்ரயணீயமாயிருப்பதும் திருவடிகளே. (త్రివిక్రమ త్వచ్చరణామ్బుజద్వయం మదీయమూర్ధానమలంకరిష్యతి) (த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம்மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி)என்றும்,(படிக்களவாக நிமிர்த்த நின்பாதபங்கயமே தலைக்கணியாய்) என்றும் - சொல்லுகிறபடியே போக்யமா யிருப்பதும் திருவடிகளேயிறே. முதல் உறவுபண்ணும் கண்ணும், அத்தை ஸ்த்திரமாக்கும் முறுவலும், முறையுணர்ந்தாரைமேல்விழுந்தணைக்கும்கையும், அந்தஸ்பர்சத்துக்குத்தோற்றுவிழும் திருவடிகளுமிருக்கிறபடி. (கமலவண்ணம்) தாமரையைஒருபோலியாகச் சொல்லும தொழிய உத்தரக்ஷணத்திலே சருகாய்ப்போகுந் தாமரை, * స్వైకరూప - ஸதைகரூபமாயிருக்கும்வடிவுக்குத்ர்ஷ்டாந்தமாகமாட்டாதென்கை. (கட்டுரைக்கில் தாமரைநின்கண்பாதங்கையொவ்வா) என்று தாமரையை நிஷேதித்தாரிறே-நம்மாழ்வார்.

(பார்வண்ணமித்யாதி)ஸமுத்ரத்தே, நிலவரா யிருக்குமவர்கள் முழுகிமண்கொள்ளுமாப்போலே இந்தஸௌந்த்ர்ய ஸாகரத்தைத் தலைநீர்ப்பாட்டிலே யநுபவிக்குமவர்களைச்சொல்லுகிறது. இப்போது இதுசொல்லுகிறது - இவர்களுமகப்படக் குமிழிநீருண்ணும் விஷயத்திலேகிடீர் இவள்அநுபவிக்க விழிகிறதென்கைக்காக.

(பார்வண்ணமடமங்கை)பூமியைத்தனக்குப்ரகாரமாகவுடையளாய், அஸாதாரணமானஸ்த்ரீத்வத்தையுமுடையளாய், (తుల్యశీలవయోవృత్తామ్) (துல்யசீலவயோவ்ர்த்தாம்) என்கிற பருவத்தையுமுடையளான ஸ்ரீபூமிப்பிராட்டி. (பார்வண்ணம்)என்கிற இவ்விசேஷணம் இப்போது சொல்லுகிறது-ஸ்ரீபூமிப்பிராட்டிதான் அபிமதையாயிருக்கையன்றியே தத்ஸம்பந்திகளும் அபிமதமாயிருக்கிறபடி தோற்றுகைக்காக.

---

நேர்த்தரவு - பொறுத்தோமென்கை. கீழெல்லாவற்றையும் நிகமிக்கிறார். (முதலுறவித்யாதி.) இப்போது அவன் இவர்களுக்கு பவ்யனாயிருக்கையாலே அதிலே யீடுபட்டு இவர்களும் குமிழி ...என்று அர்த்தாத்ஸித்தம்.

(அடியாரடியார்) என்று - அவனோட்டைஸம்பந்திகள் இவனுக்கு உத்தேச்யராயிருக்குமாப்போலேயிறே இவளோட்டைஸம்பந்திகளும் அவனுக்கு உத்தேச்யரா யிருக்கும்படி. (மங்கை) (युवाकुमारः - யுவாகுமார:) என்கிற பருவத்துக்குத் தகுதியான, (युवतिश्चकुमारिणी) (யுவதிஶ்சகுமாரிணீ) என்கிற பருவத்தை யுடையவள்.

(பத்தர்) (भजसेवायाम्) (பஜஸேவாயாம்) என்கிறபடியே ஸேவையைச்சொல்லுகிறது. தான் ஸேவ்யனாய் இவன் ஸேவகனாயிருக்கிறமுறையிலே பரிமாறுகையொழிய அத்தலை யித்தலையாய் முறைகெடப் பரிமாறும்படியாயாய்த்து இவனுடைய போக்யதை யிருப்பது. (अहंशिष्याच दासीच भक्ताच पुरुषोत्तम) (அஹம்சிஷ்யாச தாஸீச பக்தாசபுருஷோத்தம)என்று அத்தலையில்புംஸ்த்வத்தை யநுஸந்தித்து, இவள்படும்பாடு இது; இவனுடைய ஸ்த்ரீத்வத்தை யநுஸந்தித்து (கிடந்திருந்து நின்றளந்து) என்கிறபடியே யிறே இவன் படுவது. (பித்தர்பனிமலர்மேல் பாவைக்கு) அதுதான் முறையிலேபரிமாறிற்று என்னும்படியாயாய்த்து இவள்பக்கல்வ்யாமோஹமிருக்கும்படி. ச்ரமஹரமான தாமரைப்பூவில் பரிமளம் ஒருவடிவுகொண்டாப்போலேயிருக்கிறபிராட்டிக்கு அதிவ்யாமுக்தனாய். (அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்கும்) என்கிறபடியே - அவன் குமிழிநீருண்ணும்படியிறே பிராட்டி யுடைய போக்யதையிருப்பது.

(பாவஞ்செய்தேன்) வினவவந்தார்க்கு அழுதுகாட்டுகிறாள். இவர்களைப்போலே இவனும் முறைகெடப் பரிமாறவன்றோ புகுகிறது. அவ்விஷயத்தில் வைலக்ஷண்யத்தை யமைக்கப்போகாது, இவளாற்றாமையை யமைக்கப்போகாது, என்பாபமேயா மித்தனையிறே - இதுக்கடி. (मत्पापमेवात्रनिमित्तमासीत्) (மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்)என்று ஸ்ரீபரதாழ்வான் அவள்வயிற்றில்பிறந்த பாபமென்றாப்போலே இவளைப்பெற்றபாபமே யென்கிறாள்.(பாவஞ்செய்தேன்) எனக்கும் தனக்கு முதவாதபடி பிள்ளைபெற்றேன். இவள் இப்பாடுபடுகைக்கடி தன்னைஉணராமையால்கிடீரென்கிறாள். (ஏர்வண்ண வென்பேதை)இவள் தன்னையுணர்ந்தாளாகில்இப்பாடு எதிர்த்தலை படும்படியா யிறே யிருப்பது. தன்வடிவழகிலே அவன்படும்பாட்டைக்கிடீர்அத்தலை யித்தலையாய்த்தான்படுகிறாள்.

---

இப்படி யிருவரும் ஒன்றுக்கொன்று போக்யதையிலே யீடுபட்டிருப்பர்களென்னுமத்தை யருளிச்செய்கிறார் (अहंशिष्या அஹம்சிஷ்யாசேத்யாதி.)

அழுதுகாட்டுகிறவர்களுக்கு ஹார்த்தமேதென்ன; அருளிச்செய்கிறார் (இவர்களைப்போலே யிவனுமித்யாதி.)

தனக்குதவாதது - தன் ஸ்த்ரீத்வமழிகை.

(ஏர்வண்ணவென்பேதை) அவனுடைய * கார்வண்ணம் இவளுடைய ஏர்வண்ணத்துக்கு ஸத்ர்சமன்றுகிடீர் ஒருத்ர்ஷ்டாந் தமிட்டுச் சொல்லும்படியிறே அவன் வடிவிருப்பது, அழகியவடி வென்னு மித்தனையொழிய இவள் வடிவுக்கு த்ர்ஷ்டாந்தமில்லை யிறே. (வடிவிணையில்லா) என்னு மித்தனையிறே. பிராட்டிக்குஅவ ன்போக்யமாயிருக்கும், அவனுக்கு இவள் போக்யமாயிருக்கும். அம்மிதுநத்தை யநுபவிக்கு மேற்றமுண்டு ஸ்ரீபூமிப்பிராட்டிக்கு. அந்த ஸமுதாயத்தை யநுபவிக்குமேற்றமுண்டிறே இவளுக்கு. போகம் மிக்கதனையும் அழகுமினுங்கு மித்தனையன்றோவிறே.

(என்பேதை) என்மகள். அவர்களிற் காட்டில் அபிஜாதை யான வேற்றமுண்டே இவளுக்கு. (பிறந்திட்டாள்) என்னுமவ ளன்றோ விவள். உன்மகளாகில் உனக்கு பவ்யையாயன்றோ யிருப் பது, (பாவஞ்செய்தேன்) என்னவேணுமோ, நீநியமிக்கக்குறை யென்னென்ன; (என்சொல்கேளாள்) நான் நியமிக்குமளவு கழி ந்த தென்கிறாள். க்ரமத்தாலே லபிக்குமதொழிய இங்ஙன் த்வரிக் கக் கடவதன்றுகாண் என்றுஹிதஞ்சொன்னால்அது கேட்கிறிலள். (என்சொல்கேளாள்) அவன் சொல்லுக்கேட்டவளாகையாலே என்சொல்லைக் காற்கடைக்கொள்ளாநிற்கும். (మామేకం శరణం వ్రజ) (மாமேகம் ஶரணம் வ்ரஜ) என்று அவன் வார்த்தையைக்கேட்டவளா கையாலே, க்ரமப்ராப்தியை ஸஹிக்கவேணுங் காணென்னும் வார் த்தையைஸ்வீகரியாளிறே. க்ரமப்ராப்திவேண்டும்படியன்றேஉபா யஸ்வரூபமிருப்பது. தனக்கு கர்த்தவ்ய முண்டாகிலிறே - க்ரம ப்ராப்தியுள்ளது.

(எம்பெருமான் திருவரங்கமெங்கேயென்னும்) என்வார்த்தை கேளாதவளவேயோ, அவனிருந்த தேசத்துக்குப்போக வழிதே டாநின்றாள். என்னை அநங்யார்ஹை யாக்கினவனுடைய கோயி லுக்கு வழியெங்கே யென்னும். (எங்கே யென்னும்) நான்சொன் ன ஹிதத்தைக் காற்கடைக்கொண்டதுகிடக்கிடாய், கோயிலுக்கு வழியே தென்று என்னைக்கேளாநின்றாள். அவன் பதறுமைக்கு முறையுணர்த்திப்போனான், அதுதானேபதறுகைக்கு ஹேதுவாய் த்து இவளுக்கு.

---

இப்படி அத்யந்தம்ஸுந்தரமாகைக்கு ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (பிராட்டிக்கு அவனித்யாதி.)

தன்வார்த்தைகேளாளாகில் அவன்சொல்லும் வார்த்தையே தென்ன; அருளிச்செய்கிறார் (க்ரமப்ராப்தி வேண்டுமத்தனை யித் யாதி.)

அநங்யார்ஹமாக்கினால்அப்போதறுவானென்னென்ன; அரு ளிச்செய்கிறார் (அவன்பதறுமைக்கித்யாதி.)

(நீர்வண்ணன்நீர்மலைக்கேபோவனென்னும்)கோயிலுக்குப் போவது திருநீர்மலையிலே புக்கு என்னாநின்றாள், இதுவன்றோ நிறைவழிந்தார் நிற்கும்படியென்கிறாள். திருக்குறையலூரினின் றும்புறப்பட்டுத் திருநீர்மலையிலே புக்குப்போலேகாணும் கோயி லுக்குப்போவது. இவளுடைய தங்கும்பயண மிருக்கும்படி. (పాథేయం పుణ్డరీకాక్ష నామసఙ్కీర్తనామృతమ్) (பாதேயம்புண்டரீகாக்ஷநாமஸங் கீர்த்தநாம்ர்தம்)என்கிறஸ்த்தாநத்திலேஇவளுடையபாதேயமிருக் கிறபடி. திருப்பதிகளிலேதங்கியல்லதுபோகமாட்டாளிறேஇவள். "கோயிலுக்குப்போம்வழி திருநீர்மலை" என்னும்படியிறே இவ ளுடையகலக்கம்.

(நிறைவழிந்தார் நிற்குமாறு - இதுவன்றோ) ஸ்வரூபத்தைப் பாராதே விஷயவைலக்ஷண்யத்தைப் பார்த்தாருடையப்ரகாரமிரு க்கும்படி இதுவன்றோ. (இதுவன்றோ - நிற்குமாறு) நாம் இப்ர கார மறிந்திலோமத்தனைபோக்கி ப்ரகார மிதுவன்றோ. போகாநு ரூபம் ஸ்வரூபமென்னு மிதுவன்றோ அர்த்தம். விஷயவைலக்ஷண் யத்தையு முபாயஸத்தமாயிருக்கிறபடியையு மநுஸந்தித்தார், ஸித் தம் இருக்கும்படி இதுவன்றோ. நமக்குஇரண்டிலும் ஜ்ஞாநமில்லை யே, ஸ்வரூபத்தைப்பார்த்தோமித்தனையிறே. (எம்பெருமான்திரு வரங்கம்)இத்யாதி. "இப்பெண்பிள்ளைஆற்றிலேகெடுத்துக் குளத்தி லேதேடுகிறாள், இதுவன்றோ நிறைவழிந்தார் நிற்குமாறு" என்று பிள்ளையருளிச்செய்வர். போகாநுரூபம் ஸ்வரூபமாகையாலேயிறே-, ஆண்டாள் க்ர்ஷ்ணனுக்கு இடைப்பெண்கள்பக்கலிலேநோக்கான போதுஇடையுடையும் இடைமுடியுமா யிருப்பது, யஜ்ஞபத்நிகள் பக்கலிலேநோக்கானவாறே மடிதாறுடுப்பதுமாய்த்து. ... (கஅ)

அ.—பத்தொன்பதாம்பாட்டு. (முற்றாரா) தான்சொன்ன ஹிதங்கேளாமையாலே,(இதுவன்றோநிறைவழிந்தார்நிற்குமாறு) என்று தானும்அதிலேயுடன்பட்டமைதோற்ற வார்த்தைசொன் னாள்;

---

இரண்டிலும் - வைலக்ஷண்யமும் உபாயமுமான விரண்டி லும். திருநீர்மலை பம்பற்குளத்திலே யிருக்கையாலே குளத்திலே தேடுகிறாளென்று ரஸோக்தி. ஸ்வரூபம் போகாநுரூபமானால் மு றைகெடும், ஸ்வரூபாநுரூபபோகமானால் முறைகெடாதென்னுமத துக்கு ஸம்வாதமாக அருளிச்செய்கிறார் (போகாநுரூபமித்யாதி.) சூடிக்கொடுத்த நாய்ச்சியார் ப்ராஹ்மணியா யிருக்கச்செய்தே யும் போகாநுரூபமாகப் பரிமாறுகையாலே மடிதாறின்றிக்கே இடையுடையும் இடைமுடியுமாய்த்தென்றபடி. யஜ்ஞயாகாதிகள் சேஷபாவத்தாலே ஸ்வரூபாநுரூபமாகப் பரிமாறுகையாலே மடி தாறோடே யிருந்தார்களென்றபடி. ... ... ... (கஅ)

பத்தொன்பதாம்பாட்டு. (முற்றாரா) அங்யபரன் - பிராட்டி பக்கலிலே தத்பரன்.

அவ்வளவிலே வினவவந்தவர்கள், ஸ்த்ரீத்வத்தைப்பார்த்திலளேயாகிலும் ஆதரிக்கிறவன்றான் ஒருவிஷயத்திலே அந்யபரன், உனக்குமுகந்தரமாட்டானென்று சொல்லாவிட்டதென்னென்ன; அதுவுஞ் சொன்னேன், அது விபரீதபலமாய் அதுவே ஹேதுவாக அவனிருந்ததேசத்தேறப்போனாளென்கிறாள்.

மூ.—முற்றராவநமுலையாள்பாவைமாயன்
　　மொய்யகலத்துள்ளிருப்பாளஃதுங்கண்டும்
அற்றாள்தன்னிறைவழிந்தாளாவிக்கின்றாள்
　　அணியரங்கமாடுதுமோதோழீயென்னும்
பெற்றேன்வாய்ச்சொல்லிறையும்பேசக்கேளாள்
　　பேர்பாடித்தண்குடந்தைநகரும்பாடிப்
பொற்றாமரைக்கயம்நீராடப்போனாள்
　　பொருவற்றாளென்மகளும்பொன்னுமஃதே. (கசு)

| பதம். | உரை. |
|---|---|
| முற்றரா | இளமைதங்கிய, |
| வநம் | அழகிய, [ளாய், |
| முலையாள் | ஸ்தநங்களை யுடைய |
| பாவை | நிருபாதிக ஸ்த்ரீத்வத்தை யுடையளான, [ள், |
| என்மகள் | என் பெண்ணானவ |
| மாயன் | ஆச்சர்ய பூதனான ஸர்வேச்வரனுடைய, |
| மெய் | அழகிய, |
| அகலத்துள் | திருமார்பிலே, |
| இருப்பாளஃதும் | "அலகில்லே னிறையும்" என்று பெரிய பிராட்டியார் நித்யவாஸம் பண்ணும்படியை, |
| கண்டும் | கண்ணுற்றுப் பார்த்தும், |
| அற்றாள் | அத்தலைக்கே அற்றுத்தீர்ந்தவளாகி, |
| தன்னிறைவழிந்தாள் | அஸாதாரண ஸ்த்ரீத்வமழிந்து, |
| ஆவிக்கின் | நெடுமூச்சு விட்டுக்கொண்டு, |

| பதம். | உரை. |
|---|---|
| தோழீ | என்னுயிர்த் தோழியே, |
| அணி | ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, |
| அரங்கம் | கோயிலிலேபோய், |
| ஆடுதும் | அநுபவிக்கக் கட |
| என்னும் | வோமென்றுசொல்லாநின்றாள்; |
| பெற்றேன் | பெற்ற தாயாரான நான், |
| பேச | சொல்ல, |
| வாய்ச்சொல் | என்னுடையவார்த்தையை, |
| இறையும்கேளாள் | சிறிதேனும் கேளாமல், |
| பேர்பாடி | திருப்பேர் நகரைப் பாடியும், |
| தண் | குளிர்ந்த, |
| குடந்தைநகர்பாடி | திருக்குடந்தையை வாயாற்சொல்லியும், |
| பொன் | அழகிய, [டைய, |
| தாமரை | தாமரைமலர்களையு |
| கயம் | தடாகமான அழகியமணவாளனோடே, |

| பதம். | உரை. | நிதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| நீராடப்போனாள் | ஸம்ச்லேஷிக்கப் போய், | உம்பொன்னும் | உங்கள் பெண்களுக்கும், |
| பொருவற்றாள் | உபமானமறப் பொருந்திவிட்டாள்; தோழிமார்களே, | அஃதே | இவள்படியுண்டோவென்கிறாள். () |

வ்யா.—(முற்றாரா வனமுலையாள்) அவளை அநந்யபரமாக்கும் விஷயத்தைச்சொல்லுகிறது. (முற்றாரா-முலை) சுற்றும் வன்னியமறுத்துச் சமையவளராதமுலை. முலைவன்னியமறுத்துச் சமைய வளருகையாவது - முலை அடிக்கொள்ளுமிடத்தில் தடையற்றிருக்கை. இத்தால்-விஷயத்துக்குத் துல்யமான பருவத்தைச்சொல்லுகிறது. (యువాకుమారః) (யுவாகுமாரः) என்கிறபடியே-கௌமாராவஸ்த்தையில் நின்றும்கால்வாங்கி யௌவநாவஸ்த்தையிலேஸ்த்திதித்தவளவா யிருக்கும் அவன்பருவம்;(యువతిశ్చకుమారిణీ)(யுவதிஶ்ச குமாரிணீ) என்கிறபடியே-கௌமாராவஸ்த்தையிலே ஸ்த்திதையாய் யௌவநம் முகங்காட்டுமளவாயிருக்கும் இவள்பருவம். இதுவிறே* ஸதைகரூபமாயிருக்கும்வடிவு. பதிநோராயிரமாண்டு ராஜ்யம்பண்ணினவிடத்திலும் பிராட்டிக்கும் பெருமாளுக்கும் பருவம் இதுவாயிறேயிருந்தது. அவர்களுக்கு பால்யாவஸ்த்தை விக்ரஹத்தினுடைய பவ்யதையாலே வந்த தித்தனையொழிய பரிணாமத்தால் வந்ததன்றென்கை. ஜராவஸ்த்தை அநிஷ்டமாகையாலே வந்ததில்லை; அதுக்குஹேது ரக்ஷ்யவர்க்கத்துக்கும் அபேக்ஷித மன்றியிலே யிருக்கையாலே பவ்யதையே யுள்ளதென்னுமிடம்கண்டோமிறே. ஏககாலத்திலே பால்யயௌவநங்கள் மாறாடி வருமிறே. (உன்னையுமொக்கலையில்) இத்யாதி.

---

அநந்யபரமாக்கும் - இவளுக்கன்றிக்கே தனக்காக்கிக்கொண்ட, தடையறுகை - முலைக்குள்ள ஸந்நிவேசமெல்லாம் வளராதே அவ்வளவும் வளருகைக்கு அடிக்கொள்ளுகிறபடி.

முற்றாரா - முற்றுதல், ஆராதே - போராதே யிருக்கிறபடி. (యువా,కుమారః) (யுவா,குமாரः) என்றுபதத்தைப்பிரித்தருளிச்செய்கிறார் (యువాకుమారః - யுவாகுமாரஇத்யாதி.)

இப்படி ஏகரூபமானால் பால்யம் வருகைக்கும் ஜரைவாராமைக்கும் ஹேதுவேதென்ன; அருளிச்செய்கிறார் (அவர்களுக்கித்யாதி.) பவ்யவதை பெற்று - அவர்களுக்கு அநுகுணமாகவிருக்கை. அதுக்குஹேது - அநிஷ்டமாகைக்குஹேது. பரிணாமமின்றிக்கே பவ்யதையாலே செய்யக்கண்டதெங்கேயென்ன; அருளிச்செய்கிறார் (உன்னையுமித்யாதி). (ஒக்கலையில்கொண்டு) என்கையாலே - பால்யமும், (தங்கள் கருத்தாயினசெய்துவரும்) என்கையாலே - யௌவநமும் தோற்றுகிறது.

(வனமுலையாள்) அழகிய முலையை யுடையவளென்கை. ஸர்வாங்கஸுந்தரையா யிருக்க, (வனமுலை) என்று முலையை விசேஷிக்கிறது, (மலராள்தனத்துள்ளான்) என்கிறபடியே அவன் இம்முலைக்கவ்வருகு கால்வாங்கமாட்டாத போக்யதாதிசயந்தோற்றுகைக்காக. உபயவிபூதி நிர்வஹணத்துக்கடியான ஜ்ஞாநசக்திகளையுடையவன்கிடீர் தன்னுடையதான வஸ்துவில் ஏகதேசத்தை பரிச்சேதித்தநுபவிக்க மாட்டாதிருக்கிறான். நிருபாதிகஸ்வதந்த்ரனாய்ஸ்வத:நிரபேக்ஷனாயிருக்கிறவன்கிடீர் ஓரவயவத்தைக் குறித்து பாரதந்த்ரனாய் ஸாபேக்ஷனாயிருக்கிறான். அல்லாதவிவளுடைய, (𑌗𑍁𑌣𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑍇𑌣𑌵𑌿𑌲𑌾𑌸𑌚𑍇𑌷𑍍𑌟𑌿𑌤𑍈𑌃) (குணாநுரூபேண விலாஸசேஷ்டிதை:) என்றுஞ் சொல்லப்படுகிற விவை குமரிருந்துபோமித்தனையாய்த்து. (உள்ளான்) விபுதத்வம் அணுவஸ்துவில் ஏகாவயவத்திலே யடங்கினபடி. (பாவை) நிருபாதிகஸ்த்ரீத்வத்தையுடையவள். அவனுடையபுருஷோத்தமத்வத்தாலும் மீட்கவொண்ணாதபடியிறே இவளுடையஸ்த்ரீத்வமிருப்பது.

(மாயன்) ஆச்சர்யபூதன். நிருபாதிகஸ்வதந்த்ரன் பரதந்த்ரனானவாச்சர்யம். ஸ்வத: பூர்ணனானவன் ஓரவயவத்தைக்குறித்து ஸாபேக்ஷனான வாச்சர்யம். ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாயிருக்கிறவன்,ஏகாவயவத்தை பரிச்சேதிக்கமாட்டாதவாச்சர்யம். (மொய் அகலத்துள்ளிருப்பாள்) மொய் என்று-அழகு. அழகியமார்வையுடையவன். அவன், (அகலகில்லேனிறையும்) என்னும்படியான இவளுடையஸ்தநத்தின்போக்யதை சொல்லிற்று-கீழ்; இத்தால்-இவள் (அகலகில்லேனிறையும்) என்னும்படியான அவன்மார்வின்போக்யதைசொல்லுகிறது.அவன், முலைக்கவ்வருகுபோகமாட்டாதாப்போலே இவளும் மார்வுக்கவ்வருகு போகமாட்டாதிருக்கிறாள். அவனைப்போலேஸ்வதஸ்ஸித்தமான ஜ்ஞாநசக்திகளையுடையவள்கிடீர் மார்வுக்கவ்வருகு போகமாட்டாதிருக்கிறாள். உத்துங்கதத்வம் ஏகாவயவத்திலே யகப்பட்டு, (தண்ணீர் தண்ணீர்) என்னும்படியிருக்கிறவள்கிடீர் ஏகாவயவத்துக்கவ்வருகுபோகமாட்டாதிருக்கிறாள்.இவனுக்கு மொக்குங்காணும்.அல்லாத ரூபகுணங்களும்ஆத்மகுணங்களும்குமரிருந்துபோமித்தனை.முலையையணைத்து அவன் பித்தேற மார்வையணைத்து இவள்பித்தேற இதொரு ப்ராந்தமிதுநமிருந்தபடியென்!.

---

எடுத்த பாசுரத்துக்கு அர்த்தமருளிச்செய்கிறார் (உபயவிபூதீத்யாதி.)பாவை - புஂஸ்த்வத்தைக்காட்டி ஸ்த்ரீத்வத்தையழிக்கப் போகாதென்றபடி.

(இருப்பாள்) சேஷியானவவன் சேஷவஸ்துவில் ஏகாவயவத்துக்குசேஷமானுப்போலே சேஷபூதையானவிவள்சேஷியுடைய ஏகாவயவத்துக்கு சேஷமாயிருக்கிறுளிறே. நித்யமங்களவிக்ரஹத்துக்கு நிருபகபூதையாயிறேபிராட்டியிருப்பது. (ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ:) (ஸ்ரீவத்ஸவக்ஷாநித்யஸ்ரீ:) என்று - ஸர்வேச்வரத்வசிஹ்நமிறே. ச்ரியபதித்வம். தேவதாந்தரங்களை அவர தேவதையென்கிறதும் ச்ரியபதித்வமில்லாமையாலேயிறே. (உள்ளிருப்பாள்) திவ்யமங்களவிக்ரஹத்துக்கு நிருபகபூதையாயிருக்கையன்றியே திவ்யாத்மஸ்வரூபத்துக்கும் நிருபகபூதையாயிருக்கிறபடி. இதிறே-ஆச்ரயணவேளையோடு போகவேளையோடு ஸ்வரூபவேளையோடுவாசியற ஒருமிதுநமேப்ரதிஸம்பந்தியென்கைக்குஹேது. அல்லாதநாய்ச்சிமாருக்கு விபூத்யந்தர்ப்பாவமேயுள்ளது, இவளுக்கு ஸ்வரூபரூபவிபங்கள்மூன்றிலும் அந்வயமுண்டிறே.

(அஃதுங்கண்டுமற்றுள்) அவள் அவன்பக்கலிலே பித்தேறி அவன் அவள்பக்கலிலேபித்தேறி இருவரும் ஊமத்தங்காய் என்று நான்சொல்ல அது விபரீதபலமாய்த்தென்கிறுள். அந்யோந்யமொழியச்செல்லாதேயிருக்கிறபடியைக் கண்டும்; (ந கச்சிந்நாபராத்யதி) (நகஸ்சிந்நாபராத்யதி) என்கிறவவள்படியையும், (குன்றனையகுற்றஞ்செயினும் குணங்கொள்ளும்) என்கிறபடியே-குற்றத்தைகுணமாகக் கொள்ளும் அவன்படியையும்பார்த்தும் அநங்யார்ஹையானுள், அவன்படியைக்கண்டு மற்றுள், அவள்படியைக்கண்டுமற்றுள்,சேர்த்தியைக்கண்டு மற்றுள். (செய்தாரேல் நன்றுசெய்தார்) என்னும்படியைப் பார்த்து அங்கே அநங்யார்ஹையானுள்;(ராஜஸம்ச்ரயவச்யாநாம்)(ராஜஸம்ச்ரயவச்யாநாம்)என்கிறபடியேகுற்றத்தைகுணமாகக்கொள்ளும் அவன்படியைப் பார்த்து அநங்யார்ஹையானுள்; சேர்த்தியைப்பார்த்து இருவரும்ஊமத்தங்காய்தின்றபோது தெளிந்திருப்பாரொருத்தர் வேணுமென்று அநங்யார்ஹையானுள்.

---

இன்னுன் என்று பேரைச்சொல்லாமல் மார்வையிட்டு நிருபிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறுர் (நித்யமங்களவிக்ரஹேத்யாதி). இவள் நிருபகையாக வேண்டுவானென்னென்ன; அருளிச்செய்கிறுர் (ஸ்ரீவத்ஸவக்ஷ - ஸ்ரீவத்ஸவக்ஷாஇத்யாதி.) ஸர்வேச்வரத்வசிஹ்நமிவள் என்கைக்கு ஜ்ஞாபகமேதென்ன; அருளிச்செய்கிறுர்(தேவதாந்தரங்களையித்யாதி.) ஸ்வரூபேணதன்னைமிதுநசேஷமென்றிருக்கை. இதிறே-இப்படியிருக்கிற பிராட்டிவிக்ரஹத்தையும் திவ்யாத்மஸ்வரூபத்தையும்பற்றியிருக்கையிறே யென்றபடி.

ஊமத்தங்காய் - பித்தேறியிருக்கையாலே உன்னைப்பாரார்கள்காண் என்றபடி. விபரீதம்-பற்றுகைக்குடலாகை, அற்றுள் - குற்றத்தை குணமாகக்கொண்டாள். ... ...

(அஃதுங்கண்டுமற்றூள்) விடுகைக்குச்சொன்னகுற்றம் பற்றுகைக்குடலாய்த்து. மார்வை ஒருத்திக்குப்படுக்கைப்பற்றுக்கினுனென்றவாறே அதடியானதன்றோவென்று * என்திருமகள்சேர் மார்வனே யென்னு மென்னுடை யாவியே யென்றுநின்றூள். போகபூர்த்தியுள்ளது சேர்த்தியிலேயிறே.

(தன்நிறைவழிந்தாள்) அநந்யார்ஹையான வவ்வளவேயோ, அஸாதாரணஸ்த்ரீத்வமும் அழிந்ததென்கிறூள். இவற்றில் ஒரொன்றே யமையுங்காணும் இவள்பூர்த்தியழிகைக்கு. எவ்வவஸ்த்தையிலும் தான்அவிக்ர்தையாயிருந்துஎதிர்த்தலையை விக்ர்தமாக்கவல்ல தன்பூர்த்திகிடீர் அழிந்ததென்கிறூள். (தன்நிறைவு) கடல்வற்றிற்று என்கிறூள். அவள் பூர்த்தி யழிந்ததென்று நீயறிந்தபடியென்னென்ன (ஆவிக்கின்றூள்) (எம்பெருமான் திருவரங்கமெங்கே) என்று உத்தேச்யத்துக்குப்போக வழிதேடினவள் அச்சேர்த்தியை யநுஸந்தித்தபோதே கிட்டாமையாலே நெடுமூச்செறியாநின்றூள்.

(அணியரங்கமித்யாதி) இவள்தசையைக்கண்டு அவனே முகங்காட்டிற்றிலன், தாயார்ஹிதபரை யாகையாலே ஆச்வாஸ ஹேதுவாகமாட்டாளென்றுபார்த்து தோழிவந்து ஸந்நிஹிதையானுள், அவனைப்பிரிந்தபோதும் இவள்முகம் தனக்கு அபேக்ஷிதமாயிறே யிருப்பது, தன்னுற்றூமையே செப்பேடாகப் பேறு தப்பாதென்று தரித்து, தோழீ! நாம்கோயிலிலேபோய் அநுபவிக்கக்கடவோமென்று ஒருப்படுகிறூள். (ஆடுதும்) ஆடுவோமென்றபடி.தாபத்ரயாதுராரோடு விரஹதாபாதுரரோடுவாசியறஸர்வர்க்கும் ச்ரமஹரமாயிருக்கையாலே அத்தேசத்தைப்பொய்கையாகப் பேசுகிறூளிறே.

(பெற்றேன்வாயித்யாதி) நான்வார்த்தைசொல்லில் அநுகூல பாஷணமேயாகிலும்கேளாள். (பெற்றேன்வாய்ச்சொல்-கேளாள்) அவன் சொன்னவார்த்தையையுங் கேட்கும், தோழிசொன்ன வார்த்தையையுங் கேட்கும், பெற்றதே குற்றமாக என்வார்த்தையைக்கேளாள். (இறையும் பேசக்கேளாள்) நான் அநுகூலமாகச் சொல்லிலும் கேளாள்; கோயிலிடையாட்டமாக வார்த்தைசொல்லிலுங்கேளாள். (கேளாள்) சொன்னகார்யஞ் செய்திலளேயாகிலும் செவிதாழ்க்கலாமிறே, அதுவுஞ்செய்திலள். அநாப்தஸம்ப்ரதிபந்நமானுல் விலக்ஷணமான வார்த்தையாகிலும் கேட்பாரில்லையிறே.

(பேர்பாடியித்யாதி) உன்வார்த்தை கேளாதவவள் தன்னுடையவார்த்தையிருந்தபடி யென்னென்ன; கோயிலுக்குப்போம் வழியில் பாதேயங்களைப் பேசாநின்றூள். நிறைவழிந்தார் செவ்

வைவழியும் போவர்கள் போலேகாணும். (பேர்பாடி) கோயிலுக்குப் போகையிலுண்டான ஆதராதிசயத்தாலே திருக்குடந்தைக் குப்பிறபடச்சொல்லக்கடவதிருப்பேரைமுற்படச்சொல்லுகிறாள். தடையற்றால் (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்று ஆழிமழையாய்ச் செல்லத்தட்டில்லையிறே.

(பொற்றாமரையித்யாதி) "பொற்றாமரைக்கயம்" என்கிற விசேஷணங்களால்-அநுபாவ்யவிஷயஸ்வபாவத்தைச்சொல்லுகிறது. தமிழர், "சுனையாடல்" என்றும், "நீராட்டு" என்றும்-ஸம்ச்லேஷத்தைச் சொல்லக்கடவர்கள்; அநுபவிக்கப் போனாளென்கை. (போனாள்) கீழ்ப்பாட்டிலே-வழிகேட்டாள், இப்போது (போனாள்)என்பானென்னென்னில்; உடலன்றோஇங்கிருக்கிறது, நெஞ்சு குடிபோய்த்தென்கிறாள். மகள் (அணியரங்கமாடுதுமோ)என்று-ஊரைச்சொன்னாள்; தான் (பொற்றாமரைக்கயம்) என்று - பெரிய பெருமாளைச் சொல்லுகிறாள். (தயரதன் பெற்ற மரதகமணித்தடம்)என்றும், (வாசத்தடம்போல் வருவானே) என்றும்-தடமாகச்சொல்லக்கடவதிறே.

அவள்போகைக்கு நீ ப்ரதிபந்தகையன்றோவென்ன; (பொருவற்றாள்) அத்தசைகடந்தாள். பொரு-சேர்த்தி. அவனோடு பொருந்தினபின்பு என்னோடு சேர்த்தியற்றாள். அதவா, (பொருவற்றாள் என்மகள்)என்மகள் உபமாநரஹிதையானாள். பொரு-ஒப்பு. கீழ்ச்சொன்னவளும் ஒப்பன்றென்கை. (பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்) என்னக்கடவதிறே. (உம்பொன்னுமஃதே) உங்கள் வயிற்றிற் பிறந்தார்க்கும் இவள்படியுண்டோ. (உம்பொன்)என்கிறது - அல்லாத ஆழ்வார்களை. (மத்துறு கடைவெண்ணெய்களவினிலுரவிடையாப்புண்டு) என்று-அவதாரத்தை யநுஸந்தித்திறே அவர்கள் மோஹித்தது; அர்ச்சாவதாரத்திலேயிறே-இவள்மோஹித்தது. (நங்கைமீர்) இத்யாதி. (கக)

அ.—இருபதாம்பாட்டு. (தேராளும்வாளரக்கன்) (பொருவற்றாள்) என்று - * ஊர்த்தடைவல்விட்டால், அறுப்பது,கிடாவிடுவதாய்க்கொண்டு ஆழிமழையாய்ச் செல்லுமாப்போலே இவளும் தாய்க்காவல் விட்டவாறே - அவனுடைய ஸர்வரக்ஷகத்வத்தை வாய்விட்டுப்பேசிகாலக்ஷேபம் பண்ணாநின்றாள், இவளை, "மஹாபாக்யவதி" என்னும தொழிய உபமையிட்டுச் சொல்லப்போமோவென்கிறாள்.மஹிஷிக்கு உதவினபடியையும், போனுக்கு உதவினபடியையும், ரக்ஷாபேக்ஷையுடையாரை ரக்ஷித்தபடியையும், அதுவுமில்லாதாரைத் தன்க்ருபையாலே ரக்ஷித்தபடியையும், தன் பக்கல்விமுகராயிருப்பார்க்கு மகப்பட தூளிதாநம்பண்ணின படியையும் வாய்விட்டுப் பேசாநின்றாளென்கிறாள்.

* "ஊர்க்கதிர்க்காவல்விட்டால்" என்றும் பாடம்.

முதற்பத்தில்-தாமானநிலையிலேநின்றுதிருக்கோவலூரையநுபவிக்கப்பாரித்து,தாமிருந்தவிடம் திருக்கோவலூராகப்பெருமையால் வந்தஆற்றாமையாலேகூப்பிட்டவிடத்திலும்அவன்வந்துமுகங்காட்டக்காணாமையாலே, (மந்திரத்தைமந்திரத்தால் மறவாதென்றும்வாழ்தியேல் வாழலாம்) என்று-தாம் காலக்ஷேபார்த்தமாக வநுபவிக்க விழிந்து அதுகிட்டாமையால்வந்தவாற்றாமையாலே ஸாதநபுத்திபண்ணிவந்து முகங்காட்டாதொழிந்தானோ வென்று சங்கித்து,(பொன்னானாய்)என்கிறபாட்டிலே ஈச்வரனுடையபுத்தி ஸமாதாநம்பண்ணினார்; இவ்விடத்தில்-வினவவந்தவர்கள் இவளுடைய ஆற்றாமையிலே ஸாதநபுத்திபண்ண, தாயார்நிலையிலே நின்றவர்களுடையஹ்ருதயத்தை ஸமாதாநம்பண்ணித்தலைக்கட்டுகிறார். இத்தால் - ஸித்தஸாதநபரிக்ரஹம் பண்ணினவர்களுக்கு யாவதாயுஷம்பகவத்குணசேஷ்டிதங்கள்காலக்ஷேபத்துக்கு விஷயமென்றதாய்த்து.

மூ.—தேராளும்வாளரக்கன்செல்வம்மாளத்
தென்னிலங்கைமுன்மலங்கச்செந்தீயொல்கிப்
போராளனாயிரந்தோள்வாணன்மாளப்
பொருகடலையரண்கடந்துபுக்குமிக்க
பாராளன்பாரிடந்துபாரையுண்டு
பாருமிழ்ந்துபாரளந்துபாரையாண்ட
பேராளன்பேரோதும்பெண்ணைமண்மேல்
பெருந்தவத்தளென்றல்லால்பேசலாமே. (உ௦)

| பதம். | உரை. |
|---|---|
| தேராளும் | தேர் என்று பெயர்பெற்றவற்றையெல்லா மாண்டவனாய், |
| வாள் | வாளாயுதத்தைக்கையில்தாங்கின, |
| அரக்கன் | ராவணனுடைய, |
| செல்வம் | ஸம்பத்தானது, |
| மாள | பிணமுங்காணாதபடி நசிக்கவும், |
| தென் | அரணல்வந்த அழகையுடைய, |
| இலங்கை | லங்கையிலுள்ளராக்ஷஸர், |

| பதம். | உரை. |
|---|---|
| முன் | பிராட்டியின் கண்முன்னே, |
| மலங்க | கலங்கும்படி, |
| செந்தீஒல்கி | திருவடியை யிட்டுக்கொளுத்தினதுமன்றி, |
| போராளன் | பிறப்பேதொடங்கி போர்செய்யுந்தன்மையனான, |
| வாணன் | பாணாஸுரனுடைய, |
| ஆயிரந்தோள் | ஆயிரந்தோள்களும், |
| மாள | கள்ளிக்காடு சீய்த்தாப்போலே கழித்துவிடும், |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொரு | தன்னில்தான் பொருகிற அலைகளையுடைத்தான, | பாரையுண்டு | பூமியை ப்ரளயகாலத்திலே திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்தும், |
| கடல் | கடலாகிற, | பாருமிழ்ந்து | பூமியை வெளிநாடு காண உமிழ்ந்தும், |
| அரண்கடந்து | அரணைக்கடந்து, | பாரையாண் | இப்படி பூமியைரக்ஷிட பேரா த்தவனுடைய, |
| புக்கு | பாணபுரத்திலே சென்றுபுக்கு, | ளன் | |
| மிக்க | விஜயமும் வீரஸ்ரீயும் மிக்கவனாய், | பேர் | திருநாமங்களையெல்லாம், |
| பாராளன் | பூபாரமான பாணனையழியச் செய்கையாலே பூமிக்கு நிர்வாஹகனாய், | ஓதும்பெண்ணை | இடைவிடாமல்சொல்லவல்லளானஇப்பெண்ணை, |
| பார் | பாதாள கதையான பூமிப்பிராட்டியை, | மண்மேல் | பூமியிலிருக்கச் செய்தேயும், |
| இடந்து | வராஹாவதாரஞ்செய்தருளி ரக்ஷித்தருளினவனாய், | பெருந்தவத்தளென்றல்லால் | நித்ய ஸூரிகளிலே யொருத்தியென்றல்லது, |
| | | பேசலாமே | பேசப்போமோ. |

வ்யா.—(தேராளுமித்யாதி) இப்போது இவனுடைய வைபவஞ்சொல்லுகிறது-இவனை அநாயாஸமாகஅழியச்செய்தஈச்வரத்வசக்தி தோற்றுகைக்காக. இது சதுரங்கபலத்துக்கும் உபலக்ஷணம். அதிரத மஹாரதரென்று ப்ரதாநமாகச் சொல்லுவது தேராகையாலே அத்தையிட்டு அல்லாதவற்றையும் உபலக்ஷிக்கிறது. (வாளரக்கன்) இத்தனை தேராண்டானென்று ஸங்க்யை சொல்லாதே (தேராளும்) என்கிறது-தேரென்கிற ஜாதி யத்தனையுமாண்டானென்கைக்காக. இது சதுரங்கபலத்துக்குறுப்பாகக் கட்டிஞனித்தனை யென்னும்படியான தனிவீரன். கையிலே வாளைக் கொண்டெழுந்திருந்தால் இந்த்ராதிகளை முதுகுபுறங்காணும்படியிறே அவனுடையதனிவீரமிருப்பது. (அரக்கன்செல்வம்) திருவடிமதித்த ஐச்வர்யமிறே ராவணனுடைய வைச்வர்யம்.(யத்யதர்மோ நபலவாந்ஸ்யாத்) (யத்யதர்மோநபலவாந்ஸ்யாத்) என்றிறே-திருவடியின்வார்த்தை. (மாள) பிணமுங்காணுதபடி நசிக்க. (தென்னிலங்கை)அரணுக்கழகு - துஷ்ப்ராபமா யிருக்கையிறே. கட்டளைப் பட்டலங்கையென்கை. சுற்றுங்கடலாய் அநந்தரம்நாடாய் அநந்தரம்மலையாய் அதின்மேலே மதிளும் அட்டாலையுமாயிருக்கை. சூல்பெண் பெண்டாட்டிக்கும் எதிரிகளை ஜயிக்கலாம்படியிருக்கை.

(முன்மலங்க) அவள் தன் குறியழியாதிருக்க அவள் ஸந்நிதியிலே ஒருவர்கூறைஎழுவருடுக்கும்படியாகக்கண் கலங்கும்படி. லோகமடங்கஅவன்கையிலே படும்பாடித்தனையும் அவள்ஸந்நிதியிலே லங்கைபடும்படியாய்த்து. (செந்தீயொல்கி) நெருப்பைக்கொளுத்தி. ஒருதனியாளைப்புகவிட்டுலங்கையைதக்த்தமாக்கி.(செந்தீ)ராவணனேவல்செய்துஇரைபெறாதே உடம்புவெளுத்துப்போந்தவக்நிதிருவடிவாலையண்டைகொண்டுதன்னிறம்பெற்றுத்தேக்கமிட்டபடி. அங்ஙனன்றியே, (దీప్తపావకసఙ్కాశైః)(தீப்தபாவகஸங்காசை:) என்கிறபடியே-சராக்நியாலேலங்கையை யழித்தான்சக்ரவர்த்தித்திருமகனென்னவுமாம். ஆனால் திருவடி லங்கையைச் சுட்டானென்பானென்னென்னில்; கையில் திருச்சக்கரம்செய்தது தான்செய்ததன்றியிலேயொழியுமோவென்கை.(యథారాఘవనిర్ముక్తశ్శరః)(யதாராகவநிர்முக்தஶ்ஶர:) என்னக்கடவதிறே. (போராளன்) ஜந்மப்ரப்ர்தி யுத்தோந்முகனாய்ப்போந்தவன். தன்தோளில்தினவுதீரும்படியானஎதிரிகளைப்பெறாமையாலேதான்அபாச்ரயமாகப்பற்றினருத்ரன்பாடேசென்று, (భారాయమమకింభుజైః) (பாராயமமகிம்புஜை:)என்று-நான் இத்தோள்சுமந்து திரிகிறவிதுக்கு ப்ரயோஜநமென்,என்மிடுக்குக்கு ஸத்ர்சமாயிருப்பதொரு எதிரியைக்காட்டித்தர வேணுமென்றானிறே. அதுக்குஹேதுவென்னென்னில்;(ஆயிரந்தோள்) ஸஹஸ்ரபாஹுவாயிருக்கையாலே.(ஆயிரந்தோள்)(యౌతద్భుజాకరౌకరౌ) (யௌதத்பூஜாகரௌகரௌ) என்றும், (கையுலகந்தாயவனையல்லதுதான்தொழா) என்றுஞ்சொல்லுகிறபடியே - கைகண்டது வகுத்தவிஷயத்தைஅஞ்ஜலிபண்ணவிறே. அதில்இரண்டுகைதான் தனக்குறுப்பாகப்பெற்றிலோமே யென்கிறான். ஒருக்கால்அஞ்சலி பண்ணிலும் ஐந்நூறஞ்சலியுண்டிறே. இத்தனையும் பரஹிம்ஸைக் குறுப்பாவதே! யென்கிறாள். அதுக்குஹேது வென்னென்னில்; (வாணன்) துஷ்ப்ரக்ர்தியாகையாலேயென்கை. (மாள) வாணனுடையபாஹுவநத்தைச்சேதித்து அவனுடையவீரத்தையழித்தானென்கை. வீரனுக்குத் தன்னுடையவீரத்தை யழிக்குமதிற்காட்டில்தன்னையழிப்பதிறே நன்றாயிருப்பது. (மாள) வீரவாசியறியுமவளாகையாலேபின்பிருந்தவிருப்புபிணமென்றுநினைத்திருக்கிறாள்.

---

இருபதாம்பாட்டு.(தோராளும்) அங்ஙனன்றியேயித்யாதி-சங்காவாக்யம். முந்தினவர்த்தத்திலே. அதாவது - மூலத்திலே (செந்தீயொல்கி) என்று - பெருமாளே சுட்டாரென்றிருக்க திருவடி சுட்டானென்பானென்னென்னில் என்றபடி. வாணன்தோளை சேதித்தானென்று பலபல விடங்களிலும் சொல்லாநிற்க (மாள) என்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (வீரனுக்கித்யாதி.) பரிஹாராந்தரம் (வீரவாசியித்யாதி.)

(பொருகடலையரண்கடந்துபுக்கு) எதிரிகளுக்குதுஷ்ப்ராபமாம்படியான திரைக்கிளர்த்தியையுடைத்தானகடலாகிற அரணைக்கடந்து பாணபுரத்திலேசென்றுபுக்கு. தன்னில் தான் பொரக்கடவதான தரங்கங்களையுடைத்தான கடலென்னவுமாம்.இது கீழும் அந்வயிக்கக்கடவது. (மிக்க)வீரஸ்ரீயாலே மிக்கவன். விஜயமும் மிக்கு வீரஸ்ரீயும்மிக்கபடி. அவனுக்கு ரக்ஷகனாய் அபிமானித்தெதிர்த்த ருத்ரனோடுஅவனுக்கு பரிகரபூதரானாரோடுவாணன்றன்னோடுவாசியற அவர்களழியவழிய மேலேமேலே வீரஸ்ரீபணைத்தபடியைச் சொல்லுகிறது. (பாராளன்)பூபாரமான பாணனை யழியச்செய்கையாலே பூமிக்கு நிர்வாஹகனானவன். (பாரிடந்து) தன்னிலேகொலையாமல் நிற்கச்செய்தே வந்த ஆபத்தைப்போக்கி விட்டவளவன்றிக்கே, அவள்தான் பாதாளகதையானபோது ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறது. தன்னிலேகுலையாமல்நின்று ஸங்கல்பத்தாலே ரக்ஷிக்கையன்றியே ஸுரிபோக்யமானவடிவை யழியமாறி ததநுரூபமானவடிவைக்கொண்டு ப்ரளயங்கதையான பூமியைஉத்தரித்து.கீழ்-பிராட்டியை ரக்ஷித்தபடியைச் சொல்லிற்று; இவை யிரண்டாலும்-ஸ்ரீபூமிப்பிராட்டியை ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறது. (பாரையுண்டு)பூமியைப்ரளயங்கொள்ளப்புக அந்தஆபத்தேஹேதுவாக திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து. (பாருமிழ்ந்து) அவ்வபேக்ஷையுமின்றிக்கேயிருக்க*தயமாநமநாவாய்க்கொண்டுஸ்ருஷ்டித்து.(பாரளந்து)அபேக்ஷயில்லாதவளவேயன்றிக்கே இவர்கள் விமுகராயிருக்க ஸ்வஸ்வாதந்த்ர்யத்தாலும்அந்யசேஷத்வத்தாலும் ஸ்வரூபம் நசித்தபடியைக்கண்டு ஸ்வஸம்பந்தமே ஹேதுவாக எல்லார் தலைகளிலும் திருவடிகளைவைத்து முறையையுணர்த்தி. (பாரையாண்ட) இப்படியால் பூமியை ரக்ஷித்தவன். உண்டு உமிழ்ந்துஅளந்துஇடந்துஎன்னாதே,பலகால்(பார்) என்கிறது-அவ்வவ்வபதானங்களில்தமக்குண்டான ஆதராதிசயத்தாலே. (பேராளன்)இப்படிரக்ஷிக்கைக்குஹேதுவானகுணசேஷ்டிதங்களுக்குவாசகமானதிருநாமங்களுக்குத்தொகையில்லாதவன்.இவனுக்கும்அத்தைப்பற்றியிறே திருநாமத்தாலேஸம்பந்தம்.(பேரோதும்பெண்ணை) இப்படிஅஸங்க்யாதமான திருநாமங்களித்தனையும் இடைவிடாமல் பேசவல்லவிவளை.காலக்ஷேபார்த்தமாகபகவத்குணசேஷ்டிதங்களித்தனையும் அவகாஹித் தநுபவிக்கவல்ல விவளை.

---

பொருகடல் - பொருகிறகடலென்று சப்தார்த்தம். இன்னாரோடு என்னாமையாலே எதிரிகளோடே பொருகிற வென்று முந்தினவர்த்தம்.இதுகீழும்அந்வயிக்கக்கடவதென்றது-(பொருகடலையரண்கடந்து புக்கு - தென்னிலங்கை முன்மலங்க) என்று அந்வயிக்கக்கடவதென்றபடி.

(மண்மேலித்யாதி) நித்யஸூரிகள்திரளினின்றும் பிறிகதிர்ப் பட்டுப்போந்தா ளென்னுமதொழிய வேறுபேசப் போமோ. பூமி யிலே யிருக்கச்செய்தே நித்யஸூரிகள் பரிமாற்றத்தையுடைய ளென்றல்லது பேசப்போமோ. (பெருந்தவத்தர்) என்று - பரமப தத்திலுள்ளாரைச் சொல்லக்கடவதிறே. நித்யஸூரிகள் பரிமாற் றத்திலே ஸாதநபுத்தி பண்ணிலன்றோ இவளுடைய ஆற்றாமை யில் நமக்குஸாதநபுத்திபண்ணலாவது, ஸாதநபுத்த்யாத்ர்ணச்சே தத்துக்குப்ராப்தியில்லை, காலக்ஷேபார்த்தமாக விழிந்தால் அழுது கெடுக்க வவஸரமில்லையென்கை. (மண்மேல் பெருந்தவத்தள்) நித்யஸூரிகள் தங்களிலே இவளை அந்யதமையாக வெண்ணப் போமோ; (விண்ணுளாரிலுஞ் சீரியர்) என்னு மித்தனை. (உ0)

அ.—(இருபத்தோராம்பாட்டு) (மைவண்ணம்) (మచ్చిత్తామద్గత ప్రాణాః బోధయన్తః పరస్పరమ్) (மச்சித்தாமத்கதப்ராணாঃ போதயந்தঃ பரஸ்பரம்) என்ற வித்தை ஸங்க்ரஹமாக மூன்றுபத்துக்கும் வாக் யார்த்தமாக வருளிச்செய்வர் பட்டர்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

కజ్జలాకారసౌగన్ధ్య వహాళకనికుమ్భనం।
విచ్ఛిన్నశిరోఃప్రాప్తం కలివిద్వేషకింకరః॥

கஜ்ஜளகாரஸௌகந்த்ய வஹாளகநிகும்பநம்।
விவர்ணோதிகுரோঃப்ராப்தம் கலிவித்வேஷிகிங்கரঃ॥

பட்டாருளிச்செய்தவ்யாக்யாநாவதாரிகை.

(மைவண்ணநறுங்குஞ்சியித்யாதி) நாயகனோடே கலந்து பிரி ந்து பிரிவாற்றாமல் நோவுபடுகிறாளொருநாயகி, உபாயத்தாலே உபவநத்திலே பூக்கொய்யவென்று புறப்பட, நாயகனும்வேட்டை க்கென்று வர, அங்கே உபாயம்பலித்து ஸம்ச்லேஷம் ப்ரவர்த்த மாய் நாயகனும் போனவளவிலே இத்தை கடிப்பித்துத்தலைக்காவ லாக நின்ற தோழிவந்துகிட்டி, "அவன்செய்தபடியென்" என்று" கேட்க; அவளுக்கு, ப்ரவர்த்தமானபடியை நாயகிசொல்லுகிறாள்- இப்பாட்டால்.

முதல்பத்து-ஆழ்வார் தாமானபாசுரம்; இரண்டாம்பத்து- திருத்தாயார்பாசுரம்; மூன்றாம்பத்து - பெண்பிள்ளைபாசுரம். முதல்பத்து - (మచ్చిత్తాః-மச்சித்தாঃ) என்கிறது; இரண்டாம்பத்து- (మద్గతప్రాణాః-மத்கதப்ராணாঃ)என்கிறது; மூன்றாம்பத்து-(బోధయన్తః

---

(பெருந்தவத்தள் மண்மேல் போந்தாள்) என்றந்வயித்து (நித்யஸூரிகள் திரளில் நின்றுமித்யாதி.) அன்றிக்கே, (மண் மேல் பெருந்தவத்தள்) என்று இருந்தபடியேயாய் தாத்பர்யத் வயம். முந்தினது (பூமியிலே யிருக்கச்செய்தேயித்யாதி;) இரண் டாவது - (நித்யஸூரிகள் தங்களிலே யித்யாதி.) ... (உ0)

[మచ్చిత్తాః-மச்சித்தாஃ] మదేకచిత్తాః - மதேகசித்தாஃ - விஷயாந்தரம்கலசாமே அவனை ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்குகை. (தாமரையாள்கேள்வனொருவனையேநோக்குமுணர்வு) என்று - ஒருமிதுநத்தை விஷயீகரித்திருக்கு மதுவேவேஷமென் றருளிச்செய்தார்களிறே - ஆழ்வார்கள். இத்தையொழிந்தவையெல்லாம் வ்யபிசாரமென்கை. தேவதாந்தரங்களைப்பற்றினஞாநமும் வ்யபிசாரம், ப்ரக்ர்தி ப்ராக்ர்தங்களைப் பற்றினஜ்ஞாநமும் வ்யபிசாரம், இவ்விஷயந்தன்னை பிரிய ப்ரதிபத்திபண்ணும் ஜ்ஞாநமும் வ்யபிசாரமென்கை.

---

పరస్పరమ్-போதயந்தஃபரஸ்பரம்) என்கிறது. முதல்பத்தாலே-திருமந்த்ரார்த்தம் சொல்லிற்று; இரண்டாம்பத்தாலே-த்வயார்த்தம்; மூன்றாம்பத்தாலே-சரமச்லோகார்த்தம். முதல்பத்தாலே - பக்தி; இரண்டாம்பத்தாலே-ப்ரபத்தி, மூன்றாம்பத்தாலே-புருஷகாரம். முதல்பத்தாலே - ப்ரணவார்த்தம்; இரண்டாம்பத்தாலே - நமச்சப்தார்த்தம்; மூன்றாம்பத்தாலே - நாராயணசப்தார்த்தம். முதல்பத்தாலே - அகாரார்த்தம்; இரண்டாம்பத்தாலே உகாரார்த்தம்; மூன்றாம்பத்தாலே - மகாரார்த்தம். முதல்பத்தாலே - (అదర్శనేదర్శనమాత్రకామాః)(அதர்சநேதர்சநமாத்ரகாமாஃ)என்னுமர்த்தம்;இரண்டாம்பத்தாலே - (దృష్టాఃపరిష్వఙ్గైకలోలాః) (த்ர்ஷ்டாஃபரிஷ்வங்கைகலோலாஃ)என்னுமர்த்தம்;மூன்றாம்பத்தாலே - (ఆలిఙ్గితాయాం పునరాయ తాక్ష్యామాశాస్మహేవిగ్రహయోరభేదమ్) (ஆலிங்கிதாயாம் புநராய தாக்ஷ்யா மாசாஸ்மஹே விக்ரஹ யோரபேதம்) என்னு மர்த்தம் சொல்லிற்று.

முதல்பத்து ஆழ்வார் பாசுரமானபடி யென்னென்னில்;-தளிர்புரையுந் திருவடியென் தலைமேலவே) என்னும் பாசுரமாகையாலே; இரண்டாம்பத்து திருத்தாயார்பாசுரமானபடி யென்னென்னில்;-(என்குடங்காலிருக்ககில்லாள்) என்றும்,(பெற்றேன்வாய்ச் சொல்லிறையும் பேசக்கேளாள்) என்றுஞ் சொல்லுகையாலே; மூன்றாம்பத்து பெண்பிள்ளை பாசுரமானபடி யென்னென்னில்;-(என்முன்னே நின்றார்) என்றும், (தோழீ! அவரை நாம் தேவரென்றஞ்சினோம்) என்றும், (எவ்வளவுண்டெம்பெருமான் கோயிலென்றேற்கு) என்றுஞ் சொல்லுகையாலே.

(మచ్చిత్తాః) (மச்சித்தாஃ) என்றபடி யென்னென்னில்;-(இமையவர்தம் திருவுருவேறெண்ணும்போது )என்றும், (அந்தணனையந்தணர் மாட்டந்திவைத்த மந்திரத்தைமந்திரத்தால் மறவாதென்றும் வாழ்தியேல் வாழலாம் மடநெஞ்சமே) என்றுஞ் சொல்லுகையாலே;

[मद्गतप्राणाः-மத்கதப்ராணா:] (ஆவியையரங்கமாலை) என்கிற படியே தத்கதப்ராணனையுடையரா யிருக்கை. ப்ராணன்தத்கதை யாயிருக்கையாவது - அவனோடுகூடினபோது ஸத்தையுண்டாய்ப் பிரிந்தபோது மோஹங்கதையா யிருக்கை. बोधयन्तःपरस्परम्-போதயந்த:பரஸ்பரம்] (புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந் தேனே)என்று - கேட்டுதரித்தல், (கோவிந்தன்குணம்பாடி- ஆவி காத்திருப்பேனே) என்று-சொல்லி தரித்தலாம்படியாயிருக்கை.

---

(मद्गतप्राणाः) (மத்கதப்ராணா:) என்றபடி யென்னென்னில்;- (நெஞ்சுருகிக்கண்பனிப்ப நிற்குஞ்சோரும்என்றும், (துணைமுலை மேல்துளிசோரச் சோர்கின்றாளே) என்றும் சொல்லுகையாலே. (बोधयन्तःपरस्परम्) (போதயந்த:பரஸ்பரம்)என்றபடியென்னென் னில்; - (அவ்வண்ணத்தவரநிலைமைகண்டுந்தோழீ)என்றும்,(வரை யுருவில்மாகளிற்றைத்தோழீ யென் றன் பொன்னிலங்கு முலைக்கு வட்டில் பூட்டிக்கொண்டு) என்றுஞ் சொல்லுகையாலே.

திருமந்த்ரார்த்தம் சொன்னபடி யென்னென்னில்;-(என்னுரு வில் நின்ற வெந்தை) என்று சொல்லுகையாலே – ப்ரணவார்த் தம் சொல்லிற்று. (தளிர்புரையுந்திருவடியென்தலைமேலவே) என் று சொல்லுகையாலே - நமச்சப்தார்த்தம் சொல்லிற்று. *(மின்னு ருவாய் முன்னுருவில்தொடங்கி, அனலுருவறுதியாக - நாராயண சப்தார்த்தம் சொல்லிற்று.

த்வயார்த்தம் சொன்னபடி யென்னென்னில்; (வில்லிறுத்து மெல்லியள்தோள் தோய்ந்தாய்) என்றும், (திருமாலைப்பாடக் கேட்டு) என்றும்-ஸ்ரீமத்பதார்த்தம் சொல்லுகையாலும், (கன்று மேய்த்தினிதுகந்த காளாய்)என்று துடங்கி, (துன்றுகுழல் கரு நிறத்தென் துணையே) என்கிறவளவாக - நாராயண சப்தார்த்தம் சொல்லுகையாலும், (அடியிணையும் கமலவண்ணம்) என்று-சரண சப்தார்த்தம் சொல்லுகையாலும், (இது செய்தார்) என்றும், (பேர்பாடி) என்றும் - ப்ரணசப்த்தார்த்தம் சொல்லுகையாலும், (நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன்) என்றும், (நீராடப்போனா ள்) என்றும் - ப்ரபத்யே யென்கிற வர்த்தம் சொல்லுகையாலும், (பாவைமாயன் மொய்யகலத்துள்ளிருப்பாள்) என்றும், (பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு) என்றும் – உத்தரகண்டத்தில் ஸ்ரீமச்ச ப்தார்த்தம் சொல்லுகையாலும், (பாரையுண்டு) இத்யாதியாலே- உத்தரகண்டத்தில் நாராயண சப்தார்தஞ் சொல்லுகையாலும், (பேர்பாடித்தண்குடந்தை நகரும்பாடி) என்று - நமச்சப்த்தார்த் தம் சொல்லுகையாலும்.

தன்னுடைய வ்ருத்தகதநம்பண்ணி தரித்தும், தோழிமார் வார்த்தைகேட்டு தரித்துமிறே யிப்பத்துச் செல்லுகிறது. முதல் பத்து-பராசரபாராசர்யாதிகளான ரிஷிகளுடைய ரீதியாயிருக்கும்; ஜ்ஞாநப்ரதாநராயிறே அவர்களிருப்பது: நடுவிற்பத்து - ஆழ்வார்களுடைய ரீதியாயிருக்கும்; தத்ஸம்ச்லேஷ விச்லேஷைக ஸுகதுக்கராயிறே இவர்களிருப்பது: மூன்றாம்பத்து-பிராட்டிமார்களுடைய ரீதியாயிருக்கும்; வ்ருத்தகீர்த்தநரூபமாயிறே யிருப்பது.

---

சரமச்லோகார்த்தம் சொன்னபடியென்னென்னில்; (கைவளையும் மேகலையுங்காணேன்) என்றும், (இருகையில் சங்கிவைநில்லா) என்றும், * సర్వధర్మాన్పరిత్యజ్య - ஸர்வதர்மாந்பரித்யஜ்ய வினர்த்தம் சொல்லுகையாலும், (கருமுகிலேயொப்பர்வண்ணம்) என்றும், (ஒருகையில்சங் கொருகைமற்றாழியேந்தி - இங்கேவந்து) என்று-கையும்சங்குமாய்க்கொண்டு ஸந்நிஹிதமாகையாலே (మామేకం-மாமேகம்) என்கிற பதத்தினர்த்தம் சொல்லுகையாலும், (என்றன் பொன்னிலங்குமுலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு)என்றும், (அன்றாயர்குலமகளுக்கரையன்றன்னை-அடிநாயேன் நினைந்திட்டேன்) என்றும்-(శరణం, వ్రజ-சரணம், வ்ரஜ)என்கிற பதங்களில்உக்தமான வர்த்தத்தை அநுஷ்டாந பர்யந்தமாகச் சொல்லுகையாலும், (மின்னு மாமழை தவழும்மேகவண்ணா விண்ணவர்தம் பெருமானே) என்றும் - అహం - அஹம் சப்தார்த்தம் சொல்லுகையாலும், (அருளாய்) என்றவிடத்திலே என்னையருளா யென்னவேண்டுகையாலே, త్వా - த்வா - என்கிறபதத்தி னர்த்தம் சொல்லுகையாலும், (தொல்லைப்பழவினையைமுதலரியவல்லார்தாமே) என்று-(సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి) (ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்கிறபதங்களி னர்த்தஞ்சொல்லுகையாலும், (அருளாய்) என்கிறத்தாலே - మాశుచః - மாசுசஃ; வினர்த்தம் சொல்லுகையாலும்.

பக்திசொன்னபடி; - (இந்திரர்க்கும் பிரமர்க்கும் முதல்வன்) என்று - (కారణన్తుధ్యేయః) (காரணந்துத்யேயஃ) என்றும், (తజ్జలానితిశాన్తఉపాసీత) (தஜ்ஜலாநிதிசாந்தஉபாஸீத) என்றும் - காரணவஸ்து உபாஸ்யமென்னு மிடம் சொல்லுகையாலும், (மந்திரத்தால் மறவாதென்றும் வாழ்தியேல்) என்று - ధ్రువానుస్మృతి- த்ருவாநுஸ்ம்ருதி சொல்லுகையாலும்.

ப்ரபத்தி சொன்னபடி; - (அணியரங்கமாடுதுமோதோழீ) என்று-நாயகஸம்ச்லேஷத்துக்கு உபாயம் சிந்தித்தாலோவென்று தோழியைக்கேட்கையாலும், (பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்) என்று-சிந்திதோபாயத்தை யநுஷ்டிக்கையாலும். புருஷகாரம் சொன்னபடி; - (பெருந்தவத்தர் அருந்தவத்து முனிவர்சூழ உலகுண்டபெருவாயரிங்கேவந்து-புலவிதந்து) என்று-ததீயர்புருஷகாரமாக ஸம்ச்லேஷித்தபடி சொல்லுகையாலே.

வந்தவரவைக்கேட்டாப்போலே ஸாக்ஷாத்கரித்தாப்போலே யிருந்ததீ! நீபேசினபடியென்று தோழிசொல்ல; இதென்னன்பது, (அவ்வண்ணத்தவர்) என்னுமித்தனை யென்கிறாள். பசக்கிமோந்ததித்தனையொழிய வந்தப்ரகாரத்தையும் அவரையும் நம்மால் பேசப்போமோ. நீகேட்கையாலே உனக்கொருத்ர்ஷ்டாந்தத்தையிட்டுச் சொன்னே னித்தனை யொழிய ஒருத்ர்ஷ்டாந்தமிட்டுச்சொல்லலாம்படியன்றுகாண் அவர்வடிவிருந்தபடி. அப்ரகாரத்தையுடையரென்னுமித்தனைகாண். (நிலைமைகண்டும்)(నత్యజేయమ్) (நத்யஜேயம்) என்கிறபடியே என்னைப்பெற்றுதரித்தல், பெறுவிடில் முடிதல்செய்யும்படியான ஸ்வபாவத்தைக்கண்டுவைத்தும்.

---

கண்ணும், வாயும், கைத்தலமும் அடியிணையும் கமலவண்ணம் என்று-கீழேசொன்னாப்போலே இங்குஞ்சொல்ல வமைந்திருக்க, போக்யதாதிசயத்தாலே அவயவங்கள்தோறும் தாமரையை த்ர்ஷ்டாந்தமாகச் சொல்லுகிறார். அடியுந் தாமரை என்றதே, (அடியுமஃதே) என்கிற உபேக்ஷாவசநத்தாலே கீழ்ச்சொன்னவையும் விஸத்ர்சத்ர்ஷ்டாந்த மென்னு மிடத்துக்கு ஸூசகம். அவர்வந்தவரவை நீசொன்னவழகிருந்தபடி கேட்டதாயிராதே ஸாக்ஷாத்கரித்தாப்போலேயிருந்ததீ! என்று தோழிசொல்ல; தோழீ! இதெல்லாம் என்னன்புது (அவ்வண்ணத்தவர்) என்னு மித்தனை யென்கிறாள். பசிக்குமோந்தோ மித்தனையொழிய வந்த ப்ரகாரத்தையும் அவரையும் நம்மால் பேசப்போமோ. நீகேட்கையாலே உனக்கொரு த்ர்ஷ்டாந்தத்தையிட்டுச் சொன்னே னித்தனை யொழிய ஒருத்ர்ஷ்டாந்தத்தை யிட்டுச் சொல்லும்படியன்றுகாண் வடிவிருந்தபடி.

(அவ்வண்ணத்தவர்) அந்தப்ரகாரத்தையுடையவரென்னுமித்தனைபோக்கி வேறுபாசுரமிட வொண்ணாதுகாண். வேதங்களும், (వేదాహమేతమ్) என்று உள்ளபடி யறியக்கடவோ மென்றிழிந்து, (పరాత్పరంయన్మహతోమహాన్తమ్, என்றும், (కశ్చిత్తావేద) என்றும், (నేతినేతి) என்றும், (యస్యామతంతస్యమతమ్) என்றும், (యతోవాచోనివర్తన్తే అప్రాప్యమనసాసహ) என்றும், (యతోవేదామనసాసహైనమనుప్రవిశ్యన్తిమోః మానమ్) என்றும், (அறிந்தனவேதவரும்பொருள் நூல்க ளறிந்தனகொள்கவரும் பொருளாதல்) என்றும் இப்படிசொல்லிவிட்ட வித்தனையிறே. (அவ்வண்ணத் தவர்நிலைமை) என்று, இவ்விடத்தில் (அவ்வண்ணம்) என்கிறவிசேஷணம் அவருக்கு விசேஷணமாகவுமாம், அவர்நிலைமைக்கு விசேஷணமாகவுமாம்.

(அவ்வண்ணத்தவர்) என்றபோது வேதங்களிலே ப்ரதிபாதிக்கிற ப்ரகாரமான ஸ்வரூபரூபகுண விபூதிகளை யுடையவரென்று பகவத்பரமாகவுமாம்; அன்றியிலே, அவருடைய அவ்வண்ணத்துக்கு நிலைமையென்று நிலைமைக்கு விசேஷணமாகவுமாம். ஒன்று வ்யவஹிதாந்வயப்ரமாணிகம்; மற்றையது ஸ்வதஃப்ராப்தம். நிலைமையாவது - மர்யாதைகள். அதாவது - வ்யவஸிதஸ்வபாவங்கள்.

(அவர்நிலைமை) அவர்வடிவழகிருந்தபடியது, சீலமிருந்தபடியது, வ்யவஸாயமிருந்தபடியது, இத்தனையுங்கண்டுவைத்தும். (கண்டும்) முன்பு உன்வாயிலேகேட்டுப்போந்தேனித்தனையிறே, கேட்டாப்போலேகண்டுவைத்தும்.

---

(அவவண்ணத்தவர்நிலைமை) என்று அந்தப்ரகாரத்தை யுடையவருடைய வ்யவஹிதங்கள். (அவ்வண்ணத்து) என்றும், (அவர்) என்றும் பிரிக்கவுமாம்; (அவ்வண்ணத்தவர்) என்று முழுச்சொல்லாகவுமாம். (அவ்வண்ணம்) என்று - ஸௌலப்யஸ்வபாவம். அதாவது (ఆలోలకున్తళ ... ) என்று - ஸௌலப்யாதிகளைகாலதத்வமுள்ளவளவும் அநுபவிக்கலாயிருக்கை. (ప్రసాదపరమౌ నాథౌ) என்று வஸ்துஸ்வபாவத்தாலே கழற்றவொண்ணாமே கிடந்தவித்தனை. (நிலைமை) என்று - அதின்வருப்பு. ஸௌசீல்யவாத்ஸல்ய காருண்ய ஸௌந்தர்யாதிகள். அவையாவன - வந்து, இங்கேவந்து, என்முன்னேவந்து நின்றுரென்கிறவை. (கண்டும்) குணம்கண்ணுக்கு விஷயமன்றிக்கே யிருக்கச்செய்தே (கண்டும்) என்கிறபடியென்னென்னில்; கண்ணென்று உட்கண்ணாய் ஜ்ஞாநஸாக்ஷாத்காரத்தைச் சொல்லுகிறது. அவன் பண்ணின தாழ்ச்சிகளை அநுபவித்திருக்கச்செய்தேயு மென்றபடி.

அன்றிக்கே, (அவ்வண்ணத்தவர்நிலைமை) என்று (రామస్సీత ... యాసార్ధం విజహార) என்று பிராட்டியுங் கூடப்ரதானையாய்ப்பிறகிடும்படி போகஸ்ரோதஸ்ஸுக்கு முன்னோட்டுக்கொடுத்த அவ்வவவைவித்யங்களைஸ்மரிக்கிறது. (அவ்வண்ணத்தவர்நிலைமை) ஒருஸ்ரோதஸ்ஸுக்குநிலவராய் மற்றைஸ்ரோதஸ்ஸுக்குநிலவரன்றியிலே யிருக்கை. அன்றிக்கே, ஸ்ரோதஸ்ஸுதோறும் இதுவேநிலையென்னும்படி ஸார்வத்ரிகமானதேசிகத்வம் சொல்லுகிறது. (விதியினால் பெடைமணக்கும், என்னுமாப்போலே.

அன்றியிலே, (அவ்வண்ணத்தவர்நிலைமை) என்று - (వైయాత్యం ... ) (வையாத்யம்ஸாரதேஷ்விவ) என்கிறபடியே பஹுமுகமானஸ்ரோதஸ்ஸுக்கு நிலவரா யிருக்கச்செய்தேயும், (శిరసా ... ) என்று - என்னுடைய மார்த்தவத்தைக்கண்டு குசைதாங்கிநின்றநிலைமைகாண். அன்றியிலே, (நிலைமைகண்டும்) என்று, (నత్యజేయమ్) என்கிறபடியே என்னைப்பெற்று தரித்தல் பெறாவிடில் முடிதல் செய்யும்படியான ஸ்வபாவத்தைக்கண்டு வைத்தும். (அவர்நிலைமை) அவர் வடிவழகிருந்தபடியது. சீலமிருந்தபடியது, வ்யவஸாயமிருந்தபடியது, இத்தனையுங்கண்டு வைத்தும்.

---

தாத்பர்யம் (அவர்வடிவழகிருந்தபடியித்யாதி.)

(கண்டும்) நெடுநாள் ஸாதநாநுஷ்டாநம்பண்ணிக் காண வேண்டும்விஷயம் அநாயாஸேநக் கண்ணுக்கு விஷயமாயிருக்கச் செய்தேகிடாய் நழுவவிட்டது.

(தோழீ) அவர்வடிவழகிருந்தபடியும், வந்தவரவிருந்தபடியும், நின்றநிலையிருந்தபடியும் நீகாணப்பெற்றதில்லைகாணென்கிறாள். (அவரை) நம்மையொழியச் செல்லாதபடி நின்றவரை. (நாம்) அவரையொழிந்தபோது * அஸந்நேவவென்னும்படியிருக்கிற நாமென்னுதல்; அவரையொழியச்செல்லாமையையுடையநாமென்னுதல். "ஏகாதிரிக்தம்அநேகம்" என்றுசொல்லுகையாலே தோழியையுங்கூட்டி (நாம்) என்கிறாள்.

---

(கண்டும்) முன்பு உன்பக்கலிலே கேட்டுப் போந்தேனித்தனையிறே, கேட்டாப்போலே கண்டுவைத்தும். (கண்டும்) நெடுநாள் ஸாதநாநுஷ்டாநம்பண்ணிக் காணவேண்டும்விஷயம்அநாயாஸமாகக் கண்ணுக்கு விஷயமாயிருக்கச்செய்தே கிடாய் நழுவவிட்டது. காணுதபோது வெருவப்ராப்தமாயிருக்கக் கண்டுவைத்துங் கலங்கினேன். (கண்டுந்தெளியகில்லீர்) என்னக்கடவதிறே. அதுக்கடியென்னென்னில் (அவரை) அதாவது - (సంబాహులభ్యోనమతిసంపత్ తైర్ద్వావాప్యశివిజనయః దేవకః) என்றும், (பத்துடையடியவர்க்கெளியவன்பிறர்களுக் கரியவித்தகன்) என்றும் - ஸௌலப்யஸ்வபாவமான வோபாதி பரத்வமும் ஸ்வபாவமாய் நின்று நிலைத்ததாகையாலே.

(தோழீ) அஞ்சினன் புகலிடமாக உன்னையாகிலும் பெற்றோமிறே. (தோழீ) பால்யத்திலே பாம்ஸுக்ரீடைக்குத் துணையானாய், நாயகன்பக்கலிலே அபிலாஷைசென்றவளவிலே நெஞ்சில்கிடைப்பாடுஞ் சொல்லுகைக்கும் அவனைக்கிட்டுவிக்கைக்கும் துணையானாய், விச்லிஷ்டதசையிலே வர்த்தகீர்த்தநம்பண்ணி அநுமோதிக்கைக்குந் துணையானாய், ஸர்வவிதஸாஹாய்யமும் நீயேயன்றோ. (தோழீ) *இவர் வாயில் நல்வேதமோதும் வேதியர் வானவராகையாலே, (அவர்) என்று-போக்யதையைச் சொல்லுவது; (என்னையும் நோக்கி என்னல்குலும் நோக்கி ஏந்திளங்கொங்கையும் நோக்குகின்றார்)என்று-நாயகாநுராகம்சொல்லுவது; (அன்னையென்நோக்குமென் றஞ்சுகிறேன்) என்று-பயஸ்தாநஞ்சொல்லுவது; (அச்சோ வொருவரழகியவா) என்றும் பின்னையும் விடவொண்ணாதபடியான ஆகர்ஷகம் சொல்லுகைக்கு உன்னையொழிய வேறுண்டோ.(தோழீ)அவர்வடிவழகிருந்தபடியும் வந்தவரவிருந்தபடியும், நின்ற நிலை யிருந்தபடியும், நீகாணப்பெற்றதில்லைகாணென்கிறாள்.

---

மேல் கூட்டிதாத்பர்யம் (நெடுநாளித்யாதி.)

(தேவரென்று) * అతస్మిన్ - அதஸ்மிந்ஸ்தத்புத்திபண்ணி, நாம் பரதேவதையென்று ப்ரமித்தோமித்தனையொழிய, (ఆత్మానం మానుషం మన్యే) (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்றுகாண் அவர் நினைத்திருந்தது. நாம்ஸஜாதீயவிஷயத்தே விஜாதீயபுத்திபண்ணினோம் இத்தனை காண். (ఆత్మానం మానుషం మన్యే) (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்னும் அவர் நினைவைவிட்டு, (భవాన్నారాయణో దేవః) (பவாந்நாராயணோ தேவஃ) என்று வழிப்போக்கர்வார்த்தையைப் பற்றினோமித்தனை காண்.

---

(அவரைநாம்) நம்மையொழியச் செல்லாதபடி நின்றவரை, அவரையொழிந்தபோது, (అసన్నేవ) என்னும்படி யிருக்கிற நாம். அன்றிக்கே, அவரை யொழியச்செல்லாமையால் வந்த வாற்றாமையையுடைய நாமென்னுதல்; ஏகாதிரிக்தமநேகமாகையாலே தோழியையுங்கூட்டி (நாம்) என்கிறாள். (அவரைநாம்) (செல்வர் பெரியர்) என்றும், (அவனெவ்விடத்தான்) என்றும் எட்டாதபடியாயிருக்கிறவரை, (சிறுமானிடவர்) என்று எண்ணுகைக்குங் கூடப் பாற்றம் போராதபடியான நாம்.

இப்படி பர்வதபரமாணுக்களானவிடத்தில் நாம்செய்த தென்னென்ன (தேவரென்றஞ்சினோமே) நங்காலிலேவிழுவா ரொருவரல்லர், நாம் அவர்காலிலே விழத்தக்காரொருத்தரென்று கூசினோம். (அவரை நாம்தேவரென்றஞ்சினோம்) ஸ்ரீவராஹ நரஸிம்ஹங்களை திர்யகவதாரங்களாக நினைத்திலோம், மாநுஷரானராமக்ர்ஷ்ணர்களென்றுநினைத்திலோம், (అశ్వత్థస్సర్వవృక్షాణామ్) என்றும், (మేరుశ్శిఖరిణామ్) என்றும் ஸ்தாவராவதாரமான அச்வத்தமேருக்களாக நினைத்திலோம், (மனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்குந்தேவா) என்றும், (அயர்வறுமமரர்களதிபதி) என்றும் ஸூரிகளுக்கு மெட்டாத பரதேவதையென்று நினைத்தோம். ச்ரிங்கார கர்மஸமாராத்யரானவரை கர்மஸமாராத்யராக நினைத்தோம்.

அதவா,(அவரைநாம்தேவரென்றஞ்சினோம்)(క్రీడాహేతోరిదం సర్వం కృతమిత్యవధార్యతామ్) என்றும், (దివ్ క్రీడాజిగీషావ్యవహారద్యుతిస్తుతి మోదమదస్వప్నకాన్తిగతిషు క్రీడతో బాలకస్యేవ చేష్టాం తస్య నిశామయ) என்றும், (అఖిలభువనజన్మస్థేమభఙ్గాదిలీలే) என்றும் (మోదతే భగవాన్ భూతైః బాలః క్రీడనకైరివ) என்றும், (இன்புறு மிவ்விளையாட்டுடையான்) என்றும், (வீட்டைப் பண்ணிவிளையாடும்) என்றும் - விபூதியைக்கொண்டு லீலைபண்ணுவாரொருவரென்று.

(தேவனொன்று) விஜிகீஷையாய், (జితం తే పుణ్డరీకాక్ష) என்றும், (జితం భగవతా జగత్) என்றும், (సత్యేన లోకాన్ జయతి) என்றும், (నాజిత్య నివర్తతే) என்றும், (தோற்றோம் மடநெஞ்சம்) என்றும்-ஸ்வேதர வஸ்துக்களை நின்றநின்ற நிலைகளிலே தோற்பித்து வெற்றிகொள்வானொருவனென்றும். (தேவர்) என்று வ்யவஹாரமாய், (యో వై వేదాంశ్చ ప్రహిణోతి) (పఞ్చరాత్రస్య కృత్స్నస్య వక్తా నారాయణస్స్వయమ్) (பீதகவாடைப் பிரானார்பிரமகுருவாகி) என்றும், (திருவரங்கர்தாம் பணித்தமெய்ம்மைப்பெருவார்த்தை) என்றும், (மறையுரைத்த திருமால்) என்றும், (அன்னமாயன்றங்கருமறைபயந்தான்) என்றும்-ப்ரபுத்வம் கொண்டாடி வாய்திறவாதிருக்கையன்றிக்கே - ஸகலஜகத்திதமாக வேதவைதிக ப்ரவசநம்பண்ணுவானொருத்தர்.

அன்றிக்கே, வ்யவஹாரமென்று - வழக்காய், (ఈశ్వరోऽహమహం భోగీ) என்றும், (ఆఢ్యోऽభిజనవానస్మి కోऽన్యోస్తి సదృశో మయా) என்றும்-ஸம்ஸாரியானவன் நான் கடவேனென்ன; (పతిం విశ్వస్య) என்றும், (స ఈశోऽస్య జగతో నిత్యమేవ) என்றும், (ఈశతే భగవానేకః) (శాస్తా విష్ణురశేషస్య జగతః ప్రశాసితారం సర్వేషామ్) என்றும், (అహం కృత్స్నస్య జగతః ప్రభవః ప్రళయస్తథా) என்றும், (తేన చేదవివాదస్తే మా గఙ్గాం మా కురూన్ గమః) என்றும்-ப்ரமாணமான சுருதிஸ்ம்ருதிகளைக் கையிலேகொண்டு ஸம்ஸாரிகளோடே வழக்குச்சொல்லி தம்மதாக்குவனென்றும். (தேவனொன்று) (ద్యుతిరాయ తమేవ భాన్తమనుభాతి సర్వం) (తస్య భాసా సర్వమిదం విభాతి) (అథ యదతః పరో దివో జ్యోతిర్దీప్యతే) என்றும், (నారాయణపరోజ్యోతిః) (நிறைந்த சோதிவெள்ளஞ் சூழ்ந்த) (சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு) என்றுஞ் சொல்லுகிறபடியே - நிரவதிகதேஜோரூபராயிருப்பானென்றும்.

(தேவர்) என்று ஸ்துதியாய், (తతో దేవా ఊర్ధ్వబాహవః స్తువన్తి) என்றும், (తస్య ఋక్ సామ చ గేష్ణౌ) என்றும், (స్తవ్యస్స్తవప్రియః) என்றும், (సమభిష్టూయ సన్నతాః) என்றும், (సద్భిస్సురాణాం దివి భూతలస్థైః తథా మనుష్యైర్గగనే చ ఖేచరైః స్తుతః) (ஏத்தவேழுலகம்) (ஏத்தவேத்தவெங்கெய்தும்) என்று திவ்யரோடு பௌமரோடுவாசியற ஸர்வைஸ்துத்யனாயிருக்குமென்றும். (தேவர்) என்று - காந்திகதிகளுக்குப் பேராய், (బ్రహ్మవిదాప్నోతి పరమ్) என்றும், (మాం వ్రజ) (మామేవైష్యసి) என்றும், (గతిర్గమ్యశ్చాసౌ హరిః) என்றும், (நாராயணனே நமக்கேபறைதருவான்) என்றும், (இறைவாநீதாராய்பறை) என்றும், (உனக்கே நாமாட்செய்வோம்) என்றுஞ் சொல்லுகிறபடியே உபாயோபேயங்களிரண்டும் அவனேயென்றும், దివ్ధాతுவுக்கு ப்ரதிபாத்யமான வர்த்தங்களேழும் பதார்த்தாந்தரங்களில் ப்ரத்யேகமேகதேசம் வர்த்திக்குமித்தனை; அப்படியே யன்றிக்கே உக்தப்ரகாரத்திலே இங்கேயெல்லாம் பூர்ணமாகவர்த்திக்கையாலே, (న తత్సమశ్చాభ్యధికశ్చ) என்றும், (న తత్సమోऽస్త్యభ్యధికః కుతోऽన్యో లోకత్రయేऽపి) என்றும் - வேதவைதிகர் சொல்லுகிற மேன்மையை புத்திபண்ணிறோ மித்தனைகாண்.

(அஞ்சினோமே)இருய்த்தோமே. அபயஸ்த்தாநத்திலேகாண் பயபுத்திபண்ணிற்று.
"(நாமஞ்சினோம்) என்று ஸ்ரீஜநகராஜன் திருமகள் வார்த்தை யாயிருந்தபடிகண்டாயே!" என்று நஞ்ஜீயரருளிச்செய்வர். இழவி லும்வாஸனைவிடாதிறே.

---

அன்றியே (தேவரென்று) அதஸ்மிந்ஸ்தத்புத்திபண்ணி னோம். பரதேவதையென்று ப்ரமித்தோமித்தனையொழிய (ఆత్మానం మానుషం మన్యే) என்றும்,(తత్రత్వం మానుషో భూత్వా) என்றும், மண்ணிலேமயங்கி மனிசராயிருக்கிறவரை நாம்தேவரென்றுபழியிட்டோம், ஆலோகாலாபாலிங்கநவிநயாதிகளைப் பண்ணித்தம்மைத்தாழவிட் டுநின்று ஸஜாதீயவிஷயத்தை விஜயாதீயபுத்தி பண்ணினோமித்த னைகாண். (ఆత్మానం మానుషం మన్యే)என்னும் அவர்நினைவைவிட்டு,(భవాన్నారాయణో దేవః) என்கிறவழிப்போக்கர்வார்த்தையைப் பற்றினோ மித்தனைகாண். (అహం వో బాన్ధవో జాతః) என்னுமவனை (దేవో వా దానవో వా త్వమ్) என்றுப்ரமித்தாப்போலேயென்கிறாள்.

இப்படி அவர்கள்வார்த்தையைப் பற்றிச்செய்ததென்னென் னில் (அஞ்சினோம்) (అథ సోऽభయం గతో భవతి) என்னும்பயம். (భయానామపహారిణీ) என்றும், அபயஸ்த்தாநத்திலே பயபுத்தி பண்ணிற்று. "(நாமஞ்சினோம்) என்று-ஸ்ரீஜநகராஜன் திருமகள் வார்த்தையா யிருந்தபடி கண்டாயே"! என்று ஜீயரருளிச் செய்வர். இழவில்வந் தாலும் வாஸனை விடாதிறே. (நாமஞ்சினோம்) (భీషాఽస్మాద్వాతః పవతే, భీషోదేతి సూర్యః, భీషాఽస్మాదగ్నిశ్చేన్ద్రశ్చ)என்றுதுர்மாநிகள் அஞ்சுமிடத்தி லேயோபக்நாபிமாநிகளானநாமஞ்சுவது.(நாமஞ்சினோம்)(బాహూ రామస్య సంశ్రితా నాహరయతి సంత్రాసమ్) என்று கணயத்துக்குள்ளேயிருக் கிறநாமோ அஞ்சுவோம். (நாமஞ்சினோம்) என்று (బాహుచ్ఛాయామవష్టబ్ధో యస్య లోకో మహాత్మనః) என்று உபய விபூதிக்கும் அஞ்சினான் புகலிடமானதோள் எனக்கொருத்திக்கும் பயஸ்த்தாநமாவதே!. (அவரை நாம் தேவரென்றஞ்சினோம்) (దదామి బుద్ధియోగం తమ్) என்று உணர்த்தியைத் தந்தவரை, (త్వత్త ఏవ మయా శ్రుతః) என்றும், (அறி யாதனவறிவித்த) என்றும் - அவன்பக்கலிலே அறிவுபெற்ற நாம் பரத்வஜ்ஞாநம் பிறந்து ஸ்வரூபாநுகுணமாக வொதுங்கினோம். (நாமஞ்சினோம்)தோழீ! உன்ஸந்நிதியில்லாமையிறேநானிழந்தது, அவன்படியையும் என்படியையும் அறிந்தநீ கூடநின்றாயாகில் என் ப்ராந்தியைப்போக்கலாய்த்தேயென்கிறாள்.

---

(நாம்) என்றத்தை ஆத்மநிபஹு⁻வசநமாக்கி தாத்பர்ய மரு ளிச்செய்கிறார் (நாமஞ்சினோமித்யாதி.) விச்லேஷ வேளையிலே நாம் என்று - அஹங்காரம்தோற்றச்சொல்லக் கூடுமோவென்ன; அருளிச்செய்கிறார் (இழவிலுமித்யாதி.) ... ... (உக)

(தோழீ!) உன்ஸந்நிதியில்லாமையிறே நானிழந்தது, அவன் படியையும் என்படியையுமறியும்நீ கூடநின்ருயாகில் என்ப்ராந்தியைப் போக்கலாய்த்தென்கிருள். ... ... (உக)

இருபத்திரண்டாம்பாட்டு.—(நைவளம்) கீழ்ப்பாட்டில்(அவரை நாந்தேவரென்றஞ்சினேம்) என்று - அதஸ்மிந்ஸ்தத்புத்திபண்ணினேங் கண்டாயேதோழீயென்ருள், நீஅகன்ருயாகில் அவன்உன்னேடு ஸம்ச்லேஷித்தபடியென்னென்ன; அவன் வசீகரித்தபடியும் ஸம்ச்லேஷித்தபடியுமிதுதானென்கிருள். தன்னுடைய ஸௌந்தர்யத்தையும் சீலத்தையுங் காட்டினவிடத்திலும் கார்யகரமல்லாமையாலே போமித்தனை யோவென்று நினைத்தான், ஸ்ரீபாதம் பேர்ந்ததில்லை, நித்யஸாபேக்ஷமான விஷயத்தைக்குறித்து நித்யநிரபேக்ஷனனவன், கால்வாங்கமாட்டாதே நிற்கையாவதென்னென்னில்; சேஷியாகையாலே சேஷவஸ்துவகன்ருல் இழவுதன்னதாய், அத்தால் பெறும் பேறும் தன்னதாயிருக்கையாலும், இவளையொழியச்செல்லாத காமுகத்வத்தாலும், நம்மழகு இங்கு ஜீவிக்கையாய்த்தில்லையென்று மீளுவோமாகில் புறம்பு நமக்கு ஸர்வஸ்வம்மாயிருந்துள்ள வழகையாதரிப்பாரில்லையென்கிற வபிமானத்தாலும் கால்வாங்கமாட்டிற்றிலன். உத்தமராஜகந்யைபக்கலிலே உத்தமராஜபுத்ரன் சென்று அழகு ஜீவிக்கையாகாதே மீண்டானென்ருல் புறம்பு ஜீவிக்கையாகாதிறே. ருசிபேதுடங்கி பிறரைவசீகரிக்கும் பரிகரமாகத்தான் நினைத்திருப்பது அழகையிறே, அது நிஷ்ப்ரயோஜநமானுல் அபிமாநம் கால் கட்டுமிறே, சக்திகொண்டுகார்யங்கொள்ளிலும் விஷயமில்லாமையாலே மேல்விழுந்தணைக்க மாட்டிற்றிலன், எதிர்த்தலையில் இசைவின்றிக்கே மேல்விழுந்தால் ரஸமில்லையிறே. அழகும் சீலமும் கார்யகரமாய்த்தில்லை, சக்திகொண்டு கார்யங்கொள்ளும் நிலமன்றியிலேயிருந்தது, இனி இவளை வசீகரிக்கும்படி யென்னென்றுபார்த்தார், முன்பு திருவாய்ப்பாடியில்பெண்கள் தன்குழலோசையிலே வசீக்ர்தரான படியைக்கண்டபடியாலே நம்முடையமிடற்ருேசையாலே வசீகரிப்போமென்றுபார்த்து ஒருபண்ணை நுனுங்கினுன்;

---

(தோழீநாம்) என்று தோழி கடக்கவிருக்கத் தானும் நாயகனும் கலந்துவந்த நாயகி தோழிக்கு வ்ர்த்தகீர்த்தநம் பண்ணுவதாயிருக்க, (நாம்தேவரென்றஞ்சினேம்) என்று தோழியைக் கூட்டிச் சொல்லுவானென்னென்னில்; (தோழீ) என்றுநீங்கலாக ஸம்போதிக்கையாலே கூடிற்றல்ல. (நாமஞ்சினேம்) என்கிற பஹுவசநம்உபலம்பத்திலே ஆத்மநிபஹுவசநமாய்,நாம் இப்படி அபாயப்பட்டோங் கண்டாயே என்று லௌகிகமர்யாதையாலே முறைப்படுகிருளாகையாலே ஒருகுறைகளுமில்லை. ... ... (உக)

இவனுடைய * ஏவம்பஹுவிதாசிந்தா * ஏவம்பஹுவிதாசிந்தாமிருக்கிறபடி. ம்ர்கயார்த்தமாகவந்தோமாகையாலே பாடுகிறவனொன்றுகேட்பாரில்லை, இவளை வசீகரிக்கும்பரிகரமிதுவென்று ஒருபண்ணை நுணுங்குகிறான், அதிலே யீடுபட்டு மேல்விழுந்து கலந்தேன், இதுகாண்செய்தபடியென்கிறாள். ம்ர்கையைக்குறித்துவந்தவர்கள்ச்ரமந்தீர ஒருமரத்தின்நிழலிலே ஒதுங்குகையும்முகத்திலே நீரையேறிட்டுக் கொள்ளுகையும், கர்ப்பூரநிகரத்தை வாயிலே யிடுகையும் ஒருபண்ணை நுணுங்குகையும் ப்ராப்தமிறே.

மூ.—நைவளமொன்றாராயாநம்மைநோக்கா
நாணினார்போலிறையேநயங்கள்பின்னும்
செய்வளவிலென்மனமுங்கண்ணுமோடி
யெம்பெருமான்திருவடிக்கீழணையஇப்பால்
கைவளையும்மேகலையுங்காணேன்; கண்டேன்
கனமகரக்குழையிரண்டும்நான்குதோளும்;
எவ்வளவுண்டெம்பெருமான்கோயிலென்றேற்கு
இதுவன்றேயெழிலாலியென்றார்தாமே. (உஉ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒன்று | அத்விதீயமாக, | இப்பால் | பின்நடந்ததாவது; |
| நைவளம் ஆராயா | நைவிக்கும் பண்ணை நுணுங்கி, | கைவளையும் | கையில்தரித்த வளையும், |
| நம்மைநோக்கா | நம்மைப்பார்த்து, | மேகலையும் | அரைநூல்மாலையும், |
| இறைநாணினார்போல் | கொஞ்சம் லஜ்ஜைப்பட்டவர்போலே, | காணேன் | போனவிட மறிந்திலேன்; |
| பின்னும்நயங்கள்செய்வளவில் | பின்னும் நீசபாஷணங்களைப் பண்ணிலே யிட்டு நுணுங்கு மளவில், | கநம் | ஸ்த்திரமான, |
| என்மனமும் | என்மநஸ்ஸும், | மகரக்குழையிரண்டும் | இரண்டுமகரகுண்டலங்களையும், |
| என்கண்ணும் | என்னுடைய கண்ணும், | நான்குதோளும்கண்டேன் | நான்கு திருத்தோள்களையும் கண்டேன்; |
| ஓடி | என்னைவிட்டுநீங்கி, | எம்பெருமான் | எமக்கு ஸ்வாமியே, |
| எம்பெருமான்திருவடிக்கீழ்அணைய | ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன் திருவடிகளிலே கிட்ட, | கோயில் | தேவரீரெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீரங்கம், |

இருபத்திரண்டாம்பாட்டு. (நைவளம்) ஒருத்திபக்கலிலே ஜீவிக்கையாகாதொழிந்தால் புறம்பு ஜீவிக்கை யாகாதொழியவேணுமோவென்ன; அருளிச்செய்கிறார் (உத்தம்ராஜேத்யாதி.)

அழகை தான் வசீகாரஸாதநமாக நினைத்திருக்குமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ருசியேதொடங்கியித்யாதி.)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| எவ்வளவுண்டுஎன்றேற்கு | எவ்வளவு தூரமுண்டுஎன்றுகேட்டஎனக்கு, | இதுவன்றோவென்றார் | இது வன்றோ வென்று தாமேசுட் |
| எழில்ஆலி | போகத்துக்குஏகாந்தமானதிருவாலி, | தாமே | டிக்காட்டியருளினார். (௨௨) |

வ்யா.—(நைவளம்) கேட்டாரோடு சொன்னாரோடு வாசியற நைவிக்கும்படியான அழகையுடைத்தான பண்ணை நூணுங்கி. நட்டபாஷையை குணயோகத்தால் (நைவளம்) என்று பேரிடுகிறது. (நுடங்கு கேள்வியிசை) என்னக்கடவதிறே. (ஒன்று) அல்லாத இசைகளிற்காட்டில் பிறரைவசீகரிக்கவற்றாயிருக்கையும் இதுக்கு வசீகர்த்தராகாவிட்டால் வேறுகதியற்றிருக்கையும் பற்ற அத்விதீய மென்கிறது. கர்மஜ்ஞாநங்களால் ஸாத்யமல்லாதத்தை பக்தியாலே ஸாதிக்கலாம், பக்தியாலே ஸாத்யமல்லாதத்தை ப்ரபத்தியாலே ஸாதிக்கலாயிருக்கும்; அதுவும் பலியாவிட்டால் வேறு கதியில்லையிறே. சேஷபூதன் சேஷியை லபிக்கைக்கு சரமமான வுபாயத்தைப் பற்றினாப்போலேகாணும் காந்தன் அபிமத விஷயத்தை லபிக்கைக்கு சரமோபாயத்தைப் பற்றினபடி. (ஆராயா) நுணுங்கினான். (நம்மைநோக்கா) பண்ணை நுணுங்கினவாறே தான் அழிந்தான், "இனித்தப்பாதுஇவளழிகை" என்று என்முகத்தைப்பார்த்தான், வயிரவுருக்கானது அரக்கையுருக்கச் சொல்ல வேணுமோ வென்றிருந்தான். நம்முடைய புஂஸ்தவத்தையழித்த விது ம்ருதுஸ்வபாவையான விவளுடையஸ்த்ரீத்வத்தை யழிக்கக் குறையில்லையென்று என்முகத்தைப்பார்த்தான். (நம்மை) என்று- ஆத்மநிபஹுவசநம்.

(நாணினார்போலிறையே) அல்பம்நாணினாப்போலே. அவர் என்முகத்தைப் பார்த்தவிடத்தில் அவர் நுணுங்கினபண்ணிலே அகவாயழிந்திருக்கச்செய்தேபொரிபுறந்தடவி நானழிந்தமை அவர்க்குத் தெரியாதபடி அவிக்ருதையா யிருந்தேன், அத்தைக்கண்டு லஜ்ஜைபிறந்தது, சரமோபாயத்தை யநுஷ்டித்தோம், அது நிஷ்பலமாய்த்தென்று லஜ்ஜையிலே யிழிந்தார். நேராக நாணினாராகில் மேல்பண்ணும் ப்ரவ்ருத்தி கூடாதிறே; ஆகையாலே நாணினார் போலே பாவித்தாரென்கிறாள். அதாகிறது - லஜ்ஜித்தாப்போலே பாவியா நேர்முகம் பார்க்கமாட்டாதே சோலையைப் பார்ப்பது, பார்ச்வங்களைப் பார்ப்பதாவென்கிறாள். ப்ரபந்நர், தன்னைலபிக்கைக்கு * அழுவன்தொழுவனில் பட்டபாட்டையெல்லாம் அபிமத விஷயத்தைக் குறித்துத்தான்பட்டபடி.

(பின்னும் நயங்கள் செய்வளவில்) பின்னும் நீசபாஷணங்களைப் பண்ணிலேயிட்டு நுனுங்குமளவில். (நயங்கள் பின்னும்) நம்முடைய மஹாவிச்வாஸம்போலே யாய்த்து அவனுடைய மஹாவிச்வாஸமிருக்கிறபடி. பண்ணின ப்ரபத்தி விபரீதபலமானாலும் அத்தையொழிய கதியற்றிருக்குமாப்போலே தான் நுனுங்கினபண் பலித்ததில்லையென்றுவிடாதே பின்னையும் அத்தையே நுனுங்கினானென்கை. (நயங்கள்) அவ்விசையிலே வைத்து நுனுங்கின நீசபாஷணங்களுக்குத் தொகையில்லையென்கிறாள். (ஆராயா, நம்மைநோக்கா, நாணினார்போலிறையே நயங்கள் பின்னும்) என்றுகொண்டு அவன் பண்ணின ஸாரஸ்யங்களை நீயுங்கூடக் காணப்பெற்ற தில்லைகாணென்கிறாள். (செய்வளவில்) அத்தை நுனுங்கினவளவிலே.

(என்மனமும் கண்ணுமோடி) த்வஸ்தமாய்ப்போய்த்தென்கிறாள். பொரிபுறந்தடவி அடக்கிக்கொண்டிருந்தேன், என்னால் அடக்கப்போய்த்ததில்லை, கடலுடைந்தாப்போலேயுடைந்ததென்கிறாள். கண்ணால் கண்டவிடத்திலே யிறே நெஞ்சுசெல்லுவது, அம்முறை குலைந்ததென்கிறாள். நெஞ்சும் தனியேபோய்த்து, கண்ணும் தனியே போய்த்தென்கிறாள். ஹ்ருஷீகேசனைக் காணுமளவு மிறே இந்த்ரியங்களுக்கு இவனோடு ஸம்பந்தம்; கர்ம நிபந்தநமாகையாலே ஔபாதிகமிறே.

(ஓடி) ஒன்றையொன்றுபின்பாராதேயோடிற்றென்கிறாள். என்னையும் பாராதே யோடிற்றென்கிறாள். (எம்பெருமான் திருவடிக்கீழணைய) நிருபாதிகஸம்பந்தியானவன்பக்கலிலேபோய்ப்புக்கதென்கிறாள். (எம்பெருமான்) தன் மிடற்றோசையாலே என்னையெழுதிக்கொண்டவன். (திருவடிக்கீழணைய) அவன் நினைத்தவளவன்று காண் நான் அழிந்தபடியென்கிறாள். என்முலையைத் தன்மார்விலே நெருக்கித் தழுவிக்கொள்ளவாய்த்து அவன் நினைத்தது, நான் அவன்காலைத் தலையிலே வைத்துக்கொண்டேனென்கிறாள். அழுக்கியிருக்குமாப்போலே யிறே அழியும்போதழியும்படி.

(இப்பால்) என்னைவந்துகிட்டுகைக்கு அவன் பண்ணினவ்யாபாரங்கள் சொன்னேன், கலந்தபோது அவன் பண்ணின வ்யாபாரங்கள் ஒருமஹாபாரதத்துக்குப்போரும், அத்தை அடைவுபடப் பேசுகைக்குவேண்டுந்தெளிவில்லாமையாலேபேச்சுக்குநிலமன்று இக்கதை ஸ்ரீராமாயணத்தே கேட்கலாகாதோ வென்கிறாள்.

---

ஆத்மாவன்றோ இந்த்ரியங்களுக்கு ஈச்வரன் என்ன; அருளிச்செய்கிறார் (கர்மநிபந்தநமாகையாலேயித்யாதி.)

தாத்பர்ய மருளிச்செய்கிறார் (தன்மிடற்றோசையாலேயித்யாதி.)

உபோத்காதஞ்சொன்னேன், பலச்ருதியைக் கேட்கலாகாதோ (கைவளையுமித்யாதி) அகம் ஒடுக்குண்டுபோனால் கண்டதேது காணாததேது என்று கேட்பாரைப்போலே அவன் வந்து கலந்தபோது கலவியின் பலமாய்க்கொண்டு நீகாணாததேது, கண்டதேதென்னச் சொல்லுகிறாள். த்ர்ஷ்டம் அத்ர்ஷ்டமாய் அத்ர்ஷ்டம் த்ர்ஷ்டமாய்த்து.

(கைவளையும்) வளைகழலுவது விரஹத்தின் பின்பன்றோ, வளைபோய்த்து என்பானென்னென்னில்; ஸம்ச்லேஷ ரஸத்தாலே பூரித்து வெடித்துப்போய்த்தென்கை. (மேகலையும்) மேகலைகண்டிலேனென்கை அஸதஸ்யமன்றோவென்னில்; அத்தசையில்பரியட்டம்மாறாட்டத்தாலே என்பரியட்டப்பட்டுங் கண்டிலேனென்கை. அவன்பரியட்டம் தன்கையிலே யிருக்கக்கண்டாளித்தனையிறே. (காணேன்) புக்கவிடமறிந்திலேன். இத்தால் - ஸ்வாபதேசத்தில் வந்தால் அஹங்கார மமகார நிவர்த்தியைச் சொல்லிற்றாயிருக்குமிறே. ஸ்வரூபஜ்ஞானம் பிறக்கும்போதில் விரோதியான அஹங்கார மமகாரங்கள், போகவேளையில் வந்தால் வஸ்த்ரமென்றும் வளையென்றும் பேரிடக்கடவதாயிருக்கும். நான் போக்தாவென்றிருத்தல், எனக்கு போக்யமென்றிருத்தல் செய்யுமது ஸ்வரூபமன்றிறே; போஜ்யமாயிருக்கையிறே ஸ்வரூபம்.

(காணேன்) தான் விரோதியைக் கழித்துக்கொள்ளுதல் அவனைப்பற்றிப் போக்கித்தரவேணுமென்று அபேக்ஷித்தல் செய்தாலிறே விரோதிபோனதறிவது, தான் போகத்திலே அந்யபரையாயிருக்க அவன் போக்கப்போனவை யாகையாலே கண்டிலேனென்கிறாள். (கண்டேனித்யாதி) இத்தலையிலுள்ள தொன்றுங் காணாதாப்போலே அத்தலையிலுள்ளதை நேராகக்கண்டேன். விரோதியை நேராகக் கண்டிலேன், போக்யதை குறைவற்றிருக்கக் கண்டேன்.

---

(இக்கதை) ஸ்ரீராமாயணத்தோடே கேட்கலாதோவென்கிறாளென்று ஸம்யக்பாட:. அதாவது-இக்கதை ஸ்ரீராமாயணத்திலே பிராட்டியுடைய வ்யாபாரம்சொன்னாப்போலேஎன்னுடையவ்யாபாரத்திலே அறிந்து கொள்ளுங்கோளென்றபடி. அதாவது-(கைவளையும் மேகலையும்) இத்யாதியாயிருக்கிற ஆகாரத்தைக்கொண்டே அவன் கலந்தபோது பண்ணினவ்யாபாரங்களெல்லாமறிந்து கொள்ளுங்கோளென்றபடி.

விவரணம் (உபோத்காதமித்யாதி.) த்ர்தியதாத்பர்ய மருளிச்செய்கிறார்(தோள்களைக்கொண்டித்யாதி.)

அணைத்தபோது உறுத்தின திருமகரக்குழைகளையும் அணைத்த திருக்கைகளையுங் கண்டேன். (கனமகரக்குழை) ஸ்த்திரமான திருமகரக்குழை. நித்யாநுபாவ்யமா யிருக்கை.

கலந்தவன் சக்ரவர்த்தித் திருமகனுயிருக்க, (நான்குதோள்) என்கிறது தன்னைத் தழுவுகையாலே தோள்கள் பணைத்தபடியைப்பற்ற. இத்தலையகப்பட்டபின்பு தன்னை வெளியிட்டபடியாகவுமாம். தோள்களைக்கொண்டு கார்யங்கொள்ளுமிடத்தே மறைக்கவொண்ணுதிறே.

(எவ்வளவித்யாதி) அவிச்சிந்நமாக வநுபவிக்கவேணுமென்று பார்த்து உம்முடைய வகம் எத்தனைதூரம்போருமென்று கேட்டவெனக்கு. (எவ்வளவுண்டு) சற்றிடமாகில் கூடப்போவோமென்றுநினைத்து "எவ்வளவுண்டு" என்கிறான்போலேகாணும். (பருகிக்களித்தேன்) என்ற வநந்தரம், (அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ) என்று ப்ரார்த்தித்தாப்போலே இவனோடே ஸம்ச்லேஷிக்கப் பெற்றுவைத்து இவனுடைய வேண்டப்பாட்டைக்கண்டு இவனுக்குத் தகுதியான பரிஜநத்தோடே அநுபவிக்க வேணுமென்னும் அபேக்ஷைபிறந்தது (எவ்வளவுண் டெம்பெருமான் கோயிலென்றேற்கு) (என்றேற்கு) நானேகிடீர் பிரிவைப்ரஸங்கித்தேனென்கிறாள்.

(இதுவன்றோ வெழிலாழியென்றார்) திருமணங்கொல்லைக்கும் திருவாலிக்குமுண்டான ப்ரத்யாஸத்தி அங்குலிநிர்த்தேசம் பண்ணலா யிருக்கையாலே "இதுவன்றோ" என்று கையைக்காட்டிஞுறொன்கிறாள். அங்ஙனன்றியே, நீயிருந்தவிடமன்றோ நமக்குத்தேச்யமென்று சொன்னவுமாம். சேஷியிருந்தவிடமே சேஷபூதனுக்குஉத்தேச்யமாமாப்போலே. பிள்ளைவேட்டகத்தையாசைப்படும், பெண்பிள்ளைப் புக்ககத்தை யாசைப்படுமிறே.

அதவா, (எவ்வளவித்யாதி) போகம் உக்மஸ்தகரஸமான வாறேஸாத்மிப்பித்துஅநுபவிப்பிக்கவேணுமென்றுபார்த்து, "நாம் அகம்புக்கு வாராநின்றோம்" என்றுபிரிவை ப்ரஸங்கிக்க, (எவ்வளவுண் டெம்பெருமான் கோயிலென்றேற்கு - எழிலாழி-இதுவன்றோஎன்றார்) உன்காலேயன்றோ நமக்குத்தேச்யமென்று என்காலைக் காட்டிப்போனுறொன்கிறாள். (தாமே) வருவாருந்தாமே, அநுபவிப்பாருந்தாமேயாய்விட்டதென்கிறாள். ... ... (உஉ)

---

தாத்பர்யம் (பருகிக்களித்தேனித்யாதி.)

இவள் அவனிருந்தவூரைக்கேட்டால், நம்மூர் இன்னதுஎன்றுசொல்லாதே நீ இருந்தவிடமென்பானென்னென்ன ; அருளிச்செய்கிறார் (பிள்ளைவேட்டகத்தையித்யாதி.) ... ... (உங)

அ.—இருபத்துமூன்றாம்பாட்டு. (உள்ளூரும்) தானே க்ர்ஷி பண்ணிவந்துகலந்தவன் பிரிகிறபோது, "போகாதேகொள்" என்று ஒருவார்த்தை சொல்லமாட்டிற்றிலையோவென்ன; அதுவுஞ் சொன்னேன், அது அகார்யகரமாய்த்தென்கிறாள். உனக்கு பவ்யனாயிருக்கிறவன் உன்வார்த்தை கேளாதொழியுமோவென்ன; நிலமல்லாநிலத்திலே நீளவிருக்கக்கடவதோ வென்று பெரியதிருவடிகொண்டுபோகப்போனானென்கிறாள். ரக்ஷகனுடைய வ்யாபாரமாகையாலே கூடுகையும் ரக்ஷகமாய் பிரிகையும் ரக்ஷகமாயிறேயிருப்பது. போகம் உன்மஸ்தகமானால்ஸாத்மிப்பித்து அநுபவிப்பிக்கவேணுமென்றிருக்குமிறே அவன்; ஸ்வரக்ஷணத்தில் சிந்தையில்லாமையாலே கூடு பூரிக்கிறாளிறே இவள்.

மூ.—உள்ளூருஞ்சிந்தைநோயெனக்கேதந்து
என்னொளிவளையும்மாநிறமுங்கொண்டாரிங்கே
தெள்ளூருமிளந்தெங்கின்தேறல்மாந்திச்
சேலுகளுந்திருவரங்கம்நம்மூரென்ன
கள்ளூரும்பைந்துழாய்மாலையானைக்
கனவிடத்தில்யான்காண்பன்கண்டபோது
புள்ளூருங்கள்வாநீபோகேலென்பன்
என்றாலுமிதுநமக்கோர்புலவிதானே. (உ௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உள்ளூரும் | அந்தக்கரணத்தையுங் கூட வ்யாபரிக்கும்படியான, | என்மாநிறமும் | என்னுடையச்லாக்யமான நிறத்தையும், |
| சிந்தைநோய் | மநோவ்யாதியை, | இங்கே | திருவாலிதிருநகரியிலே, |
| எனக்கேதந்து | விச்லேஷாஸஹையான எனக்கேதந்து, | கொண்டார் | கொண்டுபோனவர் |
| | | தெள் | தெளிந்து, |
| | | ஊரும் | பரவாநின்றுள்ள, |
| என்ஒளிவளையும் | என்னுடைய அழகிய கைவளையல்களையும், | இளம் | இளமைதங்கிய, |
| | | தெங்கின்தேறல்மாந்தி | தென்னங்கள்ளைக் குடித்து, |

இருபத்துமூன்றாம்பாட்டு. (உள்ளூருஞ்சிந்தைநோய்) ஈச்வரன்றானே பிரிந்துபோனானென்று அர்த்தாந்தரத்தை விவக்ஷித்து, பரமதயாளுவாயிருக்கிறவன் நிர்த்தயமாகப் பிரியலாமோ வென்ன; அருளிச்செய்கிறார் (ரக்ஷகனுடையவித்யாதி.) ஸாத்மிப்பித்து அநுபவிப்பிக்கைக்காகப் பிரிந்தானென்னு மதுதாமறிந்திருக்க மநோரதிப்பானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸ்வரக்ஷணத்திலித்யாதி.) கூடுபூரிக்கையாவது - கீழ்ப்பாட்டிலே, (எவ்வளவுண்டு) 'இத்யாதியாலே அவிச்சிந்நமாக அநுபவிக்கப்பாரிக்கை.

| பதம். | உரை. |
|---|---|
| சேல் | சேல்மத்ஸ்யங்களானவை, |
| உகளும் | இங்குமங்கும் ஸஞ்சரிக்கிற, |
| திருவரங்கம் | ஸ்ரீரங்கமானது, |
| நம்மூரென்ன | நம்முடையவூரென்றுசொல்லிப்போக, |
| கள்ளூரும் | தேன்வெள்ளமிடாநின்றுள்ள, |
| பைந்துழாய் மாலையானை | பசுமைதங்கிய திருத்துழாய் மாலையையுடைய வவரை, |
| யான் | பிரியில்தரியாதநான், |
| கனவிடத்தில்காண்பன் | கனவிலே கண்டேன்; |
| கண்டபோது | அப்படிஅநுபவித்ததசையில், |
| புள்ளூருங்கள்வா | பெரியதிருவடியை நடத்துகிற கர்த்ரிமனே, |
| நீபோகேல் என்பவன் | என்னைவிட்டு நீபோகாதேகொள்என்றுநான் சொல்லாநின்பன், |
| என்றாலும் | இப்படிச் சொன்னாலும், |
| இது | இந்த ஸம்ச்லேஷம், |
| நமக்குஆர்புலவிதானே | நமக்கு ஆற்றாமைக்கு உறுப்பாமதன்றோ என்று தோழிக்குச் சொல்லுகிறாள். ... (உ௩) |

வ்யா.—உபயவிபூதி யுக்தனாய் பரமோதாரனாயிருக்கிறவனுக்கு நீ ப்ரியவிஷயமாய்க்கொண்டிருந்தாயாகில் அவன் உனக்குத் தந்துபோய்த்த தென்னென்ன; (உள்ளூருஞ்சிந்தைநோயெனக்கேதந்து) அவன் தந்துபோனது இதுகாணென்கிறாள். (உள்ளில்நோய்) கண்கண்டு சிகித்ஸிக்கலாம் நோயன்றுகாண் தந்தது. பாஹ்யமான நோயாகிலிறே கண்கொண்டு சிகித்ஸிக்கலாவது.(உள்ளூரும்நோய்) ஸர்ப்பம் ஊர்ந்தாப்போலே ஸஞ்சாரியாயிருக்கை. கண்ணுக்குத் தெரியாதிருந்தாலும் ஒருப்ரதேசத்திலேயாகில் அவ்விடத்தே அந்வேஷித்து சிகித்ஸிக்கலாமிறே, அது செய்யவொண்ணாதபடி கழலைக்கரப்பான்போலே எங்குமொக்க ஸஞ்சரிக்கும் நோயென்கை. காதல் நோயாகையாலேகிலாய்ப்பைப்பற்றி நிற்குமோ, பந்தத்தைப்பற்றிநிற்குமோ,இன்னபடியிருக்குமென்று நிர்ணயிக்கவொண்ணாதபடியாயிறே யிருப்பது.

(சிந்தைநோய்) அபரிஹரணீயமான நோய். ஒருருக்கு நோவு வந்தால் வைத்யனாலே பரிஹரிக்கலாம், வைத்யனுக்கு ஒரு நோவு வந்தால் ஒருவராலும் பரிஹரிக்கவொண்ணாதிறே. (అధోక్షజచేతసః)

---

உள்ளில்நோய் என்றதிலே அபரிஹரணீயத்வம் ஸித்தமாயிருக்க (ஊரும்நோய்) என்றதாலே பலித்தப்ரயோஜநமேதென்ன; அருளிச்செய்கிறார் (கண்ணுக்குத் தெரியா திருந்தாலுமித்யாதி.)சிந்தைநோயாகையாலும் அபரிஹரணீயமென்கிறார்(காதல் நோயாகையாலேயித்யாதி.) (అభిభూయమానావ్యసనైః) (அபிபூயமாநா வ்யஸநை:( என்றது இங்குஅபேக்ஷிதம்.

சர்மக்ஷயமிறேயென்று த்ரித்திருக்கலாம், நெஞ்சில் வ்யாதிக்கு பரிஹாரமில்லையிறே. (நோய்) இப்ரேமந்தான் அவஸ்த்தாநுகுண மாக புருஷார்த்தமா யிருக்கும், - போகோபகரணமா யிருக்கும், நோவுமாயிருக்கும்;- ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தார்க்கு புருஷார்த்த மாயிருக்கும், போக்தாவுக்கு போகோபகரணமாயிருக்கும், விச்லே ஷித்தார்க்கு வ்யாதியாயிருக்கும்.

(எனக்கேதந்து) எனக்கே கூறாகத்தந்து. கலவி இருவர்க்கு மொக்குமாகில் ஆற்றாமை இருவர்க்குமொவ்வாதோ வென்கை. (தந்து) என்பானென்னென்னில்; என்னைப்போலே யன்றியே பிறர்முகம்பார்க்கவேண்டாதபடியான ஸ்வாதந்த்ர்யத்தை யுடைய வர்பிரிந்துபோகையாலே அவர்க்கில்லை என்றுமிடங்கண்டிலையோ வென்கிறாள். ([illegible]) (நைவத0ஶாந்நமஶாந்) என் கிறபடியே ஊர்ந்ததுங்கடித்தது மறியாதே அவன்படும்பாடு தானறியாளிறே.

([illegible]) (ஊர்த்த்வ0மாஸாந் நஜீவிஷ்யே) என் னுமளவு தன்னது, ([illegible]) (நஜீவேயம்0க்ஷணமபி) என் னும்படி அவனுற்றாமை எனக்கே யாய்த்தென்கிறாள் - அவன் க்ர்ஷியாலேவந்ததாகையாலே.(எனக்கேதந்து) அவர்பெரியவரன் றோ,தமக்கென்னவொன்று வைக்கவல்லரோ; எல்லாம்* [illegible] * பக்தாநாமென்றன்றோ அவரிருப்பது என்றுக்ஷேபமாதல்.

(என்னுளிவளையும் மாநிறமுங்கொண்டார்) நோவை விளை த்ததுக்குமேலே நோவுக்கு ஆச்வாஸகரமா யிருக்குமத்தையுங்கொ ண்டுபோனார். (என்னுளிவளையும் மாநிறமும்) ([illegible]) (மதீயஞ்சகிலம்) என்றும், ([illegible]) (த்வைவ) என்றும் ஸ்வரூப யதாத்ம்யஜ்ஞாநத்தை யுடைய விவள் தேஹாத்மாபிமாநிகளைப் போலே சொல்லக்கடவளோ வென்னில்; ஸ0ச்லேஷ தசையில் இதொருவளை யிருந்தபடியென்? சேர்த்தியால்வந்த வொளியிருந்த படியென், வடிவில் நிறமிருந்தபடி யென்னென்று கொண்டாடு மவையாகையாலேசொல்லுகிறாள்.அவனுக்கு ஆதரணீயமானவை அவ்வழியாலே தனக்கு மாதரணீயமாயிருக்கையாலே (என்னது) என்னலாமிறே. (மாநிறம்) ச்லாக்யமானநிறம். (இங்கே) நான் வழிபறியுண்டதேசமிது வென்கிறாள். நான் வழிபறிக்கவந்து வழி பறியுண்டேனென்கிறாள். (இங்கேஇருவராய் வந்தார்)என்றுநான் நிதியெடுத்ததேச மிதுவென்றாள்-அங்கு; பறிகொடுத்ததேசமிது வென்கிறாள் - இங்கு.

---

அநேகஜந்மஸாத்யமானப்ரேமத்தை (நோய்) என்பானென் னென்ன; அருளிச்செய்கிறார் (இப்ரேமந்தானித்யாதி.)

ஆனால் அவன்போகிறபோது உம்முடைய வூரேதென்று கேளாவிட்ட தேதென்ன; அது நான்கேட்கவேண்டிற்றில்லை;-வ்ய திரேகத்தில் தரித்திருக்கைக்காகத் தானேசொல்லிப்போனானென்கி றாள் (தெள்ளூருமித்யாதி) தெளிந்து பாயாநின்றுள்ள இளந்தெங் கின் தேனை நுகர்ந்து, சேல்களானவை உகளும்படியான தேசம். (இளந்தெங்கு) தேசவிசேஷத்தில்பஞ்சவிம்சதிவார்ஷிகராயிருக்கு மாப்போலேயாய்த்து இத்தேசத்தில்ஸ்த்தாவரங்களு மிருப்பது. (தெள்ளூருமித்யாதி) தெளிந்து தெங்கினின்றும் வாராநின்றுள்ள தேறல் திருவீதிகளிலேபாயாநிற்குமாய்த்து. தேன் திருவீதியிலே பாயாதபோது சேல்பருகிற்றென்னக் கூடாதிறே. இது (தேட்ட ருந்திறற்றே னினைத்தென்னரங்கனை)என்கிறதேனுக்குஸ்மாரகமா யிருக்கிறதாய்த்து.

(சேலுகளும்) முக்தர் களித்துவர்த்திக்குமாப்போலே இத் தேசத்தில் திர்யக்குக்களு மகப்படக் களித்து வர்த்திக்கிறபடி. (தேறல்மாந்திச்சேலுகளும் திருவரங்கம்) ஜந்மதேசமான ஆற்றை விட்டு போகஸ்த்தாநத்திலே புகுந்து தேனை நுகர்ந்து களித்ததெ ன்கை. முக்தன் ஸம்ஸாரத்தை நினைக்குமன்றிறே இவை தமக்கு ஜந்மபூமியான ஆற்றைநினைப்பது.

(இளந்தெங்கித்யாதி) ஸம்ஸாரஸம்பந்த மற்றுப்போன முக் தனுக்கு ஸம்ஸாரஸ்பர்சமில்லாத நித்யஸூரிகள் (ஆள்மின்கள் வானகம்) என்றுஸ்வபோகத்தைக் கொடுக்குமாப்போலே ஆற்றி லேபிறந்துபுகுந்த கயல்களுக்கு ஊரில் ஸ்தாவரப்ரதிஷ்டிதமான தெங்குகள் தன்னுடையதேனைக்கொடுக்க அத்தை நுகர்ந்துகளிக் கிறகயல்களையுடையவூர், நம்மூரென்ன்-நமக்குதேசமென்ன. என க்குதேசமென்னில்(பக்தாநாம்)என்றதுவ்யாஹதமாம், உனக்குத் தேசமென்னில் தன்பாரதந்த்ர்யத்தோடு சேராமையாலே அவள் உன்னையொழிய எனக்கொரு தேசமாவ தென்னென்னும், இர ண்டுதலைக்கும் ஸ்வரூபஹாநியாகையாலே (நம்மூர்) என்கிறாள். இருவர்ஸத்தையையு முண்டாக்கும் தேசமிதுகாண். என்னை ப்ரணயியாக்கி உன்னை ப்ரணயிநியாக்கும் தேசமிதுவென்கை; திரு மந்த்ரம்போலே இருவர்க்கும் பொதுவான வூர். இருவரும் விஷ யார்த்திகளாகையாலே இருவர்க்கும் தேசமிதுவிறே.

(கள்ளூருமித்யாதி)தோளிலேயிட்டதனிமாலையும் தாமுமாய் வந்தவரவை நீகாணப்பெற்றதில்லைகாண்.புழுகுநெயேறிட்டுக்கொ ண்டு வருவாரைப்போலே நானுகந்தபடியே ஒப்பித்துவந்தார்.

---

விச்லேஷத்தாலே தன்னடையேவருகிறநோயை, (தந்து) என்பானென்னென்ன; ஸ்வாபதேசத்தையுட்கொண்டு அவன்க்ரு ஷியாலே (நமக்கே) என்றதுக்கருளிச்செய்கிறார் (இருவர்ஸத்தை யையுமித்யாதி.)

(கள்ளூரும்பைந்துழாய் மாலையானை) அவனூர் பட்டதத்தை யும் படுங்காண் அவனுடம்பு. ரஸவிரைகள் நிறைந்துமது வொழுகாநின்றுள்ளதிருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவனை. (கள்ளூரும்) தன்னிலத்திற் காட்டில் திருமார்விலே ஸ்பர்சித்த பின்பு செவ்விபெற்றபடி. (பைந்துழாய்) திருத்துழாய் குளிர்ந் திருந்ததென்று நீயறிந்தபடி யென்னென்ன; என்னை யணைக்கை யாலே யறிந்தேனென்கிறாள்.

(கனவிடத்தில்) இந்த்ரஜாலமென்றும் கனவென்றும்-அஸ்த் திரங்களைச்சொல்லக்கடவது; அஸ்த்திரமான தேசத்திலேதாமும் ஸந்நிஹிதராய் அநுபாவ்யவிஷயமும் ஸந்நிஹிதமாயிருக்க தேசா ந்தரம் வேண்டுகிறது - தேசமும் தேஹமும் அஸ்த்திரமாகையா லேயிறே. (கனவிடத்தில்) கனவென்று-ஸம்ச்லேஷத்தில் ஸ்தைர் யத்தைச்சொல்லவுமாம்; முன்பு அநுபூதமானதொன்றை கால நீளத்தாலே ஸ்வப்நம் கண்டமாத்ரமென்று சொல்லக்கடவதிறே. (யான்காண்பன்) அவனையொழியச்செல்லாதபடியான ஆற்றாமை யையுடையநான் காண்பன். (நான்) அநுபவித்தேன், என்னபிர வேசத்துக்குங் குறையில்லை. அநுபவத்துக்கும் குறையில்லை, ஸம் ச்லேஷத்தில் புரையில்லையாகில் அத்தசையில் உனக்கு அவன்கை யாளாயன்றோவிருப்பது, போகாதேகொள்ளென்று ஒருக்தியாலே விலங்கிட மாட்டிற்றிலையோவென்ன; அதுவும் செய்தே னென்கி றாள் (கண்டபோது) அநுபவித்ததசையிலே. (புள்ளூருங்கள் வா) பெரிய திருவடியை நடத்துகிற க்ர்த்ரிமனே. பெரியதிருவடி யைப்பதிப்படையாக வைத்துவந்து புகுந்து கலந்து, இத்தலையக ப்பட்டவாறே அவன் கடுமைபோராதென்று அசேதநமான தே ரை நடத்துமாப்போலே பெரியத்வரையோடே பெரியதிருவடி யை நடத்துகிறக்ர்த்ரிமனே. வந்தபோதே போகையாலேபெரிய திருவடியை பதிப்படையாகக் கடத்திவந்தக்ர்த்ரிமனே யென்கிறா ள், வந்தபோது * சிலையே துணையாகவந்தானுகில்பெரியதிருவடி வருகையாவதென், கொண்டு போகையாவ தென்னென்ன; ராஜா க்கள் அபிமதவிஷயத்தைப் பற்றக் களப்புடுத்துப் புறப்பட்டால் மந்த்ரிகள் வரவுங் கொண்டுபோகவுங் கடவதா யிருக்குமாப்போ லே பெரியதிருவடிவந்து கொண்டுபோனான்.

---

அஸ்த்திரமென்கைக்கு நியாமகமேதென்ன; அருளிச்செய்கி றார் (தாமும்ஸந்நிஹிதனுயித்யாதி.)

பதிப்படையாக வைத்துவந்தானென்று இவள் அறிந்தபடி யென்னென்ன; அருளிச்செய்கிறார் (வந்தபோதேயித்யாதி.)

(புள்ளூருங்கள்வா) வந்தகார்யந்தலைக் கட்டிற்றாகில் எழுந் தருளலாகாதோவென்று பெரியதிருவடிசொல்ல அவனை மேற் கொண்டுபோனானென்கிறாள். (புள்ளூரும்) தேரூர்ந்தா னென்னு மாப்போலே. அதாகிறது-பெரியதிருவடியுங்குழைச்சரக்காம்படி காண் போனகடுமை யிருந்தபடியென்கிறாள். பெரியதிருவடி சிற கிலும், திருவநந்தாழ்வான்மடியிலும், சேனைமுதலியார் பிரம்பி லும், பிராட்டிகடாக்ஷத்திலும் வளரும் தத்வமாகையாலே தான் நினைத்தபடி செய்யப்போகாதிறே. * வாணிளவரசிறே. (நீபோகே லென்பன்) உன்னைக் கண்ணுடிப்புறத்திலுங் கண்டறியாயோ, நாம் பிரியில் இவள் தரியாளென்றிருக்கவேண்டாவோ.

(நீபோகேல்) என்னையுங்கூட்டிக் கொண்டு போதல், இங்கே கூடவிருத்தல்செய்யுமதொழியத் தனியே போகக்கடவையோ. (என்பன்) நிஷ்ப்ரயோஜநமான வார்த்தையைச் சொன்னேன். அவன்ஸ்வரூபத்தோடேசேரும் வார்த்தையைச் சொன்னே னல் லேன், என்ஸ்வரூபத்தோடேசேரும் வார்த்தையைச் சொன்னே னல்லேன், பலிப்பதொன்றைச் சொன்னேனல்லேன். அவன் போகத்தேட நான் தடுக்கையாவது அவனுடைய ப்ரணயித்வத் துக்குஞ் சேராது, (తత్తస్యసద్శంభవేత్) (தத்தஸ்யஸத்ர்ஶம்பவேத்) என்றிருக்கைஸ்வரூபமாயிருக்க போகாதேகொள்ளென்கைஎன் ஸ்வரூபத்துக்குஞ் சேராது. (என்றாலும்) இப்படி இருவருடைய ஸ்வரூபத்துக்கும் சேராத வார்த்தையைச் சொன்னவிடத்திலும்.

(இதுநமக்கோர்புலவிதானே) இந்தஸம்ச்லேஷம் நமக்கு ஆற்றாமைக்கு உறுப்பாய்விழுந்தது. அவனைப் பேணினேனல் லேன், என்னைப்பேணினே னல்லேன், அபிமதம் பெற்றேனல் லேன். இத்தால்-துக்கமே சேஷித்து விட்டதென்கிறாள். புலவி-துக்கம். (நமக்கு) அவன் அபிமதங் கைபட்டதென்று ஹர்ஷ்ட ளாய்ப் போனான், நமக்கு துக்கமே பலித்துவிட்டது. (தானே) நாட்டார்க்கு ஸுகஹேதுவானதுதானேகிடீர் நமக்கு துக்கஹேது வாய்த்தென்கிறாள். (ஓர்புலவி) ஸ்வரூபஹாநியால் வந்த துக்க மும் அவனைப்பிரிகையால் வந்த துக்கமுமாய் இரட்டித்திருக்கை யாலே அத்விதீயமென்கிறாள். ... ... (உங)

---

அவதாரிகையில் மூந்தின தாத்பர்யத்துக்கு அநுகுணமாக தாத்பர்யாந்தரமருளிச்செய்கிறார் (வந்தகார்யம் தலைக்கட்டிற்றாகி லித்யாதி.) இரண்டாமர்த்தத்திலே (பெரியதிருவடிசிறகிலுமித்யா தி.) தாத்பர்யம் (உன்னையித்யாதி.) ... ... (உங)

அ.—இருபத்துநாலாம்பாட்டு. (இருகையில் சங்கு) பெரிய திருவடிகொண்டுபோனானாகில், (யஸ்யைதே தஸ்யதத்தநம்) (யஸ்யைதே தஸ்யதத்தநம்)என்கிறபடியே அவன்றான்உனக்கு பவ்யனாயிருந்தானாகில் அவனுக்குசேஷபூதனான பெரியதிருவடி உனக்கு சேஷமாயன்றோ இருப்பது, அதுகிடக்க மஹிஷீவர்க்கத்துக்கு ஸ்வரூபேண தாஸபூதனாயன்றோ அவனிருப்பது,இரண்டாலும்அவனை நீபோகேலென்று நியமிக்கக்குறை யென்னென்ன; அவனொருவனுமே யாகிலன்றோ அது செய்யலாவது, நித்யவிபூதியிலுள்ளாரடங்கவந்து சூழ்ந்துகொண்டார்கள், அவர் தாம் பண்டுபோலன்றியே வடிவில் பௌஷ்கல்யத்தாலும் மேன்மையினாலும் அநபிபவநீயராயிருந்தார், அத்தாலே சென்று கிட்டவும் வார்த்தை சொல்லவுமாயிருந்ததில்லைகாணென்கிறாள்.

மூ.—இருகையில்சங்கிவைநில்லாவெல்லே! பாவம்
இலங்கொலிநீர்ப்பெரும்பௌவம்மண்டியுண்ட
பெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம்
பெருந்தவத்தரருந்தவத்துமுனிவர்சூழ
ஒருகையிற்சங்கொருகைமற்றாழியேந்தி
உலகுண்டபெருவாயரிங்கேவந்தென்
பொருகயல்கண்ணீரரும்பப்புலவிதந்து
புனலரங்கமூரென்றுபோயினாரே. (௨௪)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| உலகுண்ட | ஸமஸ்தலோகங்களையும் ப்ரளயகாலத்திலேதிருவயிற்றிலேவைத்த, | ஒலி | சப்தத்தையும், |
| பெருவாயர் | பெரிய வாயையுடையவர், | நீர் | நீரையுமுடைய, |
| இங்கேவந்து | நானிருக்குமிடத்தே வந்து, | பெரும் பௌவம் | மஹாஸமுத்ரத்தை, |
| பொரு | ஒன்றோடொன்று பொராநின்றுள்ள | மண்டியுண்ட | மணலே சேஷிக்கும்படி நீரைப் பருகினதாய், |
| கயல் | கயல்மத்ஸ்யத்தையொத்த, | பெரு | இன்னும் அகப்பட்டதையும் பருகத்தக்க இடைமுடைத்தான, |
| கண் | என்கண்களிலே, | வயிற்ற | வயிற்றையுடைத்தான, |
| நீர் | நீர்த்துளிகள், | கருமுகில் | காளமேகத்தின் நிறத்தை, |
| அரும்ப | ப்ரவஹிக்கும்படி, | | |
| புலவிதந்து | துக்கத்தைவிளைத்து, | வண்ணம் | வடிவழகிலே, |
| இலங்கு | ஒளியையும், | ஒப்பர் | ஒத்திருப்பர்; |

இருபத்துநாலாம்பாட்டு. (இருகையில் சங்கு) தாத்பர்யம் (அவன்றானித்யாதி.)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பெரும்தவத்தர் | பரமபக்தியுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்களும், | புனல்அரங்கம் | ஜலஸம்ருத்தியையுடையஸ்ரீரங்கம், |
| அருந்தவத்து | மஹா தபஸ்விகளாய், | ஊரொன்று | தம்மூரொன்றுசொல்லி, |
| முனிவர் | மநநசீலர்களானரிஷிகளும், | போயினார் | நம்மைப்பிரிந்துபோனார்; |
| சூழ | சூழ்ந்துநிற்க, | | அவர்போனபோதே |
| ஒருகையில்சங்கு | ஒருதிருக்கையில் பாஞ்சஜந்யாழ்வானையும், | இருகையில் | என்னுடைய் இரண்டுகைகளிலும், |
| மற்றொருகை ஆழி | மற்றொருதிருக்கையில்திருவாழியாழ்வானையும், | சங்கிவைநில்லா | சங்குவளையல்களானவை கழன்றுபோயின; |
| ஏந்தி | தரித்தவராய், தாம்பிரிந்தால் நான் தரித்திருக்கைக்காக, | எல்லேபாவம் | என்னமஹாபாபமோ!.... (உச) |

வ்யா.—(இருகையிற் சங்கிவைநில்லா) தாம்போகையன்றிக்கே தாம்போனால் ஆச்வாஸஹேதுவாயிருக்குமவையும் எனக்குத் துணையாகாதபடிகாண் பண்ணிப்போய்த்து. (கையிற்சங்குநில்லா) அவன்போனபோதே ஆற்றாமை குடிபுகுந்தது, கையில் வளையைப்பார்த்தாள், வளை அவனுக்குமுன்னேபோய் நின்றது. அவன் போனாலும் அவன் போகோபகரணங்கள் கிடந்ததாகில் அத்தைப்பார்த்து தரிக்கலாமிறே, அது கையின் கார்ச்யத்தாலே வந்ததோவென்று மற்றக் கையைப்பார்த்தாள் (இருகையில் சங்குநில்லா) அதுவும் அதுக்குமுன்னேபோய்க் கிடந்தது, ஆகையாலே, (இருகையில் சங்கிவைநில்லா) என்கிறாள். (இவைநில்லா) அவன் நில்லாதொழிந்தால் இவையும் நில்லாதொழியவேணுமோ. சேஷியாகையாலே அவன்போகிறான், எனக்கு சேஷமானஇவையும்போகவேணுமோ. சேதநனாகையாலே இத்தலையிலே ஒருகுறைகண்டுபோகலாம் அவனுக்கு, அசேதநமானவிவையும் போகவேணுமோ. வந்து கலந்தவனாகையாலே போகிறான் அவன், ஸஹஜமானவிவையும் போகவேணுமோ.

(இவைநில்லா) நங்கைக்கடங்காதவனாகையாலே போனான் அவன், நங்கைக்கடங்கின விவையும் போகவேணுமோ. (இவைநில்லா) அவன் நிற்கிலும் இவைநிற்கிறனவில்லை. (நில்லா) போகேலென்னப் போனாப்போலே பலகால்எடுத்தெடுத்துக்கையிலேயிடக்கழலுகையாலே (நில்லா)என்கிறாள். (దైర్యము పయాన్త్యశు కేష్టవలయాన్యపి) என்னக்கடவதிறே.

(எல்லே) என்னே. சிதசித்விபாகமற மத்ஸம்பந்தமேயமை யுமாகாதே!உதவாதொழிகைக்கு, (மமேதம்) என்னவமையுமாகா தே உதவாதொழிகைக்கு, அவன் உதவாதொழிகைக்கு ஹேதும த்ஸம்பந்தமேயிறே.(பாவம்) அவன்போனுனுகில்போகிருன் கைப் பட்டதும் போகைக்கடி என் பாபமேயிறே. (எல்லேபாவம்) அவன்புண்யத்துக்கு ஓரவதியில்லாதவோபாதி என்பாபத்துக்கு மோரவதிகண்டிலோமீ!. தானேவந்துகலந்தவனை அநுபவிக்கப் பெருதபாபத்துக்குமேலே ஆச்வாஸஹேதுவான விவையும்உத வாதொழியும்படியிறே யென்பாபாதிசயம்.

(இலங்கொலிநீரித்யாதி)தன்னைக்கலந்துபிரிந்து போகிறபோது அவன்வடிவிற் பிறந்த புதுக்கணிப்புச் சொல்லுகிருள். இத்தலை வெறுந்தறையாம்படி விவர்ணமாயிறே கிடக்கிறது. (இலங்கித்யா தி) இவளை வெறுந்தறையாக்கின ப்ரகாரத்துக்கு த்ர்ஷ்டாந்தஞ் சொல்லுகிறது - * பெருவயிற்றவென்னுமளவுஞ் செல்ல. (இலங் கொலி நீரித்யாதி) லவணுதிகளாலே அளாவின வொளியன்றிக்கே ஸ்வாபாவிகமான வொளியையும் காம்பீர்யத்தையு முடைத்தான நீரையுடைய மஹாஸமுத்ரத்தை வெறுந்தறையாகப் பருகின தொரு காளமேகம்போலேகாண் போகிறபோது அவர் வடி விருந்தபடி.

(என்னெளிவளையும் மாநிறமுங்கொண்டார்) என்கிறபடியே என்வடிவிலொளியும் காம்பீர்யமும் அவர்பக்கலிலே குடிகொண் டதென்னும்படிகாண் அவன்வடிவிருந்தபடி. (பெரும்பௌவம்) என்று ஸப்தத்வீபங்களையும் விளாக்கொலைகொண்ட சுத்தஜல ஸமுத்ரத்தைச் சொல்லுகிறது. (மண்டியுண்ட) மணலோடே பரு கினவென்னுதல்; பெரியவபிநிவேசத்தோடே மேல்விழுந்து பரு கினவென்னுதல். இவளோடே ஸம்ச்லேஷிக்க வருகிறபோதையில் அபிநிவேசமும் இத்தலையில் ஸௌந்தர்யஸாகரத்தை ஆற்றஸார மாக்கினபடியும் வடிவிலே தோற்றியிருக்கிறபடி.

(பெருவயிற்ற) இத்தலையிலுள்ளது நேராக க்ரஹித்த பின் பும் அபிநிவேசம் மாளாதேயிருந்தபடி.(கருமுகிலேயொப்பர்வண் ணம்) இத்தால்-ஸ்வரூபகதநம்பண்ணுகிறதன்று, தாத்காலீநமான வழகைச் சொல்லுகிறது. ஒருகாளமேகத்தை ஒருமின்தழுவினுப் போலே ஸ்வாபாவிகமானவெழிலுக்குமேலே இத்தலையிலெழிலும் அங்கே குடிகொள்ளுகையாலே வடிவு இரட்டித்திருக்கிறபடி. (மண்டியுண்ட) பாவியேன் மேகம் மூகக்கும் கடலாகாதோ, பெ ய்யுந்தறையாகப் பெற்றிலேன். (பெருந்தவத்தரித்யாதி) வடிவில் பௌஷ்கல்ய மிருந்தபடியும், பரிகரவத்தை யிருந்தபடியும், மேன் மையிருந்தபடியும் நீகாணப்பெற்றிலேகாண்.

(பெருந்தவத்தரித்யாதி) ஒருவரிருவராய்ச்சென்று கிட்டுகிறாரோ, அம்ர்தத்தை அமரர்கள் சூழநின்று காக்குமாப்போலே காண் என்னைப்பிரிந்த ஸமநந்தரம் பரிகரம்வந்து சூழ்ந்துகொண்டபடி இதுகாணென்கிறாள். (భక్తైర్భాగవతైస్సహ) (பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ) என்றும், (வைகுந்தத்தமரரும் முனிவரும்) என்கிறபடியே - நித்யஸூரிகளைச்சொல்லுகிறது.

(பெருந்தவத்தர்) பகவத்ப்ரேமத்தாலே அதிசயித்தவர்கள் (வணக்குடைத்தவநெறி) என்று - பக்தியை தபஶ்ஶப்தத்தாலே சொல்லக்கடவதிறே. (அருந்தவத்துமுனிவர்) அவனும் அவர்களுமாய்க்கொண்டு பரிமாறும் பரிமாற்றமே தங்களுக்கு போகமாயிருக்குமேற்றமுண்டிறே - அவர்களுக்கு. (சூழ) அதுவுமாமிறே, தங்களுடைய சேஷத்வத்தையும் அவனுடைய ஸ்வாமித்வத்தையும் உணர்ந்திருக்குமவர்கள் பரிவராய்க்கொண்டு ஒருவர்கிட்டவொண்ணாதபடி எங்கு மொக்கச் சூழ்ந்து நிற்கையாலும் கிட்டப்போய்த்தில்லை.

(ஒருகையித்யாதி) பரிகரத்தை ஒருபடி நீஞ்சிச் சென்றோமேயாகிலும் கிட்டவொண்ணாதபடி காண், (சோதிவெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு) என்கிறபடியே அவர் தாம் அநபிபவநீயராயிருக்கிறபடி. (ஒருகையில்சங்கு ஒருகைமற்றாழியேந்தி) என்றிறே மேன்மைக்கெல்லை. (வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு) என்ற பெரியாழ்வாரைப்போலேகாணும் இவர்களும் மங்களாசாஸநம் பண்ணுகிறபடி. (ஒருகையிற் சங்கித்யாதி) என்கையைப் பிடித்தகையும் என்காலைப் .பிடித்தகையுங்காண் அவர்களுக்கு ப்ராப்யமாய்த்தென்கிறாள். அக்கைக்கு என்னவயவங்கள் ப்ராப்யமானாப்போலே காண் - அவர்களுக்கு அக்கை ப்ராப்யமாயிருந்தபடி. கலந்தபோதைநீர்மைபோலேகாண்பிரிந்தபோதைமேன்மையிருந்தபடி. அப்போதை நீர்மைக் கெல்லையில்லாதாப்போலேகாண் போகிறபோது மேன்மைக்கு எல்லையற்றிருந்தபடி.

(உலகுண்டபெருவாயர்) இத்தால் - ப்ரளயாபத்ஸகனைச் சொல்லுகிறதன்று, வந்துகலந்தான் சக்ரவர்த்தித் திருமகனுகையாலே தத்ஸ்வபாவத்தைப் பற்றச் சொல்லுகிறது. ப்ரளயகாலத்திலே ஜகத்துக்குத் தம்மையொழியச்செல்லாதாப்போலேகாண் என்னோடு கலக்கவருகிறபோது அவர்வந்தபடியென்கை. (இங்கே வந்து) அவர் வரவாலே அவனை யநுபவிப்பதென்னு மிடந்தோற்றுகிறது. விஷயீகரிக்கைக் கவதரித்தாப்போலே போகமும் அவர்வரவாவாலே யென்கை.

---

(பெருந்தவத்தர்) என்றத்தைப்பற்ற - குணநிஷ்டரான முனிவர்க்கு பெறுதற்கரிய தபஸ்ஸேதென்ன; அருளிச்செய்கிறார் (அவனும் அவர்களுமித்யாதி.) ... ... ... (௨௪)

(பொருகயல் கண்ணீரரும்பப் புலவிதந்து) அவர்வந்து கலந்தத்தால் நான்பெற்றபேறு இதுகாணென்கிறாள். (பொருகயல் கண்)ஒன்றுக்கொன்று உபமாநமாவ தொழிய வேறுபமாநரஹிதமான கண்கள். (கயற்கண்) என்று-ஸம்ச்லேஷதசையில் ஹர்ஷத்தாலே வந்த அலமாப்பைச் சொல்லுகிறது. (நீரரும்ப) சோகாச்ருவுக் கிலக்காய்த்தென்கிறாள். (அரும்ப) விரஹாக்நியாலே உள்ளுலர்ந்து கிடக்கிறபடி. (புலவிதந்து) தன்னைக்கிட்டினரை, (வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனம்) என்கிறபடியே ஆநந்திப்பிக்கக்கடவ வவன்காண் எனக்கு துக்கத்தை விளைத்தான். (தந்து) அவர் தம்முடைய கிழிச்சிரையினின்றும் அழித்துத் தந்த தநமிதுகாணென்கிறாள். தான் ஸாதித்ததொன்றன்றியே ஈச்வரனுடைய ஔதார்யத்தாலே வந்ததாகையாலே (தந்து) என்கிறாள். (புனலரங்கமித்யாதி) தாம்போனால் நான் தரித்திருக்கவேணுமென்று பார்த்து, (நம்மூர்கோயில்) என்று போனார்.

(உலகுண்டபெருவாய ரிங்கேவந்து என் பொருகயற் கண்ணீரரும்பப் புலவிதந்து, இலங்கொலி நீர்ப்பெரும் பௌவம்மண்டியுண்ட பெருவயிற்ற கருமுகிலே யொப்பர் வண்ணம் - பெருந்தவத்தரருந்தவத்து முநிவர்சூழ-ஒருகையிற் சங்கொருகைமற்றாழியேந்தி - புனலரங்கமூரென்று போயினார்; இருகையிற்சங்கிவை நில்லா எல்லேபாவம்) என்றந்வயம். ... ... (உ௪)

அ.—இருபத்தஞ்சாம்பாட்டு. (மின்னிலங்கித்யாதி) அத்தலையிலுள்ளத்தை நேராகக்காட்டி இத்தலையிலுள்ளத்தை நேராகக் கொண்டுபோனானென்கிறாள்.

மூ.—மின்னிலங்குதிருவுருவும்பெரியதோளும்
கரிமுனிந்தகைத்தலமுங்கையும்வாயும்
தன்னலர்ந்தநறுந்துழாய்மலரின்கீழே
தாழ்ந்திலங்குமகரஞ்சேர்குழையுங்காட்டி
என்னலனுமென்னிறைவுமென்சிந்தையும்
என்வளையுங்கொண்டென்னையாளுங்கொண்டு
பொன்னலர்ந்தநறுஞ்செருந்திப்பொழிலூடே
புனலரங்கமூரென்றுபோயினாரே. (உ௫)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மின் இலங்கு | மின்போலே விளங்காநின்றுள்ள, | கைத்தலமும் | திருக்கைகளும், |
| திருவுரும் | திருமேனியும், | கண்ணும் | கிட்டினரை ஒடியவும் திருக் கண்களும், |
| பெரியதோளும் | பெரிய திருத்தோள்களும், | | |
| கரிமுனிந்த | குவலயாபீடத்தை நிரஸித்தருளின, | வாயும் | ஸாந்த்வவாதம்பண்ணும்திருவதரமும், |

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| தன் | தன்னிலத்திற் காட்டில், | என்சிந்தையும் | என்னுடைய மநஸ்ஸையும், |
| அலர்ந்த | செவ்விபெற்று, | என்வளையும் | என் வளையையுங்கொண்டு, |
| நறும் | மிக்க பரிமளத்தையுடைத்தான, | என்னைஆளுங்கொண்டு | என்னையடிமையுமாக்கிக்கொண்டு, |
| துழாய்மலரின்கீழே | திருத்துழாய் மாலையின்கீழே, | பொன்அலர்ந்த | பொன்போலேயலர்ந்து, |
| தாழ்ந்து | திருத்தோளளவும் வரத்தாழ்ந்து, | நறு | பரிமளிதமாயிருந்துள்ள பூவையுடைத்தான, |
| இலங்கு | விளங்காநிற்பதாய், | செருந்திப்பொழிலினூடே | செருந்திப் பொழிலிலே, |
| சேர் | ஒன்றோடொன்று பொருந்தியிருந்துள்ள, | அரங்கம் ஊரொன்றுபோயினார் | ஸ்ரீரங்கம்நம்மூரொன்று சொல்லிப்போய்விட்டாரொன்று தோழியுடன் சொல்லுகிறாள். ... ... (உரு) |
| மகரக்குழையுங்காட்டி | திருமகரகுண்டலங்களையுங்காட்டி, | | |
| என்நலனும் | என்னுடைய ஸௌந்தர்யத்தையும், | | |
| என்நிறையும் | என்னுடைய ஸ்த்ரீத்வத்தையும், | | |

வ்யா.—(மின்னிலங்கு திருவுருவும்) மின்போலே விளங்காநின்றுள்ள திருமேனியும். (கார்வண்ணந் திருமேனி) என்றும், (கருமுகிலையொப்பர் வண்ணம்) என்றும் ஔதார்யத்தையும் ச்ரமஹரதையையும் பற்றச்சொல்லிற்று – கீழ்; இங்கு - அநபிபவநீயதையைப்பற்றச் சொல்லுகிறது. ஆனாலும் வடிவுக்கு நிறம் அதுவன்றோவென்னில்; காளமேகத்தை அருணகிரணத்தாலே வழியவட்டினாற்போலே திருவாழியாழ்வானுடைய தேஜஸ்ஸு திருமேனியெங்குமொக்கப் பரவியிருக்கையாலே சொல்லுகிறது. (வடிவார்சோதி வலத்துறையுஞ் சுடராழி) என்னக்கடவதிறே. (ஒருகையிற்சங்கு ஒருகைமற்றாழியேந்தி) என்றாரிறே - கீழே; (తమసః పరమో ధాతా శఙ్ఖచక్రగదాధరః) (தமஸஃபரமோதாதா சங்கசக்ர கதாதரஃ) என்கிற பெரியமேன்மையைக்காட்டினபடி.

---

இருபத்தஞ்சாம்பாட்டு. (மின்னிலங்கு) (கார்வண்ணந்திருமேனி) என்றும், (பெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம்) என்றுஞ் சொல்லிவைத்து, இங்கே மின்னிலங்கக்கூடுமோ வென்ன; பரிஹாரத்ரயம்; ப்ரதமம் (கார்வண்ணமித்யாதி.) த்விதீயம் (காளமேகத்தையித்யாதி)வடிவுக்குநிறம் அது என்றாலுமென்று அந்வயித்துக்கொள்வது. என்னில் என்றசங்கையிலே தாத்பர்யமில்லை. இப்பாட்டில் திருவாழி யாழ்வான் ப்ரஸங்கமுண்டோ வென்ன; அருளிச்செய்கிறார்(ஒருகையில் சங்கித்யாதி.) இந்தபாதத்துக்கு அர்த்தம்(తమసః పరమో ధాతా-தமஸஃபரமோதாதேத்யாதி.)

(மின்னிலங்கு திருவுருவும்) கிட்டினபோது,(பெருவயிற்றகரு முகிலே) என்றாள்; பேரநின்றவாறே பளபளத்துத் தோற்றினபடி. (பெரியதோளும்) காலதத்வமுள்ளதனையு மநுபவியாநின்றாலும் அவயவாந்தரங்களில் போகவொட்டாதபடியான போக்யதையையும் காவல்துடிப்பையும் சொல்லுகிறது. ஒதுங்குவார்க்கு நிழல்மிக்கிருக்கை. (పరిఘోపమాః) (సర్వభూషణభూషార్హాః) (பரிகோபமா:) (ஸர்வபூஷணபூஷார்ஹா:) என்கிறபடியே-வீர ஸிஹ்நத்தையும்போகஸிஹ்நத்தையுமுடைத்தானதோ ளென்கை.(చకాసితమితి) (சகாதமிதிஸி) (கைவளையும் மேகலையுங் காணேன்) என்று-விரோதிநிவர்த்தக த்வத்தையும், (நான்குதோளும்) என்று-போக்யதையையும் இவள்தானே சொன்னாளிறே.

(கரிமுனிந்த கைத்தலமும்) குவலயாபீடத்தை வேண்டேனென்றகையும் கம்ஸனையும் சாணூரமுஷ்டிகர்களையும் நிரஸிக்கிறபோதை வ்யாபாரமெல்லாம் இதுக்குவேண்டிற்றில்லையிறே.இத்தால்-வீரஸிஹ்நத்தையும்போகஸிஹ்நத்தையுமுடைத்தான கையென்கை. (புகர்ச்செம்முகத்த களிறட்டபொன்னாழிக்கை)என்கிறபடியே.(கையும்)அறுகாழியோடேகூடியிருக்கிறகையாலேயிறே குவலயாபீடத்தை நிரஸித்தது. (எய்வண்ணவெஞ்சிலையேதுணையா) என்று-வீரஸிஹ்நத்தையும், (கைவண்ணந் தாமரை)என்று-போகஸிஹ்நத்தையுங்காட்டினான்.

(கண்ணும்) கிட்டினாரை ஒடியெறியுங்கண்ணும்."கண்ணிணையும் அரவிந்தம்என்றாளிறேதானே. (வாயும்) அழகுக்குத்தோற்று அநந்யார்ஹமானாரைக் குறித்துத் தான் அநந்யார்ஹமானமை தோற்ற ஸாந்த்வவாதம் பண்ணும் திருவதரமும். (வாய்கமலம் போலும்) என்றாளிறே.

(தன்னலர்ந்த) இத்தால் - ஒப்பனையழகு சொல்லுகிறது. தன்னிலத்திற்காட்டில் செவ்விபெற்று அதிபரிமளிதமான திருத்துழாயாலே அலங்க்ர்தமானவளையத்தின்கீழே. (மலரின்கீழே தாழ்ந்திலங்கு மகரமித்யாதி) வைத்தவளையத்தின்கீழே திருத்தோளளவும்வரத் தாழ்ந்து பரபாகரூபத்தாலே விளங்காநின்றுள்ள திருமகரக்குழையையுங் காட்டி. பிரிந்ததுக்குமேலே திருவடித் திருத்தோளிலேயேறி இவள்முன்னே சாரிகைவந்து தனக்குள்ளத்தையடையக் காட்டி இங்குள்ளத்தையடையக் கொண்டானென்கிறாள். இத்தால் - ஒப்பனையோடு ஆபரணத்துக்குண்டான சேர்த்தியழகு சொல்லுகிறது.

---

த்ர்தீயம்(கிட்டினபோதித்யாதி)காவல்துடிப்புஎன்றதின்விவரணம் (ஒதுங்குவார்க்கித்யாதி.)ஸிஹ்நத்வயத்துக்கும் ப்ரமாணம் (చకాసితమ్ - சகாஸித என்று.) (முனிந்த) என்றதுக்கு தாத்பர்யம் (கம்ஸனையுமித்யாதி).

(புள்ளூருங்கள்வா) என்றத்தைப்பற்ற (திருவடி திருத்தோளிலேயித்யாதி.)

(என்நலனுமித்யாதி) ஸர்வஸ்வதாநம் பண்ணுவாரைப்போலேவந்து ஸர்வஸ்வாபஹாரம் பண்ணிஞனென்கிருள். (என்னலனும்) என்னுடைய ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யாதிரூபங்களையும்..நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்கிற ஆத்மகுணங்களையும். நலம் – குணம். என்நலம் – ஒருவரா லழிக்கவொண்ணுத நலம்.எதிர்த்தலையைத்தானழிக்குமித்தனையொழியத் தன்னை ஒருத்தராலு மழிக்கவொண்ணுதபடி யிருக்கை. (என்நிறைவும்) என்னுடைய ஸ்த்ரீத்வமும்.எதிர்த்தலையில் பும்ஸ்த்வத்தை யழிக்கும்படியிறே இவளுடைய ஸ்த்ரீத்வ மிருப்பது. (நிறைவு) அடக்கம். (என்சிந்தையும்) அதுக்கடியான மநஸ்ஸையும். (என்வளையுங்கொண்டு) தான்போனால் ஆச்வாஸஹேதுவா யிருக்கிற வளையுங்கொண்டு.

(என்னையாளுங்கொண்டு) என் ஸர்வஸ்வத்தையு மபஹரித்துக்கொண்டுபோகையன்றியே சுமையாளும் நானேயாகவேணுமோ. ஒருவனகத்தேபுக்கு நேராகவொடுக்கி அவன்தலையிலே சுமையைவைத்துக்கொண்டு போமாப்போலே. அங்ஙனன்றியே, அவனோடே கலந்து பரிமாறின பரிமாற்றத்தை அடிமையாக நினைத்திருக்கையாலே என்னை யடிமையுங்கொண்டா னென்கிருளாகவுமாம். (கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தர்க்கோர் குற்றேவல்) என்னக்கடவதிறே. அங்ஙனன்றியே, ஸர்வஸ்வத்தையு மபஹரித்துக்கொண்டுபோகாநின்றால் தன்னுடைமையைத் தானேகொண்டுபோகிறுனாகில் நீயென்என்னும்படி என்னை அநந்யார்ஹமாக்கியும் போனுனென்கிருள்.

(பொன்னித்யாதி) ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினோம், ஸத்தைகிடக்கவேணுமே யென்று ஊரைச்சொல்லிப்போனுனென்கிருள். தன்ஸௌகுமார்யத்துக்கு அநுரூபமாகச் சோலையூடே போனுன். பொன்போலேயலர்ந்து பரிமளிதமாயிருந்துள்ள பூவையுடைத்தான செருந்திப்பொழிலினூடே ச்ரமஹரமான கோயில் நம்மூரொன்றுபோயினுர். திருநகரியினின்றும் கோயிலளவுஞ்செல்லப்பொழிலாய்க் கிடந்ததோவென்னில்; "ஒருகாளமேகம் வர்ஷித்துக்கொண்டு போகாநின்றால் கண்டவிடமெங்கும் தளிரும் முறியுமாகாதோ" என்று பட்டரருளிச்செய்வர். பிரிந்தார் இரங்கும் நிலத்தில்மரம் செருந்தியிறே.

---

(என்னையாளுங்கொண்டு)என்றதுக்கு முந்தினவர்த்தம்-என்னையடிமைகொள்ளவேணுமோவென்று வெறுப்பிலே; திருநகரியென்றது-திருவாலி திருநகரியென்றபடி. அல்லாதமரங்களுமுண்டாயிருக்க வழியெல்லாம் செருந்தியாயே யிருக்கிறதென்று இவள் சொல்லும்படி யென்னென்ன; அருளிச்செய்கிருர் (பிரிந்தாரிரங்கும் நிலத்திலித்யாதி.)

(போயினூர்) முன்பேகாற்கடைக்கொண்டு பெறவேண்டும்படிதான் போகிறபோது அவர் பின்புறமிருந்தபடி. (புனலரங்கம்) ச்ரமஹரமானதேசம். நித்யஸம்ச்லேஷம் பண்ணலாம் தேசம். ( போயினூரே ) பரமபந்துவாயிருந்துவைத்து இப்படி செய்தார்காணென்னும் இன்னாப்பாலே, பிரியாதேகூடவிருந்தல் போகிறபோது கூடக்கொண்டுபோதல் செய்யவேண்டாவோ வென்கிறாளாகவுமாம். (பொன்னித்யாதி) புஷ்பாபசயம் பண்ணுகைக்கும் ஜலக்ரீடைபண்ணுகைக்கும் ஏகாந்தமான தேசம் நம்மூரொன்று போயினூரென்னவுமாம். (பொழிலினூடேபுனல்) மேல் செருந்தியாய் கீழ்நீராயிருக்கை. போகிறபோது அவர்பின்பிருந்தபடி காணப்பெற்றதில்லைகாண்நீ. விக்ரமசோழதேவன், "உங்கள் தலைமகள் பிரிந்தவிடத்தில் சொன்னகவியென், என்ன; அவள் எலும்புஞ் சாம்பலுமுடையவனென்றாள்; இவள் (மின்னிலங்கு திருவுருவம்) என்றாள் என்ன; தன்காலிலே துகை யுண்டவனைத் தோழிக்குச்சொல்லுகிறக (திருவுரு) என்பதே! இவள் தலைமை யுடையவள்; அவள் (பிணங்கின்னி) என்றாள். ... (உரு)

அ.—இருபத்தாறும்பாட்டு. (தேமருவு)அவன் இவளுடைய வாற்றாமை ஸ்வகர்ஷியின்பலமாகையாலே அதிலேமுகமலர்ந்து கடக்கநிற்கையாலும், தாயார் ஹிதஞ் சொல்லு மளவல்லாமையாலே ச்லாகித்துக் கடக்க நிற்கையாலும், தோழி இவ்வளவில் இவளை ஆச்வஸிப்பிக்கும் விரகேதோ வென்று பார்த்து, பூர்வவ்ர்த்தத்தைக் கேட்க, வ்ர்த்தகீர்த்தநமாகையாலே தரித்து அத்தை இரண்டுபாட்டாலே இவளுக்குச் சொன்னாள்; பின்பும் அங்கே ஓரவகாசங்கண்டு இப்படி உனக்கு பவ்யனாயிருந்தால் பிரிகிற போது போகாதேகொள் என்று ஒருவார்த்தைசொல்லமாட்டிற்றிலையோ வென்ன; அதுவுஞ் சொன்னேன், அவன் பரப்ரேரிதனாய்ப்போகையாலே இதுகார்யகரமாய்த் தில்லை யென்கிறாள். மூன்றாம்பாட்டாலே - கொண்டுபோனவன் றன்னை நியமிக்கமாட்டிற்றிலையோவென்ன; ஒருவரிருவரோ, பரிகரமெல்லாம் வந்து சூழ்ந்துகொண்டதென்றாள்; நாலாம்பாட்டாலே - அது தன்னை நியமித்துவிட்டாள்; அஞ்சாம்பாட்டாலே – ஸர்வஸ்வதாநம்பண்ணுவாரைப்போலேவந்து அத்தலையிலுள்ளத்தை நேராகக்காட்டி இத்தலையிலுள்ளத்தை நேராகவபஹரித்துக்கொண்டு போகிறவர் என்ஸத்தைகிடக்கவேணுமென்று ஊரின்பேரைச் சொல்லிப்போனாரென்றாள்; ஆறாம்பாட்டாலேப்ராச்நமில்லாமையாலேப்ரதிவசநமில்லையாய் பழையவாற்றாமைதலையெடுத்து நம்முடையவாற்றாமை யறியாமையாலே வாராதொழிகிறானித்தனை, அத்தையறிவிக்கவே ஸர்வதாவருமென்று பார்த்துச் சிலவண்டுகளைத் தூதுவிடுகிறாள்.

---

ப்ராஸங்கிகம் (விக்ரமசோழனித்யாதி.) ... (உரு)

தன்னுடைய பந்துவர்க்கம் தனக்குமுன்னே தறைப்பட்டுக் கிடக்கையாலும், சேதநர் தூதுபோனவிடத்தில் அதுகார்யகரமாகக் காணமையாலும், ராமாவதாரத்திலே திர்யக்குக்கள் தூதுபோன விடத்தில் கார்யகரமாகக்காண்கையாலும், திர்யக்குக்களைத் தூதுபோகவிடுகிறாள். பரமசேதநனான க்ர்ஷ்ணன தூதுபோனவிடத்தில்ஊர்ப்பூசல்விளைத்துவந்தானித்தனையிறேசெய்தது, ஆனால் குரங்கைத் தூதுவிடாதே வண்டைத் தூதுவிடுவானென்னென்னில்; அங்கு-பெண்தூதாகையாலே விரக்தனுமாய் ஸமர்த்தனுமாயிருப்பானொருத்தன் தூதுபோக வேண்டிற்று; விச்லேஷத்திலாற்றாமை யறிவாரைப்போக விடவேண்டுகையாலும், இவை தன்னுடைய ஸந்நிதியிலே கலந்து ஸுகித்திருக்கக் காண்கையாலும் இவற்றைத் தூதுவிடுகிறாள். ஆனால் கலவியிலே ப்ரவணமாயிருக்கிறவிவைபோகக் கூடுமோவென்னில்; ஆத்மஸாம்யத்தாலேசொல்லுகிறாள். தானுமவனும்ஸம்ச்லேஷிக்குமளவில்சிலதுக்கிகள்கூடினால் ([illegible]) என்று அவர்கள்கார்யத்தை முடித்தபின்பிறேதங்கள்போகத்தி விழிவது, ப்ரதமத்தில்வண்டுகளைக்கொண்டாடுகிறாள் தனக்கிரங்கிக் கார்யஞ்செய்கைக்காக. ([illegible]) என்று கடகளைஸ்துத்யராகச் சொல்லக்கடவதிறே.

மூ.—தேமருவுபொழிலிடத்துமலர்ந்தபோதைத்
தேனதனைவாய்மடுத்துஉன்பெடையும்நீயும்
பூமருவியினிதமர்ந்துபொறியிலார்ந்த
அறுகாலசிறுவண்டேதொழுதேனுன்னை
ஆமருவிநிரைமேய்த்தவமரர்கோமான்
அணியழுந்தூர்நின்றானுக்கின்றேசென்று
நீமருவியஞ்சாதேநின்றோர்மாது
நின்னயந்தாளென்றிறையேயியம்பிக்காணே. (உகூ)

| பதம். | உரை. |
|---|---|
| தேமருவு | தேன்மாறுத, |
| பொழிலிடத்து | பொழிலையுடைய தேசத்திலே, |
| மலர்ந்தபோதை | பூஅலர்ந்தபோதுண்டான, |
| தேனதனை | தேனை, |
| வாய்மடுத்து | பாநம்பண்ணி, |
| உன்பெடையும் | உனக்கு பவ்யமான பெடையும், |
| நீயும் | அதுக்கு பவ்யமான நீயும், |
| பூமருவி | புஷ்பங்களிலே பொருந்தி, |

| பதம். | உரை. |
|---|---|
| இனிதமர்ந்து | இனிதாகவமர்ந்து, |
| பொறியிலார்ந்த | புள்ளிமிக்கிருப்பதாய், |
| அறுகால | ஆறுகால்களையுடைய, |
| சிறுவண்டே | சிறியவண்டே, |
| உன்னைத் தொழுதேன் | எங்களைக்கூட்டிவைக்குந் தன்மையுள்ள உன்னைத் தொழுதேன்; |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அமரர்கோமான் | நித்ய ஸூரி நிர்வாஹகனாயிருந்துவைத்து, | நீமருவி | நீ அவனிடத்தில் பொருந்தி, |
| ஆநிரை | பசுக்கூட்டங்களை, | அஞ்சாதே நின்று | அஞ்சாமல் எதிரே நின்று, |
| மருவிமேய்த்த | நன்றாகரக்ஷித்தவனாய், | ஓர்மாது | ஒரு ஸ்த்ரீயானவள், |
| அணியழுந்தூர்நின்றானுக்கு | திருவழுந்தூரிலே நின்றவனுக்கு, | நின்நயந்தாளென்று | உன்னை ஆசைப்படாநின்றாளென்று, |
| இன்றேசென்று | இன்றைக்கே போய், | இறைஇயம்பிககாண் | ஒருவார்த்தை சொல்லவேணுமென்கிறாள். ... (உகூ) |

வ்யா.—(தேமருவுபொழிலிடத்து) தேன்மாறாத பொழிலையுடையதேசத்திலே. மருவுகையாவது - என்றுமொக்க வுண்டாயிருக்கையும், ஸம்ர்த்தமாயிருக்கையும். பொழிலென்கையாலே-ச்ரமஹரதையைச் சொல்லுகிறது. பரமபதத்துக்கு மேற்றம் என்றுமொக்கவுண்டாயிருக்கையும் ஸம்ர்த்தமாயிருக்கையும் தாபஹரமாயிருக்கையுமிறே. உங்களுக்கு அந்தபோகஸ்தாநத்தி லிருப்பு போகமாவது என்னையும் போகஸ்தாநத்திலே யிருத்தினாலன்றோ வென்கை. (மலர்ந்தபோதைத் தேனதனைவாய்மடுத்து) அபிநவமாய் அதிரஸமாயிருந்துள்ளதேனைப் பாநம்பண்ணி. கழியவலர்ந்தால் பர்யுஷிதமாய்த் தேன்அல்பமுமாய்ப் பழசுமாயிருக்கும்; கடுமொட்டாயிருந்தால் தேன் உத்பந்நமாகிறவளவாகையாலே அல்பமுமாய், வலியவலர்த்துகையாலே ஸாரஸ்யமுங்குறைந்திருக்கும்; ஆகையாலே அலருகிறபோதைத் தேனென்கை. காற்றாலே அலரக்கடவ புஷ்பம்இவை சொல்லும்போதாகவலருமோ வென்னில்; முன்பு தொட்டாரோடே தோஷமாம்படிபக்வமா யிருக்கையாலே இவற்றின் சிறகின்காற்றாலும் உச்வாஸத்தாலும் மலருமென்கை. (பூவிரியமதுநுகரும்) என்னக்கடவதிறே. செவ்வியறியாதே பொகட்டுப்போனவரைப்போலேயன்றியே நீங்கள்செவ்வியறிந்து அநுபவிக்கப் பெற்றேனென்கை. என்னையுஞ் செவ்வியழியாதே அவனோடே சேர்த்தபோதன்றோ நீங்கள் செவ்வியறிந் தநுபவித்திகோளாவது. (வாய்மடுத்து) பர்த்ர்பார்யைகள் ஒருகலத்திலே உண்பாரைப்போலே அத்தேனை வாயிலேகொண்டு அந்யோந்யம்வாயிலேகொடாநிற்கை. அந்யோந்யம்போகத்துக்கு வர்த்தகமாயிறே தேனிருப்பது. என்னையும் அவனோடே சேர்த்து, (ஜஜஂமேத்யமிஜஜஂஸ்வாது) (இதம்மேத்யம் இதம்ஸ்வாது) என்னும்படி பண்ணவேண்டாவோ வென்கை.

இருபத்தாறும்பாட்டு. (தேமருவுபொழில்) (தேமருவு) என்றவர்த்தமாநத்தாலே-என்றுமொக்கவுண்டாயிருக்கை.

(உன்பெடையும் நீயும்) உனக்கு பவ்யமான பெடையும் அதுக்கு பவ்யமானநீயும் உன்சந்தத்தை யநுவர்த்திக்கும்பெடையும் அதின்சந்தத்தை யநுவர்த்திக்கும் நீயும். அவனைப்போலே சந்தத்தை யறியாதொழிகை யன்றியே நீங்கள் சந்தாநுவர்த்திகளாய்ப் பரிமாறப்பெற்றதே. (உன்பெடையும் நீயும்) சேரவிருப்பார் பிரிந்திருப்பார் கார்யஞ்செய்யவேண்டாவோ. நீங்களும் என்னைப்போலே பிரிந்திருந்து உங்களைச் சேரவிடவேண்டாதே போரப்பெற்றதே! என்கிறாள். மஹாராஜர் ராஜ்யதாரங்களை யிழந்திருக்கையாலே அத்தைச் சேரவிட்டுக் கார்யங்கொள்ளவேண்டிற்றிறே.

(பூமருவி) அக்நியிலே அணைவாரைப்போலே யிதென்னஸாஹஸமென்கிறாள். * மென்மலர்ப்பள்ளிவெம்பள்ளியாயிறேதனக்கிருப்பது. அக்நிஸ்தம்பநமுடையார்க்குச் செய்யலாமிறே. அக்நிஸ்தம்பநமாவது - மிதுநமாயிருக்கையிறே. படுக்கைபொருந்தாதே தரைக்கிடைகிடக்கிற வென்கார்யஞ்செய்தாலன்றோ உங்களுக்குப்படுக்கைபொருந்திற்றுவது. ச்ரமஹரமானசோலை போகஸ்தாநமாகவும், மது போக்யமாகவும், பூபடுக்கையாகவும், தம்பதிகள்சேரவிருக்கவும்பெறுவதாய் இதொரு ஆச்சர்யமிருந்தபடி யென்னென்கிறாள். (இனிதமர்ந்து) இனிதாகவமர்ந்து. ஸுகரூபமாக ஸம்ச்லேஷித்து. துக்கரூபமான கலவியிறே தன்னது. ஸம்ச்லேஷாநந்தரம்விச்லேஷிக்கையாலே, (இது நமக்கோர் புலவிதானே) என்றாளிறே. உங்களுக்கு அது ஸுகரூபமாவது என் துக்கத்தைப்போக்கிறலன்றோ.

(பொறியிலார்ந்த) பொறியென்று - புள்ளி. புள்ளிமிக்க. ஸம்ச்லேஷத்தால்வடிவிற்பிறந்தபுகரைச்சொல்லுகிறது. (யுவாகுமார:, யுவதிஸ்ச குமாரிணீ) (யுவாகுமார:, யுவதிஸ்சகுமாரிணீ) என்கிற பருவத்தையுடைத்தாயிருக்கை. உபவாஸக்ர்சையாய், (சோபிதாபிநசோபதே) (சோபிதாபிநஸோபதே)என்னும்படி யிருக்கிற வெனக்கு அழகையுண்டாக்கிறலன்றோ உங்களுக்கு அழகாவது. (அறுகால சிறுவண்டே) த்விபாத்தாயிருத்தல், சதுஷ்பாத்தாயிருத்தல் செய்கையன்றியே, கமநஸாதநமான கால்கள் ஆறுண்டாகப் பெற்றேனென்கிறாள்'' என்று பூர்வர்கள் நிர்வாஹம். வண்டுக்கு கமநஸாதநம் சிறகாகையாலும், மேலே, (தொழுதேன்) என்கையாலும், என்தலையிலே வைக்கைக்கு ஆறுகாலுண்டாகப் பெற்றேனென்கிறாள்'' என்று பட்டரருளிச்செய்வர்.

(சிறுவண்டே) ஏற்கவே சிறியையாய்த் திருவடியைப்போலே கார்யகாலத்திலே சிறுகவேண்டாவே யுனக்கு. (வண்டே) திருவடியைப்போலே ஆராய்ச்சிப்படவேண்டாதபடி வளையத்தேயாதல், தோளில் மாலையிலே யாதலிருந்து வார்த்தைசொல்லும்படியான ஜந்மமன்றோ உன்னது.

---

(உன்பெடையும் நீயும்) என்றதுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னைப்போலேயித்யாதி.)

அந்யோந்ய ஸம்ஸ்லேஷ ஸுகத்தாலே மதிகெட்டுக்கிடக்கிற வற்றின் செவியிலே ஆர்த்தத்வநிபட்டவாறே அக்நிகணங்களைத் தூவினாப்போலே அவை துணுக்கென்று எட்டிப்பார்த்தன (தொழு தேனுன்னை) உன்காலிலே, தொழுதேன் - விழுந்தேன். கடகர் போலேகாணும் ஸ்துத்யரும், நமஸ்கார்யரும். (உன்னை) அவனைத் தொழுகிறேனல்லேன், அவன் போகட்டுப்போன தசையிலும் அநுதல்பிணைக்கவிருக்கிற வுன்னைத்தொழுதேன். அவனுமுண்டாய் நானுமுண்டாயிருக்கப் பிரிந்து க்லேசப்படாநின்றேன், சேரவிட்ட நீயன்றோ ஸ்துதிக்கப்படுவாயும் நமஸ்கரிக்கப்படுவாயும். இவளுடைய * ௸ - அத்ரபரத்ரசாபி யிருக்கிறபடி.

என்னைத் தொழுகிறதென், கார்யத்தைச் சொல்லலாகாதோ வென்னச் சொல்லுகிறாள் (அமரர்கோமான்) * அயர்வறுமமரர்க ளதிபதிக்குச் சென்று அறிவியுங்கோள். அவனை எங்களால் கிட்டலாமோவென்ன (ஆமருவிநிரோமேய்த்த) அம்மேன்மை கிடக்கச் செய்தேகாண் பசுக்களோடே பொருந்திப் பசுக்களைரக்ஷிப்பது. நித்யஸூரிகளுக்குத் தன்னை யொழியச்செல்லாதாப்போலே காண் பசுக்களையொழியத்தனக்குச் செல்லாதே யிருக்கும்படியும். அவர்களுக்குத் தன்னை யொழியச்செல்லாதபடியாலே முகங்காட்டுகிறானித்தனை; பசுக்களோடேகாண் அவனுக்குப் பொருத்தம்.

அது பின்னையொருகாலத்திலன்றோ வென்ன (அணியழுந்தூர் நின்றானுக்கு) அக்காலத்தில் பசுக்களை ரக்ஷித்தாப்போலே அக்காலத்துக்குப் பிற்பாடராய் பசுஸமரா யிருப்பாரையும் ரக்ஷிக்கைக்காகத்திருவழுந்தூரிலே நின்றான், அவனுக்கறிவியுங் கோள். அவன் பிரிகிறபோது (புனலரங்கமூர்) என்று சொல்லிக் கோயிலிலே போயிருக்க, திருவழுந்தூரிலே தூதுவிடுகை,(ஜ்ஞேஷு ஜ்ஞேக்ஷூலயகு) (கர்ணேஸ்பர்ஷ்டேகடிம்சலயதி) என்கிறபடியே அஸங்கதமன்றோ வென்னில்; அவனும் சேதநனாகையாலே ஆற்றாமை யவனுக்கு முண்டாயிருக்கும், ஒருகார்யப்பாட்டாலே பிரிந்தானித்தனை, முடியப்போகமாட்டான், திருவழுந்தூரிலே பிற்காலித்து நிற்கக்கூடும், அங்கே சென்றறிவியுங்கோளென்கிறாள். அங்ஙனன்றியே, கோயில் போகஸ்தாநமாகையாலே என்னை யொழிய அங்குதரிக்கமாட்டான், அத்தாலே எதிரே திருவழுந்தூராளவிலே வரும், அங்கே சொல்லுங்கோளென்கிறாளாகவுமாம்.

(நின்றானுக்கு) அவ்வருகுபோகமாட்டாமையாலே ஸ்தாவர ப்ரதிஷ்டையாய் நின்றானென்னுதல்; கோயில்நின்றும் வந்து தான் மேல்விழமாட்டாமையாலே இத்தலையில் நின்றும் ஆளவருவாரொன்று பார்த்து நின்றானென்னுதல். (இன்றேசென்று) நாளைச் செய்கிறோமென்னவொண்ணாது, நாளைக்கு நானில்லையென்கிறாள்.

நானில்லாமையாலே அவனுமில்லை,இரண்டுதலையும் பிழைக்கவேண்டியிருந்திகோளாகில் இன்றேசெல்லுங்கோள். இரண்டுதலையும் அழிக்கையாவது-ஜகதுபஸம்ஹாரம்பிறக்கையிறே.'(நீமருவி)*ஆமருவி நிரைமேய்த்தவனுகையாலே திர்யக்ஜாதியான வுனக்கு முகந்தரும், நீசென்றுகிட்டி. (நீமருவி) என்னைப்போலே அவனுடைய சீலாதிக்யத்தைக்கண்டுவைத்தும்.(அவனை நாம் தேவனென்றஞ்சினேமே) என்று-அவர்பக்கலிலே * அதஸ்மிம்ஸ்தத்புத்திபண்ணிப் பிற்காலியாதே அவனோடேபொருந்தி.(அஞ்சாதேநின்று)*அமரர்கோமானுயிருக்கிறபடியைப் பார்த்து அஞ்சாதே * ஆமருவி நிரைமேய்த்தபடியைப்பார்த்து தரித்து நின்று. அங்ஙனன்றியே (அஞ்சாதேநின்று) மஹிஷிபக்கல்நின்றும் வந்தார்களென்று தோற்றும்படி மேலிட்டு நின்று வார்த்தைசொல்லுங்கோ ளென்கிறாளாகவுமாம். மேலிட்டு வார்த்தைசொன்னபோதே என்பக்கல் நின்றும் வருகிறாளென்றிருக்கும்.

அவனுக்கறிவிக்கும்வார்த்தையேதென்னச் சொல்லுகிறாள் மேல் (ஓர்மாது) பேர்சொல்லவேண்டா, "ஒருத்தி" என்னவமையும், தாமேயறிவர். ஒருகாட்டிலே ஒருமான் அம்புபட்டுக்கிடந்து துடியாநின்றதென்றால் எய்தவன் அறியுமிறே. அதவா (ஓர்மாது) அத்விதீயை யாயிருப்பாளொருத்தியென்று சொல்லுங்கோளென்கிறாள். அத்விதீயையானமாதென்றபோதேயறியும். ஸம்ஸாரிகளுக்குங் கூட்டன்றியே, முக்தருக்குங்கூட்டன்றியே,முமுக்ஷுக்களுக்குங்கூட்டன்றியே, (பிறந்திட்டாள்) என்னும்படியிறேயிருப்பது. (நின்நயந்தாள்) சென்றபோதே யறியும், வார்த்தை சொல்லவேண்டிற்றில்லை, ஓர்மாது என்றபோதேயறியும், இவ்வளவு போராது என்றிருந்தாயாகில் ஒருவார்த்தை சொல்லென்கிறாள். (நின்நயந்தாள்) படுகுலைப்பட்டாளென்று சொல்லுங்கோள். ஒருகாபுருஷனையோ ஆசைப்பட்டது, வ்யதிரேகத்தில் ஆற்றவொண்ணாதபடியான வைலக்ஷண்யத்தையுடைய வுன்னையன்றோ வாசைப்பட்டதென்று சொல்லுங்கோள். (நின்நயந்தாள்) பர வ்யூஹ விபவங்களிலேயாசைப்பட்டாளோ ஆறியிருக்கைக்கு என்றுசொல்லுங்கோள். (இறையே யியம்பிக்காணே)நீங்கள்வார்த்தைசொல்ல உபக்ரமித்தபோதே உங்களை முடியச்சொல்லவொட்டான், அவன்முன் உங்களைக்கொண்டாடுமென்கிறாள்.

---

(ஓர்மாது) என்றதுக்கு தாத்பர்யமருளிச்செய்கிறார் (ஸம்ஸாரிகளிலுமித்யாதி.)

தாத்பர்யம் (ஒருகாபுருஷனையோவித்யாதி.)த்ரீயதாத்பர்யம் (பரவ்யூஹேத்யாதி.) ... ... ... ... ...(உகூ)

(இறையேயியம்பி) "ஓர்மாது" என்று சொன்னபோதே அவனறியும், (நின்நயந்தாள்) என்கிற விதுவும் மிகையாம்படியா யிருக்குமென்னவுமாம். (காணே) நீ இவ்வளவுஞ் சொன்னபோதே அவன் உன்னை ஸத்கரிக்கும்ஸத்காரமெல்லாம் காணவன்றோபுகுகிறாய். (ధర్మతః పరిరక్షితః) (தர்மதஃபரிரக்ஷிதஃ) என்பது, (ఏష సర్వస్వ భూతస్తు పరిష్వఙ్గః) (ஏஷஸர்வஸ்வபூதஸ்துபரிஷ்வங்கஃ)என்று தழுவிக்கொள்ளுவதாகவன்றோ புகுகிறான்.(காணே)நான் காணப்பெறாத வடிவையன்றோ நீகாணப்புகுகிறா யென்னவுமாம். (உசு)

அ.—இருபத்தேழாம்பாட்டு. (செங்கால) கீழ்ப்பாட்டில்-வண்டுகளைத் தூதுவிட்டாள்; அதுசென்று சொல்லி மறுமாற்றங்கொண்டுவருமளவும் தரித்திருக்க சக்தியில்லாமையாலே ஒரு நாரையைத் தூதுவிடுகிறாள்.(దిక్షు సర్వాసు మార్గంతే)(திக்ஷு ஸர்வாஸு மார்க்கம்தே) என்றும் பிராட்டியைத் தேடுகைக்கு ஸ்ரீவாநர வீரரை யடைய ஏவினாப்போலே இவளும் கண்டவற்றை யடைய ஏவுகிறாள். ராமாவதாரத்தில் வாநரஜாதி ச்லாக்யமானாப்போலே காணும் ஆழ்வார்களைத் தோற்றி பக்ஷிஜாதி ச்லாக்யமானபடி.

மூ.—செங்காலமடநாராயின்றேசென்று
திருக்கண்ணபுரம்புக்கென்செங்கண்மாலுக்கு
என்காதலென்துணைவர்க்குரைத்தியாகில்
இதுவொப்பதெமக்கின்பமில்லை; நாளும்
பைங்கானமீதெல்லாமுனதேயாகப்
பழனமீன்கவர்ந்துண்ணத்தருவன்;தந்தால்
இங்கேவந்தினிதிருந்துன்பெடையும்நீயும்
இருநிலத்திலினிதின்பமெய்தலாமே. (உஎ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செங்கால | சிவந்தகால்களையும், | செங்கண் | புண்டரீகாக்ஷனாய், |
| மடம் | மடப்பத்தையுமுடைய, | மாலுக்கு | ஆச்ரிதவ்யாமுக்தனாய், |
| நாராய் | நாரையே, | என்துணைவர்க்கு | எனக்குவல்லபரானவரிடத்திலே, |
| இன்றே | இன்றைக்கே, | | |
| சென்று | இவ்விடம் விட்டுச்சென்று, | என்காதல் | எனக்குஅவர்பக்கலுண்டானவ்யாமோஹத்தை, |
| திருக்கண்ணபுரம்புக்கு | திருக்கண்ண புரத்திலே ப்ரவேசித்து, | உரைத்தியாகில் | சொல்லுவாயேயாகில், |
| என் | என்னபிமாநத்திலேயடங்கி யிருப்பவனாய், | எனக்கு | அவரைப் பிரியில்தரியாதவெனக்கு, |
| | | இதுவொப்பது | இதுக்கு ஸத்ரசமான, |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இன்பமில்லை | ஸுகமில்லை; | தருவன் | விருப்பத்தோடே கொடுப்பேன்; |
| நாளும் | நீயுள்ளதனையும், | தந்தால் | தருவேனேயாகில், |
| இது | இந்த, | உன்பெடையும்நீயும் | உன்னுடைய மனையாட்டியும் நீயும், |
| பைங்கானமெல்லாம் | பரப்பை யுடைத்தான சோலைசூழ்ந்த காட்டையெல்லாம், | இங்கேவந்து | இவ்விடத்தில் வந்து, |
| உனதேயாக | உனக்கே உரித்தாம்படிசெய்து | இனிதிருந்து | ஸந்துஷ்டசித்தரா[யிருந்து, |
| பழனம் | நீர் நிலங்களிலுள்ள, | இருநிலத்தில் | இந்தமஹாப்ருதிவியிலே, |
| மீன் | மத்ஸ்யங்களை, | இனிது | இனிதாக, |
| கவர்ந்து உண்ண | மேல்விழுந்து புஜிக்கும்படியாக, | இன்பு எய்தலாம் | * அந்தமில்பேரின்பத்தைப்ராபிகலாகும் மென்கிறாள் (உஎ) |

வ்யா. —(செங்காலமடநாராய்) ஸம்ச்லேஷதசையில் தன் காலை அவன் கொண்டாடக்கண்டிருந்தவளாகையாலே அல்லாத வவயவங்களைவிட்டுக் காலைக்கொண்டாடுகிறாள். இதொருகாலும் சிவப்புமிருந்தபடி யென்னென்கிறாள். ஒருசிவந்தகாலோடே வாஸனையுண்டுபோலேகாணும் இவளுக்கு. அபிமதனுடையகால் போலேயிருந்ததீ! உன்காலுமென்கிறாள். கருமுகைமாலையைச் சும்மாடுகொண்டாப்போலே தூதுவிடுகைமிகையாய் ஸதாதர்சநம் பண்ணலாயிருந்ததீ! உன்காலிருந்தபடியென்கிறாள். அவன்காலோடொக்குமென்னுமிடம் தப்பச்சொன்னேன், தன்காலைத்தருமித்தனையிறே அவன் செய்வது, அவன் காலையுந் தந்து உன்னையுந் தருமேற்றமுண்டே இக்காலுக்கு. நீயும் ஸுலபமாயிருந்து அவனையும் சுலபனாக்குமேற்றமுண்டேயுனக்கு.

(மடநாராய்) அறிவுகெட்டநாராய். (மடம்) என்று-இங்கு அறிவின்மையைச் சொல்லுகிறது. ஸ்தோத்ரம்பண்ண விழிந்தவள் இங்ஙன் சொல்லக்கடவளோவென்னில்; நிந்தாஸ்துதி போலே இதுவுங் கொண்டாட்டத்திலே யொன்றாயிருக்கிறது. நிந்தாஸ்துதியாகிறது - ஆபாதப்ரதீதியிலே நிந்தைபோலேயாய் விழுக்காட்டிலே ஸ்தோத்ரமாயிறேயிருப்பது. ஸம்ச்லேஷதசையில் (నశాస్త్రంనైవచక్రమః)(நஶாஸ்த்ரம்நைவசக்ரம:)என்கிறபடியே, அறிவழிந்து முறைகெடப் பரிமாறுகையிறே ப்ரணயித்வத்தில் உனக்குண்டான கௌசலமென்கிறாள்.

இருபத்தேழாம்பாட்டு. (செங்காலமடநாராய்)காலைமுற்படக் கொண்டாடுவானென்னென்ன; அருளிச்செய்கிறார் (ஸம்ச்லேஷதசையிலித்யாதி.)

முறையிலே பரிமாறில் ஸ்வரூபத்தைநோக்கிற்று மித்தனை யொழியப்ராணயியன்றிக்கே யொழியுமிறே. என்னி மூவுநீரும்படி யானபூர்த்தி உனக்குண்டாகப் பெற்றேனென்கிறாள்.

(நாராய்) என்கிற வுக்தி அம்மே! என்பாளைப்போலேயிருக்கிறதாய்த்து. வழிபறியுண்கிறதசையிலே தாய்முகத்திலே விழித்தாப் போலேயாய்த்து அவனைப்பிரிந்து நோவுபடுகிறதசையிலே இதின் ஸந்நிதியுண்டானவிது. (పమ్పాతీరేహనుమతా సఙ్గతః) (பம்பாதீரே ஹநுமதாஸங்கதஃ) என்று பிராட்டியைப்பிரிந்து ஸ்மாரக பதார்த்தங்களின்கையிலே பெருமாள் நோவுபடுகிறதசையிலே திருவடிவந்து ஸந்நிஹிதனானவிது வழிபறியுண்டதசையில் தாய்முகத்திலேவிழித்தாப்போலேயிருந்ததிறே பெருமாளுக்கு. (நாராய்) என்றபேரைத்தையார்த்தி இசையிலேயிறே தோற்றுவது; ராஜமஹிஷியாகையாலே கைக்கூலிதந்து கார்யஞ் செய்யவேண்டும்படியன்றோ வென்னுடைய வேற்றமிருப்பது.நீஅபேக்ஷிக்கவேணுமோ,கார்யத்தைச் சொல்லலாகாதோ வென்னச் சொல்லுகிறாள். (இன்றேசென்று) நாளைச்செய்கிறோமென்னுமதன்று. அவன்படியைப்பார்த்தாலும் நாளைச்செய்யுமதன்று, என்படியைப்பார்த்தாலும் நாளைச்செய்யுமதன்று. (నజీవేయం క్షణమపి) (நஜீவேயம் க்ஷணமபி) என்னும்படியாய்த்து அவன்படி; (జలాన్మత్స్యావివోద్ధృతౌ) (ஜலாந்மத்ஸ்யாவிவோத்ருதௌ) என்னும்படியாய்த்து என்படி.

(திருக்கண்ணபுரம்புக்கு) ரிஷிகளும் அல்லாத ஆழ்வார்களும் சொல்லுமாப்போலேயன்றுகாணும் - இவர்க்குத் திருக்கண்ணபுரமென்றாலிருக்கும்படி. அவர்களளவன்றே இவர்க்கு அவ்வூரிலுண்டான பாவபந்தம். அநந்தாழ்வான் "திருவேங்கடமுடையான்" என்னுமாப்போலேயும், பட்டர் "அழகிய மணவாளப்பெருமாள்" என்னுமாப்போலேயும், சோமாசியாண்டான் "எம்பெருமானாரேசரணம்" என்னுமாப்போலேயும் திருநாமங்களைச் சொல்லும்போது இவராதரம். (கண்ணபுரம்புக்கு) திருவழுந்தூரிலே தூதுவிட்டாளாகில் பின்பும் அங்கே விடுமதொழிய இங்கே விடுவானென்னென்னில்; திருவழுந்தூரில் அவன் தரிக்கமாட்டான், வண்டும் தானும் அரைகொலேயத் தலைகொலேய வெதிரேவந்து ஒருபயணம் புகுராநிற்கும், அங்கே செல்லுங்கோளென்கிறாள்.

---

(மடப்பம்) என்று - ஸ்த்ரீத்வமாய், அத்தால் - அல்லாத ஆத்மகுணங்களும் உபலக்ஷணமாக்கி தாத்பர்யமருளிச்செய்கிறார் (என்னிழவுநீரும்படியானவித்யாதி.)

(என்செங்கண்மாலுக்கு) (என்மாலுக்கு) உபய விபூதியும் தாமிட்ட வழக்காயிருக்கிறவர், நானிட்ட வழக்காம்படி என்ன பிமாநத்தே யடங்கியிருக்கிறவர்க்கு. (செங்கண்மாலுக்கு) கண்ணழகைக்காட்டி என்னை (ஜிதம்)என்னப்பண்ணித் தம்மபிமாநத்தேயிட்டுவைத்தவர்க்கு. (செங்கண்மாலுக்கு) (అనిద్రస్సతతంరామః) (அநித்ரஸ்ஸததம்ராமஃ) என்கிறபடியே என்னைப் பிரிகையாலே அவர்க்கு உறக்கமில்லை, அத்தாலே கண்குதறிச் சிவந்திருக்கும், அதுஉங்களுக்கு அடையாளமென்கிறாளாகவுமாம்.(மாலுக்கு)பெரும்பித்தர்க்கு. தம்முடையபித்தைக்காட்டி என்னைப்பிச்சேற்றினவர்க்கு. பிச்சேறியிருக்குமத்தனையிறே இத்தலைக்குள்ளது, பிச்சேறியிருக்கையும் எதிர்த்தலையைப் பிச்சேற்றுகையும் அத்தலைக்கேயிறேயுள்ளது. (மாலாய்ப்பிறந்தநம்பியை மாலேசெய்யும் மணாளனை) என்னக்கடவதிறே.

(என்காதல்) தம்முடையகாதல்போலன்றென்று சொல்லுங்கோள். (மின்னிலங்கு திருவுருவு) என்று-உடம்பு குறியழியாதபடியன்றோ நீர் காதல்பண்ணிற்று, * பொங்கார்மென்னிளங்கொங்கை பொன்னேபூக்கும்படியன்றோ அவன்காதல்பண்ணிற்று என்னுங்கோள். (என்காதல்)(యాప్రీతిరవివేకానాం విషయేష్వనపాయినీ) (யாப்ரீதிரவிவேகாநாம்விஷயேஷ்வநபாயிநீ) என்கிறபடியே நாட்டார் காதல்போலன்று, முக்தர்காதல்போலன்று காணும் இவளுடைய காதல். ஜ்ஞாநம்பிறந்தவாறேத்யாஜ்யமானகாதலிறே ஸம்ஸாரிகளது ஸுகஹேதுவான காதலிறே முக்தரது. (என்துணைவர்க்கு) எனக்கு அவர்ஜநீயபந்துவாயிருக்குமவர்க்கு. எவ்வவஸ்த்தையிலும் எனக்குத்துணையாயிருக்குமவர்க்குச்சொல்லுங்கோள்.விமுகமான தசையிலே ஸத்தையைநோக்கிப் பின்பு ஆபிமுக்யத்தைப் பிறப்பித்து, ஸம்ச்லேஷித்துப் பிரிந்தபின்பும் ஸத்தைகிடக்கும்படியிறே அவர்துணையாயிருக்கும்படி.

(என்துணைவர்க்கு) இவ்வாற்றாமையை பரிஹரிக்குமவர்க்குச்சொல்லுங்கோள். (உரைத்தியாகில்) சொல்லுவுதியாகில். (ஆகில்) என்று-கடகரை இரக்கும தொழிய நியமிக்க ப்ராப்தியில்லையிறே; அத்தாலே,திருவுள்ளமாகில்என்கிறாள்.(உரைத்தியாகில்) அவரழகிலேகால்தாழ்ந்து போனகார்யத்தைமறவாதே என்தசையை அறிவிப்புதியாகில். (உரைத்தி) (వాచాధర్మమవాప్నుహి) (வாசாதர்மமவாப்நுஹி) என்கிறாள். உனக்கு ஒருவார்த்தை, நான் பெறுகிறது ஸத்தையென்கிறாள்.

---

(செங்கண்மால்) என்றதுக்குதாத்பர்யம் (అనిద్రస్సతతమ్ - அநித்ரஸ்ஸததமித்யாதி.) வ்யாவ்ர்த்யந்தரம் (யாப்ரீதிரித்யாதி.) தாத்பர்யம் (இவ்வாற்றாமையித்யாதி.) அர்த்தாந்தரம் (அவரழகிலேயித்யாதி.)

(இதுவொப்பதெனக்கின்பமில்லை) எனக்கு இத்தோடொத்த ப்ரியமில்லை. நீ உறைக்கையாகிற விதுக்குமேற்பட்ட ஸுகமில்லை. அவனோடு ஸம்ச்லேஷித்தாலன்றோ ஸுகவ்ருத்தியுள்ளது, அறிவித்தமாத்ரத்திலே ஸுகவ்ருத்தியுண்டாமோவென்னில்; அறிவிக்குமதுவே விளம்பம், வரவு தப்பாது என்றிருக்கையாலே சொல்லுகிறாள்.

(நாளுமித்யாதி) எனக்குஉபகரித்துவிடுமளவுபோராது, உபகாரஸ்ம்ருதியாலே நான் பண்ணும் கிஞ்சித்காரத்தையும் அங்கீகரிக்கவேணுமென்கிறாள். (நாளுமித்யாதி) ஆசார்யன் ஒருக்கால் உபகரித்துவிட்டால் சிஷ்யன்யாவதாயுஷம் அநுவர்த்திக்கக்கடவனென்கை. (பைங்கானமீதெல்லாம்)தன்னபிமாநத்தில் கிடந்தத்தைக் கொடுக்குமத்தனையிறே செய்யலாவது, பரப்பையுடைத்தான கடற்கரைச்சோலையடைய. பிரிந்தாரிரங்குமிடம் நெய்தலாகையாலே கடற்கரையிலே தானிருக்கிறதாகையாலே பைங்கானமீதெல்லாமென்கிறாள். (ஈதெல்லாம்) தன்கண்ணாற்கண்ட ப்ரதேசத்தையடையக்கொடுக்கிறாள். என்விபூதியடங்கலும் தருவனென்கிறாள். இது-உபயவிபூதிக்கு முபலக்ஷணம். (பொன்னுலகாளீரோ புவநமுழுதாளீரோ) என்னக்கடவதிறே. (உனதேயாக) எனக்கும் உனக்கும்பொதுவாகவன்றியேஉனக்கேசேஷமாம்படி தருவேன்.

(பழனமீன்)நீர்மாறாதேயிருக்கையாலேமத்ஸ்யங்களும் ஆனைக்கன்றுபோலேயிருக்குமிறே. (యదన్నః పురుషో భవతి తదన్నాస్తస్య దేవతాః) (யதந்ந:புருஷோபவதி ததந்யாஸ்தஸ்யதேவதா:) என்கிறபடியே தனக்குவஸித்தித்த அம்சத்தைக்கொடுக்கலாவதிறே அவர்களுக்கு; கடகர்க்கு, அவர்களுகந்தது தேடிக் கொடுக்கவேணுமென்கை. (கவர்ந்துண்ணத்தருவன்) மேல்விழுந்துபுஜிக்கும்படியாக ஸாதரமாக்கத்தருவேன். (தந்தால் இங்கேவந்து) உங்கள்பூர்த்தியாலே நான் பண்ணினகிஞ்சித்காரத்தைஸ்வீகரித்துகோளாய்ப் போகையன்றியே என்ஸந்நிதியிலே புஜிக்கவேணும். (வந்து) அவனைப்போலே உபகரித்துப் பின்பு வாராதொழியாதே நானிருந்தவிடத்தே வந்து புஜிக்கவேணும்.

(உன்பெடையும் நீயும் இனிதிருந்து) ஏகாகியாய் வந்திருக்கவொண்ணாது, அபிமதவிஷயத்தோடேகூட வந்திருக்கவேணும். அது, தனக்குத் தேட்டமிறே. (இருநிலத்திலினிதின்பமெய்தலாமே) *అనన్తక్లేశభాజనమ్-அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரத்திலே *அந்தமில் பேரின்பத்தை ப்ராபிக்கலாம். (நல்லபதத்தால் மனைவாழ்வர்) என்கிறபடியே வாழப்பெறலாம்.

வைஷ்ணவர்கள் சரீரஸம்பந்தயுக்தராகையாலே அபேக்ஷித தசைகளிலே அபேக்ஷிதங்களைக் கொடுத்து வர்த்திக்குங்கார்ஹய ஸ்த்யத்தால் வந்தவேற்றமில்லையிறே-நித்யவிபூதியில். ... (உஎ)

அ.—இருபத்தெட்டாம்பாட்டு. (தென்னிலங்கை) நம்மாழ் வார் * வைகல்பூங்கழிவாயிலே தூதப்ரேஷணம் பண்ணி அநந்த ரம் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலேப்ரணயரோஷம் தலையெடுத்து ஊடினாப்போலே இவளும் தூதுவிட்டு இதிலே யூடுகிறாள். தூதப்ரேஷணம் பண்ணும்படியான ஆற்றாமைக்கு மவ்வருகே ஒருதசாவிசேஷமிறே ப்ரணயரோஷமாகிறது, அப் படியே அத்தசையிலே வெள்ளிடி விழுந்தாப்போலே மநப்ர ஸாதம் பிறந்து தெளிந்து நம்மாற்றாமை யிருந்தபடியாலும் தூதப் ரேஷணம் பண்ணுகையாலும் சுபநிமித்தங்கள் செய்கையாலும் அவன்வரவு தப்பாதென்று நிர்ணயித்து, அவன் வந்தால் முகங் கொடுக்கக்கடவோ மல்லோமென்று அத்ய வஸித்தாள். அதுக்கு ஹேது வென்னென்னில்; அவனுடைய ஸம்ச்லேஷம் விச்லே ஷாந்தமா யல்ல திராமையாலே இன்னமொரு விச்லேஷத்துக்கு இலக்காயிருந்து க்லேசப்படுமதிற்காட்டில் அவன் வந்தால் முக ங்கொடாதே அவன்ஸந்நிதியிலேமுடிந்துபிழைக்கக்கடவோமெ ன்றுபார்த்தாள், தாந்தாம் முடியநினைப்பார் வெற்றிலைதின்பது, பூச்சூடுவது,சிரிப்பதாமாப்போலே, அகவாயழியாநிற்கச் செய்தே இவள் தெளிந்திருக்க அத்தைக்கண்ட தோழியானவள், ப்ரணய ரோஷம் தலையெடுக்கும்படியான ஆற்றாமை செல்லா நிற்கச்செ ய்தே நிஸ்ஸங்கமாக இவள் தெளிந்திருந்தாள் இதுக்குஹேது வென்னென்றுபார்த்து, நெஞ்சி லோடுகிறதென்னென்று கேட்க; அவன்வந்தால் பண்டுபோலே முகங்கொடுக்கக்கடவேனல்லேன், அவன்ஸந்நிதியிலே முடியக்கடவேனாக அத்யவஸித்தேனெ ன்ன; கெடுவாய்! மலையோடே மலைபொராத மல்லருண்டோ, உபய விபூதி நாயகனாய் ஸர்வ சக்தியா யிருக்கிறவரோடே அப லையான நீ எதிரிடுகையாவ தென்னென்று, தோழிக்கு இவள் தன்னிலுங் காட்டில் ரோஷம் கனத்திருக்கையாலே ப்ரணயிநிக ளோடு செய்யுமத்தை ப்ரபுக்களோடு செய்யக்கடவதோ வென்ன; அவர்ப்ரபுத்வமும் நாடாளும்படியும் என்கையிலே படும்பாடுபா ராயென்ன;

---

(நல்லபதத்தால்மனைவாழ்வர்) என்றதுக்கு அர்த்தமருளிச் செய்கிறார் (வைஷ்ணவர்களித்யாதி.) ... ... (உஎ)

இருபத்தெட்டாம்பாட்டு. (தென்னிலங்கை) அவதாரிகாவாக் யங்களுக்கு நிகாநம் (வரையுருயுன்மாகளிற்றைஎன்றது.)

இவளத்யவஸாய மிருந்தபடியால் முடியும்போலேயிருந் தது, ப்ரணயரோஷத்தளவிலேயாய் முடியாதபடிநோக்கவேணு மென்றுபார்த்து ஆச்ரிதர்க்கு அவன் முகங்கொடுக்கும்படி இது காணென்று சொல்ல; அமையும், எல்லாம்பகட்டுக் காண், நான் முடிகைதவிரே னென்கிறாள். ப்ரணயினி யான விவளை யொழியத் தோழிக்கு ரோஷம் தலையெடுக்கக்கூடுமோவென்னில்; வீதராகனுய்ச் சருகிலைதின்று போந்த ஸ்ரீவால்மீகி பகவான் பிரா ட்டியைக்கண்டு, ([illegible]) (ஹீநோயதநயாப்ரபு:) என் று பெருமாள் நாடாளவும் ஆனைகுதிரை கட்டவும் கற்றாரித்தனை போக்கி ப்ரணயித்வத்தில் புதியதுண்டிலராகாதே ! யென்றானி றே. முற்படத் தோழி, அவன் ஆச்ரிதர்க்கு முகங்கொடுத்த ப்ர காரத்தைச்சொல்ல அத்தை யநுபாஷித்து அவையெல்லாம்பகட் டுக் காணென்கிறாள்.

மூ.—தென்னிலங்கையரண்சிதறியவுணன்மாளச்
சென்றுலகமூன்றினையுந்திரிந்தோர்தேரால்
மன்னிலங்குபாரதத்தைமாளவூர்ந்த
வரையுருவின்மாகளிற்றைத்தோழீ ! என்றன்
பொன்னிலங்குமுலைக்குவட்டில்பூட்டிக்கொண்டு
போகாமைவல்லேனுய்ப்புலவியெய்தி
என்னிலங்கமெல்லாம்வந்தின்பமெய்த
எப்பொழுதும்நினைந்துருகியிருப்பன்நானே. (உஅ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தோழீ | என் உயிர்ப் பாங்கியே ! | மன்று | யுத்தபூமியிலே, |
| இலங்கை | லங்காநகரத்திலே, | இலங்கு | விளங்காநின்றுள்ள, |
| தென் | கட்டளைப்பட்டிருந்துள்ள, | பாரத்தை | பாரதஸமரம்முடியும்படி, |
| அரண் | அரணை, | மாள | |
| சிதறி | சிதறவடித்து, | ஓர்தேர்ஊர்ந்த | ஒரு தேரை ஸாரதியாய்நின்று நடத்தின, |
| அவுணன் | * பொல்லாவரக்கனான ராவணனானவன், | வரையுருவின் | மலைபோலே யிருந்துள்ள திண்மையையும் |
| மாள | முடியும்படியாக, | மா | செருக்கையுமுடைத்தான, |
| சென்று | அந்நகரத்திலே சென்றுகிட்டி, | களிற்றை | யானைபோலேயிருந்துள்ளவனை, |
| உலகமூன்றினையும் | மூன்றுலோகங்களையும், | வல்லேனுய் | ஸமர்த்தையாய்க்கொண்டு, |
| திரிந்து | திருவடிகளாலே யளந்து, | | |

| பதம். | உரை. |
|---|---|
| என்றன் | என்னுடைய, |
| பொன்இலங்கு | வைவர்ண்யத்தை யுடைத்தான, |
| முலைக் குவட்டில் | ஸ்தநங்களாகிற ஸ்தம்பத்திலே, |
| போகாமை | அவர்புறம்புபோகாதபடி, |
| பூட்டிக்கொண்டு | சேர்த்துக்கொண்டு, |
| புலவியெய்தி | அவனைப்பிரிந்து படுங்க்லேசத்தை யெல்லாம் அவன் ஸந்நிதியிலே யெய்தி, |
| என்னிலங்கமெல்லாம் | என்னுடைய ஸர்வாவயவங்களும், |
| வந்து | என்னிடத்தே வந்து, |
| இன்பமெய்த | ஆநந்தத்தை யடையும்படியாக, |
| எப்பொழுதும் | ஸர்வகாலத்திலும், |
| நான் | விச்லேஷாஸஹையான நான், |
| நினைந்து | அவரை நினைத்து, |
| உருகியிருப்பன் | அழிந்துவிடுவேனென்கிறாள். (௨௮) |

வ்யா.—(தென்னிலங்கையரண்சிதறி)மேல்,(வரையுருவின்மாகளிற்றை) என்கையாலே யானையினுடைய வ்யாபாரமாகப் பேசுகிறாள் - இவ்வபதாநங்களையெல்லாம். லங்கையில் தர்சநீயமான வரணைச்சிதறி. அரணின்வலியிறே வீரர்களுக்கு தர்சநீயமாயிருப்பது. திருவடி பிராட்டியைத்தேடி லங்கையிற்சென்றபோது லங்கையினரணையும் ராவணனுடைய பலத்தையும்பார்த்து இவ்வரணிருந்தபடியால் நான் புகுதல், என்தமப்பனை வாயுபுகுதல் செய்யுமித்தனை யொழிய வேறொருத்தரால். புகுரவொண்ணாது, அதுதன்னிலும் ராத்ரி புகருமதொழிய பகல் புகுரவொண்ணாதாய்த்து. இப்படிப்பட்ட தேசத்திலே ஸுகுமாரரான ராஜகுமாரர்களைக் கொண்டுவரத் தேடாநின்றோமென்று திருவடி நெஞ்சுளுக்கும்படியிறே அரணிருந்தபடி. இதுக்கு அத்யக்ஷனானவன் றன்னுடைய பலமிருந்தபடி யென்னென்னில்; வெளிநிலத்திலே எதிரிகளைத் தனியே ஜயிக்க வல்லவனாயிருந்தது.

(சிதறி) ஓரானை மணற்கொட்டகத்தைச் சிதறினாப்போலே அநாயாஸேநவழித்து. ஒருகல்லும் மராமமாகிலிறே (இடறி) என்பது,பெருமாளுடைய வீரத்தைக் கேட்டிருந்தமாத்ரத்தைக் கொண்டு, (యథా సైకతమమ్భసి) (யதாஸைகதமம்பஸி)என்று ஓரானை மணற்கொட்டகத்தை யழிக்குமாப்போலே காண் பெருமாள் கையில் நீயும் உன் பரிகரமும் அழியுண்ணப்போகிறபடியென்றானிறே ஸ்ரீ விபீஷணாழ்வான். (அவுணன் மாளச்சென்று) ராவணன் முடியும்படிசென்று. சென்றசெலவிலேமர்தனானான், பின்னைப் பிணம்வெட்டி வாள்முறிந்த வித்தனையாய்த்து.

(சிதறி - மாள) எனகையாலே - யானையினுடைய வ்யாபாரமாகப் பேசுகிறாளென்றபடி.

அதாகிறது - ஒருமதஹஸ்தி வழிபோகாநின்றால் முன்கண்டவற்றையடையக் கையாலுங் காலாலு மழித்துக்கொண்டுபோமாப்போலே கரதூஷணப்ரப்ருதிகளை நிரஸித்து, தன்னை வாலிலே கட்டிக்கொண்டு திரிந்தவாலியை நிரஸித்து, கடற்கரையிலே சென்றுவிட்டு லங்கைக்கராணைகடலை அணைசெய்து, லங்கையைச்சென்று அடைமதிட்படுத்தினபடியைக் கண்டபோதே ம்ரதனுறனென்கை. ஒருப்ரணயினிக்காக அவன் பண்ணின வ்யாபாரமிதுவன்றோவென்ன; அவன் பரமப்ரணயியன்றோ, அபலைகளாயிருப்பார் அகப்படுகைக்காகச்செய்த தொன்றுகையாலே அதுவும் பகட்டுக்காணென்கிறாள்.

(உலகமூன்றினையுந்திரிந்து) சதுர்த்தசபுவநத்தையுமளந்து. ஒருமதஹஸ்திஸ்வைரஸஞ்சாரம் பண்ணுமாப்போலே எல்லார் தலைகளிலும் ஸ்வைரமாகத் திருவடிகளைவைத்தபடியாலே (திரிந்து) என்கிறது. [ப்ரணயினிக்குமுகங்கொடுக்கையன்றியே அந்யசேஷத்வத்தாலும் ஸ்வஸ்வாதந்த்ர்யத்தாலும் விமுகராயிருப்பார் தலைகளிலுமகப்படத் திருவடிகளை வைக்கும் ஸ்வபாவனன்றோவென்ன; அவன் விசேஷஜ்ஞன்காண், விமுகர்தலையிலே திருவடிகளை வைக்குமதொழிய (எம்பெருமான்றிருவடிக்கீழணைய) என்றிருப்பார்க்கு முகங்கொடுக்குமவனன்றுகாணென்கிறாள். (ஓர்தேரால் மன்றிலங்கு பாரதத்தைமாளவூர்ந்த)(ஓர்தேரால்) எதிரிகள், கர்ஷ்ணன் ஆயுதமெடுக்கவேண்டா வென்றவித்தனையொழியத் தூதுபோதல், ஸாரத்யம்பண்ணுதல் செய்யவேண்டா என்றிலர்களே, ஆகையாலே ஸாரதியாய் நின்று ஒருதேராலே யழியச்செய்தான். இன்னத்தைக்கொண்டு இன்னகார்யஞ்செய்யக்கடவோமென்னும் நியதியில்லையிறே. (கொல்லாமாக்கோல் கொலைசெய்து) என்னக்கடவதிறே.

(மன்னிலங்குபாரதத்தை) அதிரதமஹாரதரான பீஷ்மாதிராஜலோகங்கள் முன்தூசியிலே ஸஞ்சரிக்கும்படியான பாரதத்தை. (மாளவூர்ந்த) பிணமுங் கண்காணுதபடியாகத் தேரைநடத்தின. (ஆடியமாநெடுந்தேர்படை நீறெழச்செற்றபிரான்) என்கிறபடியேதேர்க்காலிலேதுகையுண்டு தூளியாய்ப்போம்படியாயாய்த் துத் தேரைநடத்தினபடி. தன்னை யொழியச்செல்லாதேயிருப்பாளொருத்தியுடைய குழல் முடிப்பிக்கைக்காக அவன் பண்ணின வ்யாபாரமிதுவன்றோவென்ன; ஒருத்திகுழலை முடிப்பிக்கைக்காகத் தன்னையழியமாறி வ்யாபரிப்பதே! என்று நாட்டாரைப் பகட்டுகைக்காகச்செய்தா னித்தனை, தன்னையொழியச்செல்லாதார் குழலை விரிப்பிக்குமவன்காணென்கிறாள்.

(வரையுருவின்மாகளிற்றை) மலைபோலேயிருந்துள்ள திண்மையையும் செருக்கையுமுடைத்தான ஆனைபோலேயிருந்துள்ளவனை. ஆச்ரிதவிரோதி நிரஸநத்தில் திண்ணியனுயிருக்கையும், ஆச்ரிதர்கார்யஞ்செய்த ப்ரீதியாலே வந்த செருக்கையுமுடையவனை. (தோழீ) என் கையாலே அவன்படும்பாடு காணவிறேபுகுகிருய். அங்ஙனன்றியே, (ஏகஹஸ்தேந ஸர்வஞ்ச) (ஏக0து ஹஸ்த0ஸ—கஞ்சநௌ) என்றிருக்கிறவளாகையாலே நீ விலக்காயாகில் அவன் படும்பாடு பாராயென்னுதல். (தோழீ) நீ விலக்காதொழியவேணும். (என்றனித்யாதி) என்கையில் ப்ராஹ்மாஸ்த்ரமிருக்க ஜயிக்கவொண்ணாதிலமுண்டோ. (என்றன் பொன்னிலங்குமுலை) நாட்டார்முலையெழுந்தாப்போலேயோ என்முலையெழுந்தபடி. அவன்முலையெழுந்தாப்போலேயோ என்முலையெழுந்தபடி.

(பொன்னிலங்குமுலை) அவனுடைய புருஷத்வம்போலேயோ என்னுடைய ஸ்த்ரீத்வமிருப்பது. வ்யதிரேகத்தில் விவர்ணமாம்படியன்றே வென்னுடைய ஸ்த்ரீத்வம். (மின்னிலங்கு திருவுரு) என்று - வ்யதிரேகத்தில் வடிவு ஏகரூபமாயிருக்கும்படியன்றே வவருடைய புருஷத்வமிருப்பது. ஸதைகரூபமான வடிவையுடையவனுக்கு வாயுண்டோ. (முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு) முலையாகிறஸ்தம்பத்தோடே சேர்த்துக்கொண்டு. ஸ்தம்பத்தோடே சேர்க்கையாவது - தன்னுற்றுமையை ஆவிஷ்கரிக்கை. (போகாமல்-பூட்டிக்கொண்டு) என்பக்கல் முகம்பெறுமையாலே போகத்தேடும்போது என்னுற்றுமையை யடங்க ஆவிஷ்கரிக்கக்கடவேன்.

(முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு) * வரையுருவின் மாகளிறுகையாலே ஒருமுலையிலே சேர்க்கவேணுமிறே. (வல்லேனுய்) இதொன்றுமேகுறை யென்கிருள். என்மநஸ்ஸு—ஸஹகரிக்கப்பெறில். அவன் வந்து முகங்காட்டினுல் நெஞ்சு மேல்விழாதொழியப்பெறில். நீயும் நிஷேதியாதேஸஹகரிக்கப்பெறில். நெஞ்சிலுங்காட்டில் அந்தரங்கையிறேதோழி. (புலவியெய்தி) அவனைப் பிரிந்து படும் க்லேசத்தை யெல்லாம் அவன் ஸந்நிதியிலே படக்கடவேனென்கிருள். அதவா (புலவியெய்தி) அவனைப் பிரிந்து நாம் பட்டபாடித்தனையும் அவன்றுன் என்ஸந்நிதியிலே படும்படி பண்ணக்கடவேனென்கிருளாகவுமாம்.

(என்னிலங்கமெல்லாம் வந்தின்பமெய்த) இன்னமொரு விச்லேஷத்துக்கிலக்காயிராதபடி அவன் ஸந்நிதியிலே முடிந்து பிழைக்கக்கடவேன்.

---

(குவடு) என்றதுக்கு (மலை) என்று அருளிச்செய்கிறுர் (வரையுருவின்மாகளிறுகையாலேயித்யாதி.) ... ... (உ-அ)

(என்னிலங்கமெல்லாம்) இதொரு கண்ணிருந்தபடியென், இதொரு முறுவலிருந்தபடியென், இதொருமுலையிருந்தபடியென்னென்றாப்போலே அவன் கொண்டாடும்படி அவனுக்கு ஆதரணீயமான வென்னுடைய ஸர்வாவயவங்களும். (இன்பமெய்த) "க்ஷாமகாலத்தில் குடும்பியாயிருக்குமவன் குடும்பத்தினுடைய பசியும் தன்பசியும் பொறுக்கமாட்டாமையாலே ஸகுடும்பமாய் ஆற்றிலே புக்குமுடியும்" என்னுமாப்போலே என் அவயவங்களோடேகூட முடியக்கடவேன். (வந்து) கன்றுவேறு, தாய்வேறாக்கும்விஷயமிறே. ஸ்ரீபரதாழ்வானையும் கைகேசியையும் போலேயாகையாலே தனித்தனியே சேதநஸமாதியாலே அவ்விஷயத்திலே ப்ரவணமாயிறேயிருப்பது. அவை அங்குநின்றும் மீண்டு ஆச்ரயபூதையான என்னோடேகூடிமுடிகையிலே உத்யோகிக்கை.

(இன்பமெய்த) முடியக்கடவேனென்னுமத்தை (இன்பமெய்த) என்கிறாள் - முடிகைதான் பரமபதஸ்த்தாநீயமாம்படியான வாற்றாமையாலே. (எப்பொழுதும்) எவ்வவஸ்தையிலும். அவன் வாராதபடியாலே சொல்லுகிறாய், வந்து முகங்காட்டினவாறே, (மைவண்ணம்) இத்யாதியிற் சொல்லுகிறபடியே அவன் ஸௌந்தர்யத்தைக் கண்டவாறே நீ மேல்விழுகிறாயென்ன; அத்தசையிலும் முடியக்கடவேன். (எப்பொழுதும்) சேஷித்வத்தால் வந்த ப்ராப்தியைக்காட்டிலும் முடியக்கடவேன்.

(நினைந்துருகியிருப்பன்) நினைத்தமாத்ரத்திலே யழிந்திருப்பன். அவன் வந்து ஸந்நிஹிதனாய், தன் செல்லாமையைக் காட்டினால் அழிகையன்றியே மநோரதித்தமாத்ரத்திலே யழியும்படியாய்த்து இவளுடைய * ஸௌந்தர்யமிருப்பது. நம்மாழ்வாருக்கு ப்ரணயரோஷம் தலையெடுத்தபோது அவன்வந்து முகங்காட்டினவளவிலும் தோழியுந்தானுமாக அவனுக்கும் புகுரவொண்ணாதபடி ப்ரணயரோஷமாகிற மதிளையிட்டுக்கொண்டுநிற்க க்ரமத்தாலே தன்செல்லாமையைக் காட்டிப் ப்ரணயரோஷத்தை யழித்துக் கிட்டவேண்டிற்று, இவர் நினைப்பதுக்குமுன்னே யழிந்தார். (நானே) புறம்புகண்டறியோமீ!யென்ன; என்ப்ரக்ருதியிருக்கும்படியிதுவென்கிறாள். அல்லாதார் ஒன்றை ஸங்கல்பித்தால் அத்தை முடிய நடத்தவும் வல்லர்களாயிருப்பார்கள், ஸங்கல்பித்தபோதே யழியும்படியாயாய்த்து நானிருப்பது. ... ... (அ)

அ.—இருபத்தொன்பதாம்பாட்டு. (அன்றாயர்) முதல்பத்தில்-ஸ்வஸ்வரூப பரஸ்வரூபங்களை நிர்ணயித்து, ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தை நிர்ணயித்து, தத்விரோதியையும் நிர்ணயித்து, விரோதிநிவ்ர்த்திக்கும் புருஷார்த்தஸித்திக்கும் அநுரூபமான

* ஸௌகுமார்யமென்றும் பாடம்.

வுபாயத்தை நிர்ணயித்து, இத்தனைக்கும் வாசகமான திருமந்த்ரத்தை வாகிந்த்ரியத்துக்கு விஷயமாக்கி, இவ்வர்த்தத்தை நெஞ்சுக்கு விஷயமாக்கித் தெளிந்து காலக்ஷேபம் பண்ணினார்; நடுவிற்பத்தில் - காலக்ஷேபார்த்தமாக வநுஸந்தித்த அநுஸந்தாநத்தளவிலே பர்யவஸியாதே கண்ணுஞ்சுழலையிட்டு, கண்ணாலே கண்டு அநுபவிக்கும்படியானவாற்றாமைவிளைந்து, தான் நினைத்தபடி யநுபவிக்கப் பெறாமையாலே அப்ராக்ர்திங்கதராய் பிறர்வாயாலே வார்த்தைசொல்லவேண்டும்படியான மோஹமேயாய்ச் சென்றது; மூன்றாம்பத்தில் - இவள்தசையைக்கண்ட தோழிஇவளைஆச்வஸிப்பிக்கவேணுமென்றுபூர்வஸம்ச்லேஷத்தை முன்னிட வ்ர்த்தகீர்த்தநமாகையாலே தரித்துநின்று பேசினாள்; பின்னை ப்ரச்ந ப்ரதிவசநங்களில்லாமையாலே பழையவாற்றாமையேமேலிட்டு தூதப்ரேஷணத்திலே அந்வயித்தாள். அநந்தரம்அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே ப்ரணயரோஷந் தலையெடுத்தது, நம்மாழ்வாரைப்போலே ப்ரணயரோஷம் நிலைநிற்கிலிறே அவன்வந்து முகங்காட்டுவது, அதுசெய்யாதே நடுவே யெளிமைப்பட்டு பழயப்ராக்ர்தியிலே விழுந்தார், விழுந்தவிடத்திலும் தரித்திருக்கலாவது அவன் வந்து முகங்காட்டினாலிறே, அதில்லாமையாலே, நம்மாழ்வாருக்கு * முனியேநான்முகநிற்பிறந்தபரமபக்தி இவர்க்குப் பிறந்து தம்முடைய அநந்யகதித்வத்தையும் ஸ்வதோஷபூயஸ்த்வத்தையும்முன்னிட்டு ப்ரணயியானநீ எனக்கு முகங்காட்டாதொழிவதே! என்றுகூப்பிடுகிறார். நம்மாழ்வார் பரத்வத்தையும் அவதாரத்தையும் பற்றிக் கூப்பிட்டார்; இவர்க்கு பராவஸ்த்தையும் அவதாரமாகையாலே அவதாரத்தையும் அர்ச்சாவதாரத்தையும் பற்றிக் கூப்பிடுகிறார்.

மு.—அன்றாயர்குலமகளுக்கரையன்றன்னை
அலைகடலைக்கடைந்தடைத்தவம்மான்றன்னைக்
குன்றாதவலியரக்கர்கோனைமாளக்
கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்துகுலங்களைந்து
வென்றானைக்குன்றெடுத்ததோளினானை
விரிதிரைநீர்விண்ணகரம்மருவினாளும்
நின்றானைத்தண்குடந்தைக்கிடந்தமாலை
நெடியானையடிநாயேன்நினைந்திட்டேனே (உகூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| அன்று | கும்பர்ஏழுரிஷபங்களை கந்யாசுல்கமாகஸபையில்வைத்தவன்று அவற்றை நிரஸித்து, | ஆயர்குலமகளுக்கு | ஆயர் மடமகளான நப்பின்னைப்பிராட்டிக்கு, |

| பதம். | உரை. |
|---|---|
| அரையன் | வல்லபனாய், |
| தன்னை | பெரியபிராட்டியை லபிக்கைக்காக, |
| அலைகடலை | அலைகளையுடைத்தானஸமுத்ரத்தை, |
| கடைந்து | அம்ர்த மதநம் பண்ணி, பிராட்டியை லபிக்கைக்காக, |
| அடைத்த | ஸேதுபந்தம்பண்ணினவனாய், |
| அம்மான் தன்னை | ஸர்வஸ்வாமியாய், |
| குன்றாதவலி | ஒருக்காலும்பலக்ஷயம் பிறவாத, |
| அரக்கர்கோனை | ராக்ஷஸ ஜாதிக்கெல்லாம் நிர்வாஹகனான ராவணன், |
| மாள | முடியும்படியாக, |
| கொடுஞ்சிலைவாய் | க்ரூரமானவில்லிலே, |
| சரம் | பாணங்களை, |
| துரந்து | ப்ரயோகித்து, |
| குலம் | ராக்ஷஸகுலத்தை, |
| களைந்து | கிழங்கெடுத்துப்போகட்டு, |
| வென்றானை | வாநர முதலிகளுக்கு ஒருவாட்டம் வராதபடி வென்றவனாய், |

| பதம். | உரை. |
|---|---|
| | பசு நிரைகளையும் இடையரையும்ரக்ஷிக்கைக்காக, |
| குன்று | கோவர்த்தநபர்வதத்தை, |
| எடுத்த | குடையாகவெடுத்த, |
| தோளினானை | திருத்தோளையுடையனாய், |
| விரி | விஸ்த்ர்தமாகாநின்றுள்ள, |
| திரை | அலைகளையுடைத்தான, |
| நீர் | ஜலஸம்ர்த்தியையுடைய, |
| விண்ணகரம் | திருவிண்ணகரிலே |
| நாளும்மருவி நின்றானை | கல்பாவஸாநத்தளவும் பொருந்தி நிற்குமவனாய், |
| தண் | ச்ரமஹரமான, |
| குடந்தை | திருக்குடந்தையிலே, |
| கிடந்த | கண்வளர்ந்தருளின, |
| மாலை | ஆச்ரிதவ்யாமுக்தனாய், |
| நெடியானை | இப்படிப்பட்டவனென்று அளவிடற்கரியனாய், |
| அடி | அடிமையையே நிரூபகமாகவுடையனாய், |
| நாயேன் | நாய்போலே தண்ணியனான நான். |
| நினைந்திட்டேன் | நினைத்தேனென்கிறார்.... ...(உக) |

வ்யா.—(அன்றித்யாதி)ப்ராணயிநிகளுக்கு முகங்கொடுத்தபடியைச்சொல்லுகிறார்.ப்ரதமத்தில் நப்பின்னைப்பிராட்டிக்கு உதவினபடியையருளிச்செய்கிறார்.(அன்று)அன்றுமின்றும்போலேகாணும் ஆபத்துள்ளது. அதாகிறது-நப்பின்னைப்பிராட்டியுடைய ஸௌந்தர்யத்தைக்கண்டு இவளைக் காத்தூட்டவல்லாரொருஸமர்த்தன் வரவேணுமென்றுபார்த்து ரிஷபங்களைமுன்னிட்டு "இவற்றை நிரஸித்தவனுக்கு இவளைக் கொடுக்கக்கடவோம்" என்று ஸங்கல்பிக்கையாலே க்ர்ஷ்ணன்வந்து முகங்காட்டுவதுக்கு முன்பு

அந்யார்ஹமாகப் புகுகிறோமோ என்று நடுங்கின நடுக்கமிறே அவளது. (ஆயர்குலமகளுக்கு) அபிஜாதையான நப்பின்னைப்பிராட்டிக்கு. இவளுடைய ஆபிஜாத்யத்துக்கு ஸத்ர்சமான குலத்திலே பிறந்தா லல்லது இவளை லபிக்கவொண்ணாதென்று பார்த்திறே ஸ்ரீநந்தகோபர்க்குப் பிள்ளையாய்வந்துபிறந்தது.

(அரையன்றன்னை) ஒருநாட்டைவன்னியமறுத்து அத்தேசத்தையநுபவிப்பித்தவோ பாதிபோருமாய்த்துஇவளுடைய விரோதிவர்க்கத்தினுடைய கனமும் போக்யதையினுடைய பெருமையும். அவளுடைய விரோதிவர்க்கத்தைப்போக்கி அவளுக்கு உதவினாப்போலே எனக்கு முகந்தாவேண்டாவோ வென்கிறாள். (அலைகடலித்யாதி) பிராட்டிக்கு உதவினபடியை யருளிச்செய்கிறார். இவ்விரண்டு அபதாநத்தாலும் பிராட்டியை லபிக்கைக்காகக் கடலைக்கடைந்தது. அவளுடையதனிமையைத்தீர்க்கைக்காகக் கடலைக்கடைந்தது. அம்ர்தப்ரதாநமும் குடியிருப்புக்கொடுக்கையும் ஆநுஷங்கிகமிறே. அவளுடைய திருவுள்ளத்தை அடியொத்தின ஆளவந்தார், "யஂஸ்தர்க்ஷாப்யோதிர மந்ர்யோபஸஂ" என்றாரிறே.

(அம்மான்றன்னை) உன்னுடைய ப்ரணயித்வத்தை இழக்கையன்றியே ஆநுஷங்கிகமாகக் கொண்டு துர்வாஸசாபத்தாலே நஷ்டஸ்ரீகரான இந்த்ராதிகள்வந்துசரணம்புகுர அவர்களுடைய அஸ்ரீயைப்போக்கிஅம்ர்தப்ரதாநம்பண்ணுகையாலும், ப்ரஹ்மாதிகள் ராவணனாலே குடியிருப்பிழக்க அவர்களுக்குக் குடியிருப்புக் கொடுக்கையாலும் வந்த பரத்வத்தை யிழக்கக்கிடாய்ப் புகுகிறாயென்கிறாள்.

(குன்றாதவலி) தோள்வலியாகிலிறே போதுசெய்வது, வரபலமாகையாலே போதுசெய்யாதிறே. (அரக்கர்கோனைமாள) அவ்வரபலத்தையே ஆலம்பநமாகக்கொண்டு பரஹிம்ஸையே யாத்ரையாயிருக்கும், ராக்ஷஸஜாதிக்கெல்லாம் நிர்வாஹகனாயிருக்கிற ராவணனை நசிப்பிக்கும்படியாக. (கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்து) கண்டபோதே எதிரிகள் மண்ணுண்ணும்படியான ஸ்ரீசார்ங்கத்தாலே திருச்சரங்களை நடத்தி.

(கொடுஞ்சிலை) (దీప్తపావకసఙ్కాశైః) (தீப்தபாவகஸங்காசை꞉) என்கிறபடியே திருச்சரங்களுக்குண்டான வேற்றமும், రామబాణాసనక్షిప్తమ్ - ராமபாணாஸநக்ஷிப்த்தமாகையாலே.

(குலங்களைந்து) ராக்ஷஸஜாதியாக வழியச்செய்து. ஸ்ரீவிபீஷணாழ்வான், தன்னினைவாலும் ராவணனுடைய நினைவாலும்-பெருமாள் நினைவாலும் இக்ஷ்வாகுவம்ச்யனிறே; தான்சொன்ன ஹிதம் அவன்கேளாமையாலே (నిశాచర) (நிசாசர) என்றான்; (త్వాంతుధిక్కులపాంసనమ్) (த்வாம்துதிக்குலபாம்ஸநம்) என்றான்ராவணன்; ஸ்ரீவிபீஷணாழ்வான்றன்னை, (రాక్షసానాంబలాబలమ్) (ராக்ஷஸாநாம்பலாபலம்) என்று-பெருமாள்கேட்டார்; (రాక్షసానాంవధేసాహ్యం) (ராக்ஷஸாநாம்வதேஸாஹ்யம்) என்று-ராக்ஷஸவதத்திலே ஸஹகரிக்கக்கடவேனென்றான் தான்; ஆகையாலே ராக்ஷஸஜாதிக்குக் கூட்டல்லவென்கை. ராவணனொருவனும் அபராதம்பண்ண ராக்ஷஸஜாதியாக நசிக்கும்படியிறே அவன் பண்ணின அபராதத்தினுடைய கனம். ஒருத்தன் அநுகூலனானால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுமடங்க உஜ்ஜீவிக்குமாப்போலேயிறே ஒருவன் ப்ராதிகூல்யம் பண்ணினால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுமடங்க நசிக்கும்படியும். ராவணன்பக்கல்சீற்றம் ராக்ஷஸஜாதியாக முடிந்தது, மஹாராஜர்பக்கல் ஸ்நேஹத்தாலே வாநரஜாதியாக வாழ்ந்தது. (வென்றானை) ராக்ஷஸஜாதியை நிச்சேஷமாக நசிப்பித்தாப்போலேயாய்த்து-ஸ்ரீவாநரவீரரிலே ஒருத்தனுக்கு ஒருவாட்டம் வாராதபடிக் கீடாகவென்றபடியும்.

(குன்றெடுத்ததோளினானை) பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களுக்கும் தன்னையொழியச்செல்லாதபடியான வாற்றாமையை விளைத்து அவர்களை யநுபவிப்பித்தவனை. இத்தால்-உன்னையொழியச்செல்லாதபடியானவாற்றாமையை விளைவித்தநீ உன்னையநுபவிப்பிக்கவேண்டாவோவென்கை. (விரிதிரைநீர்விண்ணகரம்மருவி) அவ்வவதாரத்துக்குப் பிற்பாடராய் தூதப்ரோஷணத்திலே யந்வயிப்பது, ப்ரணயரோஷத்திலே யந்வயிப்பதானார்க்கு உதவுகைக்காகவன்றோ திருவிண்ணகரிலே நித்யவாஸம்பண்ணுகிறது. (விரிதிரைநீர் விண்ணகரம்) ஸௌகுமார்யத்துக் கநுகூலமான ஜலஸம்ருத்தியையுடைய தேசம். (மருவி) பரமபதத்தைவிட்டு * அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரத்திலே பொருந்தி வர்த்திக்கிறது-ஆச்ரிதவாத்ஸல்யத்தாலேயிறே. கர்ஷகனுக்கு அகத்திற் கிடையிற்காட்டில் மடைத்தலையில் கிடையிறே பொருந்தியிருப்பது. (நாளும் நின்றானை) கல்பாவஸாநமாக நிற்கிறவனை.

---

இருபத்தொன்பதாம்பாட்டு. (அன்றாயர்) சரங்களுக்கன்றோ க்ரௌர்யமுள்ளது, வில்லுக்குக்ரௌர்யமேதென்ன; அருளிச்செய்கிறார் (దీప్తపావకసఙ్కాశైః - தீப்தபாவகஸங்காசைரித்யாதி.)

(தண்குடந்தைக்கிடந்தமாலே) நின்ருல் கந்தவ்யபூமியுண்டென்னு மிடந்தோற்றுமிறே, அதுசெய்யாதபடி ஸம்ஸாரங் கிழங்கெடுத்தாலல்லது போகோமென்று ச்ரமஹரமானதிருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளினவனே. இப்படி இத்தேசத்திலே நிற்பது இருப்பது கிடப்பதாகைக் கடியென்னென்னில்; (மாலே) ஆச்ரித வ்யாமுக்தனுகையாலே யென்கை. (நெடியானே) இவன் ஆச்ரிதர்க்கு முகங்கொடுக்கும்படி என்னல் பேசப்போமோ; அபரிச்சிந்நனென்னு மித்தனையென்கிருள். அதவா (நெடியானே) இப்படி ஸர்வஸுலபனுயிருக்கிறவன்கிடீர். எனக்கு எட்டாப்பூவாயிருக்கிருன்.

(அடி நாயேன் நினைந்திட்டேனே) அவனுடைய உத்கர்ஷத்துக்கவதியில்லாதாப்போலேயிறே என்னுடைய நிகர்ஷத்துக்கு அவதியில்லாதபடி. (நாயேன்) திறந்த வாசலெல்லாம் நுழைந்து திரிகையும், நுழைந்த வாசலெல்லாம் பரிபூதமாய்ப் புறப்படுகையும், உடையவனே யுகந்துதொடிலும் ஸ்நாநம்பண்ணவேண்டும்படியான ஜந்மத்திலே பிறந்தவன். (அடிநாயேன்) ஸம்பந்தமே ஹேதுவாக நீ முகம்பார்த்தல் ஒழிதல் செய்யுமதொழியப்புறம்புகதியில்லாதவன். ஆச்ரயணவேளையோடு போகவேளையோடு வாசியற ஆகிஞ் சந்யமும் ஸ்வதோஷக்யாபநமுங் காணும் இவருக்குள்ளது. (நாயேன் வந்தடைந்தேன்) என்ருர்-ஆச்ரயணவேளையிலே; இங்கே - (அடிநாயேன்) என்கிருர். இதிறே இவர் தம்மை நினைந்திருந்தபடி. தமக்குண்டான நன்மையடங்கலும் போகோபகரணமாக நினைத்திருக்குமவரிறே.

நம்மாழ்வார், (அதனிற் பெரியவென்னவா) என்று தலைக்கட்டினர்; இவர் (அடிநாயேன்) என்று தலைக்கட்டினர். அதுக்கு ஹேதுவென்னென்னில்; அவர்க்கு விரக்திநைஸர்க்கிகமாகையாலே ப்ரேமத்தை விளைக்கையாய்த்து க்ர்த்யம், ஆகையாலே (அதனிற் பெரியவென்னவா) என்னும்படிக்கீடாகப் பண்ணினன்; இவர் * வென்றியேவேண்டி வீழ்பொருட்கிரங்கி வேல்கணர்கலவியே கருதிநின்றவாநில்லா நெஞ்சினையுடையாராய்ப் போருகையாலே இவரை (அடிநாயேன்நினைந்திட்டேன்) என்னப்பண்ணுகையாய்த்து க்ர்த்யம்; ஆகையாலே இவரை (அடிநாயேன் நினைந்திட்டேன்) என்னப்பண்ணினன். (நினைந்திட்டேனே) அடியிலே நிர்ஹேதுகமாகவிஷயீகரித்ததொருவிஷயீகாரமுண்டு, அது யாவதாத்மபாவியாகவேணுமென்று நினைத்தேன். இயற்கையிற் புணர்ச்சி யாவதாத்ம பாவியாகவேணுமென்று நினைத்தேனென்கை. (உகூ)

---

வ்யதிரேகத்தில் தரியாமை. அப்ராப்தவிஷயங்களில் ஜுகுப்ஸைதொடக்கமான நன்மைகளுண்டாயிருக்க (அடிநாயேன்) என்பானென்னென்ன; அருளிச்செய்கிருர் (தமக்குண்டான நன்மையடங்கலுமித்யாதி.) ... ... ... ... (உகூ)

அ.—முப்பதாம்பாட்டு. (மின்னுமாமழை) நிகமத்திலே ஸ்வலாபத்தைச் சொல்லாநின்றுகொண்டு, இப்ரபந்தத்தை அத்யயவஸித்தவர்களுடைய ஸாம்ஸாரிகமான ஸகலதுக்கங்களையும் தாங்களே முதலரியவல்லாரென்கிறார்.

மூ.—மின்னுமாமழைதவழும்மேகவண்ணா
விண்ணவர்தம்பெருமானேயருளாயென்று
அன்னமாய்முனிவரோடமரரோத்த
அருமறையைவெளிப்படுத்தவம்மான்றன்னை
மன்னுமாமணிமாடமங்கைவேந்தன்
மானவேல்பரகாலன்கலியன்சொன்ன
பன்னியநூல்தமிழ்மாலைவல்லார்தொல்லைப்
பழவினையைமுதலரியவல்லார்தாமே. (௩௰)

திருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| முனிவரோடு | ரிஷிகளோடே கூட | மேகவண்ணா | மேகம்போன்றவடிவையுடையனாய், |
| அமரரோத்த | ப்ரஹ்மாதிகள்ஸ்தோத்ரம்பண்ண, | விண்ணவர் தம்பெருமானே | நித்யஸூரி நிர்வாஹகனானவனே, |
| அன்னமாய் | ஹம்ஸரூபியாய், | அருளாயென்றுசொன்ன | க்ருபை செய்தருளவேணுமென்று அருளிச்செய்த, |
| அருமறையை | பெறுதற்கரிய வேதத்தை, | பன்னிய | ஸ்வரூபரூபகுண விபூதிகளைப்ரதிபாதிப்பதாய், |
| வெளிப்படுத்த | வெளிப்படுத்தின, | நூல் | லக்ஷணோபேதமாய், |
| அம்மான்றன்னை | ஸர்வேச்வரன் விஷயமாக; | தமிழ் | யாவரும் எளிதாகக்கற்கலாம்படி தமிழ்பாஷையாய், |
| மன்னு | நிலைபெற்ற, | மாலை | மாலாரூபமான இப்ரபந்தத்தை, |
| மாமணி | விலையுயர்ந்தரத்னங்களால் செய்த, | வல்லார் | அர்த்தத்தோடேகற்கவல்லவர்கள், |
| மாடம் | மாடங்களை யுடைத்தான, | தொல்லை | அநாதிஸித்தமான, |
| மங்கைவேந்தன் | திருமங்கைக்கு ராஜாவாய், | பழவினையை | ப்ராரப்த கர்மத்தை, |
| மானவேல் | பெருமைதங்கியவேலையுடையராய், | முதலரிய | முதலோடே அரிந்துவிடுகைக்கு, |
| பரகாலன் | ப்ரதிபக்ஷத்தைவென்றவராய், | தாமேவல்லார் | தாங்களே ஸமர்த்தராவர்கள். (௩௰) |
| கலியன் | கலிதோஷத்தைப் போக்கினஆழ்வார், | | |
| மின்னுமாமழைதவழும் | தர்சநீயமாய் வர்ஷியாநின்றுள்ள, | | |

வ்யா—.(மின்னுமாமழையித்யாதி) மின்னிமுழங்கிவில்லிட்டு தர்சநீயமாய் வர்ஷியாநிற்பதொரு வர்ஷுகவலாஹகம்போலே யிருந்துள்ளவடிவையுடையவனே!. ஒருநீர்ச்சாவியிலே ஒருகாள மேகம் வர்ஷித்தாப்போலே (அடிநாயேன் நினைந்திட்டேனே) என்று இவருடைய ஆர்த்தநாதத்தைக்கேட்டு இவருடைய தாப மெல்லாம் நீங்கும்படியாகக் குளிரநோக்கிக்கொண்டு காளமேக நிபச்யாமமானவடிவோடேவந்து முகங்காட்டினபடியைச் சொ ல்லுகிறது. கீழ்ப்பாட்டிலே-பரோக்ஷநிர்த்தேசம்பண்ணியிருக்க இங்கே அபரோக்ஷித்துச் சொல்லுகையால் - வந்து முகங்காட்டி னமை தோற்றுகிறது. ப்ரணயரோஷம் அகிஞ்சித்கரமான தசை யிலும் ஸ்வதோஷக்யாபநம் கார்யகரமானபடி. நம்மாழ்வார் ஜகத் காரணத்வத்திலே யுபக்ரமித்து,(அவாவறச்சூழரியையயனையரனை) என்று-ஜகத்காரணத்வத்தோடே தலைக்கட்டினார்; இவர் வடிவிலே உபக்ரமித்து (மின்னுமாமழைதவழும்)என்று வடிவோடே தலை க்கட்டினார்.

(விண்ணவர்தம்பெருமானே) இவ்வடிவைப் படியிட ஜீவித் திருக்குமவர்களைச் சொல்லுகிறது. * அயர்வறுமமரர்களுக்கு உன்னை யநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கிறவனே. கடலிலே வர்ஷித்தாப்போலே அவர்களுக்கு உன்னைக் கொடுக்குமதுஒரே ற்றமோ. அவர்கள் உன்னை ஸதாதர்சநம் பண்ணுமாப்போலே நானும் உன்னை சரீரஸம்பந்தமற்று ஸதாதர்சநம்பண்ணும்படி க்ர்பைபண்ணியருளவேணும். (அருளாய்) பரமபக்தி பர்யந்த மானவிடாய் பிறந்தவிடத்திலும் இரக்கமே ஸாதநமென்றிருக்கி றார். (ஆழியானருளே) என்று விஷயாந்தர நிவ்ர்த்திக்கும் இரக்க மே ஸாதநமென்கிறார், பகவதநுபவத்துக்கும் இரக்கமே ஸாதந மென்கிறார்.

(அன்னமாயித்யாதி) தமக்கு அவன்வந்து தன்னைக்கொடுத்த படிக்கு த்ர்ஷ்டாந்தஞ்சொல்லுகிறார். ப்ரஹ்மாவுக்கு ப்ரமாண த்தை வெளியிட்டாப்போலேயாய்த்து தமக்கு ப்ரமேயபூதனான தன்னை வெளியிட்டபடியும். (முநிவரோடமரரேத்த) ரிஷிகளோ டேகூட ப்ரஹ்மாதிகள் வேதசக்ஷுஸ்ஸையிழந்தோமென்று தன் னையாச்ரயித்துஏத்த. ரிஷிகளுக்கும் ஆத்மோஜ்ஜீவநார்த்தமாக ப்ரமாணுபேக்ஷையுண்டு, ப்ரஹ்மாதிகளுக்கு ஸ்ர்ஷ்ட்யாதிவ்யா பாரத்துக்கு ப்ரமாணுபேக்ஷையுண்டு.(அன்னமாய்)அபௌருஷே யத்வங்குலையாதபடி ஹம்ஸரூபியாய். (அருமறை) பெறுதற்கரிய வேதம். பெறுதற்கரியது ப்ரமேயமன்று, ப்ரமாணமாய்த்து.

---

முப்பதாம்பாட்டு.(மின்னுமாமழை) (மணியுருவில்பூதமைந் தாய்) என்றத்தைப்பற்ற (இவர் வடிவிலேயித்யாதி.)

(வெளிப்படுத்த) ப்ரமாணத்துக்கு உத்பத்திவிநாசமாவது-ப்ரகாசாப்ரகாசங்களென்கை. (அம்மான்றன்னை) ஸர்வேச்வரனை இவர்களுக்கு வேதப்ரதாநம்பண்ணுகைக்கடி உடையவனுகை யாலே யென்கை.

(மன்னுமாமணிமாட மங்கைவேந்தன்) இவர் தரித்தவாறே ஊரும் ஸ்த்திரமானபடி. கல்பாவஸாநத்தளவும் அழிவின்றிக் கே ச்லாக்யங்களான ரத்நங்களாலேசெய்யப்பட்டமாடங்களையுடைத் தான திருமங்கை. (மங்கைவேந்தன்) பக்ஷியின்காலிலேவிழுந்தவர் திருமங்கைக்கு நிர்வாஹகரானுர். (மானவேல்பரகாலன்) வேலெ டுக்கவும் க்ஷமரானுர்; கிஞ்சித்கரிக்கவும் பெற்றுரென்கை. அத் தலையில் பரிவாலே யெடுத்தவேலிறே. (மானவேல்) காபுருஷனெ டுக்கிலும் திருமங்கைமன்னனுக்கவல்லவேல். மாநவேற்பரகால னென்னுதல். (பரகாலன்) கையில் வாளாலும் ப்ரதிபாதநத்தா லும் ப்ரதிபக்ஷத்தை வென்று வைதிக மர்யாதையை ஸ்தாபித்த வர். (கலியன்) உபயத்துக்கும் அடியான மிடுக்கைச்சொல்லுகி றது. கலி-மிடுக்கு. அங்ஙனன்றியேகலிகாலத்தைக் கடிந்தவரென் னுதல்.

(பன்னியநூல்தமிழ்மாலைவல்லார்) பன்னுதல் - பரம்புதல். ஸ்வரூபரூபகுணவிபூதிக ளித்தனையும் விளரக்கொலை கொண்டிருக் கை. நூல் - ஸர்வலக்ஷணோபேதமாயிருக்கை. பின்பு லக்ஷணங் கட்டுவார்க்கும் இதுவே கொண்டு செய்யவேண்டும்படியிருக்கை. தமிழ் - ஸர்வாதிகாரமா யிருக்கை. (மாலை) ஈச்வரனுக்கு சிரஸா தார்யமா யிருக்கை. (தொல்லையித்யாதி) கார்யகாரணரூபத்தாலே அநாதியாய் வருகிற அவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதி ஸம்பந்தங் களைத் தாங்களே ஸவாஸநமாகப் போக்கவல்லவர். (வினை) அதா கிறது - புண்யபாபரூபமான கர்மத்வயம். இதுதான் பூர்வோத்த ராகப்ராரப்தரூபமாயிருக்கும். இதுதான் அல்லாத ஜ்ஞாநாநுத யம். அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநம், ஸ்த்தூலஸூக்ஷ்மரூபமான அசித்ஸம்பந்தம், வாஸநாருசிகளுமாகிற விரோதிவர்க்கத்துக்கு முபலக்ஷணம்.

---

(వాగుత్పత్తి...) இத்யாதியாலே வேதத்துக்கு உத்பத் திசொல்லாநிற்க (வெளிப்படுத்த) என்பானென்னென்ன; (ப்ர மாணத்துக்கு உத்பத்தியித்யாதி.)

வேலெடுக்கை கிஞ்சித்காரமாகக் கூடுமோவென்ன; அருளிச் செய்கிறுர் (அத்தலையில் பரிவாலேயித்யாதி.) (மாநம்) என்றது பரகாலனுக்கு விசேஷணமான பக்ஷத்தில் - தாஸ்யாபிமாநத்தை யுடையரான பரகாலனென்றபடி.

(தொல்லைப்பழவினை) இவைதான் பழையதாயிருக்கையும், அடிகாணவொண்ணாதிருக்கையுமாகிற அதிசயத்தைப்பற்றச்சொல்லுதல்; அறவும் பழையதானவினையென்னுதல். (தாமே) இப்ரதிபந்தகங்களையெல்லாம் தாங்களே ஸ்வாஸமாகப்போக்கவல்லார். ஈச்வரன் முழங்கைத்தண்ணீர்வேண்டாவென்கை.

(அருளாயென்று - முனிவரோடமரரோத்த) என்று, அவர்களுக்கு விசேஷணமானபோது - எம்பெருமானைக்கண்டபோதே, (என்னவாவறச்சூழ்ந்தாயே) என்ன சக்தரல்லாமையாலும், கீழ்ப்பாட்டுப்போலே இப்பாட்டில் இயலின்பலஹாநி தோற்றியிராமையாலும், எம்பெருமான் திருமேனி வர்ஷுகவலாஹகம்போலேயிருக்கையாலும், ✻ அயர்வறுமமரர்களுக்குத் தன்னை புஜிக்கக்கொடுத்துக்கொண்டிருக்கும்படியைச் சொல்லுகையாலும், தாமே வேலெடுக்க சக்தராகையாலும், ப்ரதிபக்ஷத்தை நிரஸித்தபடியையருளிச்செய்கையாலும், இப்படியுள்ள பேச்சுக்களெல்லாவற்றாலும் - தம்முடைய பலஹாநிபோய்த் தம்முடைய வபேக்ஷிதம் பெற்று த்ருப்தரானாரென்னுமிடம் இப்பாட்டிலேவ்யக்தம்.

முனிவரோடமரரோத்த - அன்னமாய் அருமறையை வெளிப்படுத்த வம்மான்றன்னை மன்னுமாமணி மாடமங்கை வேந்தன் மானவேற்பரகாலன் கலியன் - மின்னுமாமழை தவழும் மேகவண்ணா விண்ணவர்தம்பெருமானே யருளாயென்று - சொன்ன-பன்னியநூற்றமிழ்மாலைவல்லார் தொல்லைப்பழவினையை முதலரியவல்லார்தாமே) என்றந்வயம். ... ... ... ... ... (௲௰)

---

(தொல்லை) என்றும், (பழமை)என்றும் சொன்னது புநருக்தமன்றோவென்ன; கார்யகாரண ரூபத்தாலே யருளிச்செய்கிறார் (பழையதாயித்யாதி.)

(மின்னுமாமழைதவழும்) இத்யாதியெல்லாம் ஸ்வரஸமாக ப்ரஹ்மாதிகளுக்கு விசேஷணமாகத் தோன்றியிருக்க, சப்தத்தை நெருக்கி இவருக்கு விசேஷணமாக யோஜிக்கிறதுக்குக் கருத்தென்னென்ன, அருளிச்செய்கிறார் (அருளாயென்று முனிவரோடமரரோத்தவென்றித்யாதி.) ... ... ... ... (௲௰)

அடிவரவு. மின். பார். திருவடி. இந்திரர். ஒண்மிதி. அலம். வற்பு. நீர். வங்க. பொன். பட்டு. நெஞ்சு. கல்லெடுத்து. மூளை. கல்லுயர்ந்த. கன்று. பொங்கு கார். முற்று. தோராளும். மை. மைவளம். வுள்ளூரும். இருகையில். மின்னிலங்கு. தேமருவு. செங்கால. தென்னிலங்கை. அன்றாயர். மின்னுமா. வையம்.

திருநெடுந்தாண்டகம்.

ப்ரதிபதவ்யாக்யானஅரும்பதங்கள்

ஸம்பூர்ணம்.

---

பெரியவாச்சான்பிள்ளைதிருவடிகளேசரணம்.